# பொருளடக்கம்

# உன்னால் கடக்க முடியும்

## முகவுரை

1976

ஆக இதோ, பெல்ஜியத்தில் இருக்கும் நாக்கி-லே-சவுத் எனும் கடலோர வாசஸ்தலத்தில், கடல் நீர்க்காலை ஒட்டி நான் சைக்கிள் ஓட்டிக்கொண்டு இருந்தேன். நகரத்தைப் பின்னே விட்டு, காற்றின் சுகத்தையும், முதுகின்மீது இளஞ் சூரியனின் வெப்பத்தையும் கூடவே தசைப் பிடிப்பையும் ரசித்து அனுபவித்துக்கொண்டே சைக்கிளை மிதித்தேன். எல்லாமே நன்றாக இருந்தது. எனக்கு முன்னால் சுமார் நூறு கஜத்திற்கு அப்பால் சாலை தேய்ந்து மைல் கணக்கில் மணற்காடாய் பரவிடச்சு எல்லையை நோக்கி விரிவதை என்னால் காண முடிந்தது. இன்னும் வேகமாய் மிதித்தேன். சைக்கிள் வேகம் பிடித்தது. நான்தான் எட்டி மெர்க்ஸ். ஏழாவது முறையாக டுவர்தே பிரான்ஸ் போட்டியை வெல்கிறேன்.

விர்ர்ர்ர்ர்....! மணல் பரப்பை அடைகிறேன். பிறகு...

.... நான் காற்றிலே, சைக்கிளின் ஹாண்டில் பாருக்கு மேலே பறந்துகொண்டு இருக்கிறேன். அதிர்ஷ்டவசமாக மணல் மெத்தென்று இருக்கிறது, மணல் தட்டுகையில் உருளவேண்டும் என்ற

நினைவு வர, மணல் பரப்பில் உருண்டு கொண்டே போய் கடற்கரையில் விழுகின்றேன்.

ஹும்! எழுந்து கொள்கிறேன். சைக்கிளின்மீது காலை வீசிப்போட்டு வேகமாக பெடலை மிதித்து பதினெட்டு அங்குலம் முன்னேறி இருப்பேன். சக்கரங்கள் மறுபடியும் மணலுக்குள் புதைந்து கொள்கின்றன, சைக்கிள் நகர மறுத்துவிட்டது. கொஞ்சம் கூச்சலிட்டவாறே மணலை வெறுப்பில் உதைத்தேன். பலத்த காற்று மணல் துகள்களை என் வாயினுள் வீசிற்று. முஷ்டியால் மணலைக் குத்தினேன், பலமாகக் குத்தக் குத்த, மணல் மேலும் இறுகியது.

மணல்தேரியை என் சைக்கிளைக் கொண்டு கடக்க முடியாது. வாழ்க்கை மெய்மை இது.

1978

இதோ இங்கே நான். ஓஷோ ஆசிரமத்தில் இரண்டு ஆண்டுகளாக பகவான் ஓஷோ சீடனாக இருக்கிறேன். ஆசிரமம் ஒரு பசுமையான சோலையாக இருந்தாலும்கூட நான் அவ்வப்போது என் சைக்கிளிலிருந்து விழுந்து கொண்டு இருக்கிறேன். அது ஒரு அழகான சைக்கிள், பிரிட்டிஷ் தயாரிப்பு, அதற்கு 31 வயது ஆகிறது; அதன் மீது நான் அளவு மீறிய நேசம் கொண்டுள்ளேன். அதை நான் 'ஈகோ' (EGO தன் முனைப்பு / அகங்காரம்) என்று அழைக்கின்றேன். நான் போகுமிடமெல்லாம் அதை எடுத்துச் செல்வேன். ஆசிரமத்தில் இருக்கும் மணல் மிகவும் மென்நயம் மிக்கது, கிட்டத்தட்ட கண்ணுக்குப் புலப்படாது. நான் 'ஈகோவை' எவ்வளவு நன்றாகப் பராமரித்தாலும்

அது இந்த இடத்தில் மேலே முன்னேறிப் போகாது. மேலும் அதற்கு முப்பத்தியொரு வயதாகி விட்ட தால் அது வலிமையோடு வலுவானதாக இருக்கி றது, அதைத் தூக்கிச் செல்வதும் ஒரு சுமைதான். அதனால் அதன்மீது அடிக்கடி தடுக்கி விழுகின் றேன். அதைக் கொண்டு மற்றவரையும் இடித்துக் கொண்டு இருக்கிறேன். இன்னும்கூட மற்றுமொரு வழுவழுப்பான சாலையைக் காண்போம் என்ற நம் பிக்கையில் தொடர்கிறேன். (இந்தியாவிலா? நான் கிறுக்கனாகத்தான் இருக்க வேண்டும்) மேலும், வேறெந்தச் சாலைகளும் இல்லை, சைக்கிள் பாதைகளும் இல்லை; எல்லாமே பாலைவனத் திற்கு இட்டுச் செல்கின்றன.

பகவானின் சொல் கேளுங்கள்:

"இந்த உலகம் ஒரு பாலைவனம். சோலை என் பது உங்கள் விழிப்புணர்வில் மட்டுமே உள்ளது. அதற்குத் தேவையானவற்றை எல்லாம் செய்யுங் கள். அதற்கு என்ன விலை கொடுக்க வேண் டுமோ கொடுங்கள். எவ்வளவு துணிய வேண் டுமோ துணியுங்கள் - ஏனென்றால் எப்படியாயி னும் மற்றவையெல்லாம் உங்களிடமிருந்து எடுத் துக் கொள்ளப்படும்."

பாலைவனத்தை அடைந்தால் அங்கே முன்னே றும் பாதை, வகை அறியாத ஒன்று. மாறிடும் மணல் பரப்புகள், கானல் நீர் தோற்றங்கள் மற்றும் பொய்த் தொடுவானங்கள் என வழி தவறிப்போவது எளிது. கடக்க வேண்டுமென நீங்கள் முயற்சி மேற்கொண் டால், உங்களுக்குத் தேவை ஒரு வழிகாட்டி, சைக் கிள் மெக்கானிக் அல்ல.

இங்கே ஒருவர் இருக்கிறார், பகவான் ஓஷோ. அவர் இந்த 'மணல்களைக்' கடந்தவர். இப்போது மற்றவர் கடந்துபோக உதவுகிறார். ஆன்மாவிற்கான ஒரு மார்க்கோ போலோ. ஒவ்வொரு பயணமும் வேறுவேறென்றாலும், எங்கே அழைத்துச் செல்கிறார் என்பதை அவரறிவார், ஏனெனில் அவர் அங்கேயே இருப்பவர். அதாவது வீடு சென்றடைந்தவர். வித்தைக்கார சைக்கிள் ஓட்டிகள் இங்கே அதிக தூரம் செல்ல முடியாது. நீங்கள் ஒரு கால்நடையராக இருக்க வேண்டும், சாதாரணமாக, ஒவ்வொரு காலடியாக, வழிகாட்டி எங்கே அழைத்துச் செல்கிறாரோ தன்னார்வத்தோடு பின்பற்ற வேண்டும். நம்பிக்கை கொள்ளுதலினாலும், நெகிழ்வதினாலும், பாதங்கள் லேசாகின்றன. மகிழ்ச்சி அடைகின்றன. ஒரு துள்ளல் ஏற்படுகின்றது, பிறகு ஒரு தாண்டுதல், துள்ளல், பின் குதிப்பு. விரைவிலேயே நீங்கள் உயர உயரப் பறக்கின்றீர்கள், ஒரு பறக்கும் கால்நடையர்!

'டியூன்' எனும் விஞ்ஞானப் புனைவு நாவலில் அதன் ஆசிரியர் ஃபிரான்க் ஹெர்பெர்ட் ஒரு பாலைவன உலகை, (டியூன்) கருத்தாக்கம் செய்வார். அந்த முழுக் கலாச்சாரமே பாலைவனத்தில் வாழ்வது அல்லது உயிரோடு இருப்பது மற்றும் தண்ணீரைப் பதுக்கிவைப்பதற்கான இயக்க நிலையிலேயே இருக்கும். அவர்கள் எல்லோருமே மணலோடு சண்டையிடும் போர் வீரர்கள். இறுகிப்போன, கொடூரமான மனிதர்களான இவர்கள், தங்கள் குழாம் முன்னேறும் பொருட்டு ஸ்பைஸ் எனும் மருந்துப் பொருளை நம்பி இருக்கின்றனர். முரண் நகையாக இவர்கள் தங்களை Fremen அதாவது

விடுதலை பெற்றோர் என்று அழைத்துக் கொள் கின்றனர்.

மணல் காடுகளிடம் சண்டையிட வேண்டிய அவ சியம் இல்லை. மேலும் இந்தப் போரில் வெற்றி பெற சாத்தியக் கூறுகளும் இல்லை என்று பகவான் தொடர்ந்து விளக்கிக் காட்டுகிறார். இந்த நூலின் முதல் அத்தியாயத்தைக் கவனமாகப் படியுங்கள். நீரோடை தன் சுதந்திரத்தைத் தேடிக் கொள்வது போல், நாமும் விடுதலை பெற்ற மனிதராய் ஆக லாம். அது விருப்ப ஆர்வத்தோடு (நீர்) ஆவியாய் மாறுவது, அது எதுவானது, அதனிடம் என்ன உள் ளது என்பது போன்ற யோசனைகளையெல்லாம் விட்டுக் கொடுப்பது மூலம் ஆகலாம். இந்த யோச னைகள், இந்தத் தனித்தன்மை தான் பாலைவ னம்.

நீரோடையிடம் காதோடு காதான காற்றின் பேச் சுக்கள்தான் பகவான். "ஆம் உன்னால் கடக்க முடி யும்" நீராவியாகிவிடு, வாழ்க்கையின் நேசக்கரங் கள் உன்னைத் தூக்கிச் செல்லட்டும். ஆபத்தை ஏற்றுக்கொள், அது தகுதியானதுதான். அதே சுதந் தம்!

சமுத்திரத்தை அடைய நமக்குத் தேவைப்படுவ தெல்லாம் கேட்பதற்கான திறன். இந்தச் சன்ன மான பேச்சுக்களைப் புரிந்துகொண்டு நம்பிக்கை வைக்க வேண்டும். 'மணல்களின்' மறைமொழிகள் இவை.

- சுவாமி பிரேம் பிரமோத்

# மணலின் கதை

தூரத்தில் இருக்கும் மலைச்சாரல்களின் தோற்
றுவாயிலிருந்து ஒரு நீரோடை,

நாட்டுப்புறத்தின் ஒவ்வொரு விதமான விவரிப்
பையும் கடந்து போகிறது,

இறுதியாக அது அடைந்தது பாலைவனத்தின்
மணல் பரப்பை.

மற்றெல்லாத் தடைகளையும் தாண்டி வந்தது
போல

இதையும் கடக்க முயன்றது நீரோடை.

ஆனால் மணலுக்குள் ஓடியபோது அது கண்ட
றிந்தது,

அதன் நீரெல்லாம் காணாமல் போய்விட்டதை.

ஆயினும் அது நம்பிக்கை கொண்டது. தன் விதி

பாலைவனத்தை கடப்பது என்பதை.

இருந்தாலும் அதற்கு வழியில்லை.

இப்போது ஒரு அசரீரி கேட்கிறது.

அது பாலைவனத்திலிருந்து எழுந்தது, சன்னமாகக் கூறியது:

"காற்று பாலைவனத்தைக் கடக்கிறது, நீரோடையாலும் அது முடியும்."

நீரோடை எதிருரைத்தது
மணலின்மீது தான் மோதுவதால்
தான் ஈர்த்துக் கொள்ளப்படுவதாய்;
காற்று பறக்கக் கூடியது
ஆதலினால் கடக்கின்றது பாலைவனத்தை

"உனக்குப் பழக்கப்பட்ட வழியிலே
நீ மோதொலித்துப் பாய்வதால்
நீ கடக்கலாகாது
நீ காணக் கிடைக்காமல் போவாய்
அல்லது தாழ் சதுப்பு நிலமாவாய்
உன் இறுதியிடம் அடையக்
காற்று உன்னைத் தூக்கிச் செல்ல அனுமதிப்பாய்"
"ஆனால் இது நடப்பதெவ்வாறு?"
"காற்று உன்னை ஈர்த்துக்கொள்ள உன்னையே தளர்த்திக் கொள்வாய்"

நீரோடைக்கு இதில் கருத்து ஒவ்வாமை.
என்ன இருந்தாலும் இதுவரை நான் உறிஞ்சப் பட்டதில்லையே.
தன் தனித்தன்மையை இழக்க விருப்பமில்லை.
ஒருமுறை தொலைத்துவிட்டால்,
மறுபடியும் பெறமுடியுமா என்று எப்படித் தெரிந்து கொள்வது?

"காற்று" "இந்த செயலைச் செய்கின்றது" என்றது மணல்.
அது நீரெடுத்துப் பாலைவனத்தைக் கடக்கிறது.
பிறகு கீழே விழ வழிவிடுகிறது.
மழையாய் பொழிகின்ற நீர் மறுபடியும் ஆறாய் பாய்கிறது.

இதை நான் மெய்யுணர்வது எப்படி?
அப்படித்தான் நீ நம்பாவிடில்
அதிகபட்சம் நீ ஆகப் போவது படு சேறு,
மேலும், அது நடக்க பற்பல ஆண்டுகள் ஆகலாம்;
மேலும் நிச்சயமாக அது அதே நீரோடை போன்றதல்ல"

"ஆனால் இன்றுள்ளது போலவே அதே நீரோடையாக இருக்க முடியாதா?"

"எப்படியாயினும் நீ அதேபோல் இருக்க முடியாது" சொன்னது சன்னக் குரல்.

"உன் இன்றியமையாத ஆத்மப் பகுதி எடுத்துச் சொல்லப்பட்டு மறுபடியும் நீரோடை ஆகிவிடும்.
இன்றும், நீ எதுவாக இருக்கிறாயோ
அதுவென அழைக்கப்படுகிறாய்.
ஏனெனில் நீ அறியாதது உன்னில் எந்தப் பகுதி ஆத்மார்த்தமானதென்று"
இதைக் கேட்கப் பெற்றதும்,
நீரோடையின் சிந்தனைத் தளத்திலே சில வகையான
எதிரொலிகள் எழும்பத் துவங்கின;

ஆம், அவன் மங்கலாகவே, நினைவுகூர்ந்தான்.
தான் இருந்த நிலை
அல்லது அவனின் ஏதோ ஒரு பகுதி மட்டுமா.
காற்றின் கரங்களால் தாங்கிக் கொள்ளப்பட்டு
இருந்தது
நினைவிற்கு வந்தது
இல்லை வந்ததா?
இதுதான் மெய்பொருள், ஐயத்திற்கு இடமில்லாத
விஷயம் என்று செய்வதற்கில்லை
நீரோடை தன்னை ஆவியாய் உயர்த்திற்று,
வரவேற்கும் காற்றின் கரங்களுக்குள்ளே
மென்மையாய், இலகுவாய் காற்று அதை மேலே
எடுத்துச் சென்று,
வழிநெடுகப் பயணித்து மலை முகட்டை எட்டி,
மெல்ல
மெல்ல விழச் செய்தது, பற்பல மைல்களுக்கு
அப்பால்.
நீரோடை ஐயப்பட்டதினால், நினைவுபடுத்திக்
கொள்ள முடிந்தது.
ஆழமாக மனதினிலே பதிவு செய்தது. அனுபவ
விபரங்களை
நீரோடை யோசித்துப் பார்த்தது.
"ஆம், அறிந்து கொண்டேன் என் மெய் அடையா
ளம் இப்போது"
கற்றுக் கொள்கிறது நீரோடை,
ஆனால் மணல் அசரீரித்தது, யாம் அறிவோம்,
ஏனென்றால் இது ஒவ்வொரு நாளும் நடப்பது
தான்.
மேலும் நாங்கள் மணல் பரப்பாய் ஆற்றங்கரை
தொடங்கி

மலையடிவாரம் வரை விரிந்துள்ளோம்.

ஆதலினால் சொல்லப்படுவது

வாழ்க்கையின் நீரோட்டப் பயணம் தொடர.

வழித்தடம் எழுதப்பட்டு இருப்பது அந்த மணல் பரப்பின் மீதே.

★ ★ ★

**சூ**ஃபிச உலகில் இன்று நாம் நுழைகிறோம். (சூஃபிசம் - சூஃபி வழி - சூஃபிய தத்துவம்) அது ஒரு உலகம், பொதுநோக்கு அல்ல.

அது தத்துவம் கடந்த நிலை, கடந்துபோவதற் கான தத்துவமல்ல. அது கருத்தியல் பிரச்சாரங்கள் செய்வதில்லை, வெறுமனே நடைமுறைக் குறிப்பு களே தருகின்றது.

சூஃபிசம் ஊக ஆய்வு செய்வதல்ல, அது முற் றிலும் மெய்மைக் குட்பட்டது, நடைமுறைக்குரி யது, பயன் நாட்டமுடையது. ஆதலினால் அதற்கு உலகளாவிய பொது நோக்கில்லை. மேலும் அது ஒரு முறைமையல்ல. அதனால் அறிவையும் அது முறைமைப்படுத்துவதில்லை.

முறைமை அல்லது ஒரு அமைப்பு என்பது உள தாய் இருத்தல் அல்லது வாழ்வதற்கான முழு மையான விளக்கமாகும். சூஃபிசம் ஒரு அமைப்பு அல்ல. அதற்கு வாழ்விற்கான விளக்கம் கிடை யாது, வாழ்க்கையின் மறைபொருட்களுக்குள் செல்லும் ஒரு பாதையாகும். அது எதையும் விளக் குவதில்லை. வெறுமனே மறைபொருளை நோக் கிச் சுட்டிக் காட்டுகிறது. அதற்குள் உங்களை வழி நடத்திச் செல்கிறது. வாழ்தலின் புதை மறைவைப் புரியவைக்கப் போவதுமில்லை. எல்லா அமைப் புகளும் அதைச் செய்கின்றன. அவற்றின் முழு வேலையே அறியாததை அறியச் செய்தல், மறை பொருளையும் ஆச்சரியத்தையும் அழித்தலாகும்.

ஸூஃபிசம் உங்களை ஒரு ஆச்சரியத்திலிருந்து மற்றொன்றிற்கு இட்டுச் செல்லும், அந்த ஆச்சரிய உலகிற்குள் மேலும் ஆழமாக இட்டுச் செல்லும்.

அது ஒரு அமைப்பு இல்லை, ஏனென்றால் எதைப்பற்றியும் ஸூஃபிசம் முழுமையான விளக்கம் தருவதில்லை. அது மிகச் சிறிய குறிப்புகள், உள்நோக்குகளை, மின்வெட்டொளிகளாய்த் தருகின்றது. அது தத்துவங்களைப் புனைவதில்லை; அது கதைகளையும், உருவகங்களையும் இடைநிகழ்ச்சிகளையும் தொகுத்துப் புனைகின்றது. அது நிலவைச் சுட்டிக்காட்டும் விரல். விரலை ஆய்வு செய்து நீங்கள் நிலவைப் புரிந்து கொள்ளலாகாது. ஆனால் அத்திசையைக் கருணையோடு பின்பற்றினீர்களானால், அதனோடு தொடர்பு விடாமல் இருந்தீர்களானால் நீங்கள் நிலவைக் காணலாம். விரல் நிலவல்ல, விரல் நிலவாக முடியாது. ஆயினும் நிலவிற்கான பாதையைக் காட்ட முடியும்.

ஸூஃபிசக் கதைகள் தத்துவார்த்தமானவையல்ல. அவை மென்மையான சாடைக் குறிகள், வெறும் குசுகுசுப்புகள். ஸூஃபிசத்தில் உரத்த பேச்சில்லை. சன்னமான பேச்சுக்களே. இயல்பாகவே ஒத்துணர்வு மட்டுமல்ல, மற்றவருடனும் ஒத்துணர்வு கொண்டு கேட்கத் தயாராய் இருப்பவர்கள், நம்பிக்கையோடு மனம் திறந்து சரணாகதி அடையத் தயாரானவர்கள் மட்டுமே ஸூஃபிசத்தைப் புரிந்துகொள்ள முடியும். அன்புகூரத் தகுதியானவர்கள் மட்டுமே ஸூஃபிசத்தைப் புரிந்துகொள்வர். அது தரும் செய்தி என்ன? அது தர்க்க ரீதியான ஆய்வு அல்ல, அதே சமயத்தில் ஜென் தத்துவம் போல் தர்க்க முரணானதும் அல்ல. தர்க்க ரீதியாக

இருப்பதும், தர்க்க முரணாக இருப்பதும் இரண்டு வெவ்வேறு முனைக் கோடிகளில் இருப்பதாகும் என்கிறது சூஃபிசம். இவ்விரண்டிற்கும் நடுவே உள் ளது சூஃபிசம். இடது புறமோ வலது புறமோ சாய்வதில்லை. தர்க்கமும் இல்லை. தர்க்க முர ணும் இல்லை. அபத்தமானதும் அல்ல. சாக்ரடீஸ் போன்று தர்க்கம் சார்ந்ததும் இல்லை. போதிதர்ம னைப் போன்று பொருத்தமற்றதும் அல்ல. போதி தர்மனும் சாக்ரடீசும் பார்வைக்குத்தான் வித்தியா சப்படுகின்றனர், ஆனால் அவர்கள் அணுகுமுறை ஒன்றேதான் என்கிறது சூஃபிசம்.

உண்மையில் சாக்ரடீசைவிட போதிதர்மன் அதிக தர்க்கவாதி, அதனால்தான் தர்க்க முரணிற் குள் அவர் தடுக்கி விழுகின்றார். தர்க்க ரீதியாகவே போய்க்கொண்டு இருந்தால் ஒரு கட்டத்தில் தர்க் கம் முடிவுற்று, பயணம் மட்டுமே தொடர்வதைக் காண்பீர். முழுப் பாதையையும் பயணித்த ஒரு சாக் ரடீஸ்தான் போதிதர்மன், ஒரு எல்லைப்புறத்தை அவர் அடைந்ததும் தர்க்கம் முடிந்துவிட்டது. ஆனால் வாழ்க்கை தொடர்கிறது. போதிதர்மன் வேறுபட்டுத் தோன்றினாலும் அணுகுமுறை சாக்ர டீசைப் போன்றதே; அதாவது அறிவாற்றல் சார்ந் தது. ஜென் அறிவாற்றலுக்கு எதிரானது, ஆனால் அறிவாற்றலுக்கு எதிராக இருப்பதும் அறிவாற்ற லுக்குரியதே. ஜென் தத்துவத்திற்கு எதிரி, ஆனால் அப்படி இருப்பதும் தத்துவார்த்த மானதே. சூஃபிசம் இந்த இருமுனைக் கோடிகளையும் தவிர்க்கின் றது. அது நடுநிலைமையைப் பின்பற்றுகிறது. மிகத் துல்லியமான நடுநிலை.

ஜென்னின் முக்கிய கருத்து 'மைன்ட்ஃபுல்னெஸ்' - அறிவு நிலை எனப்படும் உளநிலை நிறைந்து இருத்தல். சூஃபிசத்தில் அது 'ஹார்ட்புல்னெஸ்' - அதாவது நெஞ்சார்ந்த நிலை, இது இதயத்திற் குரியது. இதை நினைவில் வைத்துக்கொள்ளுங் கள். இரண்டிற்கும் வேறுபாடு வரும்போது, இது உங்களுக்குத் தெளிவு தரும். ஜென் மனதிற்கு எதி ரானது. ஆனால் மனதினூடே சென்றுதான் மன தைக் கடக்கின்றது. சூஃபிசம் மனதிற்கு எதிரான தல்ல, அது மனதைப் பற்றிக் கருத்தற்றது. சூஃ பிசம் இதயத்தின்மீதே கவனம் செலுத்துகிறது, மனதைப் பற்றி அக்கறை கொள்வதில்லை. அது இதயத்திற்குரியதின்மீது நம்பிக்கை வைக்கிறது. ஆம், சூஃபிக்கும் ஒரு வகையான விழிப்புணர்வு வரத்தான் செய்கின்றது. நாம் ஜென் வகையான விழிப்புணர்வான 'சடோரி'யை மனவிழிப்புணர்வு என்று அழைத்தோமானால், சூஃபி விழிப்புணர் விற்கு "இதய விழிப்புணர்வு" என்று புதியபதம் புனைய வேண்டியிருக்கும். சூஃபியின் பாதை அன் பின்பாதை. ஜென்னின் பாதை போர் வீரனுடை யது, சாமுராயின் பாதை. இரண்டு அணுகு முறைக ளுக்கும் உள்ள அடிப்படை வித்தியாசம் இதுவே.

ஜென், சூஃபிசம் இரண்டுமே கதைகளைப் பயன் படுத்துகின்றன, ஆனால் அக்கதைகளின் இரசம் வேறுபடுகின்றது, தொனி வேறுபடுகின்றது. ஜென் கதை அபத்தமானது - அது ஒரு புதிர், விடைகாண முடியாத புதிர். நீங்கள் முயற்சி செய்யலாம், ஆனால் தீர்வுகாண முடியாது. கதையோடு சேர்ந்தது அதன் விடைகாண முடியாத தன்மை. அவை ஜென் கதைகளுக்கே உள்ளியல்பானவை. அது அபத்த

மாகத்தான் இருக்கவேண்டும், ஏனென்றால் அது உங்கள் மனதை அழிப்பதற்கான கருவி, மனதை அதிர்ச்சி அடையச் செய்யும். அது ஒரு வாள்... உங்கள் மனதைக் கொல்வதற்கு. உங்களைக் கிட்டத் தட்ட பைத்தியமாக்கிவிடும், ஏனென்றால் தீர்வே காண முடியாது, நீங்கள் கதையைப் பற்றித் தியானித்துக் கொண்டே இருக்க வேண்டும். அது தியானத்திற்கான கருவி. மனம் பல தீர்வுகளைத் தரும், ஆனால் குரு எல்லாவற்றையும் நிராகரித்து விடுவார். இதே பாணியில் சீடர் ஒவ்வொரு நாளும் புதுப்புதுத் தீர்வுகளைச் சொல்வார், குரு சிஷ்யரைச் சப்தம் போட்டுக் கொண்டே இருப்பார், "இது முட்டாள்தனம்! போய் மறுபடியும் கண்டு பிடி" என்பார். சில சமயங்கள் மாதங்கள் பலவாகும், சில சமயங்களில் வருடங்கள் ஓடும். திடீரென ஒரு குறிப்பிட்ட கணத்தில் சீடர் இதற்கு தீர்வு இல்லை என்பதை உணர்வார். ஞாபகம் இருக்கட்டும், வெறுமனே இதற்கு தீர்வு இல்லை என்று நீங்கள் நினைத்தீர்களானால் நீங்கள் கருத்தைப் புரிந்துகொள்ள வில்லை என்றாகிவிடும். தீர்வு இல்லை என்ற மெய்யுணர்தல் வரவேண்டும். அது போன்ற ஒரு தீர்வற்ற நிலையில், முடிவற்ற நிலையில் ஒரு கடந்து போதல் ஏற்படும். ஒரு தாவுதல் (குவான்டம் லீப்). ஒரு அபார குதிப்பின் மூலம் மனதின் மூலமாகவே மனதைத் தாண்டிப் போய்விடுவீர். மனத்தின் முடிச்சை அறுக்கும் வாள்போல் செயல்படுகிறது ஜென் கதை.

சூஃபி கதை ஒரு புதிரல்ல, அது ஒரு உருவகக் கதை. அதிர்ச்சியளிப்பதல்ல, அது வாள் இல்லை, இணங்கவைக்கக் கூடியது, அது கவர்ந்திழுக்கும்

ஒன்று. அது காதலர் வழியாகும். அது மென்மையானது, பெண்மையுடையது. ஜென் அதீத ஆண்மை வாய்ந்தது. சூஃபிசம் பெண் இயல்புடையது. ஜென் கதை உங்களைப் பைத்தியமாக்கும், மனதில் ஒரு பித்த நிலையை உருவாக்கி, அதைக் கடந்து போக உதவும். சூஃபி கதை உங்களுக்கு மெல்ல, மெல்லப் போதையேற்றும், ஆனால் தவிர்ப்பதற்கில்லாதது.

சூஃபி கதையில் கவிதை இருக்கும், சந்தம் இருக்கும். சூஃபி கதையைப் பற்றி ஆழ்ந்து சிந்திக்க வேண்டும், ஜென் கதையைப் பற்றித் தியானம் செய்ய வேண்டும். சூஃபி கதை உள்வாங்கிக் கொள்ளப்பட வேண்டும், தேநீர் உறிஞ்சுவது போல நெகிழ்வான மனநிலையில் ரசிக்க வேண்டும். ஜென் கதையை மிக மிக ஓர்மையுடைய மனதைக் கொண்டு துளைக்க வேண்டும். தீவிரத்துடனும், இறுக்கமான மனோபாவத்துடனும் அணுக வேண்டும். உங்கள் சக்தியனைத்தையும் கதையின்மீது செலுத்த வேண்டும். உலகத்தையே மறக்க வேண்டும். அந்த அபத்தமான கதை மட்டுமே மிஞ்சி இருக்க வேண்டும். அது விடை காணக் கூடியதல்ல என்பதை அறிவீர். ஆனாலும் உங்கள் சக்தி முழுவதையும் அதில் இட வேண்டும். அபத்தம் இது, எங்கும் இட்டுச் செல்லாது என்று எப்போதும் அறிவீர். ஆனாலும் குரு, "கவனம் செலுத்து, ஒருமுகப்படுத்து! கவனி! கதையின், புதிருக்குள் பார்" என்று சொல்லிக் கொண்டு இருப்பார்.

சூஃபி கதையை ஒரு கதை கேட்பதுபோலவே கேட்க வேண்டும். சூஃபிக்கள் நன்றாகக் கதை

சொல்வார்கள். வசதியான, கதகதப்பான இடத்தில் ஒன்றாக உட்கார்ந்து கொண்டு தேநீர் அல்லது காஃபி உறிஞ்சியவாறு கதை சொல்லுதல் தொடங்கும். குருதான் கதை சொல்வார். கதை கண நேரத்தோற்றம் தரும், சாடைக் குறிப்புகள் காட்டும், ஆனால் உள் ஆற்றலுடையது, ஆழமாகப் பாயக் கூடியது. தேவைப்படுவதெல்லாம், சீடர் கேட்க வேண்டியது மட்டுமே. கவனமாக அல்ல, திறந்த மனதுடன், மன இறுக்கமின்றி ஒத்துணர்வோடு கேட்கவேண்டும். கதை ரசிக்கப்பட வேண்டும். ரசிக்கப்படுகையில்தான் கதை தன் மறை பொருளை வெளிப்படுத்தும்.

கதையை நாம் ரசிக்கத் தொடங்குமுன் மேலும் சில விஷயங்கள்:

சூஃபிசம் ஒரு பொதுக்கருத்து அல்ல, அது ஒரு தரிசனம். பொது நோக்கு அல்லது கருத்து என்கிறபோது, நீங்கள் மாறாமல் ஒரு தத்துவத்தில் நம்பிக்கை கொள்கின்றீர்கள், மெய்மையைப் பற்றி சில விளக்கங்களை ஏற்றுக் கொள்கின்றீர்கள். ஆயினும் நீங்கள் மாறுவதில்லை. அப்படியே உள்ளீர்கள். இந்தப் பொதுக் கருத்து உங்களுக்குச் சிறிது அறிவூட்டுகிறது. நீங்கள் மேலும் அறிந்தவர் ஆகின்றீர்கள்.

ஒரு தரிசனம் உங்களை உருமாற்றிடும். நீங்கள் உருமாற்றப்பட்டால்தான் தரிசனம் சாத்தியமாகும். அது உருமாற நீங்கள் மற்ற உயரங்களுக்கு எடுத்துச் செல்லப்பட வேண்டும். வாழ்க்கையின் மற்ற ஆழங்களை அளக்க வேண்டும்.

சூஃபிசம் ஒரு தரிசனமே. உண்மையில் சூஃபிசம் என்று அழைப்பதே தவறு. ஏனென்றால் அது ஒரு 'இசம்' அல்ல. சூஃபிக்கள் அதை சூஃபிசம் என்றழைப்பதில்லை. அப்பெயர் அந்நியர் கொடுத்தது. அவர்கள் தங்கள் தரிசனத்தை 'டஸவுரி' அதாவது அன்பின்-தரிசனம், மெய்மையை நோக்கி ஒரு பாச மிக்க அணுகுமுறை. அது வாழ்தலின்மீது காதல் கொள்ளுதல். வாழ்தலைப் பற்றிச் சிந்திக்கும் ஒரு மனிதன் கொஞ்சம் எதிர்ப்பாளர்தான், ஏனெனில் அவர் வாழ்தலிலிருந்து ஒரு பிரச்சினையை உருவாக்குகிறார். வாழ்தல் அவருக்கு சவால் விடுவது போலவும், அவர் அதை, அந்த மர்மத்தை விடுவிக்க வேண்டியது போலவும் நினைக்கிறார். அவர் அந்த மறைபொருளை அழிக்கச் சண்டையிடுகிறார்.

சூஃபிக்கள் சொல்வது: நாமும் வாழ்க்கைச் சூழலும் ஒன்றுதான். சண்டை தேவையற்றது. மெல்ல நிர்ப்பந்திக்கவும், குலவு, காதலி, அழை, நட்பாகு. அப்போது வாழ்க்கைச் சூழலும் தன் மறைபொருளை வெளிப்படுத்தத் தொடங்கும். அதைக் கற்பழிக்க வேண்டியதில்லை. தத்துவார்த்தமான அணுகுமுறை எல்லாமே வன்புணர்வுதான். தன் இதயத்தை வெளிப்படுத்த வாழ்தலை நிர்ப்பந்திப்பதாகும். இது வாழ்தலைத் துகிலுரிப்பதாகும். இந்த வன்முறை விஞ்ஞான முறையாக இருக்கலாம், அல்லது தர்க்க முறைப்படி இருக்கலாம், அது பொருட்டல்ல, வன்முறை இருக்கிறது. தத்துவஞானி எடுக்கும் நிலை என்னவென்றால், இயற்கை தன் மர்மங்களை வெளிப்படுத்தத் தயா

ராக இல்லை. ஆகையினால், அது நிர்ப்பந்திக்கப் படவேண்டும். இது வன்முறையான அணுகுமுறை.

சூஃபிசம் இதற்கு அவசியமில்லை என்று சொல் கிறது. நதி வரவேண்டும் என்று இயற்கை காத்துக் கொண்டு இருக்கிறது. அப்படியானால், அது தன் இதயத்தை வெளிப்படுத்த முடியும். வாழ்க்கைச் சூழல் நீங்கள் அதன்மீது காதல் கொள்ள அரு கில் காத்திருக்கிறது. நீங்கள் அதன்மீது ஆழ்ந்த காதல் கொண்டு இருந்தால், அது தன் இரகசியங் களை வெளிப்படுத்தத் தொடங்கும். நீங்கள் அரு கில் வரவேண்டுமென வெகு காலமாய் காத்திருக் கிறது. நிர்ப்பந்திக்க வேண்டியதில்லை, வன்புணர வேண்டியதில்லை. நீங்கள் காதலில் விழலாம்.

பொதுநோக்கு என்பது ஒரு ஆக்கிரமிப்பு மனப் பான்மை உடைய நிலைப்பாடு. தரிசனம் அன்பு எனும் நிலைப்பாடு உடையது.

சூஃபிசம் ஒரு அமைப்பு முறை அல்ல என்று உங்களுக்குச் சொன்னேன். ஏனென்றால் எல்லா அமைப்புகளுமே பந்தங்களை உருவாக்கக் கூடி யவை. அவை உங்களைச் சுற்றி ஒரு சிறை எழுப் பும். சூஃபிசம் என்பது விடுதலை. அது உங்களைச் சுற்றி ஒரு அமைப்பை உருவாக்காது. ஒரு குறிப் பிட்ட முறையின்மீது நம்பிக்கை வைக்கச் சொல் லாது. ஆம், அது நல்லெண்ணம் அல்லது பற்றுமா னம் பற்றிப் பேசுகிறது. ஆனால் வெறும் நம்பிக்கை பற்றியல்ல.

நல்லெண்ணம் என்பது முற்றிலும் வேறான ஒன்று. நம்பிக்கை என்பது ஒரு கருத்தியல்மீது நம்பிக்கை, ஒரு தத்துவம் அல்லது பொதுநோக்

கின்மீது நம்பிக்கை; நீங்கள் இஸ்லாத்தை நம்பு கிறீர்கள். கிறிஸ்தவத்தின்மீது நம்பிக்கை இருக் கிறது. ஆனால் நல்லெண்ணம் கொள்ளும்போது, நீங்கள் வாழ்க்கைமீது நல்லெண்ணம் கொள்கி றீர்கள். தத்துவங்கள்மீது நம்பிக்கை கொள்கின் றீர்கள். நல்லெண்ணத்திற்கு ஒரு எளிமையான மாற்றுதான் நம்பிக்கை. நினைவிருக்கட்டும் நம் பிக்கை தலையைச் (அறிவு) சார்ந்தது, நல்லெண் ணம் இருதயத்திலிருந்து பிறக்கின்றது. இவற்றின் குணங்கள் வேறு, முற்றிலும் வேறுபடுகின்றன, சரி யாக நேர் எதிரானது. எப்போதும் ஒரு நம்பிக்கை வைக்கவேண்டிய அமைப்பில் இருக்காதீர்கள். ஒருபோதும் ஒரு ஹிந்து அல்லது முகமதியர் அல் லது ஜெயினர் அல்லது பௌத்தர் ஆகாதீர். ஒரு நம்பிக்கை அமைப்பின் அங்கமானால் நீங்கள் ஒரு அடிமை ஆகின்றீர்கள்.

உங்கள்மீது நம்பிக்கை திணிக்கப்படாத ஒரு இடம், ஒரு வெற்றிடத்தைக் கண்டுபிடிக்க முடியு மானால், அங்கே நல்லெண்ணத்திற்கு உதவி கிட் டுமானால் அந்த இடத்தைக் கண்டு பிடியுங்கள். அதுதான் நீங்கள் வளர்வதற்கான சரியான இடம், அங்கேதான் விடுதலையை நோக்கி வளர முடியும். வேறு எந்த வளர்ச்சியும் கிடையாது, விடுதலையில் வளர்ச்சி மட்டும்தான் ஒரே வளர்ச்சியாகும்.

சூஃபிசம் ஒரு தத்துவம் இல்லை என்று சொன் னேன். ஆனால் அது தத்துவத்திற்கு எதிரானதும் அல்ல. அது தத்துவங்கள், தத்துவத்திற்கு எதி ரானவை என்று எதையும் கருதுவதில்லை. அது அவற்றைத் தவிர்த்து விட்டுச் செல்கிறது, கருத் தற்று இருக்கிறது.

அது சொல்வது: மெய்மை இருக்கும்போது ஏன் வார்த்தைகளைப் பற்றிக் கவலை கொள்ள வேண்டும்? குடிக்கத் தண்ணீர் கிடைக்கும்போது, தண்ணீர் பற்றிய கருத்தியல்களைப் பற்றி ஏன் கவலைப்பட வேண்டும்? வெளியில் போய் ஆதவனின் கதிர்களோடு நடனமாட முடியும்போது, ஏன் கோட்பாடுகளைப் பற்றி அக்கறை கொள்ள வேண்டும்? ஏன் மெய்யானதை அனுபவிக்கக் கூடாது? தத்துவங்கள் சுற்றிச் சுற்றி வருபவை; அவை ஒன்றைப் பற்றியே இருக்கும். உண்மையை, உண்மையின் மையத்தை துளைத்துக் கொண்டு போகாது. உண்மையைப் பற்றி நினைக்கும், ஆனால் உண்மையைப் பற்றி நினைப்பது என்பது பொய்யாக்குவதாகும்.

உண்மை எதிர்கொள்ளப்பட வேண்டியது. சிந்திக்க வேண்டிய ஒன்றல்ல. உண்மை நம்புவதற்கான ஒன்றல்ல, அது வாழ்ந்து காட்டப்பட வேண்டிய ஒன்று. உண்மை ஒரு முடிவு அல்ல. உண்மை என்பது முக்கூற்று வாதமுறையின்படி அடைய வேண்டிய ஒன்றல்ல. உண்மை 'அங்கேயே' இருக்கிறது. நீங்கள்தான் உண்மை. சூரியன், நிலா எல்லாமே உண்மை. உண்மை எங்கும் பரவிக் கிடக்கையில் நீங்கள் கண்களை மூடிக்கொண்டு உண்மையைப் பற்றிச் சிந்தித்துக் கொண்டு இருக்கிறீர்கள். சிந்தனையனைத்தும் உங்களைத் தடம் மாறிப் போகச் செய்திடும்.

சிந்திக்க வேண்டிய அவசியமில்லை, அதை வாழ்ந்து காட்டுங்கள், வாழ்வதினால் மட்டுமே நீங்கள் அதை அறிய முடியும்.

சூஃபிசம் ஒரு சிந்தனா முறையல்ல, அது ஒரு வாழ்க்கைமுறை, அது வாழ்வதற்கான ஒரு வழி. வாழ்க்கையைப் பற்றிய வேதாந்தமல்ல. ஆனால் வாழ்க்கைக்கான வழி. சூஃபிசம் ஊகம் செய்வதல்ல என்று சொன்னேன். ஊகம் செய்வது என்றால் நீங்கள் அறியாததைப் பற்றிச் சிந்திப்பதாகும். ஊகம் என்பது ஒரு குருடன் வெளிச்சத்தைப் பற்றிச் சிந்திப்பதாகும், ஒரு செவிடன் சங்கீதத்தைப் பற்றிச் சிந்திப்பதாகும். நீங்கள் கடவுளைப் பற்றிச் சிந்திக்கும்போது, வெளிச்சத்தைப் பற்றிச் சிந்திக்கும் குருட்டு மனிதனிடமிருந்து வேறுபடுகின்றீர்கள் என்று நினைக்கின்றீர்களா? நீங்கள் கடவுளைப் பார்த்ததில்லை, தெய்வீகத்தை அனுபவித்ததில்லை, ஆனால் சிந்தனை மட்டும் செய்து கொண்டே இருக்கின்றீர்கள். நீங்கள் என்ன செய்ய முடியும்? ஆம், மனம் மிகவும் சாதுரியமானது, அது அழகான அமைப்புகளைப் புனைய முடியும், ஆனால் அந்த அமைப்புகள் எல்லாம் தொடர்பற்றது. நல்லதோ, கெட்டதோ, தர்க்கம் சார்ந்ததோ இல்லையோ, அவை எல்லாம் வெறுமனே பொருத்தமற்றது. மெய்மைக்கும் அதற்கும் தொடர்பேயில்லை. மெய்மைச் சூழலில் பொருத்தமற்றது. அவை மனம் சார்ந்த விளையாட்டுகள்.

சூஃபிசம் மன விளையாட்டு இல்லை. அதனால்தான் அது நடைமுறைக்குரியது, முற்றிலுமாக. நீங்கள் ஒரு சூஃபியை கடவுள் பற்றிக் கேட்டீர்களானால், அவர் சிரிப்பார், அல்லது கடவுளுக்கு தொடர்பு இல்லாத பாட்டைப் பாடுவார், அல்லது கடவுளைப் பற்றிய குறிப்பே இல்லாத கதை சொல்லுவார் அல்லது கேள்விக்கு முற்றிலும் தொடர்

பற்ற ஏதோ ஒன்றைக் கூறுவார். அவர் வெறு மனே சொல்வது என்னவென்றால், "முட்டாள்தன மாக இருக்காதே, நடைமுறைக்கு உட்பட்டு இருப் போம்." நீங்கள் கடவுளைப் பற்றிக் கேட்டால் அவர் பிரார்த்தனை பற்றிச் சொல்வார், கடவுளைப் பற் றியல்ல. உண்மையான சூஃபி கடவுளைப் பற்றிய விவாதப் பொருளைத் தவிர்த்துவிடுவார். அவர் பிரார்த்தனை பற்றிப் பேசுவார், அது நடைமுறை யானது. நீங்கள் சொர்க்கம் பற்றிக் கேட்டால் அவர் உங்கள் துயரம் பற்றிப் பேசி அதை விடுவது எப்படி என்று சொல்லுவார். இதுவே நடைமுறையானது. சொர்க்கம் என்பது வேறெங்கும் இல்லை, உங் கள் துயரமான வழிமுறைகளை விட்டுவிட்டீர்க ளானால் நீங்கள் சொர்க்கத்தில் இருக்கின்றீர்கள், அல்லது உண்மையைச் சொல்வதானால் நீங்கள் தான் சொர்க்கம்.

சூஃபிக்கள் எப்போதும் யுக்திகள் மற்றும் வழி முறைகள் பற்றிப் பேசிக்கொண்டு இருப்பார்கள். 'என்ன' என்பதைப் பற்றிப் பேச்சே இல்லை, 'எப் படி' என்பதைப் பற்றித்தான் பேச்சு. அந்த வகை யில் எந்த விஞ்ஞானியைப்போலவும் விஞ்ஞான பூர்வமாய் இருக்கிறார்கள். சூஃபிசம் என்பது சமயம் எவ்வாறு இருக்க வேண்டும் என்பதற்கான ஒரு சிற்றனுபவம். கடவுள் பற்றிப் பேசுவதில் அர்த்த மில்லை, கடவுளிடம் உங்களைக் கூட்டிச் செல்ல ஒரு ஏணியை உருவாக்குங்கள். சொர்க்கம் பற்றிப் பேசிக் கொண்டு இருப்பது முழுமையான நேர விர யம். வழிமுறைகள் கொடுக்கப் பட்டால், உங்களுக் குள் இருக்கும் சொர்க்கத்தை ஆராய முடியும். அது ஒரு அகம் சார்ந்த இயல் நிகழ்ச்சி, அது உங்களு

டைய 'அகவுள்வெளி'. அதேபோலத்தான் நரகமும், உங்களுக்குள்ளேயே இருப்பது.

சூஃபிசம் ஒரு சமயமே இல்லை. அது 'சம யத்தன்மை' என்று சொல்லலாம். அதற்கு சர்ச் இல்லை, நூல் இல்லை - பைபிள், குரான் அல்லது வேதங்கள் அல்லது தம்மபதம், எந்தப் புனித நூலும் இல்லை. சூஃபிசம் ஒரு கட்டற்று உலவும் சமயத் தன்மை. ஒரு ஹிந்து, கிறிஸ்துவர், ஒரு முகமதி யர் என்று யார் வேண்டுமானாலும் ஒரு சூஃபியாக இருக்கலாம். எங்கு வேண்டுமானாலும் சூஃபியாக இருக்கலாம். அது சமயத்தன்மையை உருவாக்கு வதற்கான ஒரு நடைமுறைக்கு உகந்த அணுகு முறை.

"எப்படி ஒரு சமயத்தைச் சேர்ந்து இருப்பது?" என்று மனிதர்கள் நினைக்கின்றனர். இது முட் டாள்தனம், அறிவுப் புழுக்கம் என்கிறது சூஃபிசம். அர்த்தமுள்ள கேள்வி எதுவாக இருக்க முடியு மென்றால், சமயத்தன்மையை எப்படி உருவாக்கு வது, ஒருவருடைய சக்தியை உருமாற்றி அதைச் சமய உணர்வாக்குவது எப்படி? நீங்கள் ஒரு மதத் தைச் சேர்ந்து இருக்கத் தொடங்கினால், உங்க ளுக்கு ஒரு அடையாளக் குறிப்பு மட்டுமே இருக் கும். நீங்கள் சமய உணர்வு கொண்டு இருக்க மாட் டீர்கள். உங்களுடைய அக உலகானது வெறுமனே புற உலகின் ஒளி உருவாக மட்டுமே இருக்கும்.

நீங்கள் அக உலகத்தை சார்ந்த மனிதர்களைப் போய்ப் பார்க்கலாம், அவர்களைக் கூர்ந்து கவ னித்தால் ஆச்சரியப் படுவீர்கள். அவர்களின் அக உலகப்பற்று என்பது இவ்வுலக அல்லது புற உல

கப்பற்றின் ஒளியுருவாகத்தான் இருக்கும். அவர்களின் சொர்க்கத்தில் இதே இன்பங்களைத்தான் எதிர்பார்த்துக் கொண்டு இருக்கிறார்கள். நிச்சயமாக அவற்றை ஒரு நிரந்தர அடிப்படையில், அதிக தீவிரமாக உயிரோட்டத்தோடு எதிர்பார்க்கின்றனர். நரகத்தின் தீ இங்கேயுள்ளது போலத்தான் அங்கேயும் இருக்கும், ஆனால் இன்னும் தீவிரமாக, கடுமையாக இருக்கும், அதிகமாக எரியும், அதிகமாகக் காயப்படுத்தும், அதிகமாக வலி ஏற்படுத்தும். அதே உணவுதான், ஆனால் இன்னும் ருசியாக, அதிக சத்துடன், ஆனால் வேறுபாடு அளவில்தான். அளவு உண்மையான வேறுபாடு அல்ல. நீங்கள் அளவு என்ற நோக்கிலிருந்து தரம் என்ற நோக்கிற்கு மாறும்போதுதான் வேறுபாடு தெரிய வரும். உங்கள் வாழ்க்கையின் தரத்தை மாற்றத் தொடங்கினீர்களானால் அதுவே சமய உணர்வு எனலாம்.

உண்மையான சமய உணர்வுடைய ஒரு மனிதர் ஒரு ஹிந்துவாகவோ, முகமதியராகவோ, கிறிஸ்தவராகவோ இருக்க முடியாது. அவர் வெறும் சமயப் பற்றாளர். ஜீசஸ் கிறிஸ்தவர் அல்ல, அவர் சமய உணர்வுடையவர். நான் அவரை சூஃபி என்றழைப்பேன். புத்தர் பௌத்தரல்ல, நான் அவரை சூஃபி என்றழைப்பேன்.

சூஃபியாகிய ஒரு மனிதர் ஒரு சமயத்தின் சாறு அல்லது முதன்மையானவற்றைப் பார்க்கிறார், அவசியமற்ற அனைத்தையும் விலக்கி விடுகிறார்.

நான் சூஃபிசம் எனும் பேரின்ப நிலைக்குள் உங்களை அழைக்கின்றேன். ஆனால் உங்களுக்குள்

பெரும் பரிவன்பு இருந்தால் மட்டுமே உங்களால் நுழைய முடியும். அன்பு கொண்டு கேளுங்கள், விவாதம் உதவாது. உங்களை நம்பவைக்க சூஃபி சம் எந்தப் பெரிய முயற்சியையும் செய்யாது. அத னைப் பருகத் தயாராக உள்ளவர் அனைவருக்கும் தன்னை அர்ப்பணிக்கின்றது. அது வகையின்றி எல்லோருக்குமான அழைப்பு. அதே வேளையில் விவாதமின்றி இருக்கத் துணிந்தவர்கள் மட்டுமே சூஃபிச உலகில் நுழைய முடியும். பரிவன்புதான் அடித்தளமாக இருக்கவேண்டும், பங்கு பெறுதல் தான் அஸ்திவாரமாக இருக்க வேண்டும். அதனு டன் ஒரு பரிவன்புடைய உறவுமுறை கொள்ளுங் கள். வாதம் புரிதல் கோழைத்தனமானது என்ப தைப் புரிந்து கொள்ளுங்கள். எல்லாக் கோழை களும் வாதம் செய்வார்கள், அவர்களால் வாதம் செய்ய முடியும். துணிவுடையோர்தான் முன் அறி யாத ஒன்றிற்குள் குதிப்பவர்கள். அறியாத விஷ யம் விவாதத்திற்குரியதல்ல, தெளிவாகாததனால் தான் அது 'அறியாப் பொருள்' என்று அழைக்கப்ப டுகிறது.

தெரிந்த ஒன்றைப் பற்றி நீங்கள் விவாதம் செய்ய லாம். சிந்திப்பதின் மூலம் தெரிந்த ஒன்றைப் பற்றிய முடிவிற்கு வரலாம். ஆனால் தெரியாத ஒன்றை எப் படி எதிர்கொள்ள முடியும்? சிந்தனை உங்களுக் குப் பழையதை, மற்றும் அனுபவப்பட்டதை மட் டுமே வழங்க முடியும். அறியாத ஒன்றையோ அல் லது அனுபவிக்காத ஒன்றையோ சிந்தனையால் தர முடியாது. சிந்தனை பற்றி வரட்டுப் பிடிவாதம் கொண்டு இருந்தால் நீங்கள் அதிலேயே சிக்கிக் கொள்வீர்கள். அறியாத ஒன்று உங்களின் கடந்த

காலத்திலிருந்து வருவதில்லை, அது வருங்காலத்திலிருந்து உள்ளே நுழைகின்றது. அறியாப் பொருள் உங்கள் நினைவிலிருந்து வருவதில்லை, அப்படியிருந்தால் அது அறியாப் பொருளாய் இருக்க முடியாது.

அந்த அறியாப் பொருள் உங்கள் நினைவைத் துளைக்கின்றது. ஆனால் அதன் மூலம் யாரும் அறியாதது. உங்கள் நினைவு வழிவிட்டாக வேண்டும். நான் பரிவன்போடு கேளுங்கள் என்று சொன்னது இந்த அர்த்தத்தில்தான். ஒத்திசைந்து போகவும். நான் இங்கே தத்துவார்த்தமான விவாதத்தை முன்வைக்கவில்லை. நான் வெறுமனே உங்களுக்கு ஒரு கதை சொல்லிக் கொண்டு இருப்பேன். கதையோடு நீங்கள் விவாதம் செய்யமாட்டீர்கள். ஒரு குழந்தையைப்போல் கதை கேட்பீர்கள், ஆனால் நுணுக்கங்களை ரசிப்பீர்கள். அதன் திருப்பங்கள், திடீர் திருப்பங்கள் ஆகியவற்றை ரசிப்பீர்கள். கதை என்ன சொல்ல விரும்புகிறதோ, அந்த உணர்வோடு ஒன்றிப் போவீர்கள், அதற்கு சொல்ல வேண்டியவை நிறைய உள்ளது. உங்களின் ஒத்துணர்வாற்றல் வளர்கின்றது, அப்போது இன்னும் அதிகமாகக் கதை தன்னை உங்களிடம் வெளிப்படுத்திக் கொள்ளும்.

நல்லெண்ணம், நம்பிக்கை உறுதி...

சூஃபிசத்தை நோக்கும்போது நல்லெண்ணமே உங்கள் அணுகு முறையாக இருக்கட்டும். அது நல்லெண்ணம் கொள்வோருக்கு மட்டுமே கிடைக்கப் பெறுகிறது. ஞாபகத்தில் கொள்ளுங்கள், துணிவுடையோர் மட்டுமே நல்லெண்ணம்

கொள்ளமுடியும். அறியாத ஒன்றிலிருந்து கோழைகள் எப்போதுமே பின்வாங்குவர்.

இப்போது கதை. மிக அழகான கதைகளில் ஒன்று.

தூரத்தில் இருக்கும் மலைச்சாரல்களின் தோற்றுவாயிலிருந்து ஒரு நீரோடை,

நாட்டுப் புறத்தின் ஒவ்வொரு விதமான விவரிப்பையும் கடந்து போகிறது,

இறுதியாக அது அடைந்தது பாலைவனத்தின் மணல் பரப்பை.

ஒவ்வொரு வார்த்தையும் உள்ளாற்றல் மிக்கது. ஒவ்வொரு வார்த்தையின் உணர்விற்குள்ளும், நீங்கள் போக வேண்டும்.

ஒரு நீரோடை....

நீரோடை வாழ்க்கையைக் குறிக்கும் உருவகம். உங்கள் வாழ்க்கை, என் வாழ்க்கை, எல்லோருடைய வாழ்க்கையும்தான். நீங்கள் இங்கே திடீரென வந்துவிடவில்லை. நீங்கள் இங்கே இருப்பது ஒரு விபத்தல்ல. நீங்கள் காலங்காலமாய் எப்போதும் இங்கே இருந்திருக்கின்றீர்கள். அனாதி காலமாய் உங்கள் நீரோடை அந்தத் தூரத்து மலைச்சாரலிலிருந்து பாய்ந்தோடிக் கொண்டு இருக்கிறது. நீங்கள் அந்த மூலத்தை முற்றிலும் மறந்துவிட்டீர்கள், இப்போது அதைப் பற்றி உங்களுக்கு எந்தக் கருத்தும் இல்லை.

மேலும் நீங்கள், 'நாட்டுப்புறத்தின் ஒவ்வொரு விதமான விவரிப்பையும் கடந்து வந்திருக்கிறீர்கள்'

நீங்கள் ஒரு பாறையாய் இருந்திருக்கின்றீர்கள், மரமாகவும், பறவையாகவும் மிருகமாகவும் இருந் திருக்கின்றீர்கள். நீங்கள் எல்லாமாகவும் இருந்தி ருக்கின்றீர்கள். எல்லா விதமான அனுபவங்களும் உங்களுக்குக் கிடைத்துள்ளது. பற்பல சூழ்நிலைக ளையும் கடந்து வந்துள்ளீர்கள். எல்லா வகைகள், எல்லாச் சாத்தியக்கூறுகளையும் கடந்து வந்துள் ளீர்கள். இவ்வகையில்தான் வாழ்க்கை உங்களை வளப்படுத்திக் கொண்டே வரும்.

ஆனால் நீங்கள் மறந்து போய்க்கொண்டே இருக்கின்றீர்கள். அன்றாடக் கவலைகள் ஏராளம். அவை உங்கள் விழிப்புணர்வின் அதிக பகுதியை ஆக்கிரமிப்பதால் உங்களால் நினைவில் வைத்துக் கொள்ள முடிவதில்லை.

உங்களால் மிக மிகக் குறைவாகவே கவனம் செலுத்த முடியுமாதலால், நீங்கள் உங்கள் அனு பவங்களின் பெரும் பகுதியை மறக்க வேண்டும். அந்தக் குறைவான கவனத்தின் கொள்ளளவும் சிறிதே. ஒரு சதவீதத்தை வைத்துக் கொண்டு தொண்ணூற்றி ஒன்பது சதவீத அனுபவத்தை நீங் கள் தினமும் மறந்துவிட வேண்டும். சிறிது நாட்கள் கழித்து அந்த ஒரு சதவீதமும் முழுவதுமாக வைத் துக் கொள்ளப்படுவதில்லை, அதில் ஒரு பகுதி மறைந்துவிடுகிறது. சில வருடங்கள் கழித்து எல் லாமே போய்விடுகிறது, அவசியமான நறுமணம் மட்டுமே மிஞ்சியிருக்கும்.

உங்கள் கவனம் அதிகமானால் அதிகமாக உள் ளடக்கி வைத்திருக்க முடியும். உங்களின் அன் றாடக் கவலைகளின் பளுவை மனதிலிருந்து

இறக்கி வைக்க முடியுமானால் உங்கள் கடந்த கால வாழ்க்கைகளை நினைவுகூர முடியும் என்று புத்தர் சொல்லியிருக்கிறார் - அது உண்மைதான். அன்றாட உலக விஷயங்களின் மீதான உங்கள் கவனம் நெகிழ்ந்தால், கடந்த காலத்தின்மீது வெளிச்சம் பரவும். புத்தர் தன் கடந்தகால வாழ்க்கைகள் அனைத்தையும் நினைவிற்கொண்டு அவற்றைப் பற்றிப் பேசியிருக்கிறார். ஆயிரக்கணக்கான வாழ்க்கைகள். அவர் ஒரு யானையாக வாழ்ந்தது, மரமாக இருந்தது - இப்படியாகப் பல, பல. இவையெல்லாம் உங்கள் வாழ்க்கைகளும்கூட.

நீங்கள் திடீரென இங்கே வந்து விடவில்லை, உங்களுக்கு ஒரு தொடர்ச்சி இருக்கிறது. நீங்கள் ஒரு தொடர்பு, உணர்வு நிலை, ஒரு நீரோட்டம்.

மேற்கத்தியரான வில்லியம் ஜேம்ஸ் முதன் முறையாக இந்த வார்த்தைகளைப் பயன்படுத்தினார்: "நீரோட்டமான விழிப்புணர்வு நிலை" அவர் ஏதோ ஒரு சூஃபி மூலத்திலிருந்து இதைக் கேள்விப்பட்டு இருக்க வேண்டும்; வேறு வகையில்லை - ஏனென்றால் சூஃபிக்கள் எப்போதுமே இந்த நீரோட்டமான விழிப்புணர்வு நிலை மற்றும் வாழ்க்கை நீரோட்டம் பற்றிப் பேசிக் கொண்டு இருப்பார்கள். அது நடந்தேறிக் கொண்டு இருக்கும் ஒன்று, பாய்ந்து செல்லும் இயல் நிகழ்ச்சி. அது ஒரு அசைவு, அது அசைவற்றதல்ல. நீங்கள் இங்கே இருக்கும் பொழுது அசைவில்லாமல் இல்லை. ஒவ்வொரு கணமும் விஷயங்கள் மாறிக்கொண்டே இருக்கின்றன. உடல் ஒரு நீரோட்டம், இயக்கம், மனம் ஒரு நீரோட்டம். அதுபோல் உங்கள் இருப்பு அல்லது பொருண்மைகூட ஒரு இயக்கம், நீரோட்டம்

தான். அடுத்தடுத்த இரண்டு கணங்கள்கூட நீங்கள் அதே மனிதர் இல்லை. காலையில் மகிழ்ச்சியோடு நல்லெண்ணம் கொண்டு இருந்தீர்கள். மதியத் திற்குள் நம்பிக்கையற்றும், சந்தேகம் நிறைந்தும் ஆகிவிட்டீர்கள், மாலைக்குள் எல்லோருமே ஐயுற வுடனும், வசைப்பாங்குடனும், நன்மையில் நம்பிக் கையற்றும் ஆகி விடுகின்றீர்கள். அதிகாலையில் எல்லோரும் பிரார்த்தனை உள்ளத்தோடு குழந் தைபோல் குற்றமற்றவராகி விடுகின்றீர்கள். நேரம் போகப்போக ஏமாற்றப்பட்டு அங்கேயும் இங்கேயும் அலைக்கழிக்கப்பட்டு, உங்கள் குற்றமற்ற தன்மை தேயத் தொடங்குகிறது.

நீங்கள் தொடர்ந்து மாறிக்கொண்டு இருக்கின் றீர்கள்... ஒரு இயக்கம். நீங்கள் மாறாமல் இருக்க முயற்சி செய்தீர்களானால், துன்பத்தை உருவாக் குகின்றீர்கள். ஏனென்றால் நீங்கள் உங்கள் வாழ்க் கைக்கு எதிராகப் போராடுகிறீர்கள். செய்தி என் னவென்றால், நீரோட்டமாக இருங்கள், தளர்ந்தி ருங்கள். எதிர்நீச்சல் போடாதீர்கள். நீரோட்டத் தோடு சொல்லுங்கள் என்பதுதான் குறிப்பு; இது உங்கள் வாழ்க்கை. மேலும் அச்சம் கொள்ள வேண்டாம், இது பல நூற்றாண்டுகளாகப் பாய்ந் தோடிக் கொண்டு இருக்கிறது. வருங்காலத்திலும் இன்னும் பல நூற்றாண்டுகள் ஓடிக் கொண்டேயி ருக்கும். பயப்படத் தேவையில்லை. சாசுவதத்திலி ருந்து சாசுவதத்திற்குத் தொடரும்.

நீங்கள்தான் பிரபஞ்சத்தின் கட்டிணைப்புப் பொருள். நீங்கள் காணாமல்போக மாட்டீர்கள். பலமுறை காணாமல் போனாலும்கூட நீங்கள் இருப்பீர்கள். சாரம் தொடர்ந்து இருக்கும். அவ

சியமற்றதுதான் தொடர்ந்து காணாமல் போகும், ஆனால் நீங்கள் அவசியமற்றவர் இல்லை.

இந்த வாசகத்தைப் பற்றி மேலும் இரண்டு விஷயங்கள். தோற்றுவாய் அல்லது மூலம் மலைகளில், உயரத்தில் இருக்கின்றது. அதைத்தான் உலகில் உள்ள ஒவ்வொரு மதமும் சொல்கிறது; அதாவது மனிதன் இறைவனின் வழிவந்தவன், மூலம் உயரத்தில் இருக்கிறது. மனிதன் உயரத்தில் இருந்து இறங்கி வந்திருக்கின்றான். இதனால்தான் கிறிஸ்தவம் டார்வீனிய கோட்பாடான பரிணாம வளர்ச்சிக்கு எதிராக இருக்கிறது. ஏனென்றால் அந்தக் கருத்து எல்லா மதங்களுக்கும் எதிரானது.

பரிணாம வளர்ச்சிக் கோட்பாடு, மனிதன் மலைமீதிருந்து வரவில்லை, பள்ளத்தாக்கிலிருந்து வந்தான் என்று உபதேசம் செய்கிறது. அதாவது மனிதன் வளர்ந்து கொண்டு இருக்கிறான், மேல்நோக்கி வளர்கின்றான். ஆனால் உலகின் மதங்கள் எல்லாம் நேர் எதிராகக் கற்றுக்கொடுத்துக் கொண்டு இருக்கின்றன; அவன் இறைவனிடமிருந்து வருகிறான். அவன் இறைவனின் வழித்தோன்றல் என்று கூறிவந்துள்ளன. இதைப்பற்றிப் புரிந்து கொள்ள ஒரு விஷயம் உள்ளது. நீங்கள் இறைவனிடத்திலிருந்து வந்தால் மட்டுமே இறைவனைச் சென்றடைய முடியும், இல்லையெனில் முடியாது. ஏனென்றால் எப்போதுமே மூலம்தான் இலக்கு. வட்டம் முற்றுப்பெறுகிறது, நீங்கள் எங்கிருந்து வந்தீர்களோ அந்த இடத்தையே சென்றடைகின்றீர்கள்.

டார்வின் ஒரு விசித்திரமான வேதாந்தத்தை உருவாக்கியுள்ளார். ஒரு நேர்க்கோட்டு வளர்ச்சி, அதாவது நீங்கள் பரிணாம வளர்ச்சி அடைந்து கொண்டே இருப்பீர்கள் - ஆனால் இந்த வளர்ச்சி எங்கே முடிவுறும்? அது கோடுபோல, போய்க் கொண்டே இருக்கும். அது எங்கோ இருண்ட பள் ளத்தாக்கிலிருந்து தொடங்குகிறது, எங்கே முடி யும்? அது எங்கேயும் முழுமையடையாது. போய்க் கொண்டே இருக்கும் அந்த நேர்க்கோடு - முடி வில்லாதது - அது எப்போதும் முழுமை அடையாது, எப்போதும் திருப்தி அடையாது, என்றும் நிறைவு கொள்ளாது.

ஆனால் மதங்கள் முற்றிலும் வேறு ஒரு கதை யைச் சொல்கின்றன. மனிதன் இறைவனிடமி ருந்து வருகிறான், இறுதியாக இறைவனையே சென்றடைகிறான் என்று சொல்கின்றன. அது ஒரு முழுவட்டம். அது முழுமை, முழுமையடைவதிலே நிறைவு இருக்கின்றது.

*தூரத்தில் இருக்கும் மலைச்சாரல்களின் தோற்றுவாயிலிருந்து ஒரு நீரோடை,*

*நாட்டுப்புறத்தின் ஒவ்வொரு விதமான விவ ரிப்பையும் கடந்து போகிறது,*

*இறுதியாக அது வந்தடைந்தது பாலைவ னத்தின் மணற்பரப்பை.*

ஒவ்வொரு உணர்வு நிலையும் இறுதியாக ஒரு மொட்டைச் சந்திற்கு வந்தடைகிறது. இந்தக் கட் டத்தைச் சூஃபிக்கள் 'பாலைவனம்' என்று அழைக் கின்றனர். பாலைவனம் என்ற இடத்தில் நீங்

கள் காணாமல் போகின்றீர்கள் என்று உணரத் தொடங்குகிறீர்கள். பாலைவனத்தில்தான் இறந்து கொண்டு இருக்கிறோம் என்ற உணர்வு உங்க ளுக்கு ஏற்படும். பாலைவனத்தில் முற்றிலும் நம் பிக்கையிழந்து இருப்பீர்கள். அர்த்தமற்று இருக்கும் இந்த கட்டத்தில்தான் தற்கொலை பற்றிய எண் ணம் எழும். இந்தக் கட்டத்தில்தான் என்ன செய்ய வேண்டும், செய்யக்கூடாதது எது, இருக்க வேண் டுமா, வேண்டாமா? என்று உங்களால் கணிக்க முடியாது.

ஒருநாள் அல்லது மற்றொருநாள் ஒவ்வொரு உணர்வு நிலையும் பாலைவனத்தை எதிர்கொள் ளவேண்டிவரும். ஏனென்றால் பாலைவனத்தைக் கடக்காமல் நீங்கள் அறிவு முதிர்வடைய மாட்டீர் கள். அது ஒவ்வொரு ஆன்மாவும் பெறும் பயிற்சி யின் பகுதியாகும். உண்மையில் நீங்கள் பாலைவ னத்தை எதிர்கொள்ளும்போது, நீங்கள் மதத்தைப் பற்றிச் சிந்திப்பீர்கள். எல்லாம் நன்றாக நடக்கும் போது யார் மதத்தைப் பற்றிக் கவலைப்படப் போகி றார்கள்? யார் சிந்திப்பார்? யார் தியானம் செய்வார்? யார் பிரார்த்தனை செய்வார்? விஷயங்கள் சரியாக நடக்காத போதுதான், அடிப்படையில் உங்களிடம் ஏதோ தவறு இருக்கின்றது என்று நீங்கள் யோசிக் கத் தொடங்குவீர்கள்.

இது ஒரு விசித்திரமான இயல் நிகழ்ச்சி - எப்பொ ழுதெல்லாம் ஒரு மனிதனுக்குத் தேவையானவை எல்லாம் கிடைக்கின்றதோ, அப்போது அவன் பாலைவனத்தை எதிர்கொள்கிறான். வளமான சமுதாயமே பாலைவனத்தை எதிர்கொள்கிறது. ஏழைச் சமுதாயம் பாலைவனத்திலிருந்து வெகு

தூரத்தில் இருக்கின்றது. செல்வ வளம் பாலைவனத்தை அருகில் கொண்டு வருகிறது, ஏனென்றால் நீங்கள் விரும்பியவை எல்லாம் கிடைக்கப் பெறுகின்றீர்கள். நீங்கள் விரும்பிய பெண் கிடைக்கிறாள், வீடு, பணம், அந்தஸ்து அதிகாரம் எல்லாமே இருக்கிறது. கனவு கண்டவை எல்லாம் கிடைத்து விடுகிறது, கனவு காண்பதற்கு மிச்சம் ஏதுமில்லை. பாலைவனம் அருகில் வந்துவிட்டது. இப்பொழுது திடீரென ஒருவகையான தூக்கமின்மையை உணர்கின்றீர்கள். உங்களால் தூங்கக்கூட முடியாது, உங்களைச் சுற்றிப் பாலைவனம் இருக்கிறது. எவ்வாறு இந்தப் பாலைவனத்தைக் கடப்பது? அர்த்தமற்ற தன்மை எனும் பாலைவனத்தை, கடும் துயர் எனும் பாலைவனத்தை, அபத்தம் என்ற பாலைவனத்தை எப்படிக் கடப்பது?

*மற்றெல்லாத் தடைகளையும் தாண்டி வந்ததுபோல இதையும் கடக்க முயன்றது நீரோடை.*

இயற்கையாகவே நாம் நம் கடந்தகாலத்தைக் கொண்டுதான் எப்போதும் எதிர்வினையாற்றுகிறோம். இது ஒவ்வொரு சூழ்நிலைக்கும் பொருந்தும் என்று நினைக்கின்றோம். ஆனால் என்றாவது ஒரு நாள் உங்கள் கடந்தகாலத்தைப் பொருத்தமற்றதாக்கும் சூழ்நிலை எழும். அப்போது அது வேலை செய்யாது. இதுதான் உண்மையான நெருக்கடி, உண்மையான சந்தர்ப்பமும் கூட.

சீன மொழியில் வார்த்தைகள் கிடையாது சித்திரங்கள்தான், அதாவது கருத்துக் குறியீடு - ஐடியோகிராம். நெருக்கடிக்கான சீன ஐடியோகிராம்

அழகானது. இரண்டு சிறிய படங்கள் கொண்டது, இரண்டு சிறிய ஐடியோகிராம்கள்: ஒன்று ஆபத் தைக் குறிக்கும், மற்றொன்று வாய்ப்பைக் குறிக் கும். நெருக்கடி என்பது அபாயம் மற்றும் வாய்ப்பு; அது உங்களைச் சார்ந்தது. கடந்தகாலத்தை வைத்தே எதிர்வினையாற்றிக் கொண்டு இருந்தீர் களானால் நீங்கள் தற்கொலை செய்து கொள்வீர் கள். அது ஆபத்தானது. உங்களுக்கு புத்திசாலித் தனம் இருந்து, இது புதிய பிரச்சினை, ஆகவே புதிய தீர்வு தேவை. பழைய தீர்வுகள் உதவாது என்று உணர்ந்து கொண்டீர்களானால் அது ஒரு பெரிய வாய்ப்பாகும். பாலை வனத்தைக் கடக்கை யில் உங்களுக்குப் பெரிய அறிவு முதிர்ச்சி ஏற்ப டும். மேலும் பெரிய அளவிலான முழுமையாக்கம் காண்பீர்கள். நினைவிற்கொள்ளவும் - இப்படித் தான் ஒவ்வொரு முறையும் ஏற்படுகின்றது.

முந்தைய இரவுதான் ஒரு அழகான பெண் சன் னியாசம் பெற்றுக் கொண்டாள். அவளுக்குப் பயம். அந்தப் பயம் குறிப்பிடத்தக்கது. அந்தப் பயமானது அவளால் ஒரு வாக்கைக் காப்பாற்ற முடியவில்லை என்பதே. அந்த வாக்குறுதி அவளின் திருமணத் தைப் பற்றியது. அதனால் சன்னியாசம் பற்றிய சத் தியத்தைக் காப்பாற்ற முடியுமா என்ற பயம் அவ ளுக்கு. ஆனால் திருமணம் ஒரு திருமணமே; சன் னியாசம் ஒரு திருமணம் அல்ல. திருமணம் என்பது ஒரு பிணைப்பு. சன்னியாசம் என்பது விடுதலையா கும். திருமணம் சங்கிலிப் பிணைப்பு, ஒரு சட்டம். சன்னியாசம் விடுதலை, அது நேசம், அன்பாகும். ஆனால் இந்த விவாதம் அவளுக்குள் ஆழமா கச் சென்று விட்டதென்பதை உங்களால் புரிந்து

கொள்ள முடியும். அவளுக்குச் சன்னியாசினி ஆக வேண்டும் - அவள் நேர்மையான பெண் - ஆனால் இந்த வாக்கைக் காப்பாற்ற முடியுமா என்ற பயம், ஏனென்றால் முன்னர் அவள் தோற்றுப் போயிருக் கிறாள். தன் கணவனுக்குக் கொடுத்த வாக்கை அவளால் காப்பாற்ற முடியவில்லை.

நாம் எப்போதுமே கடந்த காலத்திலிருந்தே சிந் திக்கிறோம். இப்படித்தான் 'எல்லோருமே' எதிர் வினையாற்றுகிறோம். இதுதான் எதிர்வினையின் பொருள். இதுதான் எதிர்வினையாற்றுவதற்கும் மறுமொழி தருவதற்கும் உள்ள வேறுபாடு. மறு மொழி என்பது சூழ்நிலை புதியதெனக் கண்டு அதற்குக் கடந்த காலத்திலிருந்து எந்தப் பதி லும் இல்லை என்பதை உணர்ந்து கொள்வது. இதை அறிந்தபின் சூழ்நிலைக்கேற்றாற்போல நீங் கள் மறுமொழி அளிக்க வேண்டும். சூழ்நிலை யோடு ஒத்துப்போகவேண்டும், கடந்த காலத்தைப் பற்றிச் சிந்திக்கக் கூடாது. நீங்கள் கடந்த காலத் தைப் பற்றிச் சிந்தித்து, கடந்த காலத்தை இதற் குள் கொண்டு வந்தீர்களானால் வளர்ச்சிக்கான வாய்ப்பை அழித்து விடுகின்றீர்கள், பழைய போக் கிலேயே இருப்பீர்கள். பழைய செல்தடத்திலேயே இருப்பீர்கள். இதுதான் நடக்கும்.

நீங்கள் கிறிஸ்தவராக இருந்திருக்கிறீர்கள், ஹிந் துவாக இருந்திருக்கிறீர்கள், இப்போது சன்னியாசி யாக இருக்க பயம். இது மற்றொரு சர்ச் என்பது உங்கள் எண்ணம். இது இல்லை. இது மற்றொரு அமைப்பு என்று நினைக்கிறீர்கள், இல்லை. இது நம்பிக்கை வைக்க வேண்டிய அமைப்பு முறை என்று நினைக்கிறீர்கள். அடிப்படையில் முற்றிலும்

புதிதான ஒன்றை எதிர்கொள்கிறீர்கள். ஆனால் கடந்த காலப் பின்னணியைக் கொண்டு எதிர்வினையாற்றுவது இயற்கையே. "நான் ஒரு கிறிஸ்தவனாக இருந்தேன், இப்போது ஒரு சன்னியாசி ஆவதில் என்ன அர்த்தம்?"

இது ஒவ்வொரு நாளும் நடப்பதுதான். ஒரு புத்த துறவி என்னிடம், "ஒரு துறவியாய் இருந்து சலித்துப்போய்விட்டேன், எனக்கு சன்னியாசியாய் இருக்க விருப்பமில்லை" என்றார். "ஆனால் இது துறவிபோல் இருப்பதல்ல. என் சன்னியாசிகள் துறவிகள் அல்ல" என்று சொன்னேன்.

ஆங்கிலத்தில் துறவியை 'மான்க்' என்பார்கள். மான்க் என்ற சொல் தனியாய் வாழும் ஒருவரைக் குறிக்கும், அதாவது தனிமையில். இதேபோல துறவுமடம் என்கின்ற மோனேஸ்டிரியும் மான்க் என்ற மூலச் சொல்லில் இருந்து பிறந்தது. உலகைத் துறந்து தனிமையில் வாழும் ஒருவர் மான்க் எனப்படுவார். மோனோபோலி - தனியுரிமை, மோனோகேமி - ஒரு கணவனுக்கு ஒரு மனைவி - எல்லாமே ஒரே மூலாதாரத்திலிருந்து வரும் சொற்கள்.

என் சன்னியாசிகள் யாரும் 'மான்க்' - துறவிகள் அல்ல. அவர்கள் கன்னியாஸ்திரிகளும் இல்லை. நான் மனிதர்களை அழிப்பதில்லை. கன்னியாஸ்திரி என்பவள் பாழ்நிலையடைந்த ஒரு பெண். 'மான்க்' ஆணின் கேலிச்சித்திரம். நான் அவர்களின் மனிதத்தன்மையை அதிகப்படுத்துகிறேன். நான் அவர்களின் வாழ்க்கை மற்றும் நேசத்தை அதிகப்படுத்துகிறேன். ஆனால் இயற்கையாகவே

ஒரு புத்தத் துறவி அல்லது ஒரு கத்தோலிக்கத் துறவி நினைப்பது - "இதனால் என்ன பயன்?"

சில நாட்களுக்கு முன் ஒரு கத்தோலிக்கத் துறவி இங்கே வந்தார். பன்னிரண்டு, பதின்மூன்று வருடங்களாய் கத்தோலிக்க மடத்தில் வாழ்ந்தவர் எப்படியோ தப்பி வந்துவிட்டார். இப்போது அவருக்குப் பயம். "எனக்கு மிகவும் பயமாய் இருக்கிறது! பகவான் உங்களைக் கண்டு பயம். நீங்கள் அதிகமாக என்னை வேண்டி அழைக்கின்றீர்கள், அதனால் நான் சன்னியாசி ஆகிவிடுவேன் என்ற பயம் இருக்கிறது. இப்போதுதான் தப்பி வந்து இருக்கிறேன். வேறு எந்த அமைப்பிற்குள்ளும் செல்ல விருப்பமில்லை."

இது இயற்கையானதுதான், நம்மால் புரிந்து கொள்ள முடியும். ஆனால் இயற்கையானது உண்மையானதாக இருக்க வேண்டிய அவசியமில்லை. முற்றிலும் புதிய, நீங்கள் இதுவரை சந்தித்திராத சூழ்நிலைகள் இருக்கும். ஆனால் கடந்த காலத்தால் உங்கள் கண்கள் நிரம்பி இருக்கும். அவை பழைய அழுகிய வழிகளிலேயே விளக்கம் தரும்.

*'மற்றெல்லாத் தடைகளையும் தாண்டி வந்தது போல'*

அது மலைகளைக் கடந்து வந்துள்ளது. பள்ளத் தாக்குகளைத் தாண்டி, சமவெளிகளைக் கடந்து வந்து இருக்கின்றது. நீரோடை பலவற்றைக் கடந்து வந்து இருக்கின்றது. உயரமான மலைகளில் இருந்து, ஏதோ ஒரு அறியாத தோற்றுவாயிலிருந்து இவ்வளவு தூரம் பயணம் செய்து வந்திருக்கின்றது. அது பெரிய யாத்திரை மேற்கொண்டு

இருக்கின்றது. கடினமான பாறைகளைக் கடப்பது எப்படி என்ற அனுபவங்களை எல்லாம் பெற்று இருக்கின்றது; எப்போதும் அது வெற்றிபெற்று இருக்கிறது. இப்போது அந்த அனுபவமெல்லாம் ஒரு தடையாய் ஆகிவிடும்.

*"இதையும் கடக்க முயன்றது நீரோடை - (பாலைவனத்தை)*

*ஆனால் மணலுக்குள் ஓடியபோது அது கண்டறிந்தது - அதன் நீரெல்லாம் காணாமல் போய்விட்டதை."*

இது ஒரு புதிய சூழ்நிலை. புதிய சூழ்நிலை என்ற உண்மை உறைக்கும்போது, பழையதை முயற்சிக்கக் கூடாது என்பதுதான் புத்திசாலித்தனம். சூழ்நிலை புதியதென்றால், புதிதாய் இருங்கள், புதியதைக் கண்டுபிடியுங்கள்! கடந்த காலத்தை விட்டு விடுங்கள்! புதியதிற்கு உங்கள் உணர்வு நிலை மறுமொழி கூறட்டும். கண்ணாடிபோல் அதைப் பிரதிபலிக்கட்டும். தவறுகள் மற்றும் பிழைபாடுகள் பற்றி அச்சம் கொள்ளாதீர்கள். ஏனென்றால் ஒரு புதிய சூழ்நிலையில் மன்னிக்க முடியாத தவறு ஒன்று உண்டு என்றால், அது வேறு ஒரு சூழ்நிலைக்கு உகந்த ஒன்றை இங்கே பயன்படுத்துவதாகும்.

இது 'ஒன்றே' மன்னிக்க முடியாத தவறாகும். மற்றெல்லாத் தவறுகளும் முற்றிலும் சரியானவை, அவை பரவாயில்லை; அவற்றின் மூலம் நீங்கள் கற்றுக்கொள்வீர்கள்.

*'ஆயினும், அது நம்பிக்கை கொண்டது, தன் விதி பாலைவனத்தை கடப்பது என்பதை. இருந்தாலும் அதற்கு வழியில்லை'*

நம்பிக்கை கொள்வது, அல்லது பற்றுறுதி கொள் வது என்ற சொல்லை சூஃபிக்கள் விசித்திரமான முறையில் பயன்படுத்துகின்றனர்.

"நான் பற்றுறுதியுடைய கிறிஸ்தவன்" அல்லது "பற்றுறுதியுடைய ஹிந்து" என்று சொல்கிறீர்கள் - அது சூஃபி தரும் அர்த்தம் அல்ல. உங்கள் ஆழமான அகத்திலிருந்து எழுவது மட்டுமே பற்று றுதி, வெளியிலிருந்து வருவதல்ல. உதாரணமாக எல்லோருமே மகிழ்ச்சியைத் தேடுகின்றனர், அது நம்பிக்கை, அது இயற்கையானது. யாரும் உங் களை, மகிழ்ச்சியை நாடு என்று சொல்லவில்லை. அது உங்களின் உள் இயல்பு; எல்லோரும் தேடுகின்றனர், நாடுகின்றனர். யாருமே உங்களி டம் மகிழ்ச்சி சாத்தியப்படும் என்று கூறியதில்லை. உண்மையில் பல தத்துவஞானிகள் மகிழ்ச்சி சாத் தியமில்லை என்று கூறிக்கொண்டு இருக்கிறார் கள். ஃபிராய்டு மகிழ்ச்சி சாத்தியப்படாது என்கிறார். நீட்ஷேயும் மகிழ்ச்சி சாத்தியமில்லை, அது கிடைத் ததே இல்லை நடக்கப்போவதும் இல்லை என்கி றார். இயல் முறையில் அது நடக்கக் கூடியது அல்ல; அது சாத்தியமற்றது. ஆனால் நீட்ஷே மற்றும் ஃபி ராய்டைப் பற்றி யார் கவலைப்படுகிறார்கள்? மனி தர்கள் தேடிக் கொண்டே இருக்கிறார்கள். நீட் ஷேயும், ஃபிராய்டும் கூடத் தேடிக் கொண்டே இருக்கிறார்கள். தத்துவார்த்தமான கணங்களில் அவருக்கு அது சாத்தியமில்லை என்று புரிந்தது. ஆனால் தத்துவம் சாராமல் இருக்கும் கணங்க

ளில், அவர் ஒரு மனித ஜீவனாக, அவர் ஒரு உள நிலை ஆய்வாளராக இல்லாதபோது, உள நிலை ஆய்வின் ஸ்தாபகராக இல்லாதபோது, வெறுமனே ஒரு மனித ஜீவனாக, ஒரு தகப்பனாக, கணவ னாக, காதலனாக, நண்பனாக மட்டுமே இருந்தார். அந்தச் சமயங்களில் அவர் மகிழ்ச்சியைத் தேடத் தொடங்குகிறார். அப்போது அவர் உணர்ந்தது, இது சாத்தியமற்றது என்று. ஆனால் இந்த அறிதல் மேலீடான நிலையில்தான் இருக்கும்.

பற்றுறுதி உள்ளுக்குள் இருந்து வருவது. மரத் தில் கூடு கட்டும் பறவை, தான் அறியாத ஒன் றைப் பற்றி நம்பிக்கை வைத்துள்ளது. இதற்கு முன் னர் அது கூடு கட்டியதில்லை, குஞ்சு பொரித்தது இல்லை. இதுதான் முதல்முறை. எந்தப் பள்ளிக் கும் சென்று கூடு கட்டும் கலையை இதுவரை கற்றதில்லை. யாரும் சொல்லவில்லை, யாரும் கற் றுக் கொடுக்கவில்லை. திடீரென அந்த நம்பிக்கை எழுகின்றது. அந்தப் பறவைக்குப் பிரசவம் தரித்த உடனேயே ஏதோ ஒரு அறியா ஆழத்திலிருந்து கூடுகட்ட வேண்டும் என்ற பற்றுறுதி உண்டா கின்றது. இது அறிவுசார்ந்தது இல்லை, ஆனால் அதன் ஜீவ நாடிகளில் இருந்து வெளிப்படும் ஒன்று இயங்கத் தொடங்குகிறது, அடுக்கத் தொடங்குகி றது. ஆயிரம் விஷயங்களைச் செய்தாக வேண்டும், குஞ்சுகள் வரும்போது கூடு தயாராகிவிடும். குஞ் சுகள் பற்றி அதற்கு எந்தக் கருத்தும் இல்லை, அவை எந்த மாதிரியானவை, கூட்டைப் பற்றியும் முன் அறிவு கிடையாது. ஆனால் அது நடக்கின் றது. சூஃபி மொழியிலே இதைத்தான் பற்றுறுதி, நம் பிக்கை என்கிறார்கள்.

சூஃபிக்கள் வார்த்தைகளைத் தங்கள் வழியிலேயே பயன் படுத்துகின்றனர். தங்கள் பார்வைக்குப் பொருந்துமாறு ஆக்குகிறார்கள். என் எண்ணம் என்னவென்றால் நம்பிக்கை என்ற வார்த்தையும் துல்லியமாக இப்படித்தான் இருக்க வேண்டும்.

*'ஆயினும், அது நம்பிக்கை கொண்டது'...*

... அனைத்து அனுபவங்களுக்கும் எதிராக, அறிவிற்கு முரணாகப் பாலைவனத்திற்குள் தான் காணாமல் போவதை நீரோடை பார்த்துக் கொண்டு இருக்கிறது. ஆனாலும் தன் விதி பாலைவனத்தை கடந்து போவது என்ற நம்பிக்கையும் கொண்டு இருந்தது.

உங்களிடமும் அந்த நம்பிக்கை இல்லையா? என்னவாயினும் நீங்கள் 'பற்றுறுதி' கொள்ளவில்லையா? உங்களுக்குள் ஆழமாக எங்கோ இந்தப் பூமி என் வீடு அல்ல என்ற நம்பிக்கை இல்லையா? இங்கே நீங்கள் ஒரு வேற்று மனிதர், மேலும் உங்கள் வீட்டை எப்படியாவது கண்டுபிடிக்க வேண்டும், உங்கள் அன்பு மேலோட்டமானது, இதை விடவும் அதிகமானதே உங்கள் விதி. நீங்கள் தற்பொழுது வாழும் வாழ்க்கை நீங்கள் வாழ வேண்டிய ஒன்றில்லை என்று நம்பிக்கை இல்லையா? இருக்கிறது. அந்தப் பற்றுறுதி இருப்பதினால்தான் அந்தத் தேடலும் இருக்கிறது, அதனால்தான் இந்தத் துணிகரச் செயல், ஆதலினால்தான் ஒருவர் அங்கேயும் இங்கேயும் பார்க்கின்றார். அந்தத் திசை, இந்தத் திசை என்று தேடுகிறார். எங்கேயோ உங்கள் விதி நிறைவு பெற வழி இருக்க வேண்டும்.

இது உங்கள் வீடு இல்லை என்று உங்களுக்கு யார் சொல்லியிருக்கிறார்கள்? வாழ்க்கைக்கு இதற்கு மேலும் அர்த்தம் உள்ளது என்று உங்களிடம் யார் சொல்லியிருக்கிறார்கள்? இறப்பிற்குப் பின்னும் ஏதோ வாழ்க்கை இருக்கிறது என்று யார் சொல்லியிருக்கிறார்கள்? இறந்தவர் யாரும் திரும்பி வந்து, "நான் இருக்கிறேன்" என்று சொன்னதில்லை. எந்தப் புத்தரோ, மகாவீரரோ, அல்லது கிருஷ்ணரோ மீண்டும் வந்ததில்லை. ஆனால் ஒரு சூட்சுமமான நம்பிக்கை உள்ளது, அசைக்க முடியாத பற்றுறுதி இருக்கிறது, அது நீங்கள் எப்படியோ தொடர்ந்து வாழ்ந்து கொண்டு இருப்பீர்கள் என்று. உடல் போய்விடும், உயிர் போய்விடும். ஆனால் வாழ்க்கை தொடரும்.

*ஆயினும் அது நம்பிக்கை கொண்டது. தன் விதி பாலைவனத்தைக் கடப்பதுதான் என்பதை.*

*இருந்தாலும் அதற்கு வழியில்லை.*

*இப்பொழுது ஒரு அசரீரி கேட்கிறது. அது பாலைவனத்திலிருந்து எழுந்தது.*

*அது சன்னமாகக் கூறியது:*

*"காற்று பாலைவனத்தைக் கடக்கிறது, நீரோடையாலும் அது முடியும்."*

இப்போது ஒத்துணர்வோடு கதைக்குள் பாருங்கள். உங்களுக்கு ஒரு முக்கியமான செய்தி தருகிறது.

பாலைவனமே பேசிற்று என்கிறது கதை. அதன் அர்த்தம் என்ன? அது எதைக் குறிக்கின்றது?

அதன் அர்த்தம் என்னவென்றால், நீங்கள் சூழ் நிலை சொல்வதைக் கேட்டீர்களானால், நீங் கள் எதிர்கொள்ளும் பிரச்சினை சொல்வதைக் கேட்டீர்களானால், அமைதியாக பிரச்சினை அல் லது நெருக்கடி சொல்வதையே கேட்க முடியுமா னால், நீங்கள் கதவைத் திறப்பதற்கான சாவியைக் கண்டுபிடிப்பீர்கள். பிரச்சினைக்குள்ளேயே இருக் கிறது தீர்வு. அதுதான் அர்த்தம். வியாதிக்குள் ளேயே மறைந்து இருக்கின்றன மருந்தும் மருத் துவமும். பதில்களைத் தயாராக வைத்துக்கொள் ளாமல் பிரச்சினைக்குள் உங்களால் போக முடியு மென்றால், பிரச்சினை உங்களிடம் சன்னக்குரலில் சொல்லும், பிரச்சினையை எப்படித் தீர்ப்பதென வழி சொல்லும்.

நீரோடைக்குப் பாலைவனம்தான் பிரச்சினை. நீரோடை பாலைவனத்தில் இறந்துபோய்க் கொண்டு இருக்கிறது. ஆனால் கவனியுங்கள்! பாலைவனம்கூட உங்கள் நண்பன்தான். நீங்கள் வெறுமனே கேட்க வேண்டும்.

நீங்கள் கோபப்பட்டால், கோபம் சொல்வதைக் கேளுங்கள், கேட்டீர்களானால் பரிவன்பின் கத வுகளைத் திறக்க உங்களுக்குச் சாவி கிடைக் கும். நீங்கள் காம உணர்ச்சியால் மூழ்கடிக்கப்படும் பொழுது, காமம் சொல்வதைக் கேளுங்கள். 'சமா திக்கு' வாயிலை அது காட்டும். உங்கள் பேராசை சொல்வதைக் கேளுங்கள், பேராசையிலே பகிர் தல் எனும் இரகசியம் பொதிந்து கிடப்பதை அறிந்து ஆச்சரியப்படுவீர்கள்.

இதுவே தியானத்தில் ஆழ்வதற்கான கலை. உண்மையான தியானம் என்பது இதுதான். எப்போதெல்லாம் பிரச்சினையைச் சந்திக்கின்றீர்களோ அந்தப் பிரச்சினைக்குள் செல்லுங்கள். உங்கள் கைவசம் ஏற்கனவே தீர்வுகள் இல்லை என்றால் மட்டுமே உங்களால் பிரச்சினைக்குள் போகமுடியும். அந்தத் தீர்வுகள்தான் எதிரிகள். இப்போது இந்த மாற்றத்தைப் பாருங்கள். உங்கள் தலையில் அறிவு என்று சுமந்து கொண்டு இருக்கும் இந்தத் தீர்வுகளை நண்பர்கள் என்று நினைத்துக் கொண்டு இருக்கிறீர்களா? அது உண்மை இல்லை. அந்தத் தீர்வுகள்தான் எதிரிகள். பிரச்சினை உங்களிடம் குசுகுசுப்பாகப் பேசும்போது இந்தத் தீர்வுகளினால்தான் உங்களால் கேட்க முடிவதில்லை, உங்களால் பிரச்சினையின் மறைபொருளைத் துளைக்க முடியவில்லை.

இந்த வகையில் பாருங்கள்: காமம் மோசமானது என்று உங்களுக்குத் தெரியும், ஏனென்றால் அதைச் சமய நூல்களில் படித்திருக்கிறீர்கள். அது பாவம் என்றறிவீர். ஏனென்றால் அதைத்தான் காலங்காலமாய் சமய குருக்கள் சொல்லி வருகின்றனர். இது உங்களுக்குள் பதிந்துவிட்டது. இது இப்போது உங்கள் அறிவாகிவிட்டது. அதாவது காமம் பாவமானது. இதனால் நீங்கள் எப்போதுமே பரிவோடு ஆழமாய் காமத்திற்குள் சென்று பார்க்க முடியாது. அதன் மறைபொருளுக்குள் போகவே முடியாது. காமம் பாவமானது என்ற கருத்து உங்களைத் தடுத்து நிறுத்தும். ஆகவே கற்றுக் கொள்வதில் அர்த்தம் இல்லை என்று உங்களுக்கு ஏற்கனவே தெரியும் என்பதை அறிவீர்கள்.

ஒவ்வொரு நாளும், வருடாவருடம், நீங்கள் இறக்கும்போது கூட உங்கள் கதவைத் தட்டிக் கொண்டு இருக்கும் - இயல் நிகழ்ச்சியான காமம் சொல்வதைக் கேட்டீர்களானால் ஆச்சரியப்படுவீர்கள். கைதிகளைச் சிலுவையில் அறையும்போதும், மரணதண்டனை நிறைவேற்றப்படும்போதும்கூட கடைசியாக மனிதனுக்கு ஏற்படும் விஷயம் விந்து வெளியேற்றம். பெண்ணைப் பற்றி நிச்சயமாகச் சொல்ல முடியாது, ஏனென்றால் விந்து வெளியேறுதல் இருக்கலாம் என்பது பெண்ணிற்கு இல்லை. ஒருக்கால் புணர்ச்சிப் பரவசநிலை கொள்ளலாம், ஆனால் மற்றவர்களுக்குப் புலப்படாதது. பல மனிதர்கள் இறந்துபோவதை நான் கூர்ந்து கவனித்து இருக்கிறேன். என் குழந்தைப் பிராயத்திலிருந்தே இது என் விருப்பார்வமாகும்.

என் ஊரிலே, நான் இல்லாமல் யாரையும் இறந்துபோக அனுமதிப்பதில்லை. யாரோ ஒருவர் மரணப்படுக்கையில் இருக்கிறார் என்று கேள்விப்பட்ட கணமே, நான் அங்கு போய்விடுவேன். சில மணிநேரங்கள் நான் காணாமல் போயிருந்தால் என் பெற்றோர்களுக்குத் தெரிந்துவிடும்: "யாராவது இறக்கும் தறுவாயில் இருக்கிறார்களா என்று பார். அவன் அங்கேதான் இருப்பான்" என்பார்கள். கடைசி யாத்திரை வரை பின்தொடர்வேன். பணக்காரர், ஏழை, பிச்சைக்காரர் என்று இறந்து போகும் ஒவ்வொரு மனிதருடனும் போவேன். ஏன், அது நாய், பூனையாய்கூட இருக்கலாம். நான் உட்கார்ந்து கவனிப்பேன். நான் மேலும் ஆழமாக நோக்க மீண்டும் மீண்டும் ஆச்சரியத்திற்கு உள்ளானேன். மறுபடியும் மறுபடியும் நடக்கக்

கண்டேன். மனிதன் இறக்கும்போதுதான் கடைசி யோசனை காமமாக இருக்கிறது, நாய் மற்றும் பூனையானாலும் இதே நிலைதான்.

காமம் தொடர்ந்து இருந்து கொண்டேயிருக்கும். பாடம் கற்றுக்கொண்டால் மட்டுமே அது உங்களை விட்டு விலகும். மேலும் பாடம் கற்றுக்கொள்ள நீங் கள் அது சொல்வதைக் கேட்கவேண்டும். காமத் துடன் தியான நிலையில் இருக்க வேண்டும். பகை உணர்வுடன் இருத்தல் ஆகாது. அமைதி யாக இருக்க வேண்டும். கோவிலுக்குள் நுழைவ துபோல் காமத்திற்குள் நுழையவேண்டும். புனிதத் திலும் புனிதம் அது, அந்த மிக ரகசியமான சாவி அங்கே மறைந்து கிடக்கின்றது. அதுவே பிரதான சாவி.

காமம்தான் வாழ்க்கையின் மூலாதாரம். ஆகை யினால் கதவுகளைத் திறக்கும் சாவி அதனிடம் நிச்சயமாக இருக்க வேண்டும்.

பாலைவனம் குசுகுசுப்புடன் கூறியதின் அர்த்தம்,

"காற்று பாலைவனத்தை கடக்கின்றது, நீரோ டையாலும் முடியும்."

*நீரோடை எதிருரைத்தது... ...*

நீங்கள் பலமுறை நான் சொல்வதை எதிர்ப்ப துபோல, தினமும் எனக்குக் கடிதங்கள் வந்து கொண்டே இருக்கின்றன - மறுப்புகள், மறுப்புகள். "இது இருக்கக் கூடாது, இது இப்படி இருக்க வேண்டும்" நீங்கள் என்ன சொல்கின்றீர்கள் என்று உங்களுக்கே தெரியாது. நீங்கள் எங்கே இருக் கிறீர்கள் என்று தெரியாமல், அறிவுரை வழங்கிக்

கொண்டே இருக்கிறீர்கள், வழிவகை கூறுகின்றீர்கள், எதிர்ப்பு தெரிவித்துக் கொண்டே இருக்கிறீர்கள்.

சமீபத்தில் ஒருநாள், எனக்கு ஒரு கடிதம் வந்தது. ஒரு மனிதருக்குச் சன்னியாசி ஆகப் பெரு விருப்பம், ஆனால் சன்னியாசத்தை அவர் எதிர்க்கிறார் "ஏனென்றால் அது ஒருவகையான அடிமைத்தனம்". உங்களுக்கு சன்னியாசம் பற்றி எதுவும் தெரியாது, சரணாகதி பற்றி தெரியாது. சரணாகதி உங்களை முதலாளி ஆக்கும். அடிமையாக அல்ல. - ஆனால் அது வாழ்ந்து பார்க்கவேண்டிய ஒரு விளங்காப் பொருள். மேலும் அதைப் புரிந்து கொள்வதற்கு வாழ்ந்து பார்ப்பதைத் தவிர வேறு வழியில்லை. எந்தவிதமான எதிர்ப்புகள் வந்தாலும் அது உங்கள் கடந்தகால அறிவிலிருந்து வருகின்றது. கடந்த கால அறிவு இனிமேல் செல்லுபடியாகாது, சன்னியாசத்திற்குச் செல்லாது. நீங்கள் என்றும் சன்னியாசியாய் இருந்தது இல்லை!

இப்போது இந்த நீரோடை பாலைவனத்திற்குள் நுழைந்ததே இல்லை. அது பாலைவனத்தைக் கடந்ததே இல்லை. நீரோடையின் வாழ்க்கையில் முதல் முறையாக பாலைவனம் வருகை தந்து இருக்கிறது.

> *நீரோடை எதிருரைத்தது: மணலின்மீது தான் மோதுவதால் தான் ஈர்த்துக் கொள்ளப்படுவதாய்: காற்று பறக்கக் கூடியது ஆதலினால் கடக்கிறது பாலைவனத்தை.*

"ஆனால் என்னால் எப்படி முடியும்?" இது ரொம்பவே தர்க்கரீதியானது. "காற்றால் பறக்க முடியும்,

என்னால் முடியாது. காற்றால் பாலைவனத்தைக் கடக்க முடியும், என்னால் எப்படி முடியும்?"

*"உனக்குப் பழக்கப்பட்ட வழியிலே நீ மோதொலித்துப் பாய்வதால் நீ கடக்கலா காது."*

கேளுங்கள்... பாலைவனம் சொல்கிறது, "உனக் குப் பழக்கப்பட்ட வழியிலே நீ மோதொலித்துப் பாய்வதால் நீ கடந்து போக முடியாது" நீங்கள் பழக்கப்பட்ட வழியை, அதே வழக்கத்தை கைவிட வேண்டும். அதுதான் சரணாகதி என்பது. கடந்த காலத்தை விட்டுவிடுவது, கற்றதை, அறிந்ததை விடுவது. புதிய விழிப்புணர்வோடு புதியதை எதிர் கொள்வது.

*நீ காணக்கிடைக்காமல் போவாய் அல்லது தாழ் சதுப்பு நிலமாவாய்.*

*உன் இறுதியிடம் அடைய காற்று உன்னைத் தூக்கிச் செல்ல அனுமதிப்பாய்."*

இதுதான் தளரவிடுதல். நீங்கள் தளரவிட வேண் டும். வாழ்க்கை உங்களின் இறுதி இலக்கிற்கு உங் களை இட்டுச் செல்ல நீங்கள் அனுமதிக்க வேண் டும். சரணாகதி பற்றியது எல்லாம் இதுதான். சர ணாகதி பற்றி பாலைவனம் நீரோடைக்குப் பாடம் சொல்லித் தருகிறது.

*"ஆனால் இது நடப்பது எவ்வாறு?*

*காற்று உன்னை ஈர்த்துக்கொள்ள உன் னையே தளர்த்திக் கொள்வாய்."*

அதுதான் இறப்பு, அதுதான் சாதல் - குருவிடம் இறந்து போதல், குருவிடம் நெகிழ்ந்து போதல். காணாமல் போன ஒருவர், குருவினுள் காணாமல் போவது.

*"நீரோடைக்கு இதில் கருத்து ஒவ்வாமை. என்ன இருந்தாலும் இதுவரை நான் உறிஞ்சப்பட்டதில்லையே. தன் தனித்தன்மையை இழக்க அதற்கு அவாவுமில்லை."*

என்னிடம் வந்துகொண்டே இருக்கும் மனிதர்கள் சொல்வது: "சன்னியாசம் நல்லதுதான், ஆனால் எங்கள் தனித்தன்மை என்னாவது? எங்கள் தனித்தன்மையை இழந்துவிடமாட்டோமா?"

உங்களிடம் எதுவுமில்லை! பிறகு, அதை இழப்பதைப் பற்றி அவ்வளவு கவலை உங்களுக்கு. உங்களிடம் என்ன தனித்தன்மை உள்ளது? நீரோடை தன் தனித்தன்மையை இழந்துவிடுவோம் என்று கவலைப்படுகின்றது. உண்மையில், நீங்கள் எப்போதும் நினைவில் வைத்துக் கொள்ளவேண்டியது. இன்றியமையாத ஒன்று, தொலைந்துபோக முடியாது. அதனால்தான் சரணாகதியில், அவசியமற்றது காணாமல் போய், இன்றியமையாதது தன் முழுத் தெளிவு மற்றும் அறிவுடன் எழும். அது அவசியமற்றதோடு மறைந்து கிடந்தது. அவசியமற்றது, குப்பையானது தொண்ணூற்றி ஒன்பது சதவீதமாக இருந்தது. கோஹினூர், அதாவது உங்கள் ஜீவனின் வைரமானது இந்தக் குப்பைக்கு பின்னால் இருந்தது. நீங்கள் சரணாகதிக்கு உட்படும்போது இந்தக் குப்பை மட்டுமே சரணடையும். அவசியமற்றது மட்டுமே சரணடைய முடியும். இன்றியமையா

தது சரணடைய முடியாது. அது சரணடைய வழியே இல்லை. ஆக குப்பை போய்விட்ட பிறகு, முதல் முறையாக, உங்கள் இன்றியமையாத தன்மையான உங்கள் வைரத்தை, கோஹினூரை உணர்வீர்கள்.

ஆனால் நீரோடைக்குப் பயம். தன் தனித்தன் மையை இழக்க அதற்கு விருப்பமில்லை. ஒரு முறை தொலைந்துவிட்டால் மறுபடியும் பெற முடி யுமா என்று எப்படித் தெரிந்து கொள்வது?

அதுதான் உங்கள் பயமும்கூட. சன்னியாசத்திற்கு முன் எல்லோரும் தயங்குகிறார்கள். சரணாகதி யினால் உங்கள் ஜீவன் தொலைந்து போகாது என்று நிச்சயமாக இருக்க முடியும். அதை எப்ப டித் திரும்பப் பெறுவது? நீரோடைமீது கோபப்படக் கூடாது. இயற்கையான தர்க்கவாதம் உங்களின் தர்க்கம், எல்லோருடையதும்தான். இன்றியமை யாததும் சேர்ந்து தொலைந்து போய்விடாது என்று நான் எப்படித் தெரிந்து கொள்வது? என்னுள் எப் படி நான் திரும்பிவருவது? பயம் இயற்கையானது தான்.

"காற்று" என்றது மணல், "இந்த வேலையைச் செய்கின்றது"

காற்றின் வேலைதான் குருவின் வேலையும்கூட. தன்னுள் நீங்கள் ஈர்த்துக் கொள்ளப்பட அனு மதிக்கிறார். அந்த உறிஞ்சுதலில் அவசியமற்றது காணாமல் போய்விடுகிறது. இன்றியமையாதது முதல் முறையாக உங்களுக்குள் ஒளிர்விடுகிறது. குருவிடம் சரண் அடைந்தீர்கள் என்றால், குரு உங்களின் அகத்தை, உங்களின் உண்மையான ஜீவனை உங்களிடம் திருப்பித் தந்துவிடுவார். உங்

களின் சுயமல்லாதவற்றை மட்டுமே அவர் எடுத்துக் கொள்வார். உங்களிடம் என்றுமே இல்லாததை அவர் எடுத்துக்கொள்வார். உங்களிடம் எப்போதும் இருந்ததை, ஆனால் அதைப் பற்றி நீங்கள் விழிப்புணர்வு இல்லாமல் இருந்ததை, அவர் உங்களிடம் திருப்பித் தருவார். நீங்கள் எதுவாய் இருக்கின்றீர்களோ அதை கொடுத்து, உங்களின் சுயமற்றதை எடுத்துக் கொள்வார்.

*"காற்று... இந்தச் செயலைச் செய்கின்றது.*

*அது நீரெடுத்து பாலைவனத்தைக் கடக்கின்றது, பிறகு அது கீழே விழ வழி விடுகிறது.*

*மழையாய் பொழிகின்ற நீர், மறுபடியும் ஆறாய் பாய்கிறது"*

*இதை நான் மெய்யுணர்வது எப்படி?*

மெய் நாடுவோர் ஒவ்வொருவரும் ஒரு நாள் அல்லது மற்றொரு நாள் கேட்பது. "இது உண்மை என்று நான் எப்படித் தெரிந்து கொள்வது? இது வெறும் கற்பனையாக இருக்கலாம், கதை அல்லது நீரோடைகளைத் தன் நலத்திற்காகப் பயன்படுத்த ஒரு நம்பிக்கையாகக்கூட இருக்கலாம். அது ஏமாற்று வேலையாக இருக்கலாம், ஏமாற்றும் பொருட்டு ஒரு சூட்சுமமான தந்திரமாக இருக்கலாம், ஒரு யுக்தியாக இருக்கலாம்? இது உண்மை என்று நான் எப்படி அறிவது?

தர்க்க ரீதியாக நம்பவைக்கப்பட வேண்டும் என்று நீரோடை விரும்புகிறது, அது சான்று கேட்கிறது. நடக்கப்போவதைப் பற்றிய ஒரு முற்காணல் வேண்டுகிறது.

"அது அப்படித்தான். நீ நம்பாவிடில் அதி கபட்சம் நீ ஆகப்போவது படுசேறு, மேலும் அது நடக்கப் பற்பல ஆண்டுகள் ஆகலாம்.

மேலும் நிச்சயமாக அது நீரோடை போன்ற தல்ல."

"அது அப்படித்தான்" என்கிறது பாலைவனம். நிரூபிக்க வழியில்லை. வெள்ளோட்டம் காண்பதற்கு எல்லாம் வழியில்லை. அதனுள் சென்றுதான் ஒருவர் அறிந்து கொள்ள முடியும்.

மனிதர்கள் என்னிடம் வந்து, "சன்னியாசம் என்றால் என்ன?" என்று கேட்கிறார்கள். அவர்களிடம் என்ன சொல்வது என்று தெரியாமல் இருக்கிறேன். நான் சொல்லக் கூடியது எல்லாம், சன்னியாசி ஆன பிறகு அதைத் தெரிந்து கொள்ளவும். அது ஒரு அனுபவம், ஒரு ருசி. ருசிப்பதால் மட்டுமே அறியக் கூடியது. ஆனால் அவர்கள் தர்க்கரீதியான மனிதர்கள், பகுத்தறிவுவாதிகள், அதனால் அவர்கள் சொல்வது: "அது சரி, என்ன சான்று இருக்கிறது, நாங்கள் அதை மேற்கொண்டால் பின், ஏதும் நடக்கவில்லை என்றால், மகிழ்ச்சி இல்லை, ருசி ஏதும் இல்லை என்றால், ஏதாவது சான்று வேண்டும், உத்தரவாதம் இருக்க வேண்டும். சரி, சான்று இல்லை எனில், ஒன்று நிச்சயமாக வேண்டும், நாங்கள் திரும்பி வந்தால் முன்னர் இருந்தாற்போல இருக்க வேண்டும். நாங்கள் கரைந்துபோய்விட்டால், அது பாதுகாப்பின்மைக்குள் போவது போல, இருண்ட இரவிற்குள் போவதுபோல. இது ஆபத்து நிறைந்தது."

ஆனால் அப்பாற்பட்ட விஷயங்களைத் தெரிந்து கொள்வதற்கு வழியில்லை. ஒரே வழி அதற்குள் செல்ல வேண்டும், அவற்றில் ஒன்றாகிவிட வேண் டும். "ஒன்று மட்டும் நிச்சயம்" என்கிறது பாலைவ னம். "என்னால் சான்று தர முடியாது, அது அப்படித் தான் என்று என்னால் சொல்ல முடியும். மீண்டும் மீண்டும் நடப்பதைப் பார்த்திருக்கிறோம். ஆனால் நீ அதை நம்பாவிட்டால், நீ படுசேறாவதற்கு மேல் எதுவும் ஆகமுடியாது. ஆக நீ தேர்வு செய்யலாம் - ஒன்று சேறாகலாம் அல்லது துணிந்து காற் றோடு கலந்து கரைந்துவிடு. சேறாக முடிவு செய் தாலும் கூட மறுபடியும் நீரோடையாக முடியாது. எப்படியாயினும் நீரோடை காணாமல் போய்விடும். கோழைத்தன நிலை காணாமல் போய் சேறாய் முடியலாம், அல்லது துணிந்து மிகப்பெரிய தாண்டு தல் செய்தும் காணாமல் போகலாம். சாத்தியக்கூறு உள்ளது. உன்னால் நம்ப முடியுமென்றால், நீ வேறு ஒரு ரூபத்தில் வேறு ஒரு இடத்தில் இருக்க முடி யும்."

குருவினுள் மறையும் சீடன், கீழ் நிலையில் காணாமல் போய், மேல் நிலையினிலே பிறக்கின் றான். புலன் அறிவிற்கு உட்பட்டவனாய் இறந்து, சூட்சுமமாய் பிறக்கின்றான். அவன் உடலாய் இறந்து, ஆன்மாவாய் பிறக்கின்றான். சுற்றெல்லை யாய் இறந்து, மையமாய் பிறக்கின்றான். ஆனால் முடிவு உன்னுடையது. சேறாகலாம், ஆனால் ஞாப கம் இருக்கட்டும், அந்த வகையில் நீரோடையும் இருக்கப் போவதில்லை.

*ஆனால் அதே நீரோடையாக நான் இருக்க முடியாதா, இன்றுள்ளது போலவே?*

நீரோடை மிகமிகப் பொருத்தமற்ற கேள்வி கேட்கிறது. இந்த இரண்டில் ஏதோ ஒன்று மட்டும்தானா தேர்விற்கு இருக்கிறது? நான் சேறாகி என் தனித்தன்மையை இழக்க வேண்டும், அல்லது காற்றோடு கலந்து, எங்கு போகப்போகிறோம், பூமிக்குத் திரும்புவோமா, மாட்டோமா என்ற அறியாப் பயணத்தை துணிந்து மேற்கொள்ள வேண்டுமா? மூன்றாவது தேர்வு என்று ஏதுமில்லையா?

*ஆனால், அதே நீரோடையாக நான் இருக்க முடியாதா இன்றுள்ளதைப் போலவே?*

இதுதான் நீங்களும் நினைப்பது. ஆனால் உங்களால் அதே வகையில் இருக்க முடியாது. வாழ்க்கை நகர்ந்து கொண்டே இருக்கிறது, பின்னோக்கிச் செல்ல வழியே இல்லை, மேலும் இந்த இயக்கத்தை நிறுத்துவதற்கு வழியே இல்லை.

பெரிய விஞ்ஞானியான எடிங்டன் 'செயலின்மை' அல்லது 'அசைவின்மை' என்பது ஒரு வெற்று வார்த்தை என்கிறார். ஏனென்றால் வாழ்க்கையில் அசைவின்மை என்ற வார்த்தைக்குச் சரி ஒப்பாக எந்தச் சூழ்நிலையும் இல்லை. எல்லாமே நகர்ந்து கொண்டு இருக்கின்றன. அசைவற்று ஏதுமில்லை. பூமி நகர்கின்றது, நட்சத்திரங்கள், சூரியன் எல்லாமே நகர்கின்றன. ஒரு கணம் கூடச் செயலின்மை என்பது இல்லை. தூங்கும்போதுகூட "ஓய்வு எடுக்கிறேன்" என்று நீங்கள் சொன்னால் கூட நீங்கள் ஓய்வாய் இல்லை. எல்லாமே நகர்ந்து கொண்டு இருக்கின்றன. எட்டு மணி நேரம் கழித்து நீங்கள் எட்டுமணி நேரம் அதிக வயதாகி இருப்பீர்கள். உங்களின் ஆழ்ந்த உறக்கத்தின்போ

துகூட கனவுகள் நகர்ந்து கொண்டு இருக்கின்றன; உங்கள் உணர்வு நிலை நகர்ந்து கொண்டு இருக்கிறது, உங்கள் உடல் மாறிக்கொண்டு இருக்கிறது, உங்கள் மனம் மாறிக்கொண்டு இருக்கிறது. எல்லா அசைவுகளும் வாழ்க்கையின் அசைவுகளே, ஆகையால் அதேபோல் இருப்பதற்கான வழியே இல்லை.

"எப்படியாயினும் நீ அதேபோல் இருக்க முடியாது" சொன்னது சன்னக்குரல்.

"உன் இன்றியமையாத ஆத்மப் பகுதி எடுத்துச் செல்லப்பட்டு மறுபடியும் நீரோடையாகி விடும்.

*இன்றும், நீ எதுவாக இருக்கிறாயோ*

*அதுவென அழைக்கப்படுகிறாய். ஏனெனில் நீ அறியாதது உன்னில், எந்தப் பகுதி ஆத்மார்த்தமானதென்று."*

இன்றியமையாததை அறிந்து கொள்ள அவசியமற்றதை விட்டு விடுவதே ஒரேவழி, அவசியமற்றதைத் துறந்துவிடுவது. பொய்யைப் பொய் என்று அறிவதே உண்மையை அறிவதற்கான ஒரே வழி.

இதைக் கேட்கப் பெற்றதும்,

*நீரோடையின் சிந்தனைக் களத்திலே சில வகையான எதிரொலிகள் எழும்பத் துவங்கின.*

ஆம் இது உண்மைதான், நீரோடையால் புரிந்து கொள்ள முடிந்தது. நீரோடை மனித ஜீவன் அல்ல. மனித ஜீவன்கள் அதி குருடர்கள். நீரோடைகள்

கூட அவ்வளவு குருடு அல்ல. மனித ஜீவன்கள் அடி முட்டாள்கள், பிடிவாதம் கொண்டவர்கள், நெகிழ்வற்றவர்கள். நீரோடையால் கருத்தை புரிந்துகொள்ள முடிந்தது. ஆம், என்னால் தொடர்ந்து இம்மாதிரியே இருக்க முடியாது. இரண்டு அடுத்தடுத்த கணங்கள்கூட நான் ஒரே மாதிரி இருந்ததில்லை, பொருட்கள் மாறிக் கொண்டே இருக்கின்றன. உண்மைதான் நான் ஒரு தொடர் மாற்றமாய் இருந்திருக்கிறேன். மாற்றத்தைத் தவிர எல்லாமே மாறிக் கொண்டுதான் இருக்கின்றன. இது உண்மைதான்.

நீரோடையால் கருத்தைப் புரிந்து கொள்ள முடிந்தது. அதனால் இரண்டு மாற்று வழிகளைக் காண முடிந்தது. ஒன்று அழுக்கடைந்த படு சேறாவது. பாலைவனத்தில் என்றென்றும் தொலைந்து போய் கிடப்பது. மற்றொன்று துணிந்து செயல்படுவது, காற்றினிலே கரைந்து காணாமல் போவது, நம்பிக்கையோடு என்னதான் நடக்கும் என்று பார்ப்பது! எப்படியிருந்தாலும் இழப்பதற்கு ஒன்றுமில்லை. அதேபோல் இருக்க முடியாது, அதற்கு மேல் வேறு மாற்று வழியும் இல்லை. ஆக இப்பொழுது, கோழையான படுசேறாவது, இல்லை துணிகரமாக பெரிதாகத் தாண்டிப் போவது.

சந்தேகத்தோடு இருப்பவர்கள் சேறாகி விடுகின்றனர். நல்லெண்ணம், நம்பிக்கை அடைந்தோர்களே உண்மை என்னவென்று தெரிந்து கொள்கின்றனர். பாலைவனத்தின் குசுகுசுப்பான செய்தியைப் புரிந்து கொள்ளத் தொடங்கிய கணமே நீரோடையின் சிந்தனையில் சில எதிரொலிகள் எழும்பத் தொடங்கின.

அதுதான் உங்களுக்கும் நடக்கிறது. நான் சொல்வதைக் கேட்டுக்கொண்டு இருக்கும்போது, உங்களுள் நம்பிக்கைக் கணங்கள் எழும்போது உங்களின் உணர்வற்ற நிலையிலிருந்து சில எதிரொலிகள் மேல் எழும்பத் தொடங்குகின்றன.

*ஆம், அவன் மங்கலாகவே நினைவு கூர்ந்தான். அவன் இருந்த நிலை, - அல்லது அவனின் ஏதோ ஒரு பகுதி மட்டுமா?*

*காற்றின் கரங்களால் தாங்கிக் கொள்ளப்பட்டு இருந்தது.*

நான் சொல்வதைக் கேட்டீர்களானால், என் ஜீவனுடன் பங்கேற்றீர்களானால், சில எதிரொலிகள் உங்களுக்குள் எழும். ஆம், எங்கேயோ ஏதோ ஒரு கணத்தில், நீங்களும் இயற்கை அல்லது 'வாழ்தலின்' ஒரு பகுதியாக இருந்திருக்கிறீர்கள். எந்தச் சந்தேகமோ, கவலையோ இல்லாமல் வாழ்ந்திருக்கிறீர்கள், முழுமையுடன் ஒருவிதமான பொருத்தத்துடன் வாழ்ந்திருக்கின்றீர்கள் - அது உங்கள் தாயின் கருப்பையில் இருக்கும்போது அது சாத்தியம் என்றால், ஏன் மறுபடியும் சாத்தியப்படாது? இயற்கை உங்களைக் கவனித்துக் கொண்டது, நீங்கள் நெகிழ்ந்து கொடுத்தால் அது மறுபடியும் உங்களைக் கவனித்துக் கொள்ளலாம்.

*ஆம், அவன் மங்கலாகவே நினைவு கூர்ந்தான், அவன் இருந்த நிலை, அல்லது - அவனின் ஏதோ ஒரு பகுதி மட்டுமா?*

*காற்றின் கரங்களால் தாங்கிக் கொள்ளப் பட்டு இருந்தது. மேலும் நினைவிற்கு வந் தது, - இல்லை வந்ததா?*

*இதுதான் மெய்ப் பொருள், ஐயத்திற்கு இடமில்லாத விஷயம் என்று சொல்வதற் கில்லை.*

நினைவிற் கொள்ளவும், இது ஒரு மாபெரும் வாக்கியம். தெளிவாகத் தெரிவது மற்றும் இயற் கையானது உண்மையானதாக இருக்க வேண்டிய அவசியமில்லை. தெளிவாகத் தெரிவது என்பது உங்கள் கடந்த காலத்திற்குப் பொருந்தும் ஒன்று. இயற்கை என்பது உங்கள் பழக்க வழக்கத்தோடு ஒத்துப் போவது. இது உண்மையானதாக இருக்க வேண்டும் என்று அவசியமில்லை.

வாழ்க்கையில் பாலைவனத்தை எதிர்கொள்ள வேண்டிய ஒரு கணம் வரும். அப்போது எல்லா அறிவும் பயனற்றதாய்ப் போகும், கடந்த காலம் பொருத்தமற்றதாய் இருக்கும். பழக்க வழக்கங் கள், நடத்தை மற்றும் சிந்தனா முறைகள் எல் லாம் அர்த்தமற்றதாகிவிடும். அந்த நெருக்கடியான கணம், பாலைவனத்தை எதிர்கொள்ளும் அந்தக் கணம், ஒரு மகத்தான கணம். அச்சம் தவிர்த்து அபாயத்தைத் துணிந்து எதிர்கொள்ள உங்களால் முடியுமானால் நீங்கள் உருமாற்றம் அடைவீர்கள்.

*நீரோடை தன்னை ஆவியாய் உயர்த்திற்று. வரவேற்கும் காற்றின் கரங்களுக்குள்ளே,*

*மென்மையாய் மேலெழும்பி வழி நெடுகச் சென்று மலை முகட்டை எட்டி, மெல்ல*

*மெல்ல விழச் செய்தது பற்பல மைல்களுக்கு அப்பால்.*

*நீரோடை ஐயப்பட்டதினால் நினைவுபடுத் திக் கொள்ள முடிந்தது. ஆழமாகப் பதிவு செய்தது, அனுபவ விபரங்களை நீரோடை யோசித்துப் பார்த்தது: "ஆம், அறிந்து கொண்டேன் என் மெய் அடையாளம் இப் போது."*

நீரோடை துணிந்து செயல்பட்டது: புத்திசாலித்த னமான தேர்வு அது ஒன்றுதான்.

நீங்கள் தெளிவாகப் பார்த்தால், வேறு தேர்வே இல்லை, நீங்கள் உண்மையானதைச் செய்தே ஆகவேண்டும். குழப்பமான மனங்களுக்குத்தான் தேர்வுகள் இருக்கின்றன. இதைக் கேட்டால் ஆச் சரியப்படுவீர்கள்: ஒரு தெள்ளத் தெளிவான மனம் 'விருப்பத் தேர்வு' அற்றது. இதற்குத் தேர்வுகளே இல்லை. என்னவிதமான தேர்வுரிமைகள் இருக்க முடியும்? - ஒன்று, ஏதோவொன்று சரியாக இருக்க வேண்டும். இல்லை ஏதோவொன்று தவறாக இருக்க வேண்டும். நீங்கள் தெளிவாக இருக் கும்போது, தெளிவும், புலனுணர்வும் உங்களுக்கு இருக்குமானால், நீங்கள் சரியானவற்றைப் பார்ப் பீர்கள், சரியானவற்றைச் செய்வீர்கள். சரியானதா, தவறானதா என்று சிந்தித்துக் கொண்டு இருக்க மாட்டீர்கள். தேர்வே இல்லை. குழம்பிய மனதிலே தான் தேர்வுகள் எழுகின்றன. குழப்பமே தேர்வுரி மைகளை உருவாக்குகின்றன. குழப்பமான மன திற்குச் சரி எது, தவறு எது என்று தெரியாது. ஒருக் கால் இது சரியாக இருக்கும், இல்லை அது சரியாக

இருக்கும், அது தவறு, இது தவறாக இருக்கலாம். எல்லாமே 'ஒருக்கால்' - ஆகவே தேர்வு.

பலமுறை மனிதர்கள் என்னிடம் கேட்பது: "பாவம் என்றால் என்ன, புண்ணியம் என்றால் என்ன? எப்படித் தீர்மானிப்பது?" நீங்கள் தீர்மானம் செய்தால் உங்கள் முடிவு தவறாக இருக்கும். தேர்ந்தெடுத்தால், அது தவறாகிவிடும். எல்லாத் தேர்வுகளுமே தவறானவை. முடிவு செய்ய வழியே இல்லை. பாவம் எது, புண்ணியம் எது என்று தீர்மானிக்க வேண்டிய அவசியமில்லை. உங்களுக்கு தேவை ஒரு தெளிவான மனம், சிந்தனைகள் இல்லா மனம், மனமின்மை, கண்ணாடி போன்ற விழிப்புணர்வு நிலை. அந்த விழிப்புணர்வு நிலையில் என்ன நடந்தாலும் அது புண்ணியமே, நல்லதே. அந்த விழிப்புணர்வு நிலையில் நடத்த முடியாதது எதுவோ அது பாவமாகும்.

*நீரோடை தன்னை ஆவியாய் உயர்த்திற்று,*
*வரவேற்கும் காற்றின் கரங்களுக்குள்ளே.*

இதுதான் ஒரே வழி, மாற்று வழியில்லை என்பதை நீரோடையால் தெளிவாகப் பார்க்க முடிந்தது. "நான் அதேபோல் இருக்க முடியாது, மேலும் படுசேறாகி நரகத்திற்கு போவதுபோல. ஆக, ஏன் துணிந்து செயல்படக் கூடாது, ஏன் சூதாடிப் பார்க்கக் கூடாது?"

நீரோடை சூதாட்டத்தில் ஈடுபட்டது, ஆவியாயிற்று, காற்றிலே காணாமல் போயிற்று.

*... வரவேற்கும் காற்றின் கரங்களுக்குள்ளே.*

அவை எப்போதுமே வரவேற்கும் தன்மையுடையவைதான். இயற்கை எப்போதுமே உங்களை அரவணைக்கத் தயாராக உள்ளது. நீங்கள்தான் ஓடிக்கொண்டே இருக்கிறீர்கள், தப்பித்துப்போய்க் கொண்டே இருக்கிறீர்கள்.

பிரபஞ்சம் எப்போதும் பாசமாய்த்தான் இருக்கிறது, எப்போதும் உங்களை நண்பனாக்கிக் கொள்ளத் தயாராய் உள்ளது. நீங்கள் அதன் குழந்தை. அது மிகவும் மென்மையானது, அவ்வாறே கவனித்துக் கொள்கிறது, அது அக்கறை உள்ளது, பாதுகாப்பு உணர்வுள்ளது. எப்போதாவது இயற்கை உங்களோடு கடினமாக இருப்பதாய் நீங்கள் உணர்ந்தால், நீங்கள் ஞாபகம் கொள்ளவேண்டியது என்னவென்றால், நீங்கள் இயற்கையோடு சண்டையிட்டுக் கொண்டு இருக்கிறீர்கள். உங்கள் சண்டையிடுதல்தான் பிரச்சினையை உருவாக்குகிறது. மற்றபடி இயற்கை எப்போதுமே இரக்கமுள்ளது, தாயுள்ளம் கொண்டது.

*... மென்மையாய், இலகுவாய் அதை மேலே எடுத்துச் சென்று, வழிநெடுகப் பயணித்து மலை முகட்டை எட்டி, மெல்ல மெல்ல விழச் செய்தது. பற்பல மைல்களுக்கு அப்பால். நீரோடை ஐயப்பட்டதினால், நினைவுபடுத்திக் கொள்ள முடிந்தது, ஆழமாக பதிவு செய்தது, அனுபவ விபரங்களை. நீரோடை யோசித்துப் பார்த்தது: "ஆம், அறிந்து கொண்டேன் என் மெய் அடையாளம் இப்போது."*

உங்களுக்கு இப்பொழுது இருக்கும் அடையாளம் உங்களுடைய உண்மையான அடையாளம் அல்ல. அது பொய்யானது. உங்கள் பெயர் பொய், உங்கள் வடிவம் பொய். நீங்கள் பெயரோ வடிவமோ அல்ல. ஹிந்துக்கள் சொல்வது போல 'நாமரூபம்'. நீங்கள் நாமமோ, ரூபமோ அல்ல. நீங்கள் இவ்விரண்டையும் தாண்டிய ஒன்று. ஆனால் நீங்கள் யார் என்று உங்களுக்குத் தெரியாது. அது நீங்கள் சரணாகதி அடைந்தால் மட்டுமே சாத்தியமாகும். சரணாகதி என்றால், பொய்யான ஆளுமையை, தனித்தன்மையைச் சரண் அடையச் செய்வது. பொய்யான அடையாளத்தைச் சரணடையச் செய்வது. அதனால்தான் சன்னியாசத்தின்போது உங்கள் பெயர்கள் மாற்றப்படுகின்றன, உங்கள் உடைகள் மாற்றப்படுகின்றன. இது நீங்கள் இனிமேலும் உங்கள் கடந்த காலத்திற்கு உரியவர் அல்ல என்பதற்கான அடையாளக் குறிதான். உங்கள் பெயர் போய்விட்டது, அதனால் பெயரோடு தொடர்புடையவை அனைத்தும் போய்விட்டன. உங்கள் உடை மாற்றப்பட்டு விட்டது, உங்கள் இருப்பைப் பற்றி இனி புதிய வழிகளிலே சிந்திக்கத் தொடங்குவீர்கள்.

"ஆம், அறிந்து கொண்டேன் என் மெய் அடையாளம் இப்போது"

*கற்றுக் கொள்கிறது நீரோடை. மணல் அசரீரித்தது. "யாம் அறிவோம். ஏனென்றால் இது நடப்பது ஒவ்வொரு நாளும். மேலும் நாங்கள் மணல் பரப்பாய் ஆற்றங்கரை தொடங்கி, மலையடிவாரம்வரை விரிந்துள்ளோம்" ஆதலினால் சொல்லப்படுவது*

வாழ்க்கையின் நீரோட்டப் பயணம் தொடர வழித்தடம் எழுதப்பட்டு இருப்பது மணற்ப ரப்பின் மீதே.

மணல் கூறும் ஞானத்தை கேளுங்கள், கதை மிகவும் மதிப்புமிக்கது. அதை உங்கள் மனதில் விதையாக இட்டால், விரைவிலேயே ஒரு பெரிய விருட்சமாக வளரும். நேரம் வரும்போது, உங்க ளுக்கு நிறைவான மலர்களும், மிகுந்த நறுமணமும் கிடைக்கப் பெறுவீர்கள்.

இதுதான் சன்னியாசத்தின் கதை. இதைத்தான் நான் இங்கே செய்து கொண்டு இருக்கிறேன். இது தான் இங்கே நடந்துகொண்டு இருக்கிறது.

இன்று இது போதும்.

# அல்லாவை நம்புங்கள் அதற்கு முன் உங்கள் ஒட்டகத்தைக் கட்டிவையுங்கள்

## அத்தியாயம் - 2

## முதல் கேள்வி:

*ஏன் துறவு சார்ந்த பயிற்சிகளுக்கு எதிராக உள்ளீர்கள்? அவை சமயப்பற்றுடையவை கிடையாதா? துறவு வாழ்க்கை இறைவனிடம் இட்டுச் செல்லும் பாதையல்லவா?*

அதற்கு நேர் எதிரானது. அது பைத்தியக்காரர்கள் தங்குமிடத்திற்குப் போகும் பாதை. அது நோய்க் குணமுள்ளது. அது நோயுடைய மனதின் வெளிப்பாடாகும். சாதாரணமாக வன்முறை மற்றவர்களை நோக்கியே இருக்கும், ஆனால் வன்முறை தம்மையே நோக்கிக்கூட இருக்க முடியும். அப்படித் தம்மை நோக்கி இருக்கையில், அந்த வன்முறை அதிக ஆபத்தானது, ஏனென்றால் உங்களைக் காப்பாற்ற யாரும் கிடையாது.

நீங்கள் மற்றவரிடம் வன்முறையுடன் நடந்து கொண்டால், தன்னைக் காப்பாற்றிக் கொள்ள, உங்களை எதிர்த்துப் போராட அவர் தாமே இருக்கிறார். வன்முறை உங்கள் மீதே திரும்பும்போது, அது முழுமையடைகிறது. உங்களைக் காப்பாற்ற யாரும் இல்லாமல் போவர்.

என்னைப் பொறுத்தவரையில் மகாத்மா காந்தியைவிட அடால்ஃப் ஹிட்லர் ஆபத்து குறைந்தவர். இதைப் புரிந்துகொள்வதற்கு உங்களுக்குச் சற்றே கடினமாக இருக்கலாம், ஆனால் இது காலம் காலமாய் நடந்து கொண்டிருப்பதுதான். இடர்ப்பாட்டில்

அல்லது துன்பத்தில் இன்பம் காணும் மனிதர்கள் தங்களைச் சமயவாதிகள் என்று கூறிக் கொள்கின் றனர். இவர்களை 'மேசோகிஸ்ட்' என்று அழைப் பார்கள். சமயம் இதற்கு வெறும் சாக்காகிறது. இந் தச் சாக்குப்போக்கை நீக்கி விட்டால் மேசோகிஸ்ட் அம்பலமாகிவிடுவார்.

தன்னைத் தானே சித்திரவதை செய்துகொள் ளும் ஒருவரை ஆன்மீகவாதி என்று நீங்கள் கரு திக் கொண்டே இருந்தீர்களானால், நீங்கள் அவ ரின் மேசோகிஸத்திற்குத் தீனியிட்டு வளர்க்கின் றீர்கள். அவரும் தன்னைத் தானே சித்திரவதை செய்வதை வெறுமனே ரசித்துக் கொண்டிருக்கி றார். மேலும் தன்னையே சித்திரவதை செய்வதன் மூலம் ஒரு வகை இன்பம் கிடைக்கப் பெறுகி றார். அதில் அதிகார உணர்வு உள்ளடங்கி இருக் கிறது. நீங்கள் மற்றவரைக் கொடுமைப்படுத்தும் போதும் அதிகார உணர்வு கிடைக்கப் பெறுவீர்கள். இதனால்தான் வன்முறை தொடர்ந்து இருக்கிறது. மனிதர்கள் தொடர்ந்து ஒருவர்மீது மற்றொருவர் என்று வன்முறை நிகழ்த்திக் கொண்டேயிருக்கி றார்கள். அதிகாரத்தை உணர அவர்களுக்கான ஒரே வழி அதுதான். மற்றவற்றை அழிக்க முடியும்; அதுவே அவர்களின் அதிகாரம். ஆனால் வன்மு றையில் பல்வகை உள்ளது, அவற்றை கொண்டு நீங்கள் உங்களையே அழித்துக் கொள்ளலாம், நீங் கள் அதிகாரத்தை உணர முடியும்.

உதாரணமாக ஹிந்து சாது ஒருவரைப் பற்றிய கதை கூறுவார்கள். அது உண்மையாக இருக்கும் என்று நான் நம்பவில்லை, ஆனால் உண்மையா கவும் இருக்கலாம். ஹிந்து மறைஞானி சூரதாஸர்

தெரு வழியே போய்க்கொண்டிருந்தார். அப்போது மிக அழகான ஒரு பெண்ணைக் கண்டார். ஒரு கணம் தான் உலகைத் துறந்தவர் என்பதையே சூரதாஸர் மறந்துவிட்டார். தான் ஒரு சாது என் பதை மறந்துவிட்டார். சமயம், யோகம், கட்டுப்பாடு எல்லாவற்றையும் மறந்து விட்டார் அவர். அந்தக் கணத்தில் அவர் மனம் பெரும் வேட்கையோ டும் காதலோடும் அந்தப் பெண்ணின் பால் சென் றது. அந்த ஒரு கணம்தான், உடனே சுதாரித்துக் கொண்டார். சூரதாஸர் தன் குடிலுக்குச் சென்று தன் கண்களைக் குத்திக் குருடாக்கிக் கொண் டார். ஏனென்றால் கண்கள் உன்னைத் தடம் மாறி இட்டுச் சென்றால் அவற்றை அழித்துவிடு என்று சாத்திரங்கள் கூறுகின்றன. தன் கண்களைக் குரு டாக்கிக் கொள்ளும்போது அவர் அளப்பரிய சக் தியை உணர்ந்திருப்பார். "இதைக்கூட என்னால் செய்ய முடியும்" என்பதுபோல. அகங்காரத்திற்கு ஒரு நுண்ணிய ஊட்டச்சத்து கிடைத்திருக்கும், அது மேலும் வலுப் பெற்றிருக்கும். உண்மையில் அது அவர் கண்களின் வேலையல்ல. அது அவ ரின் அறிவுநிலை வழுவிப்போகக் கூடிய திறன். கண்கள் எவ்வாறு உங்களைத் தடம்புரளச் செய்ய முடியும்? அவை வெறுமனே உலகத்தைக் காட் டும் ஜன்னல்கள். உங்கள் அறையிலிருந்து ஜன் னல் வழியே ஒரு அழகான பெண்ணைப் பார்க் கின்றீர்கள், நீங்கள் ஜன்னலை உடைப்பதில்லை. அதை உடைப்பதினால் உங்களுக்கு லாபம் ஒன் றுமில்லை. நீங்கள் மேலும் ஆன்மீகத் தன்மை பெறப்போவதில்லை, உங்கள் பாலுணர்வு குறை யப் போவதில்லை. உங்கள் வீட்டிற்குள் அடைந்து

கிடக்கப் போகின்றீர்கள், உங்களுக்குள்ளேயே உங்கள் மோகம், அடங்கா ஆர்வம் கொதித்துக் கொண்டிருக்கப் போகிறது. கண்கள் வெறும் ஜன்னல்கள்தான்.

சில நாட்களுக்கு முன்பு, ஏழு நாட்கள் என்று நினைக்கின்றேன். அமெரிக்காவில் ஒரு பெண் தன் கையை வெட்டிக் கொண்டுவிட்டாள். ஏனென்றால் "கைகள் தவறு செய்தால், நரகத்திற்குப் போய் என்றென்றும் துன்பப்படுவதைவிட கைகளை வெட்டி வீசிவிடுவது மேல்" என்று பைபிள் சொல்கிறது.

இந்த மனிதர்கள், சூரதாஸ் அல்லது அந்த அமெரிக்கப் பெண், இவர்களைப்போல் லட்சக்கணக்கானோர் உள்ளனர். இவர்களைச் சமயப்பற்று உள்ளவர்கள் என்றா அழைப்பீர்கள். இவர்கள் ஆன்மீகவாதிகளா! இவர்கள் நோய்க்குறியுடையவர்கள்.

ஒரு சமயவாதி ஆரோக்கியமானவன், ஒரு முழுமையான மனிதன். அவன் வாழ்க்கையை உள்ளபடியே ஏற்றுக்கொள்கிறான், மேலும் வாழ்க்கை தரும் சந்தோஷங்களையும் ஏற்றுக் கொள்கிறான். அவன் நடனத்தோடு நடனமாடுகிறான், ஆயிரத்தொரு பாடல்களைப் பாடுகிறான். அவன் அணுகுமுறை எதிர்ப் புணர்வுடையதல்ல, அது வாழ்க்கைக்கு எதிரானது அல்ல.

துறவுமுறை வாழ்க்கைக்கு எதிரானது. அது தற்கொலைக்கு ஒப்பானது. நீங்கள் மெதுவாகவும், ஒரு பகுதியாகவும் தற்கொலை செய்து கொண்டு இருக்கலாம். அது பெரிய வித்தியாசத்தை ஏற்ப

டுத்தப் போவதுமில்லை. யாரோ ஒருவர் மலை உச்சியிலிருந்து குதித்து தன்னை மாய்த்துக் கொள்கிறார். மற்றொருவர் மெல்ல, மெல்லத் தவணைகளில் தன்னை அழித்துக் கொள்கிறார். தன்னைத்தானே அழித்துக் கொள்ள வருடங்களாகலாம், இது மந்தகதியில் நஞ்சேற்றிக் கொள்ளுதல், மற்றபடி வித்தியாசம் ஏதுமில்லை. உண்மையைச் சொல்வதானால் மெதுவாகத் தற்கொலை செய்து கொள்பவனை விட மலை முகட்டிலிருந்து குதிப்பவன் அதிக தைரியசாலி.

ஆனால் காலங்காலமாக நாம் இந்த பைத்தியக்காரர்களைப் போற்றுகிறோம், அவர்களை வணங்குகிறோம். இந்தப் போற்றி வணங்குதல் காரணமாக மனித இனம் முதிர்வடையாமல் இருக்கிறது, மேலும் மனித இனம் இயல்பு கடந்த நிலையிலேயே தொடர்கிறது. இயல்பான மனிதர்கள் இயல்பானவர் அல்லர், அவர்கள் வெறுமனே இயல்பானவர் என்று அழைக்கப்படுகின்றனர். அவர்கள் பெரும் எண்ணிக்கையில் இருக்கின்றனர். அவர்கள் இயல்பிற்கு உட்பட்டவர்கள் அல்ல, மேலும் ஆரோக்கியமானவர்களும் இல்லை. எப்படியோ சமாளித்து, தங்கள் வாழ்க்கையை வாழ்கின்றனர். தன் இருப்பிற்கே அழிவுக் கருவியாக திகழ்பவன் மனநலம் குன்றியவன், அவனைத் தெய்வமாகக் கொண்டாடுபவர்களும் மனநலமற்றவர்தாம்.

நான் துறவுப் பயிற்சிக்கு முற்றிலும் எதிரானவன், ஏனென்றால் அவை வாழ்க்கைக்கு எதிரானவை. நான் முழுவதும் வாழ்க்கைக்கானவன். நான் முற்றிலும் கடவுளுக்கானவன். கடவுள் என்பது கொண்டாட்டம். உங்களைச் சுற்றிப் பாருங்கள், ... இயலு

லகு, வாழுயிர் எல்லாமே தொடர் கொண்டாட்டத்தில் இருக்கிறது, ஒரு வகையான 'அல்லேலூயா' அதாவது கடவுட் புகழ்மாலை பாடிக்கொண்டிருக்கிறது. அது தொடர்ந்து பாடி ஆடி நேசித்துக் கொண்டும் மற்றும் அனுபவித்துக் கொண்டும் இருக்கிறது. நீங்கள் இயல் உலகை, கவனித்தீர்களானால் சமயப்பற்றுடன் இருப்பது எப்படி என்பதைப் புரிந்து கொள்வீர்கள். கொண்டாட்டத்தில் பங்கேற்பதே சமயப்பற்றாகும்.

நான் கேள்விப்பட்டு இருக்கிறேன்...

இஸ்மாயிலி முஸ்லிம் பிரிவின் தலைவரான மறைந்த ஆகாகான், ஒரு போஜனப் பிரியர். ஆகாகானை காணவந்த ஒருவர் ஆகாகானிடம் எவ்வாறு உலகாயத விஷயங்களை அனுபவிப்பதையும், தான் ஒரு சமயத் தலைவர் என்ற நிலையையும் சமரசம் செய்து கொள்கிறார் என்று கேட்டார். அதற்கு ஆகாகான், "உலகில் உள்ள நல்ல விஷயங்களை எல்லாம் பாவம் செய்தோர் மட்டுமே அனுபவிக்க இறைவன் கொடுத்திருக்கிறார் என்று நான் நினைக்கவில்லை" என்றார்.

நான் முழுவதுமாக ஆகாகானுடன் ஒத்துப் போகிறேன். பாவம் செய்தோர் மட்டுமே அனுபவிக்கலாம், துறவிகள் எல்லோரும் துறவுமடம் என்றழைக்கப்படும் சிறையில் வாழவேண்டும் என்பது முட்டாள்தனம்! அவர்கள் சாப்பிடக் கூடாது, அப்படியே சாப்பிட்டாலும் அவர்கள் ருசித்து சாப்பிடக் கூடாது. நல்ல சங்கீதம் கேட்கக் கூடாது, ஏனென்றால் அது புலன் உணர்வைத் தூண்டக் கூடியது. ஆடக் கூடாது, ஏனென்றால் அதுவும் பாலு

ணர்ச்சியிலிருந்து பிறந்தது. பாடக்கூடாது, காரணம் பாடுவதும் பாலுணர்ச்சியின் வெளிப்பாடுதான் வேறொன்றுமில்லை. பறவைகள் பாடுகின்றன. அவை குரான், அல்லது கீதை அல்லது வேதங்களை ஓதுவதில்லை. அவை காதல் கூவல்கள்! பூக்கள் மலர்கின்றன, அவற்றை பறித்து கோயிலுக்கோ அல்லது வேறு வழிபாட்டு இடத்திற்கோ எடுத்துச் செல்வதற்காக மலர்வதில்லை. மலர்கள் என்பது செடி கொடிகளின் பாற்பண்பு வெளிப்பாடு மட்டுமே. ஆழமாக நோக்கினால் எல்லாமே புலன் உணர்வை அடிப்படையாகக் கொண்டவை தான். எல்லாமே புலன் உணர்வில் வேரூன்றியவை, ஏனென்றால் வாழ்கையே பாலுணர்விலிருந்து பிறப்பதுதான்.

ஆன்மீகவாதி என்று அழைக்கப்படுபவர் தன் வாழ்க்கையை அழிக்கத் தொடங்குகிறார். ஒவ்வொன்றாக எல்லாமே மறைந்து போகிறது, அவர் கிட்டத்தட்ட இறந்தவர் நிலைக்கு வந்துவிடுகிறார். தாவரங்களைப்போல் உயிர் வாழ்கிறார். அது போன்ற வாழ்க்கையை நான் ஆதரிக்க மாட்டேன்.

என் சன்னியாசிகள் எல்லோரும் 'ஆம்' என்று சொல்பவர்களாக இருக்கவேண்டும், 'இல்லை' என்ற மறுப்பாளர்களாக இருக்கக் கூடாது. என் சன்னியாசிகள் வாழ்க்கையின் முழுமையை ஏற்றுக் கொள்பவராக இருக்கவேண்டும், அதன் பல் வகைக் கோணங்கள், அதன் அனைத்துச் சாத்தியக் கூறுகள், மற்றும் வளம் ஆகியவற்றிற்கு இசைந்து போகவேண்டும். என் சன்னியாசி இயலுலகோடு வேரூன்றி இருக்க வேண்டும். மேலும் அவர் பாலுறவிலிருந்து சமாதி வரை எல்லா நிலை

களிலும் வாழ வேண்டும். ஏதோ ஒன்று தானாகவே மறைந்து போனால் அது வேறு விஷயம், ஆனால் அது துறவறம் அல்ல. இருத்தலின் உயர் நிலைகளை நோக்கி உங்களின் சக்திகள் எல்லாம் நகரத் தொடங்கும் நேரம் வரும் என்பதை நான் அறிவேன். அப்போது பாலுணர்வு மறைந்து போகும். ஏனென்றால், அது அப்போது தேவையில்லை. அது தேவையில்லை என்பதற்குக் காரணம் அதே சக்தியை நீங்கள் உயர் நிலைகளில் அனுபவிக்கத் தொடங்குகிறீர்கள். அது தவறு என்பதற்காக அல்ல, அது அசிங்கமானது என்பதற்காக அல்ல. அது தேவையில்லாததற்குக் காரணம் அதே சக்தி உயர்வான பரவச நிலையை அனுபவிக்கின்றது. சமாதிதான் உச்சக்கட்ட பரவச நிலை. பாலுறவு அதன் வெறும் சிற்றனுபவம் மட்டுமே.

பாலுறவு என்பது கணநேரத்திய சமாதி, ஆனால் சமாதி என்பது முடிவில்லாப் பாலுறவு. இயல்பாகவே நீங்கள் சமாதி நிலையை எய்திவிட்டால், பாலுணர்வு மறைந்துவிடும், நீங்கள் அதைத் துறக்க வேண்டும் என்றில்லை. நீங்களாகவே அதைத் துறந்தால் நீங்கள் தவறு செய்கின்றீர்கள். நீங்கள் மேலும் மேலும் ஆழமாகவும், உயரமாகவும் போய்க் கொண்டே இருங்கள், மறைந்து போக வேண்டியவை எல்லாம் மறைந்து போய்விடும். இறைவன் மட்டுமே எஞ்சி இருப்பார். பரிசுத்தமான மகிழ்ச்சி மட்டுமே எஞ்சியிருக்கும், படைக்கப்பெறாத மகிழ்ச்சி மட்டுமே எஞ்சியிருக்கும். ஆனால் நீங்கள் துறக்க வேண்டும் என்றில்லை, நீங்களாகவே துறந்தால் அந்த நிலையை அடைய மாட்டீர்கள்.

நான் கேள்விப்பட்டது...

இளைஞன் ஒருவன் இருந்தான். அவன் உண்மையான மதிப்பு கொண்ட எதுவும் எளிதில் கிடைக்காது என்று நம்பினான், ஆனால் அவன் மேலும் மேலும் எளிமையான வாழ்க்கைப் பழக்க வழக்கங்களைத் தேடிக்கொண்டிருந்தான். இறுதியாக இமய மலையில் ஒரு பண்டைய துறவுமடத்தைக் கண்டுபிடித்தான். அதன் துறவிகள் மிக்க கடுமையான ஏழ்மை மற்றும் எளிமைக்கான விரதங்களைப் பூண்டிருந்தனர். ஒரு மலைக்க வைக்கும் முகட்டின்மீது அந்தத் துறவுமடம் இருந்தது. மலைமீது அறையப்பட்டிருந்த சங்கிலிகளைப் பிடித்துத்தான் அந்தத் துறவிகள் ஏறவும் இறங்கவும் செய்தனர். அறையைச் சூடாக்குவதற்கு வழியே இல்லை, துறவிகள் குளிர்ந்த கல்தரையில் படுத்துக் கொண்டார்கள். உயிர் வாழுவதற்காக சங்கிலியைப் பிடித்துக் கீழே இறங்கி, பனியால் இறுகிய நிலத்தை தோண்டி அங்கே வளர்ந்து இருந்த மரப் பாசியைச் சாப்பிட்டனர். மீதி நேரம் எல்லாம், தியானத்திலும் மந்திரங்கள் சொல்வதிலும் கழித்தனர். இந்தப் பழக்கவழக்கங்கள் எல்லாம் அந்த இளைஞனுக்குப் பிடித்துப் போயிற்று. அவர்களுடனேயே இருக்க அனுமதி கேட்டான், அது வழங்கப்பட்டது.

இந்தத் துறவிகளின் தியான முறை என்னவென்றால் பலவகையான புதிர்களைப் பற்றி யோசிப்பதாகும். இந்த இளைஞன் வந்து சேர்ந்தவுடன் துறவு மடத்தின் தலைவர் அவனிடம் ஒரு கேள்வி கேட்டார். மேலிருப்பது எவ்வளவு உயரமானது? ஒரு மாதம் இதைப்பற்றித் தியானம் செய்து பதிலோடு வா என்று சொல்லியனுப்பினார். அவன் எப்

போதும் குளிரில் நடுங்கிக் கொண்டிருந்தபடியால் அவனால் வேறு எதைப் பற்றியும் யோசிக்க முடிய வில்லை. ஆனால் இந்தக் கடுமை இளைஞனுக்கு ஒரு சவாலாக இருந்தது. ஒரு மாதம் போயிற்று, பதி லைப் பற்றி நம்பிக்கையோடு இருந்தான்.

தலைவர் அவனிடம், மேலிருப்பது எவ்வளவு உயரம்? "ஒரு மனிதனின் மனம் எவ்வளவு கற் பனை செய்ய முடியுமோ அவ்வளவு உயரம்" என்று பதில் சொன்னான். குரு அவனை ஏளனமாகப் பார்த்தார். மேலும் ஒரு மாதம் தியானம் செய் என் றார்.

அவனும் ஒரு மாதம் தியானம் செய்த பிறகு தலை வரைச் சந்தித்து பதில் சொன்னான். "கடவுளின் விருப்பம் எதுவோ, அவ்வளவு உயரம்" மறுபடியும் நிராகரிக்கப்பட்டு தியானம் செய்யத் திரும்ப அனுப் பப்பட்டான். அடுத்த மாதமும் அதே கேள்வி, பனி யால் இறுகிப் போன விரலை மட்டும் மேல் நோக் கிக் காட்டினான். மறுபடியும் அனுப்பப்பட்டான்.

ஒவ்வொரு மாதமும் தலைவரைத் திருப்திப்ப டுத்த முடியாது என்ற நம்பிக்கை மேலும் மேலும் அதிகமாயிற்று. அவனுடைய ஏமாற்றமும் அதிகமா யிற்று. அடுத்த முறை அதே கேள்வி கேட்கப்பட் டவுடன், உள்ளடக்கிய கோபத்துடன், "இது முட் டாள்தனம், இதற்கு பதிலே கிடையாது" என்றான். இம்முறை வழக்கத்தைவிட அதிக ஏளனத்துடன் திருப்பி அனுப்பப்பட்டான். தலைவருக்கு அவன் உண்மைக்கு அருகில் வந்துவிட்டான் என்று தெரிந்தது.

இளைஞன் தலைவரிடமிருந்து வந்த பிறகு, கடைசி முறையாகப் பதில் கண்டுபிடிக்க ஒரு முயற்சி செய்வதெனச் சபதம் எடுத்தான். சாப்பிட்டுக் கொண்டிருந்த சிறிதளவு பாசியையும் நிறுத்தி விட்டு, மலை முகட்டிற்கும் மேலே இருந்த கூரை மீது காவல் இருந்தான். ஒரு மாதம் முடிந்த பிறகு மற்ற துறவிகள் அவனைக் கூரை மேலிருந்து இறக்கினர். தலைவரிடம் பேசுவதற்கு ஏதுவாக அவனுக்கு வெதுவெதுப்பு ஊட்ட முயன்றனர். மறுபடியும் அதே கேள்வி கேட்கப்பட்டது. "மேலிருப்பது எவ்வளவு உயரம்?"

ஒரு கணம் வெறுமையாகப் பார்த்த இளைஞன், திடீரெனக் கத்திக்கொண்டே மூர்க்கமாகப் பல முறை மேலேயும் கீழேயும் குதித்தான். யாரும் அவனைத் தடுப்பதற்குள் தாவிப்போய் தலைவருக்கு ஒரு உதை விட்டான், தாங்கமாட்டாத தலைவர் தரையில் விழுந்தார். துறவிகள் ஓடிப்போய் தலைவரைத் தூக்கிப் பிடித்தனர். அவர் சுதாரித்துக் கொண்ட பிறகு, சிரித்தபடியே அந்த இளைஞனைப் பார்த்துச் சொன்னார்: "உனக்குப் புரிந்து விட்டது!"

அந்த இளைஞன் தன் சொற்ப உடைமைகளை எடுத்துக் கொண்டு துறவு மடத்தை விட்டு வெளியேறினான். அவன் வீடு வந்து சேர்வதற்குள் மகிழ்ச்சியில் நிரம்பியிருந்தான். அவன் உண்மையைக் கண்டு அறிந்து விட்டான், அவன் ஞானம் அடைந்து விட்டான்.

இல்லை ஒருக்கால் அவன் நன்றாய் உணர்ந்த தற்கு அவன் இப்போது குளிரில் நடுங்காமல் வெது வெதுப்பாய் இருந்ததும் காரணமாய் இருக்கலாம்.

துறவறப் பழக்க வழக்கங்கள் எல்லாம் உங்க ளுக்கு ஒரு வகையான நோய். மனநிலை திரிந்த மகிழ்ச்சியை தரும். அதில் நீங்கள் மேலும் மேலும் ஆழமாய் ஈடுபட நீங்கள் மேலும் ஒரு வெற்றியா ளனாக உணரத் தொடங்குவீர்கள். ஏதோ ஒன்றை வெற்றிகொண்டாற்போல் உணருவீர்கள். உங்கள் உடல் "என்னை அழிக்காதே" என்று மேலும் மேலும் கூறும்போது, நீங்கள் இன்னும் அதிகமா கப் பிடிவாதம் கொள்வீர்கள். உங்களுக்குள்ளேயே ஒரு பிளவு ஏற்படுத்திக் கொள்வீர்கள். உங்கள் உடல் மற்றும் உங்களுடன், ஒரு பிளவு அதன் பிறகு ஒரு பெரிய போர் மூள்கிறது.

உடல் இயற்கையானது. இயற்கையானது எதுவோ, ஆரோக்கியமானது எதுவோ அதைத் தான் உடல் கேட்கின்றது. கடவுள் எதை அனு மதிக்கின்றாரோ, எது நடக்க வேண்டும் என்று விரும்புகிறாரோ அதைத்தான் உடலும் கேட்கி றது. இயற்கைக்கு மாறான ஆசைகள் உடலுக்கு இல்லை; அதன் தேவைகள் எல்லாம் இயற்கையா னது, ஆரோக்கியமானது. நீங்கள் உடலை மேலும் மேலும் பட்டினி போட்டால், அது இன்னும் அதிக மாக வேண்டும், உங்களைக் கேட்கும், உங்களை ஓயாது ஆட்டிப்படைக்கும். ஆனால் நீங்கள் இதை ஒரு சவாலாக எடுத்துக் கொள்ளலாம். உடல் உங்களைக் கவர்ந்து இழுக்கப் பார்க்கிறது, அது விரோதியின் கையில் இருக்கிறது, அது பிசாசின் வசம் உள்ளது என்று நீங்கள் நினைக்கலாம். இப்ப

டியாக நீங்கள் மேலும் சண்டையிட்டுக் கொண்டே இருக்கலாம். அதிக பலத்தோடு, மேலும் அதிக வன்முறையோடு நீங்கள் உடலோடு சண்டையிட்டுக் கொண்டிருந்தால் ஒரு கட்டத்தில் உங்களால் உடலை மந்தப்படுத்திவிட முடியும்.

நெடுங்காலம் பட்டினி இருந்தீர்கள் என்றால், போகப்போக உடலானது ஒரு வகையான மந்தகதிக்குள் அமிழ்ந்திடும். ஏற்றுக்கொள்ளத் தொடங்கிவிடும். தன்னைத்தானே சரிப்படுத்திக் கொள்ளும். இதில் அர்த்தம் இல்லை. கவனிப்பார் யாருமில்லை, அழுதுகொண்டே இருப்பதில் என்ன பலன்? உடல் மெத்தனமாகிவிடும். நீங்கள் உணர்விழந்து விடுவீர்கள். உணர்ச்சிகள் உங்களைப் பாதிக்காது. சூடோ, கடும் குளிரோ உங்களை ஒன்றும் செய்யாது. பசி, பட்டினி உங்களை ஒன்றும் செய்யாது. மாறாக உங்களுக்குள் வெகு ஆழத்தில், வெற்றி கொள்கிறோம் என்று நீங்கள் நலமாய் உணர்வீர்கள். ஆனால் உண்மையில் நீங்கள் வெற்றி பெறவில்லை, விட்டுக் கொடுத்துக் கொண்டிருக்கிறீர்கள். ஒவ்வொரு கணமும் பின்வாங்கித் தளர்ந்துபோய் கொண்டிருக்கிறீர்கள், ஏனென்றால் உண்மையை உடலின் மூலமாகத்தான் தெரிந்து கொள்ளமுடியும். அறிவு நிலைதான் உண்மையை உணர்ந்து கொள்கிறது, ஆனால் அதை உடலின் மூலமாகத்தான் தெரிந்து கொள்ளமுடியும். உடலோடு ஒருவன் வேரூன்றி இருக்க வேண்டும்.

கடவுள்கூட உலகிலே நிலை கொண்டிருக்கிறார். மண்ணிலிருந்து ஒரு மரத்தைப் பிடுங்கிவிட்டால், அது இறந்துபோகிறது. மரத்தின் உயிரானது, பூமி

யின் உயிரோடு பின்னிப்பிணைந்து இருக்கிறது. அதற்கு தண்ணீர், உரம், உணவு தேவைப்படு கின்றது. மேலும் சூரிய ஒளி, காற்று எல்லாம் தேவை. இவையெல்லாம் இயற்கையான தேவை கள், இவற்றின் மூலமாகத்தான் மரம் உயிர் வாழ் கிறது. ஒரு சிலநாட்கள் மரத்தை மண்ணிலிருந்து எடுத்து விடுங்கள் - மரம் இறந்துபோய் கொண் டிருப்பது உங்களுக்குப் புலப்படாமல் போகலாம், அதற்குள் இருக்கும் ஈரம் அதைச் சிலநாட்கள் பச்சையாக வைத்திருக்கலாம், சில மொட்டுக்கள் கூட மலரலாம், பூக்கள் பூக்கலாம், ஆனால் நீண்ட காலத்திற்கு அல்ல, கூடிய விரைவில் அது தேக்கி வைத்திருந்த நீர் வற்றிப்போய் மரம் மடிந்துவிடும்.

உங்கள் உடலிலிருந்து உங்களை எடுத்துவிட் டால் நீங்களும் இறந்து போவீர்கள். உங்கள் உடல் தான் உங்கள் பூமியாகும். உங்கள் உடல் பூமிக்குச் சொந்தமானது, அது பூமியிலிருந்து வந்தது. உங்க ளைச் சுற்றியுள்ளது ஒரு சிறிய பூமிதான். அது உங் களுக்கு ஊட்டமளிக்கின்றது, அது உங்கள் எதிரி யல்ல. உடல் பிசாசின் கைகளில் இல்லை. பிசாசு என்பதே இல்லை. மனநிலை சரியில்லாதவர்க ளின் உருவாக்கமே பிசாசு. அச்சத்தின் காரணமா கவே அது உலகிற்குள் வந்துள்ளது. ஆனால் உங் களால் கடவுள் என்று அழைக்கப்படுபவரும் அச் சத்தின் காரணமாக உருவாக்கப்பட்டவரே. ஆக உங்கள் கடவுள் மற்றும் பிசாசு இரண்டுமே உங்கள் பயத்தினால் வெளிவந்தவை. உண்மையான கட வுளை நீங்கள் உணர்ந்ததில்லை. உண்மையான கடவுள் அச்சத்தின் வெளிப்பாடு இல்லை. உண் மையான கடவுள் அன்பின் அடையாளம், மகிழ்ச்

சியின் வெளிப்பாடு. மேலும் மேலும் அதிகமான கூருணர்வின் மூலம் அறிந்து கொள்ளமுடியும், மேலும் வெளிப்படையாக இருப்பதின் மூலம் அனுபவிக்க முடியும்.

உடலைச் சார்ந்து இருங்கள், மனதை விட்டு வெளியேறி உணர்ச்சிகளுக்குள் செல்லுங்கள். சமயப் பற்றோடு இருப்பதற்கு இது ஒன்றுதான் வழி. நான் சொல்வது முரண்பாடாகத் தோன்றலாம். ஆனால், சமயப் பற்றோடு இருப்பதற்கான ஒரே வழி உலகத்தோடு ஆழமாக ஒன்றி இருக்க வேண்டும் - ஏனென்றால் கடவுள் இவ்வுலகில் மறைந்து இருக்கிறார். "வேறு உலகம்" என்று ஏதுமில்லை. வேறு உலகம் என்பது இவ்வுலகின் மிக ஆழமான மையம்தான், இவ்வுலகிலிருந்து அது வேறுபட்ட ஒன்றல்ல.

அனைத்து விதமான துறவுறும் பழக்கங்களுக்கும் நான் எதிரானவன். வருங்காலத்தில் தவசிகள் எல்லோருக்கும் மனநலக் காப்பகங்களிலும் மருத்துவமனைகளிலும் சிகிச்சை அளிக்கப்படும். நீங்கள் துறவிகள் என்று அழைப்பவர்களில் நூற்றிற்குத் தொண்ணூற்று ஒன்பது பேர் மனநிலை பாதிக்கப்பட்டவர்கள். உண்மையில் என்ன நடக்கிறது என்பதை உங்களால் பார்க்க முடியாததால் நீங்கள் நம்பிக்கை வைத்தீர்கள். நீங்கள் ஒரு குறிப்பிட்ட விஷயத்தில் நம்பிக்கை கொள்ளும்போது, அந்த நம்பிக்கையே மெய்மையை உருவாக்கிவிடுகிறது.

நீங்கள் எல்லா விதமான நம்பிக்கைகளையும் விட்டொழித்து, தெளிவோடு பார்க்கத் தொடங்கினால் ஆச்சரியப்படுவீர்கள். மனிதனுக்கு மதச்

சார்பற்றவர்களினால் துன்பம் வந்ததில்லை, மனிதன் மதவாதிகள் என்று அழைக்கப்படுபவர்களிடம்தான் அதிகமான துன்பத்திற்கு உள்ளாகியிருக்கிறான். மனிதனின் மிகப்பெரிய துன்பமே அவன் உடல் மற்றும் ஆன்மாவின் பிளவிலிருந்துதான் வந்துள்ளது. மனிதன் முற்றிலும் முரண்பட்ட மனநோய்க்கு ஆளானதே உங்கள் துறவிகள், சர்ச்சுகள் மற்றும் சமய நூல்களினால்தான். உண்மையான துறவிகள் அறவே இருந்ததில்லை என்று நான் சொல்லவில்லை. அப்படிப்பட்டவர்கள் இருந்திருக்கின்றனர். ஏசு, டையேஜினஸ், புத்தர், கிருஷ்ணர், ஜராதுஷ்ட்ரா மற்றும் லாவோட் சூ போன்றோர் மனிதர்கள் மற்றும் வாழ்க்கையையும் நேசித்தவர்கள். இப்படியல்லாமல் மாற்றிக்கூறும் எந்த வழிமுறையும் மன நோயாளிகளினால் உருவாக்கப்பட்டதே.

ஏசுநாதர் சிரித்ததே இல்லை என்கிறார்கள் கிறிஸ்தவர்கள். இது முழு மூடத்தனம். இந்த மூடத்தனம் கிறிஸ்தவர்களால் ஏசுவின்மீது திணிக்கப்பட்டது. நீண்ட சோகமான முகத்துடன் ஏசுவைச் சித்தரித்துள்ளனர். தேவாலயங்களில் காணப்படும் ஏசு பொய்யானவர். தாங்களாகவே ஒரு செயற்கையான ஏசுவை சர்ச் உருவாக்கிவிட்டது. உண்மையான ஏசு, நம்பகத்தன்மையுள்ள ஏசு சிரிப்பைத் தனதாக்கியவர், ஒரு கொண்டாடும் மனிதர். உண்மையில் இதற்கு மாறாக இருக்க வாய்ப்பில்லை.

உங்களுக்கான என் செய்தி எவ்வளவு முடியுமோ வாழ்க்கையை அனுபவியுங்கள், அப்படியானால் நீங்கள் தெய்வீகத்திடம் மேலும் மேலும் நெருக்க

மாக வர முடியும், "வீட்டிற்கு" வெகு அருகே வருவீர்கள்.

## இரண்டாவது கேள்வி:

தெளிவான மனம் கொண்டு இருப்பதின் அவசியத்தைப் பற்றி இன்று நீங்கள் பேசினீர்கள், இதனால் ஒருவர் தெளிவாகப் பார்க்க முடியும், இதன் காரணமாகத் தேர்வுகளின் தேவையைத் தவிர்த்துவிட முடியும் என்று கூறினீர்கள். அகங்காரத்திலிருந்து மட்டுமே பிறக்கும் ஆசைகள்தானே மனதைக் களங்கப்படுத்துவதற்கான ஒரே காரணம்? அப்படியானால் ஆசைகள் இல்லாதபோது, தேர்வுகளுக்கும் தேவையில்லை. விஷயங்கள் வெறுமனே நடக்கின்றன.

பிரச்சினை என்னவென்றால் மறுபடியும் அகங்காரம் மற்றும் ஆசைகளை ஒழிப்பதில் வந்து நிற்கின்றது. எப்படியாயினும் தகர்க்க முடியாத ஒரு நச்சுச் சூழலாகிவிடுகிறது.

1. அகங்காரம் மற்றும் ஆசைகளைப் பல ஜென்மங்களாக தொடரும் வழிமுறை மூலம் படிப்படியாகக் குறைப்பது, அல்லது,

2. இந்த வாழ்க்கைச் சக்கரத்தின் ஊடே ஒரு தொடுவரைக்கோடிட்டு யாரும் அறியாததை நோக்கி ஒரு தாவல் அல்லது ஒரு சூதாட்டத்தில் ஈடுபடுவது.

இரண்டாவது வழி சற்றே விரும்பத்தக்கதாய் தோன்றுகிறது. ஆனால் சுழற்சியை உடைத்

> துவிட்டு வெளியே வருவதற்கான ஊக்கம் எங்கேயிருந்து வரவேண்டும்? செயல் என்பது பொதுவாக ஒரு ஆசையின் தூண்டுதலே. விஷயங்கள் அதன்படியே நடக்க அனுமதிப்பது, அல்லது செயல்படுவது, இதன் பொருள் என்னவென்றால் மீண்டும் தேர்வு.

முதலில் ஆசைப்படும் மனதை விட்டு வெளியே வர இரண்டு வழிகள். இல்லை, அதற்கு ஒரே வழி தான் இருக்கிறது. இரண்டு வழிகள் இருந்தால் மறுபடியும் தேர்வு என்பது வரும். ஒரு வழிதான் இருக்கிறது.

நீங்கள் முதலில் கூறியது: "அகங்காரம் மற்றும் ஆசைகளைப் பல ஜென்மங்களாகத் தொடரும் வழிமுறை மூலம் படிப்படியாகக் குறைப்பது."

இது நீங்கள் மண்டையைக் குழப்பிக் கொள்வதினால் ஏற்படுவது. முதலில் சொன்னதை உருவாக்கியது உங்கள் மனம். ஏனென்றால் மனதிற்கு எப்போதும் தள்ளிப்போட வேண்டும். எப்போதும், "நாளை" அல்லது "அடுத்த ஜென்மம்" என்று சொல்லும். மனம் நேரத்தை உருவாக்கும். காலம் என்பது மனதின் உருவாக்கமே, ஏனென்றால் கால-நேரமில்லாமல் மனதால் இருக்க முடியாது. இங்கேயே இப்பொழுதில் மனதால் இருக்க முடியாது. மனதால் வருங்காலம் அல்லது கடந்தகாலத்தில் மட்டுமே இருக்க முடியும். அதனால் அது தோற்றுவிக்கின்றது. ஆதலினால் மனம் சொல்கின்றது, "இது மிகவும் சிக்கலான பிரச்சினை. மெதுவாகத்தான் தீர்க்க முடியும்" ஒரு ஆசைக்

குப் பின் மற்றொன்று. நீங்கள் மாற வேண்டும், பழக வேண்டும். நீங்கள் ஆயிரத்தொரு வழிமுறைகளை, பாதைகளை, யுக்திகளைப் பின்பற்ற வேண்டும். இறுதியாக வருங்காலத்தில் வெகுதூரத்தில் ஒரு நாள் நீங்கள் ஞானம் பெறுவீர்கள். ஆசைப்படுவதிலிருந்து வெளிவருவீர்கள்.

ஆனால் இந்தக் கடந்தகால வாழ்க்கைகளில் எல்லாம் ஒரு செயல்நோக்கத்தோடு முயற்சி செய்திருப்பீர்கள், ஞானம் பெறவேண்டும் என்ற உட்கருத்து இருந்திருக்கும். உங்கள் வழிமுறைகள், முயற்சிகள் எல்லாமே ஞானம் பெற வேண்டும் என்ற செயல்நோக்கத்தில் வேரூன்றியிருக்கும். ஆக இந்த வாழ்க்கைகளில் எல்லாம் ஞானம்பெற வேண்டுவதற்கான செயல் நோக்கத்திற்கு தீனியிட்டுக் கொண்டிருப்பீர்கள், அது மேலும் மேலும் பலம் பெற்று கொண்டிருக்கும். அதிலிருந்து உங்களால் வெளிவர முடியாது. அதற்குப் பலம் சேர்க்க நீங்கள் உதவிக் கொண்டிருப்பீர்கள். அடுத்த நாள் பலமாக இருக்க அதற்கும் அடுத்த நாள் மேலும் பலம் கூடியிருக்கும், இப்படியே போய் கொண்டிருக்கும் - இது ஏனென்றால் ஒவ்வொரு நாளும் செயல் நோக்கத்தை உங்கள் மனதில் சுமந்துகொண்டிருப்பீர்கள். அதற்கு ஊட்டம் அளித்துக் கொண்டிருப்பீர்கள், உங்கள் வாழ்க்கைச் சாரத்தை அதற்குள் ஊற்றிக் கொண்டிருப்பீர்கள். உங்களால் இப்பொழுதே ஞானம் பெற முடியவில்லை, மறுநாள் இன்னும் கடினமாக இருக்கும், நாளை மறுநாள் அதைவிடக் கடினமாக இருக்கும். அதற்குப் பிறகு என்ன நடக்கும் என்று ஒருவருக்குத் தெரிய வாய்ப்பு இல்லை, ... நடக்கலாம்,

நடக்காமலேயே போகலாம். ஆக, இப்பொழுதே இல்லாவிட்டால் என்றுமே இல்லை! அதனால் முதல் தேர்வு என்பது உண்மையில் இல்லை, அது வெறும் மனதின் யுக்தி மட்டுமே.

*இரண்டாவது தேர்வு: "வாழ்க்கைச் சக்கரத்தின் ஊடே ஒரு தொடுவரைக் கோடிட்டு யாரும் அறியாததை நோக்கி ஒரு தாவல் அல்லது ஒரு சூதாட்டத்தில் ஈடுபடுவது. இரண்டாவது வழி சற்றே விரும்பத்தக்கதாய் தோன்றுகிறது."*

மற்றொன்று என்று ஏதுமில்லை! அது விரும்பத் தக்கதல்ல. இருப்பது அது ஒன்றே. தேர்வு என்ற கேள்விக்கே இடமில்லை. வாழ்க்கையில் தேர்வுகள் இல்லை, வாழ்க்கை வெறுமனே தேர்வுகளின்றி இருக்கிறது. வாழ்க்கைக்கு இரண்டு கதவுகள் இல்லை, ஒன்றுதான் உள்ளது. அதனால் தான் ஏசு சொல்கிறார்: "பாதை நேரானதுதான். ஆனால் குறுகலானது" அது மிகவும் குறுகலானது, தேர்வு செய்யச் சாத்தியக் கூறுகள் அதிகமில்லை. உண்மையில் தேர்விற்கான சாத்தியக் கூறு இல்லை. இருப்பது ஒன்றுதான், இப்போது பிரச்சினை இரண்டாவதை எப்படிச் செய்வது? ஒரு செயல் நோக்கமின்றி உங்களிடமிருந்து ஏதாவது ஒரு செயல் வெளிவந்திருக்கிறதா என்று பார்த்திருக்கிறீர்களா? பின்னர் நீங்கள் கண்டுபிடிக்கலாம், ஞாபகப்படுத்திப் பார்க்கலாம், சூழ்நிலையை மறு ஆய்வு செய்து ஒரு செயல்நோக்கம் இருந்ததாக நினைக்கலாம். ஆனால் அந்த நடைமுறைச் செயலில் எந்த செயல் நோக்கமும் இல்லை.

உதாரணமாக, உங்கள் பாதையில் ஒரு பாம்பைப் பார்க்கின்றீர்கள். யோசிப்பதற்கெல்லாம் நேரம் இல்லை. செயல்நோக்கத்திற்கு நேரம் அவகாசம் தேவை, தர்க்க வாதத்தில் இறங்கி விடுவீர்கள்: பாம்பைப் பார்க்க வேண்டும், அது விஷப்பாம்பா இல்லையா? ஆபத்தானதா இல்லையா, பாம்புடன் உங்களுக்கு ஏற்பட்ட மற்ற அனுபவங்களைப் பற்றி யும், மேலும் பாம்பைப் பற்றி மற்றவர்களின் கருத் துக்களைப் பற்றியும் யோசிக்க வேண்டும். நீங் கள் சிந்திக்க வேண்டும். அதன்பிறகு நீங்கள் பயப்பட வேண்டும், செயல்நோக்கம் உண்டாகும். எப்படி உங்களைக் காப்பாற்றிக் கொள்வது, எப் படிக் குதிப்பது, என்ன செய்வது? - ஆனால் இதெல்லாம் வெறும் கற்பனை. பாம்பை நீங்கள் எதிர்கொண்டால், வெறுமனே தாண்டி, விலகிப் போய்விடுவீர்கள். தாண்டுதல்தான் முதலில் வரும், அதில் செயல் நோக்கமில்லை. இந்தத் தாண்டு தல் என்ற செயல் முழுமையானது. நீங்கள் அந் தச் செயலாகி விடுவீர்கள்! அங்கே செயல்படுபவன் மற்றும் செயல் என்றில்லை, என்ன செய்ய வேண் டும் என்று யோசித்துக் கொண்டிருக்க இரண்டிற் கும் இடையே மனம் இல்லை. நீங்கள் வெறுமனே செயல்படுவீர்கள்.

உங்கள் வீடு தீப்பற்றி எரிகிறது: வெளியே ஓடு கின்றீர்கள், யோசனையெல்லாம் இல்லை. சிந் தனை என்ற பேச்சிற்கே இடமில்லை. சிந்தனை களற்ற அக்கணத்திலே செயல் எழுகின்றது: இந் தச் செயல் தூண்டுதலற்றது. ஒருவேளை திரும்பி நோக்கி, யோசித்துப் பார்த்தால் ஒரு செயல் நோக்கத்தை நீங்கள் கண்டுபிடிக்கலாம். ஆனால்

அதை உருவாக்கியது மனம். செயல் நோக்கமில்லாத எதையும் மனதால் புரிந்துகொள்ள முடியாது. மனம்தான் செயல்நோக்கம். செயல்நோக்கம் என்று எதுவுமே இல்லாதபோதுகூட மனம் எப்படி ஒன்றைத் திணிக்கும்? பின்னர் மரத்தடியில் ஆசுவாசமாய் நீங்கள் உட்கார்ந்து கொண்டு இருக்கும் போது, உங்கள் சிந்தனை ஓட்டம் இப்படிப் போகும். "நான் பயம் என்ற தூண்டுதலால் செயல்பட்டேன். சாவைக் கண்டு அஞ்சினேன், அதனால்தான் ஓடினேன்." ஆனால் இது தவறு, இது முற்றிலும் தவறு. சாவு என்று ஏதுமில்லை, அச்சம் என்பதும் அங்கில்லை. நீங்கள் வெறுமனே செயல்பட்டீர்கள். உள்ளுணர்வின் காரணமாக அந்தச் செயலில் இறங்கினீர்கள், சிந்தனை அல்லது அறிவினால் அல்ல. வீடு எரிகிறது, வெளியே ஓடுகிறீர்கள். இது ஒரு இயல் நிகழ்வு, வெறுமனே நடந்த ஒரு நிகழ்வு.

மக்கள் மீண்டும் மீண்டும் புத்தரிடம் வந்து, "ஆம் நீங்கள் சொல்வதெல்லாம் சரி, சரியெனத் தோன்றுகிறது, பகுத்தறிவிற்கு உட்பட்டு உள்ளது. தர்க்க ரீதியாக இருக்கிறது" என்று சொல்வார்கள். நாங்களும் இந்த பிறப்பு இறப்பு என்ற சக்கரத்திலிருந்து மீண்டு வர விரும்புகிறோம். ஆனால் நீங்கள் விஷயத்தைக் கடினமாக்குகிறீர்கள். "செயல் நோக்கமின்றிக் குதி." ஏனென்றால் நோக்கம் என்று இருந்தால் பிறப்பு - இறப்பு என்ற நச்சுச் சூழலில் சிக்கித் தொடர்வீர்கள். காரணம் எல்லா நோக்கங்களும் சக்கரத்தின் ஆரைகளாகும். ஆதலால் நீங்களும் பற்றிக்கொண்டிருப்பீர்கள். உங்களுக்கு ஏதோ ஒரு நோக்கம், ஆசை, இலக்கு, வருங்காலம் என்று இருந்தால், நீங்கள் மீண்டும் மீண்டும் அதே படி

வத்தை உருவாக்கிக் கொண்டிருப்பீர்கள். எந்த யோசனையுமின்றி இதிலிருந்து வெளியே வாருங்கள்.

மக்கள் சொல்வதுண்டு, "நாங்கள் புரிந்துகொள்கிறோம், இது தர்க்கரீதியாக இருக்கிறது. எங்கள் ஆசைகளின் வெளிப்பாடே உலகம். வேறொன்றுமில்லை, ஆக நம்மிடம் எந்த ஆசை இருந்தாலும், இந்த உலகை விட்டு மீண்டுவர வேண்டும் என்ற விருப்பம் இருந்தாலும், அது இன்னொரு உலகை உருவாக்கும்; இது ஒன்றன்பின் ஒன்றாக முடிவில்லாமல் தொடர்ந்து கொண்டே இருக்கும். நீங்கள் பின்பற்றிக் கொண்டே போகலாம். பின் எவ்வாறு இதை விட்டு வெளியேறுவது? புத்தர் சொல்வதுண்டு: "வாழ்க்கை அர்த்தமற்றது என்ற கருத்தைப் புரிந்து கொள்வீர்கள். வாழ்க்கை தருவது ஒரு மாயத் தோற்றம், அதில் வலியும் துன்பமும் மட்டுமே உள்ளது, கடும் துயர் தவிர வேறு எதுவுமில்லை."

வீடு பற்றி எரிகின்றது, அங்கே 'எவ்வாறு' என்ற கேள்வி எழுவதில்லை. எரிந்து கொண்டிருக்கும் வீட்டுக்குரியவர், "வீடு எரியும்போது வெளியேறுவது எப்படி?" என்று வழிகாட்டும் நூலேட்டைப் புரட்டிக் கொண்டிருப்பதில்லை. ஏதாவது ஒரு வழி கண்டுபிடிப்பான். ஜன்னலில் இருந்து குதிப்பான், அல்லது பின்வாசல் வழியாக ஓடுவான். கதவுகள், ஜன்னல்கள் மற்றும் பண்பு முறைகள் பற்றி அவனுக்குக் கவலையில்லை, ஒழுங்காசாரங்களைப் பின்பற்றுவதில்லை, அந்த ஆடம்பரங்கள் எல்லாம் இக்கணத்தில் சாத்தியமில்லை. அவையெல்லாம் வீடு தீப்பற்றி எரியாதபோது, நீங்கள் ஆசுவாசமாய்

சிந்தித்துத் திட்டமிட்டுக் கொண்டிருக்கையில் நீங் கள் அவற்றைப் பயன்படுத்தலாம். "ஒரு வேளை வீடு தீப்பற்றிக் கொண்டால், நான் எப்படி வெளி யேறுவது?" "ஒரு வேளை" என்று இருக்குமானால், நீங்கள் அதைப் பற்றி யோசிக்கலாம், ஆழ் சிந்த னையில் இறங்கலாம்.

நான் 'மனத் தெளிவு' என்று சொல்லும்போது நான் வெறுமனே மெய் நிகழ்வை உள்ளபடியே காண்பதைப் பற்றிக் குறிப்பிடுகிறேன். அது உண் மையற்றது என்றால் அது தானாகவே உங்களிட மிருந்து உதிர்ந்து விடும். அதை விட்டுவிட எந் தவிதச் செயல் நோக்கமும் தேவையில்லை. எவ ரும் எதையும் விட்டதில்லை. எவராலும் எதையும் விடமுடியாது. ஏனெனில் அந்த விடுதலில் பற்றுதல் இருக்கிறது. உங்களால் எதையும் துறக்க முடியாது, அந்தத் துறத்தலில் பற்றுதல் உள்ளடங்கியிருக்கி றது.

"என் குடும்பத்தோடு, மனைவி மக்களோடு இருப்பது ஒரு பற்றுதல். அது என்னைத் தியானம் செய்ய அனுமதிக்கவில்லை. இதனால் இறைத் தேடலுக்கு எனக்கு நேரமும், இட அமை வும் கிடைப்பதில்லை. நான் இமயமலை செல்ல வேண்டும். குடும்பத்தை விட்டு விலக வேண்டும்." இவ்வாறு நீங்கள் நினைக்கலாம். நீங்கள் வெளி யேறிப் போக முடியலாம், இமயமலைக் குகையில் உட்கார்ந்துகொண்டு உங்கள் மனைவி குழந்தை களைப் பற்றிச் சிந்தித்துக் கொண்டிருப்பீர்கள், கட வுள் எப்போதும்போல விலகியே இருப்பார். உண் மையில் மேலும் வெகு தொலைவில் இருப்பார். மனைவி குழந்தைகளோடு இருக்கும்போது நீங்

கள் அவர்களைப் பற்றி அவ்வளவாக நினைக்க வேண்டியதில்லை. அவர்கள் இருக்கிறார்கள், ஆகையால் நினைப்பதற்கு என்ன தேவை இருக்கிறது? அவர்கள் இல்லாதபோது, நீங்கள் தொடர்ச்சியாக அவர்களைப் பற்றியே சிந்தித்துக் கொண்டிருப்பீர்கள். மனைவி, குழந்தைகளோடு மகிழ்ச்சியாய் இருந்தது, உங்கள் குழந்தை சிரித்துக் கொண்டே தோட்டத்தில் ஓடியாடியது... மனைவி அருகே நீங்கள் உட்கார்ந்து இருந்தது. இந்தப் பழைய நினைவுகள் எல்லாம் ஆயிரக்கணக்கில் வரும், மேலும் அழகான வடிவுகளில், மேலும் பிரகாசமாய், வண்ண வடிவமாய் வரும்.

உங்கள் குகையில் உட்கார்ந்து கொண்டு என்ன செய்யப் போகிறீர்கள்? உங்கள் வீடு மற்றும் அது தரும் சுகத்தைப் பற்றி யோசித்துக் கொண்டிருப்பீர்கள். குகையானது மறுபடியும் மறுபடியும் உங்களை வீட்டிற்கே தூக்கியடிக்கும். குகையின் குளிர்ச்சியானது உங்கள் மனைவியின் வெதுவெதுப்பை, மனைவியின் வெப்பமான உடலை நினைவூட்டும். உங்களைப் பார்த்துக் கொள்ள எவருமில்லை, உங்கள்மீது அக்கறை கொள்ள யாருமில்லை. உங்களுக்குப் பலமுறை இந்த நினைவூட்டல் இருக்கும். உங்களுக்கே நீங்கள் என்ன செய்து கொண்டீர்கள்? உங்கள் குழந்தைகளை அனாதைகளாக விட்டு வந்ததற்கு நீங்கள் உங்களையே மன்னித்துக் கொள்ள முடியுமா? அது உங்களைச் சித்திரவதை செய்யும். அது உங்களைக் காயப்படுத்தும். அது காயமாகிவிடும். உங்களால் மறக்கவும் முடியாது, மன்னிக்கவும் முடியாது.

இது முட்டாள்தனமான வழி. யாரும் துறப்பதில்லை, யாரும் எதையும் விடுவதில்லை, கைவிடுவதில்லை. புரிந்து கொண்டவர்கள் சில விஷயங்கள் காணாமல் போய்விட்டது என்பதை உணர்வார்கள். புரிதலிலே விஷயங்கள் மறைந்து போகும். இதை நான் அறிவேன் - உங்கள் வீட்டில் வாழும்போது, மனைவி, குழந்தைகளோடு வாழும்போது, ஒரு குறிப்பிட்ட கணத்தில், நீங்கள் இனியும் கணவர் இல்லை, அவள் உங்கள் மனைவி இல்லை என்ற புரிதல் வரும். உண்மையில் நீங்கள் கணவன் மனைவி என்று இல்லாதபோது, அன்பு ஆரவாரமாய் எழும்.

ஒரு கணவனாக, மனைவியாக இருப்பது விகாரமானது. அது அமைப்பு சார்ந்தது, அது வெறும் சட்டபூர்வமானது. அது ஒருவகையான ஒப்பந்தம். திருமணம் அசிங்கமானது. ஒரு குறிப்பிட்ட கணத்தில் புரிதல் ஏற்படும்போது திருமணம் மறைகின்றது. மேலும், ஒரு பெண்ணிற்கு எஜமானன் ஆவது எப்படி என்று உங்களுக்குத் தெரியும். இந்தக் கருத்தே வன்மையானது, அகங்காரம் கொண்டது. எவ்வாறு ஒரு பெண்ணை உடைமையாக்கிக் கொள்ள முடியும்? எப்படி ஒரு அழகான பெண்ணை ஒரு அழகில்லாத மனைவியாக்கிக் கொள்ள முடியும்? அவள் மறுபடியும் விடுதலை அடைகிறாள், மனைவி நிலை என்ற கூண்டில் அவள் இல்லை. நீங்களும் விடுதலை பெறுகின்றீர்கள், இனி நீங்கள் கணவன் இல்லை. சுதந்திரமாக இருவரும் வானில் பறக்கின்றீர்கள். நீங்கள் இனியும் கூண்டில் அடைபட்டிருக்கவில்லை. திரு

மணம் மறைந்துவிட்டது, காதல் வானம் இப்போது திறந்து இருக்கிறது.

பற்றுதலிலிருந்து வெளிவரும் வழி இதுதான். அது நீங்கள் நேசிக்கும் மனிதர்களைத் துறப்பதால் வருவதல்ல, அது நீங்கள் நேசிக்கும் மனிதர்களைச் சுற்றிச் சேர்த்து வைத்திருக்கும் அருவருப்பான விஷயங்களைத் துறப்பதினால் வருவதாகும். அந்த துறத்தல் என்பது வெளிப்படையான தெளிவு நிலையிலிருந்து வரும் ஒன்றாகும்.

"இது என் குழந்தை" என்று எப்படி உங்களால் சொல்ல முடியும்? எல்லாக் குழந்தைகளும் இறைவனின் குழந்தைகள்தான். நீங்கள் சரியான மனநிலையில் இருந்தீர்கள் என்றால், "இந்தக் குழந்தை என்னுடையது" என்று எப்படி கோரமுடியும்? உங்கள் மூலமாக வருகிறது என்பது உண்மைதான். குழந்தைக்கு நீங்கள் தாம் வழித்தடம், குழந்தைக்கு நீங்கள் சொந்தம் கொண்டாட முடியாது, அதை உடைமையாக்கிக் கொள்ள முடியாது. நீங்கள் அதை நேசிக்கலாம், உங்களிடம் வந்ததற்காகக் கொண்டாடலாம், ஆனால் நீங்கள் எந்த வகையிலும் அதன்மேல் ஆளுமை செலுத்த முடியாது. புரிதலே சூழ்நிலைகளை மாற்றியமைக்கின்றது.

உங்கள் வாழ்வு என்பது என்ன, எப்படி வாழ்கின்றீர்கள் என்பதைக் கொஞ்சம் புரிந்துகொள்ள முயற்சி செய்யுங்கள். அதற்குள் ஆழமாகப் பாருங்கள், எதையும் அவசரமாக மாற்ற வேண்டியதில்லை. மாற்றுவதற்கு அவசரப்பட வேண்டாம். உங்கள் பார்வை ஆழமாக அனுமதியுங்கள். ஒரு விஷயத்தைப் பொய்யெனப் பார்ப்பதில் நீங்கள்

விடுதலை பெறுகின்றீர்கள். பொய்யைப் பொய் யென அறிவது என்பது உண்மையை உண் மையென அறிவதாகும். பொய்யைப் பொய்யா கக் காணும்போது உங்கள் கண்கள் உண்மையை நோக்கி நகரத் தொடங்குகிறது.

ஞானம் என்பது தேர்வின்மையிலிருந்து வருகி றது என்று இந்த அர்த்தத்தில்தான் நான் சொல் கிறேன். இது செயல்நோக்கமற்றது. எல்லாவித மான செயல்நோக்கங்களின் பயனற்ற தன்மையை உணர்வதால் "அது நடந்தேறுகிறது."

## மூன்றாவது கேள்வி:

*வாழ்க்கைக்கு 'ஆம்' என்று சொல்வதை, மற் றும் முழுச் சரணாகதி அடைவதைத் தடுப் பது எது? மேலும் எப்போதுமே 'ஆம்' என்று சொல்வது சரியா?*

'ஆம்' என்று சொல்வது கடினம்தான், ஏனென் றால் இல்லை என்று மறுத்துச் சொல்லத்தான் உங்களுக்குக் கற்றுக்கொடுக்கப் பட்டுள்ளது. இந் தக் கட்டுப்படுதல் மிகப் பழமையானது. இந்தச் சூழ்நிலை அமைவு மட்டுமே நீங்கள் ஆம் என்று சொல்வதைத் தடுப்பதில்லை. ஏதோ ஒரு உள்ளி யக்கமும் உங்களை ஆம் என்று சொல்வதிலிருந்து தடுக்கிறது.

ஒரு பிறந்த குழந்தை ஆம் என்று சொல்லக்கூடி யது. ஆனால் போகப் போக அது தன் தனித்தன் மையை உணரத் தொடங்குகிறது. மறுப்பு வளர் கிறது. ஒரு குழந்தை மறுக்கத் தொடங்கியவுடன், அதன் அகங்காரம் அல்லது தான் என்ற எண்ணம்

பிறந்துவிட்டது என்று நீங்கள் நிச்சயமாகக் கொள் ளலாம். மறுத்துப் பேசாமல் அகங்காரம் நிலைத்து இருக்க முடியாது, அதனால் ஒவ்வொரு குழந்தை யும் மறுத்துப் பேச வேண்டும். ஒரு தனி மனித னாவதற்கு எல்லாவற்றிற்கும் ஆமாம் என்று கூறிக் கொண்டிருந்தால் அவன் ஒரு தனி மனிதனாக உருவாக முடியாது. அவனுக்குத் தன் இருப்பைப் பற்றி எந்த விளக்கமும் தர முடியாது. அவனால் எப் படி விவரிக்க முடியும்? 'ஆம்' என்றால் அந்த விவ ரிப்பும் இல்லை. 'இல்லை' ஒரு விவரிப்பைத் தரு கிறது. 'இல்லை' என்றால் 'நான்' தான் மறுக்கிறேன் என்பதை அறிவீர்கள். ஆம் என்கிறபோது அதில் 'நான்' என்பதற்கிடமில்லை.

'ஆம்' என்று நீங்கள் சொல்லும்போது நீங்களும் வாழ்க்கையும் ஒன்றாகி விடுகிறீர்கள். இல்லை என்று மறுக்கும்போது ஒரு வரையறை இடுகிறீர் கள், நீங்கள் வலியுறுத்துகிறீர்கள். இறைவனின் சொல் கேட்காமல் ஆதாம் மறுத்துரைக்கும் விவி லியக் கதையின் பொருள் இதுவே. இது ஒரு கட்டாய நிலை, இல்லையெனில் ஆதாம் இறை வனிடமிருந்து என்றும் விலகிப் போயிருக்க மாட் டான். அவனுக்கு ஒரு தனித்தன்மை இருந்தி ருக்க முடியாது; அவன் உருவரையற்று ஒரு வகை யான மேகம்போல தெளிவில்லாமல் இருந்திருப் பான். அவன் மறுத்துத்தான் ஆகவேண்டும், அவன் எதிரெழுச்சி செய்தே ஆகவேண்டும். நினைவிற் கொள்ளுங்கள், இது ஏதோ கடந்தகாலத்தில் ஒரே ஒரு முறை நடந்தது என்றில்லை; இது ஒவ்வொரு புதிய ஆதாமிடமும் நடக்கிறது, மனிதன் ஈன்றெ டுக்கும் ஒவ்வொரு புதிய குழந்தையிடமும் நடப்

பது இது. ஒவ்வொரு குழந்தையும் சில மாதங்கள் அல்லது வருடங்கள் ஏடன் தோட்டத்தில் வாசம் செய்கிறது. பின்னர் மெதுவாக எதிர்க்கத் தொடங் குகிறது, கிளர்ச்சி செய்கிறது, அது மறுதலிக்கத் தான் வேண்டும். தந்தை சொல்வார், "இதைச் செய்யாதே" என்று. ஆனால் "நான் நானாக இருக்கிறேன் எப்போதும். எனக்கு ஆணையிட்டுக் கொண்டிருக்காதே, நான் ஒரு அடிமையில்லை, எனக்கென்று தேர்வுகள் உள்ளன, விருப்பு வெறுப் புகள் உண்டு" என்று உறுதிப்படுத்தும் பொருட்டு குழந்தை அதையே செய்யும். சில சமயங்களில் தனக்குப் பிடிக்காததைக்கூட குழந்தை செய்யும். ஆனால் அதை அது செய்ய வேண்டும், ஏனென் றால் தந்தை செய்யாதே என்று சொல்கிறார்.

சிறுவர்கள் சிகரெட் பிடிக்கத் தொடங்குகிறார் கள், எந்தக் சிறுவருக்கும் முதல் முறை புகை பிடிப்பது பிடிக்காது, யாருக்குமே பிடிக்காது. கண் ணீர் வரும், இருமத் தொடங்குகிறது, தொண்டை யில் எரிச்சல் உணர்வு ஏற்படும், மனதிற்கும் பிடிக் காது, ஆனால் அதைச் செய்துதான் ஆகவேண் டும், ஏனெனில், அப்பா "புகை பிடிக்காதே" என்கி றார். அப்பாவை எதிர்க்க வேண்டும், தனியாக ஒரு வாழ்க்கை வழியைத் தேடிக்கொள்ள இது ஒன்றே வழி. அம்மாவிற்கு எதிராக, ஆசிரியருக்கு எதிரா கச் செயல்பட வேண்டும். ஒவ்வொரு சிறுவரும் மறுப்பதற்கென ஒரு நேரம் வரும், அந்த வகையில் அது நல்லதே. நான் அதற்கு எதிரானவன் அல்ல, இல்லையென்றால் தனி மனிதர்களே இருக்க மாட்டார்கள். ஆனால் அதே வேளையில் நீங்கள்

இல்லை என்று மறுத்துச் சொல்வதற்குப் பழகிவிடு வீர்கள்.

இல்லை என்று சொல்வதற்கு ஒரு நேரம், ஒரு காலம் உள்ளது. அதேபோல் தேவையற்ற மறுப் புக்களைக் கைவிடக் கற்றுக் கொள்ளும் கால மும் உள்ளது. இல்லையெனில் நீங்கள் தெய்வீ கத்தோடு என்றுமே ஒன்றிணைய முடியாது. கருத் தைப் புரிந்துகொள்ளுங்கள்: மறுப்பு உங்களைத் தாய், தந்தை குடும்பம் மற்றும் சமுதாயத்திலிருந்து தனித்து நிற்க உதவுகிறது. அதுவரை நல்லதே, ஆனால் என்றாவது ஒரு நாள் நீங்கள் இறைவ னுக்கு 'ஆம்' என்று சொல்லியாக வேண்டும். இருப் பிற்கு, வாழ்க்கைக்கு ஆம் என்றுரைக்க வேண்டும். இல்லாவிடில் நீங்கள் எப்போதுமே தனித்து இருப் பீர்கள். அந்தப் பிரிவு துன்பத்தை தரும். அந்தப் பிரிவு வாழ்க்கையில் ஒரு வகையான போராட் டத்தை உருவாக்கும், ஒரு சண்டையாகும். வாழ்க் கையே ஒரு யுத்தமாகிவிடும். வாழ்க்கை ஒரு யுத்த மாக இருக்கக் கூடாது. அது நெகிழ்வு தரும் மகிழ்ச் சியாக இருக்கவேண்டும்.

ஆதலால் என்றாவது ஒரு நாள் ஆம் என்று ஒரு வன் சொல்ல வேண்டியது அவசியமாகிறது.

"ஆம் என்று சொல்வதிலிருந்து என்னைத் தடுப் பது எது?" என்று கேட்கிறீர்கள். ஈகோ. அதா வது 'தான்' என்ற எண்ணத்தைத் தொலைத்து விடுவோம் என்ற அச்சம் உங்களுக்கு. நீங்கள் தான் வழியில் நின்று தடுக்கிறீர்கள், உங்கள் ஈகோ குறுக்கே நிற்கின்றது. அது உங்களின் கடந்தகாலப் பாரம்பரியம், உங்கள் பெற்றோர் குடும்பம், உங்கள்

சர்ச் எல்லாவற்றையும் தொலைத்துக்கட்ட அது உங்களுக்கு உதவியது. அது நல்லதுதான். அதன் வேலை முடிந்தது. இனி நீங்கள் குழந்தையில்லை. இப்போதும் தொடர்ந்து சண்டையிட்டுக் கொண்டிருக்காதீர்கள். வெறுமனே, மறுத்துப் பேசும் பழைய பழக்கத்தை சுமந்து கொண்டிருக்காதீர்கள். இல்லையென்றால் நீங்கள் தொடர்ந்து குழந்தையாகவே இருப்பீர்கள்.

இந்த முரண்பாட்டைப் பாருங்கள்; ஒரு குழந்தை மறுக்கவேயில்லை என்றால் அது வளரவே செய்யாது. ஆனால் ஒரு வளர்ந்த மனிதன் தொடர்ந்து மறுத்துப் பேசிக்கொண்டே இருந்தால் அவன் குழந்தைத்தனத்துடனேயே இருப்பான். ஒரு நாள் நீங்கள் முழு மனதோடு இல்லை என்று மறுக்க வேண்டி வரும். மேலும் என்றாவது ஒருநாள் அந்த இல்லை என்ற மறுப்பையும் கைவிட வேண்டி வரும்.

மேலும் நீங்கள் கேட்பது, "... எப்போதும் 'ஆம்' என்று சொல்வது சரியா?"

இல்லை, எப்போதும் கிடையாது. 'இல்லை' என்பதற்கும் பயனோக்கம் உள்ளது. அதற்கு அடிமையாகி விடக்கூடாது. அவ்வளவுதான். 'இல்லை' என்பது தன்னிலையிலேயே மோசமான ஒன்றல்ல. ஆம் என்று சொல்ல வேண்டிய நேரம், இல்லை என்று சொல்ல வேண்டிய தருணங்களும் உண்டு. ஆம் அல்லது இல்லை என்று சொல்ல ஒருவருக்குச் சுதந்திரம் இருக்க வேண்டும். அதைத்தான் நான் உங்களுக்குச் சொல்லிக் கொண்டிருக்கிறேன். இரண்டிற்குமே அடிமையாகிவிடக் கூடாது.

சூழ்நிலைக்கேற்ப ஆம் அல்லது இல்லை என்றும் சொல்பவனே சுதந்திரமான மனிதன். அந்தக் கணத்தில் அவன் எப்படி உணர்கிறான் என்பதைப் பொறுத்து அவன் எதிர்வினை இருக்க வேண்டும். ஆம் அல்லது இல்லை. அவன் கடந்த காலத்திலிருந்து வரக்கூடாது, அவனின் ஞாபகசக்தியிலிருந்து வெளிப்படக் கூடாது. அது எதிர்விளைவாக இருக்கக் கூடாது, அது மறுமொழியாக இருக்க வேண்டும்.

துடுப்புப் படகு ஒன்றில் தனியாக இருந்த மனிதன் ஒருவன் 'இல்லை' 'இல்லை' 'இல்லை' என்று கத்திக் கொண்டிருந்தான். அதைப் பார்த்துக் கொண்டிருந்த மற்றொருவன் ஏன் இந்த ஆள் 'இல்லை' 'இல்லை' என்று சொல்லிக் கொண்டிருக்கிறான். படகில் வேறு எவருமில்லை, தனியாகத்தானே இருக்கிறான். அதுமட்டுமல்லாமல், அந்த படகு மனிதன் வானத்தை நோக்கி 'இல்லை' 'இல்லை' என்று சப்தமிட்டுக் கொண்டிருந்தான். இதைப் பார்த்துக் கொண்டிருந்தவருக்கு ஒன்றும் புரியவில்லை. அப்போது அவ்வழியே போய்க்கொண்டிருந்த போலீஸ்காரர், குழம்பிப் போயிருந்த பார்வையாளனைப் பார்த்து, "கவலைப்பட ஒன்றுமில்லை நண்பா, அவன் வெள்ளை மாளிகையில் இருக்கும் 'ஆமாம் சாமி' ஆசாமி. விடுமுறையில் இங்கு இருக்கிறார்."

ஒரு வகையான சமச்சீர் தேவைப்படுகிறது. நீங்கள் எப்போதும் ஆம், ஆம் என்று ஆமாம் போட்டுக் கொண்டிருந்தால், ஆமாம் சாமி ஆசாமி என்றால் அது சரிசமமற்று இருக்கும், உங்களுக்கு ஒரு விடுமுறை தேவைப்படும். நீங்கள் படகில் தனியாகச்

சென்று 'இல்லை', 'இல்லை' என்று கத்த வேண்டி யிருக்கும், பிறகுதான் நல் உணர்வு கொள்வீர்கள். ஆம் மற்றும் இல்லை இரண்டுமே மூச்சை உள்ளி ழுப்பது மற்றும் வெளியிடுவதுபோல, இரண்டுமே தேவைதான்.

உங்கள் வீடு தீப்பற்றி எரிகிறது, நீங்கள் வெளியே ஓடுகிறீர்கள். இது 'இல்லை' என்ற மறுப்பு. 'நான் வெளியேறுகிறேன்' என்று நெருப்பிடம் சொல்கிறீர் கள்.

ஒரு பாம்பு உங்கள் பாதையில் வருகிறது, உடனே குதித்து தள்ளிப் போகிறீர்கள்; நீங்கள் இங்கே மறுக்கிறீர்கள். 'இல்லை' என்று வார்த்தை யாகச் சொல்லப் போவதில்லை. ஆனால் 'இல்லை' என்ற மறுப்பை வெளிப்படுத்த ஆயிரம் சைகைகள் உள்ளன.

ஆம் அல்லது இல்லை என்று கூற ஒருவனுக் குச் சுதந்திரம் இருக்க வேண்டும். ஆம் என் பது உங்களை ஆட்டிப்படைத்துக் கொண்டிருக்கு மேயானால், உங்களுக்கு எந்தத் தனித்தன்மையும் இருக்காது. இல்லை என்பது மட்டுமே உங்களை ஆட்கொண்டிருக்குமானால் அருவருப்பான தான் என்ற அகங்காரம் மட்டுமே உங்களிடம் மிஞ்சியி ருக்கும். ஆம் மற்றும் இல்லை என்ற இரண்டிற்கும் இடையே அதீத சமநிலையை ஒருவன் காண்பா னானால் அவனே ஆரோக்கியமான, முழுமையான மனிதன்.

ஆமாம் என்று சொல்வதும் எப்போதும் சரியாக இருக்காது. எதுவுமே எப்போதும் 'சரியாக' இருப்ப தில்லை, அதேபோல் எதுவும் எப்போதுமே மோச

மானது இல்லை. ஆனால் உங்களுக்கு ஒரு நிலையான கருத்துக்களே மீண்டும் மீண்டும் கற்றுக் கொடுக்கப்படுகின்றன. இது நல்லது, இது கெட்டது. சரியானவை மற்றும் மோசமானவை, மாறக் கூடியவை. சூழ்நிலைக்கேற்ப அவை மாறுகின்றன. எந்த ஒரு செய்கையும் அதுவாகவே சரியானதாக இருக்க முடியாது, அல்லது அது சரி அல்லது தவறு என்று இருக்க முடியாது. ஒவ்வொரு சூழ்நிலையும் புதிது, அதை யாரும் அறியார். உறுதிப்பட்ட கருத்துக்களைச் சுமந்து கொண்டிராதீர்கள். உறுதிப்பட்ட கருத்துக்கள் யாவும் ஆட்டிப்படைக்க வல்லவை. செயல்பட ஏதுவாக சுதந்திரமாக இருங்கள்.

சமயப்பற்று உள்ள ஒரு மனிதன் என்பவன் மறுமொழியாற்றுபவன், அவன் ஒவ்வொரு சூழ்நிலைக்கும் ஏற்றவாறு நடந்து கொள்ளும் சுதந்திரம் உடையவன். அவன் எதிர்வினைகள் உறுதிப்பட்டவை அல்ல, அவை இயந்திரத்தனமாக இருப்பவை அல்ல.

இரண்டு பேர் மலையேறிக் கொண்டிருந்தனர். அதில் ஒருவன் சொன்னான்: "நான் உன்னை விட அனுபவஸ்தன், நான் முன்னால் சென்று, எப்படி ஏற வேண்டும் என்று காட்டுகிறேன்." அவன் முன்னே சென்று, 250 அடி ஆழமுள்ள ஒரு பள்ளத்தில் விழுந்து விட்டான். மற்றவன் கீழே பார்த்து கத்தினான், "நீ நன்றாய் இருக்கிறாயா? பிரச்சினை இல்லையே"

"இல்லை, இரண்டு கைகளையும் உடைத்துக் கொண்டுவிட்டேன்."

"சரி, இரண்டு கால்களையும் வைத்து மேலேறி வா."

"இல்லை இரண்டு கால்களையும் உடைத்துக் கொண்டு விட்டேன்."

"சரி, பல்லைக் கொண்டு மேலே ஏறி வா."

அந்த மனிதன் பல்லைக் கொண்டு மேலே ஏறி னான். ஒரு மாமாங்கம் ஆயிற்று மேலே வர. கிட் டத்தட்ட மேலே ஏறி இருப்பான், அப்போது மேலே இருந்தவன் கேட்டான்.

"நன்றாய் இருக்கிறாயா பிரச்சினை இல்லையே?"

பதில் வந்தது "ஆமாமாம்" மறுபடியும் கீழே விழுந் தான்.

'ஆம்' எப்போதும் சரியாக இருக்க வேண்டிய தில்லை.

## ஐந்தாவது கேள்வி:

*"அல்லாவை நம்புங்கள், ஆனால் முதலில் உங்கள் ஒட்டகத்தைக் கட்டி வையுங்கள்." -*

*இந்த சூஃபி பழமொழி எனக்கு ரொம்பப் பிடிக்கும், ஆனால் எனக்கு இந்த ஒட்ட கம் யார் அல்லது எது என்றுதான் தெரிய வில்லை?*

அது மாறும். ஒட்டகமானது ஒரு நிலையான பொருளல்ல, அது எல்லா வடிவு மற்றும் அளவுக ளிலும் வரும். ஒட்டகம் ஒரு குறியீடு மட்டுமே. அது எளிமையாகச் சொல்வது ஒரே விஷயம். செயலாற் றாமல் இருக்க வேண்டாம். உங்கள் கரங்களைத்

தவிர இறைவனுக்கு வேறு இல்லை. அல்லாவின் மீது நம்பிக்கை வையுங்கள், இறைவனின்மீது நம் பிக்கை கொள்ளுங்கள், ஆனால் அதுவே சோம் பேறியாவதற்கு ஒரு சாக்காகி விடக்கூடாது.

உலகில் மூன்று விதமான மனிதர்கள் இருக்கின் றனர். முதல் வகையைச் சேர்ந்தவர், ஒரு விஷயத் தைத் தான் செய்யவேண்டும் என்று நினைக்கிறார். அவர் தானே செயல்புரிபவர் ஆகிறார். அவர் முழு மையை நம்புவதில்லை, எல்லாவற்றையும் உள்ள டக்கிய முழுமையை நம்புவதில்லை. அவர் வெறு மனே தன் சிறிய சக்தியைக் கொண்டு வாழ்கின் றார். இயல்பாகவே இதனால் மீண்டும் மீண்டும் தோற்கடிக்கப்படுகிறார், தன் தோல்வியை நிரூ பிக்கின்றார். உங்களைச் சுற்றி இருக்கும் மாபெ ரும் சக்தியை எதிர்த்து உங்களுடைய மிகச் சிறிய சக்தியை மட்டுமே வைத்துக்கொண்டு வாழ்ந்தீர் களானால், நீங்கள் தோல்வியுறப் போகின்றீர்கள். பெரும் துன்பம் மற்றும் வேதனைகளை அனுப விக்கப் போகின்றீர்கள். உங்கள் முழு வாழ்க்கை யுமே ஒரு நீண்ட துன்பமாக அமையப் போகின்றது.

இரண்டாம் வகையைச் சேர்ந்தவர் இப்படிச் சிந் திப்பார். "இறைவன் எல்லாவற்றையும் செய்யும் போது, நான் எதையும் செய்யத் தேவையில்லை. நான் எதையும் செய்யக்கூடாது" அவர் சும்மா உட் கார்ந்து காத்திருப்பார். அவர் வாழ்க்கை மேலும் மேலும் சோம்பேறித்தனமாக இருக்கும். ஒரு கட் டத்தில் அவர் வாழ்தலல்லாமல் வெறுமனே ஒரு ஜடப்பொருளாக உயிரோடு இருப்பார்.

இந்த இரண்டு வகைகளும் மேற்கு மற்றும் கிழக்கைக் குறிக்கின்றன. மேற்கு செயல் புரிபவரைக் குறிக்கின்றது, கிழக்கு செயல்புரியாமல் இருப்பவரைக் குறிக்கின்றது.

மேற்கு தன்னைத் தானே பைத்தியம் ஆக்கிக் கொண்டிருக்கிறது. மேற்கத்திய மனிதகுலத்தின் பிரச்சினை, அதிக செயல்பாடு, நம்பிக்கை வைப்பதில்லை. "தானே எல்லாவற்றையும் செய்ய வேண்டும்" என்று தன்மீது மட்டுமே அதிகமாகச் சார்ந்திருப்பது. "இயல் உலகம் தன்னைப்பற்றிக் கொஞ்சம்கூட அக்கறை கொள்வதில்லை" என்ற ஒரு மனப்பாங்கு. இயல்பாகவே இது கவலையை உண்டுபண்ணுகிறது. இந்தக் கவலை அதிகமாகித் தாங்க முடியாததாகிறது. இது எல்லாவிதமான மன வியாதிகளுக்கும் காரணமாகிறது. இது எப்போதுமே மனிதர்களை அச்சம் மற்றும் இறுக்கத்தின் விளிம்பிலேயே வைத்திருக்கின்றது. இது கொல்லும் தன்மையுடையது, பைத்தியமாக்கக் கூடியது. மேற்கு பல விஷயங்களில் வெற்றி கண்டுள்ளது. கடவுள் என்ற கருத்தை விட்டொழிப்பதிலும் வெற்றி பெற்று உள்ளது. இதனால் எல்லாவிதமான நம்பிக்கை கொள்ளுதல், சரணடைதல், நெகிழ்தல் ஆகியவற்றை விடுவதிலும் வெற்றி கண்டுள்ளது. விட்டுக் கொடுத்தல் பற்றி அறிதல் இல்லை. அதைப் பற்றி அறவே மறந்து விட்டது. இதனால்தான் மேற்கத்திய நாடுகளில் ஒவ்வொரு நாளும் தூங்குவதற்கு மனிதர்களுக்குக் கடினமாக இருக்கிறது. ஏனென்றால் இதற்கும் ஒரு விதமான நம்பிக்கை தேவை.

இரவில் தூங்க முடியாத ஒரு நபரைப் பற்றி நான் ஒருமுறை கேள்விப்பட்டேன். பகலில் தூங்கி இரவெல்லாம் விழித்திருப்பார். "நீங்கள் ஏதாவது செய்யுங்கள், இதனால் பல பிரச்சினைகள். பகலில் தூங்குவதால் அவரால் வேலை செய்ய முடியவில்லை, முழு இரவும் முழித்துக் கொண்டு இருந்து எங்களையும் தூங்க விடுவதில்லை. இவர் என்னைப் பைத்தியமாக்குகிறார்" என்று அந்த மனிதரின் மனைவி என்னிடம் சொன்னார்.

விஷயம் என்னவென்று விசாரித்தேன். அந்த மனிதர் பெரும் சந்தேகப் பிராணி, நம்பிக்கையற்றவர். "என்னால் இரவில் தூங்க முடியாது, ஏனென்றால் எல்லோரும் தூங்குகின்றனர். எனக்கு ஏதாவது நடந்துவிட்டால், என்னை யார் பார்த்துக் கொள்வார்? நான் பகலில் தூங்குவதற்குக் காரணம், என் மனைவி, குழந்தைகள் விழித்திருக்கிறனர். முழு உலகமே விழித்திருக்கிறது. எனக்கு ஏதாவது ஆயிற்று என்றால், அதைப் பற்றிக் கவனிக்க முடியும். இரவில் நான் சுவாசிப்பதை நிறுத்திவிட்டால்... நான் இரவில் இறந்துவிட்டால் என்னாவது?" என்று அந்த மனிதர் என்னிடம் கூறினார். அவர் ஒரு பைத்தியக்காரர்.

ஆனால் துல்லியமாக இதுதான் மேற்கத்திய நாடுகளில் தூக்கமின்மையை உருவாக்குகிறது. உடலில் ஏதோ தவறு இருக்கிறது, அதனால் தூங்க முடியாது என்று மனிதர்கள் நினைக்கின்றனர். உடலில் எந்தத் தவறும் இல்லை. அவர்கள் உடல் எப்போதும் ஆரோக்கியமாகவே இருக்கிறது, சொல்லப் போனால் இன்னும் அதிக ஆரோக்கியத்துடன் இருக்கிறது. ஆனால் அவர்கள் மனதில்

ஆழமாக ஏதோ பதிந்துள்ளது. அதாவது அவர்கள் எல்லாவற்றையும் செய்ய வேண்டும். ஆனால் தூங்கக் கூடாது, ஏனென்றால் தூங்குவது செயலில் ஒரு பகுதியாகாது. தூக்கத்திற்கு அனுமதி கொடுக்க வேண்டும். நீங்கள் அதைச் செய்ய முடியாது, அது ஒரு செயல் அல்ல. தூக்கம் தானாக வருவது, தூக்கம் நேரிடுகிறது. ஆனால் மேற்கு விஷயங்கள் நேரிட அனுமதிக்க முற்றிலும் மறந்துவிட்டது. நெகிழ்வுத் தன்மையோடு இருப்பதை மறந்து விட்டது, இதனால் தூங்குவதும் கடினமாகிவிட்டது. நேசிப்பது கடினமாகிவிட்டது, புணர்ச்சிப் பரவசநிலை கடினமாகிவிட்டது. வாழ்க்கையே இறுக்கமாகிப் போய்விட்டதால் நம்பிக்கை என்பது இல்லை. இதனால் மனிதன் மீண்டும் மீண்டும் கேட்கிறான். "எதற்காக வாழவேண்டும், ஏன் வாழ்க்கையைத் தொடரவேண்டும்" மேற்கு தற்கொலைக்கு மிக அருகில் உள்ளது. இந்தத் தற்கொலைத் தருணம் அருகே வந்து கொண்டேயிருக்கிறது.

நெகிழ்வதில் கிழக்கு ரொம்பவே வெற்றி கண்டுள்ளது. அது அதி சோம்பேறியாகிவிட்டது. மனிதர்கள் பட்டினி கிடந்தும், செத்துக்கொண்டும் இருக்கிறார்கள், அதில் மகிழ்ச்சி கொள்கிறார்கள், அதைப்பற்றிக் கவலை கொள்வதில்லை. அவர்கள் கடவுளின்மேல் நம்பிக்கை வைத்திருக்கின்றனர்.

எல்லாவிதமான அருவருப்பான சூழ்நிலைகளையும் ஏற்று, ஒத்துப்போகின்றனர். எதையும் மாற்றுவதில்லை. நன்றாகத் தூங்குபவர்கள், ஒரு விதமான சாந்தமும், நிறையமைதியும் உடைய

வர்கள், ஆனால் செடி கொடிபோல ஊக்க மற்ற வாழ்க்கை வாழ்வர். லட்சக்கணக்கானோர் கிழக்கத்திய நாடுகளில் பட்டினியால் இறக்கின்ற னர். அவர்களும் எதையும் செய்வதில்லை, வேறு எவரும் அதைப்பற்றிக் கவலை கொள்வதில்லை. "அது அல்லாவின் விருப்பமாக" இருக்கவேண்டும் போல.

இந்த சூஃபி சொல் வழக்கு மூன்றாவது வகை யான மனிதனை உருவாக்க விரும்புகிறது. அவன் உண்மையான மனிதன். அவனுக்கு எப்படிச் செய்ய வேண்டும் என்று தெரியும், எப்படிச் செய்யக்கூ டாது என்றும் தெரியும். தேவைப்படும்போது அவன் செயல்பட்டு 'ஆம்' என்று கூற முடியும். அவசியம் என்றால் 'இல்லை' என மறுத்துச் செயலற்றும் அவ னால் இருக்க முடியும். அவன் பகலில் முழுவது மாக விழித்திருந்து இரவில் பரிபூர்ணமாகத் தூங்கு வான். அவனுக்கு உள்ளும், வெளியும் சுவாசிக்கத் தெரியும், அவன் வாழ்க்கையின் சமச்சீரை அறி வான்.

> *அல்லாவின் மீது நம்பிக்கை வையுங்கள், ஆனால் முதலில் உங்கள் ஒட்டகத்தைக் கட்டி வையுங்கள்.*

இந்த சொல்வழக்கு ஒரு நொடிக் கதையிலிருந்து பிறந்தது.

குரு ஒருவர் தன் சீடனுடன் பயணம் செய்து கொண்டிருந்தார். ஒட்டகத்தை பராமரிப்பது சீட னின் வேலை. இரவில் ஒரு சத்திரத்திற்கு வந்து சேர்ந்தனர். ஒட்டகத்தைக் கட்டிப்போடுவது சீட னின் வேலையாகும். அவன் அதைப்பற்றி கவ

லைப்படாமல் ஒட்டகத்தை வெளியே விட்டுவிட்டு, 'கடவுளே ஒட்டகத்தைப் பார்த்துக்கொள்' என்று இறைவனிடம் பிரார்த்தனை செய்தான். அதன் பிறகு தூங்கிவிட்டான். மறுநாள் காலை ஒட்டகம் இல்லை. அது போய்விட்டது, அல்லது யாரோ திரு டிவிட்டனர், அல்லது என்னவோ நடந்துவிட்டது. 'ஒட்டகத்திற்கு என்ன ஆயிற்று, அது எங்கே?' என்று கேட்டார் குரு.

அதற்கு சீடன், "எனக்கு தெரியாது. கடவுளி டம் கேளுங்கள், நான் அல்லாவிடம் ஒட்டகத்தைப் பார்த்துக்கொள்ளச் சொன்னேன். நான் அசதி யாக இருந்தேன். அதனால் என்ன நடந்தது என்று எனக்குத் தெரியாது. நான் அதற்குப் பொறுப்பாக மாட்டேன், ஏனென்றால் நான் கடவுளிடம் மிகத் தெளிவாகச் சொன்னேன், புரியாமல் இருப்பதற்கு வழியே இல்லை. உண்மையில் நான் அவருக்கு மூன்று முறை சொன்னேன். நீங்கள் அல்லாவையே நம்புங்கள் என்று சொல்லிக் கொண்டே இருக்கி றீர்கள், அதனால் நான் அவரை நம்பினேன். இப் போது என்னைக் கோபத்தோடு பார்க்காதீர்கள்."

அதற்கு குரு, "அல்லாவின் மீது நம்பிக்கை வை, ஆனால் முதலில் உன் ஒட்டகத்தைக் கட்டிப்போடு. ஏனென்றால், உன் கைகளைத் தவிர அல்லா விற்கு வேறு இல்லை."

அல்லாவிற்கு ஒட்டகத்தைக் கட்ட வேண்டுமா னால் அவர் யாருடைய கைகளையாவது பயன் படுத்தியாக வேண்டும். அவருக்கு வேறு கைகள் இல்லை. மேலும் ஒட்டகம் உன்னுடையது! மிகச் சிறந்த வழி, எளிதான மிகவும் சுருக்கமான வழி

உன் கைகளைப் பயன்படுத்துவதே. அல்லாவை நம்பு, உன் கைகளை மட்டுமே நம்பாதே, இல்லையென்றால், மன இறுக்கம் கொள்வாய். கட்டிப் போட்டுவிட்டு, பிறகு அல்லாவை நம்பு. "கட்டிப் போட்ட பிறகு ஏன் அல்லாவை நம்ப வேண்டும்?" என்று கேட்பாய் - ஏனென்றால் கட்டப்பட்ட ஒட்டகம் திருட்டுப்போகலாம். உன்னால் முடிந்ததைச் செய், ஆனால் அது பலனை உறுதி செய்யாது, எந்தவித உத்தரவாதமும் இல்லை. அதனால் என்னவெல்லாம் முடியுமோ அதை நீ செய், அதன் பிறகு என்ன நடக்கிறதோ அதை ஏற்றுக்கொள். ஒட்டகத்தைக் கட்டிப்போடு என்பதின் பொருள் இதுதான். உன்னால் சாத்தியமானவற்றை எல்லாம் செய், பொறுப்பைத் தட்டிக் கழிக்காதே, அதன் பிறகும் ஒன்றும் நடக்கவில்லை என்றால், ஏதாவது தவறு ஏற்பட்டதென்றால், அல்லாவின் மேல் நம்பிக்கை கொள். எது நல்லது என்று அவர் அறிவார். அதன்பின் ஒட்டகமில்லாமல் நாம் பயணம் செய்வது ஒருவேளை சரியாக இருக்கலாம்.

அல்லாவின்மீது நம்பிக்கை வைத்து சோம்பேறியாக இருப்பது வெகு எளிது. அதேபோல் அல்லாவின்மீது நம்பிக்கையில்லாமல் செயல்படுபவராய் இருப்பதும் எளிது. மூன்றாவது வகை மனிதனாக இருப்பதே கடினம் - அல்லாவின்மீது நம்பிக்கை வைக்கும் அதே வேளையில், செயல்படுபவராகவும் இருப்பது. இப்போதைக்கு நீங்கள் கருவி மட்டுமே, கடவுள்தான் உண்மையாக செயல் புரிபவர், நீங்கள் அவர் கரங்களில் ஒரு கருவி மட்டுமே.

*மேலும் நீங்கள் கேட்பது: "எனக்கு இந்த சூஃபி பழமொழி பிடித்திருக்கிறது, ஆனால்*

*அந்த ஒட்டகம் யார் அல்லது என்னவென்று தான் தெரியவில்லை?"*

அது சூழலைப் பொறுத்தது. ஒட்டகம் என்பதின் உட்பொருள் இங்கே இருக்கும், ஆனால் சூழல் வேறுபடும். இது ஒவ்வொரு நாளும் நடக்கின்றது; நீங்கள் ஒன்றைச் செய்திருக்கலாம். ஆனால் செய் யவில்லை, கடவுள் இது நடந்திருக்க வேண்டும் என்று நினைத்தால் அவர் அதை எப்படியாயினும் நடத்திக் காட்டியிருப்பார் என்று சாக்குப் போக்குச் சொல்கிறீர்கள். நீங்கள் ஒன்றைச் செய்கிறீர்கள், அதற்கான பலனை எதிர்பார்த்துக் காத்திருக்கிறீர் கள், பலன் கிடைக்கவேயில்லை. ஏமாற்றப்பட்டாற் போல் கோபப்படுகின்றீர்கள், கடவுள்தான் உங்க ளைக் கைவிட்டாற்போல. அவர் உங்களுக்கு எதி ரானவர், பாரபட்சம் காட்டுபவர், எதிர்சார்பு மற்றும் நியாயமற்றவர் போல நினைக்கின்றீர்கள். உங்கள் மனதில் ஒரு பெரும் குறை எழுகின்றது, அப்போது நம்பிக்கை இல்லாமல் போகிறது.

சமயப் பற்றுடையவர் மனித முயற்சியால் ஆன வற்றை எல்லாம் செய்துகொண்டே இருப்பார், ஆனால் அதன் காரணமாக மன இறுக்கம் கொள் ளமாட்டார். ஏனென்றால் இந்தப் பிரபஞ்சத்தில் நாம் மிக மிகச் சிறிய அணுக்கள்தாம். விஷயங் கள் மிகவும் சிக்கலானவை. என் செயலை மட் டுமே சார்ந்து எதுவுமேயில்லை. குறுக்கும் நெடுக் குமாக ஆயிரக்கணக்கான சக்திகள் பாய்கின்றன. இந்தச் சக்திகளின் மொத்தம்தான் பலனை நிர்ண யிக்கின்றன. நான் எப்படிப் பலனை முடிவு செய்ய முடியும்? ஆனால் நான் எதுவுமே செய்யாவிட்டால் விஷயங்கள் அதேபோல் இருக்காது. நான் செயல்

படவேண்டும், ஆயினும் எதிர்பார்க்காமல் இருக்க நான் கற்றுக்கொள்ள வேண்டும். இப்படி செய்தால் செயல்புரிவது ஒரு வகையான பிரார்த்தனையா கும். இந்தப் பலன்தான் வேண்டும் என்ற ஆசை இல்லாத பிரார்த்தனையாகும். இதனால் ஏமாற்றம் என்பது இருக்காது. நம்பிக்கை உங்களை ஏமாற்ற மின்றி இருக்க உதவும், ஒட்டகத்தைக் கட்டிப்போ டுவதினால் நீங்கள் உயிராற்றலோடு, ஆழமான உயிராற்றலோடு இருக்க உதவும். மேலும் ஒட்டகம் ஒரு நிலையான வஸ்து அல்ல; அது ஒரு பொரு ளின் பெயர் அல்ல. அது சூழ்நிலையைப் பொறுத் தது. துரதிர்ஷ்டவசமாக பல மனிதர்களின் வாழ்க் கையில் இந்த உள்நோக்கம் வெளிப்படுகிறது. இரண்டு தொழில் அதிபர்கள் சந்தித்துக் கொண்ட னர்.

முதல் நபர்: பிரமாதம்! நீங்கள் சந்தையில் வியா பாரம் தொடங்கி ஆறே மாதம்தான் ஆகிறது, ஒரு மில்லியன் டாலர்கள் வைத்திருக்கின்றீர்களே? எப் படி இதைச் செய்தீர்கள்?

இரண்டாமவர்: 'ஆ' அதுவா; ரொம்ப எளிது, நான் இரண்டு மில்லியன் டாலர்களோடு தொழில் தொடங்கினேன்.

ஒட்டகம் என்பது நிலையான பொருள் அல்ல. நீங்கள் முழுச் சூழலையும் கவனிக்க வேண்டும், அது மாறிக்கொண்டேயிருக்கும். ஆனால் அந்த முதுமொழி அதிக மதிப்பு உடையது. அது மூன்றா வது வகை மனிதனை உருவாக்கும் சூஃபி வழிமு றையாகும்.

## ஆறாவது கேள்வி:

*கர்ம விதி என்பது என்ன?*

உண்மையில் அது ஒரு விதியல்ல, ஏனென்றால் அதற்குப் பின் நின்று விதிகளை நிர்ணயிப்பவர் எவருமில்லை. மாறாக, அது உளதாயிருத்தலோடு ஒன்றெனக் கலந்தது, வாழ்க்கையின் உயிர்க்கூறானது. அது வாழ்வின் இயல்பாகும். எதை விதைக்கின்றாயோ அதை அறுப்பாய். ஆனால் அது மிகவும் சிக்கலானது, அவ்வளவு எளிதானதல்ல, வெளிப்படையானதன்று.

இதை மேலும் தெளிவாக்கிக் கொள்ள உளவியல் ரீதியாக புரிந்துகொள்ள முயற்சி செய்யுங்கள். ஏனென்றால் இன்றைய நவீன மனம் எதையும் உளவியல் ரீதியாக விளக்கம் தந்தால்தான் புரிந்து கொள்கிறது. கடந்தகாலத்தில் கர்மவிதி பற்றிப் பேசப்பட்டபோது, புத்தர் மற்றும் மஹாவீரர் அதைப் பற்றிப் பேசும்போது இயற்பொருள் சார்ந்த ஒப்புமை விளக்கங்கள் அளிக்கப்பட்டன. அதிலிருந்து மனிதன் வெகுதூரம் வந்துவிட்டான். இப்பொழுது மனிதன் அதிகமாக உளவியல் சார்ந்து வாழ்கின்றான், அதனால் இந்த அணுகுமுறை உதவியாக இருக்கும்.

ஒருவருடைய இயல்பிற்கு எதிரான ஒவ்வொரு குற்றமும், நம் ஆழ் மனதில் பதிவாகின்றது. அதை பௌத்தர்கள் 'ஆலய விஞ்ஞான்' அதாவது உணர்வுகளின் களஞ்சியம் என்று அழைக்கின்றனர்.

அடுத்து குற்றம் என்பது என்ன? மனுவின் நீதி மன்றம் அதைக் குற்றம் என்று சொல்வதினால்

அல்ல, ஏனெனில் அந்த நீதிமன்றம் இப்போது பொருத்தமற்றது; மோசஸின் பத்துக் கட்டளைகள் அதைக் குற்றம் என்று சொன்னதினால் அல்ல. அவைகூட இன்று பொருத்தமானதல்ல. ஒரு குறிப்பிட்ட அரசாங்கம் அதைக் குற்றம் என்று கருதுவதால் அல்ல, காரணம் அவை மாறிக்கொண்டே இருக்கின்றன. ரஷ்யாவில் குற்றமெனக் கருதப்படுவது அமெரிக்காவில் குற்றமில்லை. ஹிந்துப் பாரம்பரியம் குற்றமென நினைப்பதை மொகமதிய வழிமுறை தவறாகக் கருதுவதில்லை. அப்படியானால் குற்றம் என்பது என்ன? அதற்கு எல்லாவற்றிற்கும் பொருந்துகிற பொது விளக்கம் தேவைப்படுகிறது.

என் விளக்கம்: எது உங்கள் இயல்பிற்கு மாறாக இருக்கிறதோ, எது உங்கள் சுயம், மெய்மைக்கு எதிராக இருக்கிறதோ அதுவே குற்றம். எப்படி இந்தக் குற்றத்தைத் தெரிந்து கொள்வது? எப்போதெல்லாம் நீங்கள் இந்தக் குற்றத்தைச் செய்கின்றீர்களோ, அது உங்கள் ஆழ்மனதில் பதிவாகின்றது. அது ஒரு குறிப்பிட்ட வகையில் பதிவாகிறது. அது பதிவான பின்பு உங்களுக்கு ஒரு குற்ற உணர்ச்சியைத் தரத் தொடங்குகிறது. உங்களை நீங்களே வெறுப்பதை உணர்வீர்கள். மதிப்பற்று உணர்வீர்கள். நீங்கள் எப்படி இருக்க விரும்புகிறீர்களோ அவ்வாறு இல்லை என்பதை உணர்வீர்கள். உங்களுக்குள் ஏதோ ஒன்று இறுகிப் போகிறது, உங்களுக்குள் ஏதோ ஒன்று மூடிக் கொள்கிறது. நீங்கள் முன்னர் இருந்த நீரோட்டையைப்போல் இப்போது இல்லை. ஏதோ ஒன்று உறுதிப்பட்டு உறைந்துவிட்டது. அது வலியைத் தருகிறது, தகுதியின்மை என்ற உணர்வை ஊட்டுகிறது.

இந்த ஆழ்மன அறிதல் மற்றும் நினைவுகூரல் விவரிக்க கரென் ஹார்னி ஒரு நல்ல பதத்தைப் பயன்படுத்துகிறார். அவர் சொல்வது, "இட் ரெஜிஸ்டர்ஸ்" - அதாவது "அது பதிவாகிறது" என்று பொருள்படும். 'அது பதிவாகிறது' - எனக்கு இது பிடித்திருக்கிறது. நீங்கள் செய்யும் எல்லாமே தானாகவே பதிவாகிவிடுகிறது. நீங்கள் நேசித்தால், அது நேசிப்பதாய் பதிவாகின்றது; அது உங்களுக்கு மதிப்புணர்வைத் தருகின்றது. நீங்கள் வெறுப்பு, கோபம், அழிவு, நேர்மையின்மை என்று இருந்தால், அது தகுதியற்ற உணர்வைத் தரும். மனித நிலைக்குக் கீழாக உணர்வீர்கள், ஒரு தாழ்வு மனப்பான்மை உண்டாகும். எப்போதெல்லாம் தகுதியற்று உணர்கின்றீர்களோ வாழ்க்கை நீரோட்டத்திலிருந்து தடைபட்டாற் போல் உணர்வீர்கள். நீங்கள் ஏதோ ஒன்றை மறைக்கும்போது, எப்படி உங்களால் மனிதர்களின் ஓட்டத்தோடு இணைந்துபோக முடியும்? உங்களை வெளிப்படுத்திக் கொண்டால்தான் ஓட்டம் சாத்தியமாகும். நீங்கள் கிடைப்பதற்குரியவர் எனில் முற்றிலும் கிடைப்பதற்குரியவர் என்கிறபோது ஓட்டம் சாத்தியப்படும்.

உங்கள் மனைவியை ஏமாற்றி வேறு ஒரு பெண்ணிடம் சினேகம் கொண்டிருந்தீர்களானால், உங்கள் மனைவியிடம் முழுமையாக ஈடுபட முடியாது. அது நடக்காத காரியம், ஏனென்றால் அது பதிவாகின்றது. ஆழ்மனதில் நீங்கள் நேர்மையற்று இருக்கிறீர்கள் என்பதை அறிவீர்கள், துரோகம் செய்கிறோம் என்று தெரியும், அதை மறைக்க வேண்டும், வெளிப்படுத்த முடியாது என்பதையும் ஆழ்மனதில்

அறிவீர்கள். உங்கள் அபிமானத்திற்கு உரியவரிட மிருந்து எதையாவது மறைக்க வேண்டுமென்றால், ஒரு இடைவெளி ஏற்படும். இரகசியம் பெரிதாக ஆக இடைவெளியும் விரிவடையும். அளவிற்கதி கமான இரகசியங்கள் என்றால், நீங்கள் முற்றிலும் மூடிய நிலையில் இருப்பீர்கள். இந்தப் பெண்ணு டன் உங்களால் நெகிழ்வாய் இருக்க முடியாது, அதேபோல் அந்தப் பெண்ணும் உங்களுடன் நெகிழ்வோடு இருக்க அனுமதிக்கமாட்டீர்கள். ஏனென்றால் உங்கள் இறுக்கம் அப்பெண்ணிடமும் தொற்றிக் கொள்ளும், அவளின் இறுக்கம் உங்க ளுக்கு மேலும் இறுக்கத்தை அளிக்கும், இப்படியே ஒரு முடிவற்ற சூழல் உருவாக்கப்படும்.

ஆம். அது நம் நூல்களில், நம் உயிர் உரு வில் பதிவாகும். நினைவிற் கொள்ளுங்கள் கட வுள் எந்த நூல்கணக்கையும் வைத்துக்கொள் வதில்லை; அது இந்த விஷயத்தைப் பழைய வகையில் சொல்வதாகும். உங்கள் உயிருருதான் நூல்! நீங்கள் என்னவாக இருக்கின்றீர்களோ, மற் றும் என்ன செய்கின்றீர்களோ அவையெல்லாம் தொடர்ந்து பதிவாகின்றன. யாரோ அவற்றை எழு திக் கொண்டிருக்கிறார்கள் என்றில்லை, அது ஒரு இயல் நிகழ்வு. நீங்கள் பொய் சொல்லியிருந்தால், பொய் சொல்வதாகப் பதிவாகும். இப்போது நீங் கள் அந்தப் பொய்யைக் காப்பாற்றும் பொருட்டு மேலும் ஆயிரம் பொய்களைச் சொல்ல வேண்டும், இப்படியே தொடர்ந்து பொய் சொல்லிக் கொண்டி ருப்பீர்கள். போகப்போக ஒரு தொடர் பொய்யராக உருவாகி விடுவீர்கள். மெய் என்பது உங்களுக்குச்

சாத்தியப்படாது, ஏனென்றால் இப்போது உண்மையைச் சொல்வது உங்களுக்கு ஆபத்தாகிவிடும்.

விஷயங்கள் எப்படி ஒன்று சேர்க்கின்றன என்பதைப் பாருங்கள்; நீங்கள் ஒரு பொய் சொன்னால் மேலும் பலவற்றை அழைக்கின்றீர்கள் - ஒரே வகையைச் சேர்ந்தவை ஒன்றை ஒன்று ஈர்க்கின்றன, இதனால் உண்மை வரவேற்கப்படுவதில்லை. பொய்களின் இருள், மெய்மையின் வெளிச்சத்தை விரும்புவதில்லை. ஆக உங்கள் பொய்கள் வெளிப்படும் அபாயம் இல்லையென்றால்கூட உங்களால் உண்மையைப் பேச முடியாது. நீங்கள் ஒரு உண்மையைப் பேசினால் மேலும் பல உண்மைகள் வரவேற்கப்படுகின்றன - ஒரே வகை ஈர்ப்பு. நீங்கள் இயல்பாகவே நேர்மையோடு இருந்தால், பொய் சொல்வது மிகவும் கடினமாக இருக்கும், ஒருமுறை சொல்வதுகூட. ஏனென்றால் எல்லா உண்மைகளும் சேர்ந்து உங்களைக் காப்பாற்றும். இது ஒரு இயல் நிகழ்ச்சி. எந்தக் கடவுளும் கணக்கு வைத்துக் கொள்வதில்லை. நீங்கள்தான் புத்தகம். நீங்கள்தான் கடவுள். உங்கள் உயிருருதான் நூலாகும்.

ஆபிரகாம் மோஸ்லோ சொல்வது: "நாம் அவமானப்படும் ஒரு விஷயத்தைச் செய்தோமானால் அது நமக்கு மதிப்புக்கேடாகப் பதிவாகின்றது. நாம் நன்மை செய்தோமானால் நன்மதிப்பாகப் பதிவாகின்றது." நீங்கள் இதைப்பார்க்க முடியும், கவனிக்க முடியும்.

கர்ம விதி என்பது ஏதோ ஒரு தத்துவம் அல்ல, அது மனக்கண் தோற்றமுமல்ல. அது உங்கள் உயி

ருருவுக்குள்ளே இருக்கும் ஏதோ ஒன்றைப் பற்றிய கருத்தியல் மெய்மை. இதன் நிகர பயன் என்னவென்றால், ஒன்று, நம்மை நாமே மதிக்கின்றோம் அல்லது வெறுக்கின்றோம். ஏளனமாய், மற்றும் நேசமற்றும் உணர்கின்றோம்.

ஒவ்வொரு கணத்தையும் நீங்களே உருவாக்கிக் கொள்கின்றீர்கள்; உங்கள் உயிருருவுக்குள் நயம் எழுகின்றது. அல்லது இகழ்வுணர்வு உருவாகின் றது, இதுவே கர்மவிதி. இதை யாராலும் தவிர்க்க இயலாது. கர்மவிதியை ஏமாற்ற எவரும் முயற்சிக் கக் கூடாது. ஏனென்றால் அது முடியாது. கவனி யுங்கள்... நீங்கள் அதைப் புரிந்து கொண்ட பிறகு, விஷயங்கள் மாறத் தொடங்கும். அதன் தவிர்க்க இயலாத தன்மையைத் தெரிந்துகொண்டால், நீங் கள் முற்றிலும் வேறு மனிதராய் இருப்பீர்கள்.

## இறுதிக் கேள்வி:

*'தீவிரம்' என்றால் என்ன?*

அது மிகவும் முக்கியமானது, காரணம் தீவிரத் தன்மையின் மூலமாகத்தான் ஒருவர் 'வீடுபேறு அடைய' முடியும். உங்களின் எல்லா ஆசைகள், வேட்கைகள் எல்லாம் சேர்ந்து ஒரு ஜோதியாய் உருவாகும்போது அது 'தீவிரம்' ஆகிறது. உங்க ளுக்குள் ஒன்றே ஒன்று மட்டும் எஞ்சியிருக்கும் போது, உங்கள் முழு உயிருருவும் அந்த ஒன்றை ஆதரிக்கும்போது அது 'தீவிரம்'.

தீவிரம் என்ற சொற்பதம் குறிப்பதுபோல அது முனைப்பியலானது. இதற்கு நேர் எதிரானது விரிவான அல்லது பரந்தகன்றது, நீங்கள் பரந்து இருக்

கின்றீர்கள், ஆயிரத்தொரு ஆசைகள் உள்ளன, பல கூறுகளாய் இருக்கும் ஆசைகள். ஒன்று வடக்கே போனால் மற்றொன்று தெற்கே போகும். நீங்கள் பிரித்து இழுக்கப்படுவீர்கள். நீங்கள் தனியாக இல்லை, நீங்கள் ஒரு கூட்டம். மேலும் நீங்கள் ஒரு கூட்டமாக இருக்கும்போது துயர் மிகுந்து இருப்பீர்கள். நீங்கள் ஒரு கூட்டாய் இருக்கையில், நிறைவை உணர மாட்டீர்கள். உங்களுக்கு எந்த மையமும் இருக்காது. 'தீவிரம்' என்பதின் பொருள் என்னவென்றால், உங்களுக்குள் ஒரு மையத்தை உருவாக்கிக் கொள்ளுவதாகும்.

முக்கியமான இரண்டு வார்த்தைகளைப் புரிந்துகொள்ள வேண்டும். ஒன்று ஆங்கிலத்தில் "சென்ட்ரிஃப்யுகல்" எனப்படும் விரிமையப்போக்கு, அதன் ஒரு மையத்திலிருந்து பொருட்கள் புறம் நோக்கிச் செல்வது, புறமுகமாக நோக்குவது என்று சொல்லலாம். வெவ்வேறு எடைச் செறிவுள்ள பொருள்கள் வேகச் சுழற்சியினால் எல்லாத் திசைகளிலும் பறப்பது. மனிதர்கள் இவ்வாறுதான் இருக்கின்றனர், விரிமையப் போக்குடன். மற்றொரு வார்த்தை 'சென்ட்ரிப்பிடல்' - அதாவது குவிமையப் போக்கு, எல்லாம் மையத்தை நோக்கி வருவது, எல்லாக் கூறுகளும் ஒன்று சேருகின்றன. முதல் வகையில் நீங்கள் பிரிந்து போகின்றீர்கள், ஒரு வகையான 'மையப் பிறழ்ச்சி'. இரண்டாம் வகையில் நீங்கள் ஒன்று கூடுகின்றீர்கள், ஒரு ஒன்றுசேர்தல் எழுகின்றது, மையமாகின்றீர்கள். குவிதல் ஏற்படுகின்றது, இதுவே தீவிரம் என்பதற்கான பொருள்.

சில சமயங்களில் ஏதோ ஒரு ஆபத்தில், இருண்ட இரவில் ஆபத்தை எதிர்கொண்டிருப்பீர்கள், அந்நேரத்தில் 'தீவிரம்' என்பதை உணர்ந்திருப்பீர்கள். திடீரென உங்கள் எண்ணங்கள் எல்லாம் மறைந்துபோகும், கூட்டம் கரைந்து ஒன்றென ஆகிவிடும். அந்தக் கணத்தில் நீங்கள் தனியொரு மனிதனாகி விடுவீர்கள். தனிமனிதன் என்பது பிரிக்க முடியாத ஒன்று என்று பொருள் கொள்ளலாம். நீங்கள் பிரிக்க முடியாத ஒன்றாக இருப்பீர்கள், ஒற்றைத் தன்மையுடன் இருப்பீர்கள் ஒரு கூட்டுக் குழுவாக இருக்க மாட்டீர்கள். உங்களை எதிர்நோக்கும் சாவு, இந்தத் தீவிரத்தை உருவாக்குகிறது.

இது சில சமயங்களில் காதலில் வெளிப்படும்... நீங்கள் காதலிக்கத் தொடங்குகிறீர்கள், அதில் ஒரு தீவிரம் தென்படும். மற்றவை எல்லாம் தேவையற்றதாகும், புற விஷயங்களாகிவிடும். உங்கள் இதயம் முழுவதும் காதல் மட்டுமே நிறைந்திருக்கும்.

இப்படிப்பட்ட தீவிரம் தியானத்தில் ஏற்பட்டால், அது உங்களைக் கடவுளிடம் இட்டுச் செல்லும், அல்லது இப்படிப்பட்ட தீவிரம் பிரார்த்தனையில் எழுந்தால் அது உங்களை இறைவனிடம் அழைத்துச் செல்லும்.

இன்று இது போதும்.

## முதல் கேள்வி

*முதிர்ச்சியோடு இருக்க வேண்டும் என்று ஒரு நாள் வலியுறுத்துகிறீர்கள். மற்றொரு நாள் "குழந்தை போல்" இருக்க வேண் டும் என்கிறீர்கள். நான் ஒரு முதிர்ச்சிய டைந்த மனப்பான்மையை ஏற்றுக் கொண் டுள்ளேன். என்னுள் இருக்கும் 'குழந்தை' அடக்கி வைக்கப்பட்டு வெளிப்பாட்டிற்காக ஏங்குகிறது. என் 'குழந்தையை' ஆட, பாட நான் அனுமதித்தால், கூடவே குழந்தைத் தனமான நடத்தைகளும், விருப்பப் பொரு ளோடு தொற்றிக்கொண்டு இருப்பதுபோல் வெளிவருகிறது. நான் என்ன செய்வது?*

பிரபு மாயா, முதிர்ச்சியோடு இருப்பது என்றால் முதிர்ச்சியான மனப்பான்மையை ஏற்றுக்கொள்வ தல்ல. உண்மையைச் சொல்வதானால் அப்படி ஒரு மனப்பான்மையை ஏற்றுக்கொள்வது முதிர்ச் சியடைவதற்கு மிகப்பெரிய தடைகளில் ஒன்றாக இருக்கும்.

ஏற்றுக்கொள்தல் என்றால் ஏதோ ஒன்று திணிக் கப்பட்டது என்று பொருள். ஏற்றுக்கொள்ளுதல் எனில் ஏதோ ஒன்று வளர்க்கப்படுகிறது, பயிற்சி பெறுவது என்று அர்த்தமாகும். அது உங்களிட மிருந்து எழும் ஒன்றல்ல. அது ஒரு முகமூடியா கும், வர்ணம் பூசப்பட்ட முகம்; அது உங்கள் உண்மையான உயிர் உருவல்ல. இதைத்தான்

எல்லோரும் செய்து கொண்டிருக்கிறார்கள். அதனால்தான் பூமியில் மனிதர்கள் தோற்றத்தில் மட்டுமே முதிர்ச்சி அடைந்து இருக்கிறார்கள், ஆனால் உண்மையில் இல்லை, அவர்கள் முழுவதும் முதிர்ச்சியின்றி உள்ளனர். அவர்கள் குழந்தைத் தனமாக இருக்கின்றனர். அவர்களின் முதிர்ச்சி மேம்போக்கானது. அந்த அளவுகூட இல்லை. எந்த மனிதனையும் சற்றே உராய்ந்து பார்த்தால் அவனுள் இருக்கும் குழந்தைத்தனம் வெளிப் படுவதைக் காண்பீர்கள். சாமானியர்கள் என்று அழைக்கப்படுபவர்கள் மட்டுமல்ல, உங்கள் சன் னியாசிகளை சற்றே உரசினாலும் முதிர்ச்சியின்மை எழுவதை நீங்கள் பார்க்கலாம். அல்லது உங்கள் அரசியல்வாதிகள் மற்றும் தலைவர்களை உரசிப் பாருங்கள், உலகில் உள்ள எந்தப் பாராளுமன் றத்தையும் போய் பாருங்கள், முதிர்ச்சியற்ற மற்றும் குழந்தைத்தனமான மக்கள் கூடியிருப்பதை வேறு எங்கும் உங்களால் பார்க்க முடியாது.

மனிதன் தொடர்ந்து தன்னையும் மற்றவர்களை யும் ஏமாற்றிக் கொண்டிருந்திருக்கிறான்.

ஏற்றுக்கொள்வதினால் நீங்கள் பொய்யானவராக, போலியானவராக இருப்பீர்கள். எதையும் ஏற்றுக் கொள்ள நான் சொன்னதில்லை. உளதாய் இருத் தல் வேண்டும்! ஏற்றுக் கொள்ளுதல் உளதாய் இருத்தலுக்குத் தடங்கலாய் விளங்கும். அதற்கான ஒரே வழி முதலிலிருந்தே தொடங்க வேண்டும். உங்கள் குழந்தைப் பருவத்தில் உங்கள் பெற்றோர் உங்களை அனுமதிக்க வில்லை என்பதால் நீங்க ளும் எங்கோ சிக்கிக் கொண்டிருக்கிறீர்கள்.

சாதாரண மனிதர்கள் என்று அழைக்கப்படுபவர் களின் மனவயது பத்திலிருந்து பதிமூன்று வயது வரைதான், பதின்நான்கைக்கூட எட்டாது! நீங்கள் எழுபது, எண்பது வயதைக் கடந்தவராக இருக்க லாம். ஆனால் உங்கள் 'மன வயது' நீங்கள் பாலி யல் ரீதியாக முதிர்ச்சி பெறாத பருவத்திற்கு முந் தைய வயதில் நிலையாய் இருக்கும். பதின்மூன்று, பதின்நான்கு வயதில் ஒரு மனிதன் பாலியல் முதிர்ச்சி பெற்ற தருணத்திலிருந்து அவன் என் றென்றிற்கும் அடைபட்டுப் போகிறான். அதன்பிறகு அவன் மேலும் மேலும் போலியாகின்றான். ஒரு பொய்யைக் காப்பாற்ற மேலும் பல பொய்மை கள் தேவைப்படுகின்றன. இதற்கு முடிவில்லாமல் போகின்றது. நீங்கள் வெறும் குப்பை கூளமாகிவி டுவீர்கள். அதுதான் ஒருவனின் ஆளுமை என்பது. இந்த ஆளுமை கைவிடப்பட வேண்டும். அப்போ துதான் தனித்தன்மை எழுகின்றது. இந்த இரண்டு சொற்களும் ஒரே விஷயத்தைக் குறிப்பதில்லை. ஆளுமை என்பது ஒரு காட்சிப் பெட்டிபோல, அது புறப் பகட்டு விளம்பரம். அது மெய்யானதல்ல.

தனித்தன்மை தான் உங்களின் மெய்மையாகும், அது காட்சிப் பொருளும் அல்ல. ஒருவர் உங் களை எவ்வளவு ஆழமாகச் சோதித்துப் பார்த்தா லும் அதே சுவையைக் காண்பார். புத்தர் சொன் னது: "நீங்கள் என்னை எங்கு வேண்டுமானாலும் ருசித்துப் பாருங்கள், அதே சுவையை உணர்வீர் கள், சமுத்திரத்தை எங்கு ருசித்துப் பார்த்தாலும் உப்புக் கரிப்பதைப் போல." தனித்தன்மை என்பது ஒரு முழுமை, அது உயிர்பொருட் கூறான ஒன்று. ஆனால் ஆளுமை என்பது முரண்மனதுடையது.

மையம் ஒரு வகை என்றால் சுற்றெல்லை வேறு வகையாக இருக்கும். இவை சந்திக்கவே செய் யாது, ஒன்றாக இருக்காது. அவை சந்திக்காதது மட்டுமல்ல, வேறுபட்டவை. ஒன்றிற்கொன்று நேர் எதிரானவை. எப்போதும் அவை சண்டையிட்டுக் கொண்டிருக்கும்.

ஆக, முதலில் புரிந்துகொள்ள வேண்டியது, ஒரு முதிர்ச்சி பெற்ற மனப்பான்மையை ஏற்றுக்கொள் ளாதீர்கள். ஒன்று முதிர்ச்சியோடு இருங்கள் அல் லது முதிர்ச்சியற்று இருங்கள். முதிர்ச்சியில்லை என்றால் அவ்வாறே இருங்கள். முதிர்ச்சியில்லாத வராக இருந்தால் வளர்ச்சிக்கு வழி இருக்கிறது. அதனால் முதிர்ச்சியின்மை இருக்கட்டும். பொய் யாக இருக்காதீர்கள், அதைப் பற்றி நேர்மை யின்றி இருக்காதீர்கள். நீங்கள் குழந்தைத்தனமாக இருக்கிறீர்கள் என்றால் நீங்கள் குழந்தைத்தனம் உள்ளவர். அதனால் என்ன? அவ்வாறே இருங்கள். அத்தோடு ஒத்துப்போகவும். உங்கள் உயிருருவில் ஒரு பிளவை ஏற்படுத்தாதீர்கள், இல்லையென் றால் அடிப்படையில் ஒரு மனநோயை உருவாக்கு கிறீர்கள். நீங்கள் நீங்களாக இருங்கள்.

குழந்தைத்தனத்தோடு இருப்பதில் தவறு ஒன் றுமில்லை. குழந்தைத்தனமாக இருப்பது தவறு என்று உங்களுக்கு கற்றுக் கொடுக்கப்பட்டதால், நீங்கள் 'மனப்பான்மைகளை' ஏற்றுக் கொள்ளத் தொடங்கி விட்டீர்கள். உங்கள் குழந்தைப் பரு வத்திலிருந்தே முதிர்ச்சியோடு இருக்க முயற்சி செய்து கொண்டிருக்கிறீர்கள். ஒரு குழந்தை எப் படி முதிர்ச்சியோடு இருக்க முடியும்? ஒரு குழந்தை

குழந்தைதான். அது குழந்தைத்தனத்தோடு தான் இருக்க வேண்டும்.

ஆனால் இதற்கு அனுமதியில்லை. சின்னக் குழந்தைகள்கூட ராஜதந்திரம் பழகுகின்றனர். பாசாங்கு செய்யத் தொடங்குகின்றனர். பொய் யான வகைகளில் நடக்கத் தொடங்குகின்றனர். தொடக்கத்திலிருந்தே அவர்கள் 'பொய்களாகின் றனர்'. அந்தப் பொய்களும் கூடவே வளர்கின்றன. பிறகு ஒரு நாள் நீங்கள் உண்மையைத் தொடுகின் றீர்கள், சாஸ்திரங்களைப் படிக்க வேண்டியுள்ளது. சாஸ்திரங்களில் அல்லது மத நூல்களில் உண் மையில்லை. உண்மை என்பது உங்களின் உயிரு ருவில் அடங்கியுள்ளது. அதுதான் உண்மையான சாஸ்திரம். வேதம், குரான், பைபிள் எல்லாமே - உங்கள் பிரக்ஞையில் அடங்கியுள்ளது! உங் களுக்குத் தேவையானவற்றை எல்லாம் நீங்கள் வைத்துக்கொண்டு இருக்கிறீர்கள். அது இறை வன் கொடுத்த பரிசு. எல்லோருமே உண்மையைத் தங்கள் உயிருருவில் தாங்கிப் பிறக்கின்றனர்; வாழ்க்கைதான் உண்மை. ஆனால் நீங்கள் பொய் களைக் கற்றுக்கொள்ளத் தொடங்கி விட்டீர்கள். என்னுடன் இருப்பதினால் பொய்கள் அனைத் தையும் விட்டுவிடுங்கள். துணிவோடு இருங்கள். நிச்சயமாக ஒரு பெரும் அச்சம் உங்களுக்குள் எழு வதை உணர்வீர்கள். இது ஏனென்றால் எப்பொழு தெல்லாம் உங்கள் ஆளுமையைக் கைவிடுகின் றீர்களோ அப்போதெல்லாம் இதுவரை அனுமதிக் கப்படாத உங்கள் குழந்தைத்தனம் வெளிப்படும். நீங்கள் அச்சம் கொள்வீர்கள். "என்ன! இந்தக் கட்டத்தில், நான் குழந்தைத்தனத்தோடு இருக்

கப்போகின்றேனா? எல்லோருக்கும் நான் ஒரு பேராசிரியர் அல்லது என்ஜினியர், டாக்டர் என்று தெரிந்து இருக்கையில் நான் குழந்தைத்தனமாக இருக்கப் போகிறேனா!" அந்தப் பயம் எழும் - பொதுமக்களின் கருத்துப் பற்றிய பயம், மக்கள் என்ன நினைப்பார்கள் என்ற பயம்.

இதே பயம்தான் உங்களை ஆரம்பத்திலிருந்தே அழித்துவிட்டது. இதே பயம்தான் நஞ்சாகிவிட்டது. "என் அம்மா என்ன நினைப்பார்? என் அப்பா என்ன நினைப்பார்? ஆசிரியர்கள், சமுதாயம் என்ன நினைக்கும்?" அந்தச் சின்னக் குழந்தை சாதுரியம் பழகத் தொடங்குகிறது - அது தன் இதயத்தை வெளிப்படுத்தாது, மற்றவர்கள் ஏற்றுக் கொள்ள மாட்டார்கள் என்று அதற்குத் தெரியும், அதனால் ஒரு முகத்திரையைப் போட்டுக் கொள்ளும். மனிதர்கள் பார்க்க விரும்புவதை அது காட்டும். இதுதான் ராஜதந்திரம், இதுதான் அரசியல், இதுவே நஞ்சு.

எல்லோரும், அரசியல் செய்கிறார்கள். நீங்கள் புன்னகை செய்யக் காரணம், அது பலன் தருவதாலேயே. நீங்கள் ஒரு குறிப்பிட்ட விஷயத்தைச் சொல்கிறீர்கள் என்றால், அது விஷயங்களை எளிதாக்குகின்றது என்பதற்காகவே. உங்கள் மனைவியிடம் "உன்னை நேசிக்கிறேன்" என்று கூறினால் அவள் வாய் திறக்கமாட்டாள். உங்கள் கணவரிடம், "நீங்கள் இல்லாமல் நான் இருக்கமாட்டேன், என் உலகே நீங்கள்தான், நீங்கள்தான் என் வாழ்க்கை" என்று நீங்கள் சொல்வதற்கு காரணம் நீங்கள் அப்படி உணர்வதால் அல்ல, நீங்கள் அப்படிச் சொல்லவேண்டும் என்று அவர் எதிர்பார்ப்பதுதான்.

நீங்கள் உண்மையிலேயே உணர்ந்தால், அதில் அழகு உள்ளது, அப்படியெனில் அது உண்மை யான ரோஜாதான். வெறுமனே பாசாங்கு செய்தால், அவர் அகங்காரத்திற்குத் தீனியிட்டுக் கொண்டி ருந்தால், அவர் மூலமாகக் காரியங்கள் நடக்க வேண்டும் என்பதற்காகச் சொன்னால் அது ஒரு செயற்கைப் பூ, ஒரு பிளாஸ்டிக் பூ மட்டுமே.

மேலும் நீங்கள் அளவிற்கதிகமான பிளாஸ்டிக்கி னால் பளு ஏற்றப்பட்டுள்ளீர்கள். உலகம் ஒரு பிரச் சினையே அல்ல. சமயவாதிகள் என்று அழைக் கப்படுபவர்கள், "உலகத்தைத் துறக்கவும்" என்று சொல்லிக் கொண்டே இருப்பார்கள். நான் சொல் கிறேன் உலகம் பிரச்சினை அல்ல. பொய்மை யைத் துறக்கவும், செயற்கையானதைத் துறக்க வும், அதுதான் பிரச்சினையே. உங்கள் குடும்பத் தைத் துறக்க வேண்டியதில்லை, ஆனால் நீங்கள் உருவாக்கிய பொய்மைக் குடும்பத்தைத் துறக்க வும் - உண்மையாக இருங்கள். சில சமயங்களில் உண்மையாக நம்பத்தகுந்த வகையில் இருப்பது வேதனை அளிக்கும். இது மலிவானதல்ல. பொய் யாக, நம்பகத்தன்மையில்லாமல் இருப்பது மலி வானது, வசதியானது, சௌகரியமானது. அது ஒரு தந்திரம், உங்களைக் காப்பாற்றிக்கொள்ள ஒரு யுக்தி, அது ஒரு கவசம். ஆனால் உங்கள் ஆன்மா வில் நீங்கள் சுமந்து கொண்டிருந்த மெய்மையைத் தவறவிடுவீர்கள். அதன்பிறகு கடவுள் என்பது என்ன என்பதை அறியமாட்டீர்கள், ஏனென்றால் கடவுளை உங்களுக்குள் தான் அறிய முடியும். முத லில் உள்ளே. அதன் பிறகு வெளியே. ஏனென்றால் அதுதான் உங்களுக்கு மிக அருகில் இருக்கிறது,

உங்களுடைய உயிருரு. நீங்கள் கடவுளைத் தவற விட்டால், உங்களால் எவ்வாறு கிருஷ்ணர், ஏசு மற்றும் புத்தருக்குள் கடவுளைக் காண முடியும்? எல்லாம் முட்டாள்தனம். உங்களுக்குள் இருக்கும் கடவுளை உங்களால் காண முடியவில்லை என்றால், கிருஷ்ணரில் இருக்கும் கடவுளைப் பார்க்க முடியாது. நீங்கள் தொடர்ந்து உங்களைச் சுற்றிப் பொய்களை உருவாக்கிக் கொண்டிருந்தால் உங்களுக்குள் இருக்கும் கடவுளை எப்படிப் பார்க்க முடியும்? அவ்வளவு அதிகமான பொய்கள் இருப்பதினால் உங்கள் உயிருரு நோக்கிப்போகும் பாதையைக் கூடக் கிட்டத்தட்ட மறந்து விட்டீர்கள். பொய்களின் காட்டில் நீங்கள் தொலைந்து போய்விட்டீர்கள்.

> "முதிர்ச்சியோடு இருக்க வேண்டும் என்று ஒரு நாள் வலியுறுத்துகிறீர்கள், மற்றொரு நாள் 'ஒரு குழந்தையைப் போல் இரு' என்று சொல்கிறீர்கள்."

இதில் முரண்பாடு இல்லை. வெறுமனே குழந்தையைப் போல் இருந்தால் நீங்கள் முதிர்ச்சியடைவீர்கள். அதுவே முதிர்ச்சியின் தொடக்கம். உங்கள் பெற்றோர் மற்றும் உங்கள் சமுதாயம் உங்களை அனுமதிக்கவில்லை.

சமுதாயத்தினால் உங்களுக்கு இழைக்கப்பட்ட தவறை ஈடுசெய்வதுதான் சன்னியாசம் என்ற முயற்சி. உங்களைச் சுற்றிச் சமுதாயம் உருவாக்கிய அனைத்தையும் அழிக்க வேண்டும். சன்னியாசம் ஒரு புரட்சி. அது ஒரு எதிரெழுச்சி, புனை வாழ்க்கை என்று அழைக்கப்படுவதற்கு எதிரான ஒரு அடங்காமை. உங்களைச் சுற்றி உள்ள போலி

மனிதர்களிடமிருந்து நீங்கள் விலகிப்போவீர்கள் என்றால் சன்னியாசம் ஆபத்தானது, இடர் நேர்வுகளுக்கு உகந்தது. நீங்கள் ஒரு பொருத்தமற்றவர் ஆகிவிடுவீர்கள். உங்களுக்குத் தொல்லைகள் இருக்கும். பொய்கள் மிகவும் வசதியானவை.

பொய்களில்லாமல் மனிதனால் வாழ முடியாது என்று சொல்லியிருக்கிறார் ஃபிரெட்ரிக் நீட்ஷே. தொண்ணூற்றி ஒன்பது சதவீத மனிதர்களுக்கு அவர் சொல்வது சரியாகும். மனிதன் ஏன் பொய்களின்றி வாழ முடியாது? - ஏனென்றால் பொய்கள் 'அடிதாங்கியாக' அதிர்ச்சி - உறிஞ்சிகளாகச் செயல்படுகின்றன. மற்றவர்களிடம் மோதாமல், உராய்வின்றி இருக்க உதவும் மசகுப் பொருளாக பொய்கள் செயலாற்றுகின்றன. நீங்கள் புன்னகை செய்கின்றீர்கள், மற்றவர்கள் மறுமொழியாக புன்னகைக்கின்றனர். இது மசகு எண்ணெய் போன்றது. உங்களுக்குள் கோபம் இருக்கும். ஆனால் உங்கள் மனைவியிடம் "நான் உன்னை நேசிக்கின்றேன்" என்று தொடர்ந்து சொல்லிக்கொண்டே இருப்பீர்கள். கோபத்தை வெளிப்படுத்துவது பிரச்சினையில் கொண்டுவிடும்.

ஆனால் நினைவில் கொள்ளுங்கள். உங்களால் கோபத்தை வெளிப்படுத்த முடிந்தால்தான் உங்களால் நேசத்தை வெளிப்படுத்த தெரியும். கோபப்படாத மனிதனால் நேசிக்கவும் முடியாது. ஏனென்றால், அவன் கோபத்தை அந்த அளவிற்குக் கட்டுப்படுத்த வேண்டியதால் வேறு எதையுமே வெளிக்காட்ட முடியாமல் போகின்றான் - ஏனென்றால் எல்லா விஷயங்களுமே உங்களுக்குள் ஒன்றாக இணைந்து இருக்கின்றன. அவை வெவ்

வேறாக இல்லை. கோபம் மற்றும் நேசத்திற்கும் இடையே தனித்தனிப் பிரிவுகள் இல்லை, எல்லாம் ஒன்றாக இருக்கின்றன, ஒன்றோடு ஒன்று கலந்து இருக்கின்றன. கோபத்தை நீங்கள் அடக்கி விட்டால் நேசத்தையும் அடக்கி வைக்க வேண்டியிருக்கும். நீங்கள் நேசத்தை வெளிப்படுத்தும்போது ஆச்சரியப்படும் வகையில் அத்தோடு சேர்ந்து கோபமும் வருவதைக் காணலாம். ஒன்று எல்லாவற்றையும் வெளிப்படுத்தவும், அல்லது எல்லாவற்றையும் அடக்கி வைக்கவும். உங்கள் உள்-உயிருருவின் ஒற்றுமையை நீங்கள் புரிந்துகொள்ள வேண்டும். கோபத்தை அடக்கி நேசத்தை மட்டும் வெளிப்படுத்தும் தேர்வு இல்லை; அப்படியென்றால் உங்கள் நேசம் பொய்யாக இருக்கும். ஏனென்றால் அதில் வெப்பம் இருக்காது; அதில் நேசத்தின் வெதுவெதுப்பு தெரியாது. அது வெறும் போலி நடைப்பாங்கு, ஒரு மென்மையான இயல்பு நிகழ்வு, நீங்கள் அதில் ஆழமாக உள்ளே போக எப்போதும் பயப்படுவீர்கள்.

மனிதர்கள் நேசிப்பதாகப் பாசாங்கு செய்வார்கள், ஏனென்றால் நேசிக்க வேண்டும் என்று அவர்களிடம் எதிர்பார்க்கப்படுகின்றது. அவர்கள் தங்கள் குழந்தைகளை நேசிக்கின்றனர், மனைவி அல்லது தலைவனை நேசிக்கின்றனர். அல்லது நண்பர்களை நேசிக்கின்றனர். காரணம் என்னவென்றால் சில விஷயங்களை அவர்கள் செய்ய வேண்டும் என்ற எதிர்பார்ப்பு இருக்கிறது. இந்தச் செயல்களை ஏதோ தங்கள் கடமைகள்போல் அவர்கள் நிறைவேற்றுகின்றனர். அதில் ஒரு கொண்டாட்டம் இல்லை. வீட்டிற்குத் திரும்பும்போது குழந்தையின்

தலையில் தட்டுகிறீர்கள், ஏனென்றால் அது எதிர் பார்க்கப்படுகின்றது, அது செய்யவேண்டிய விஷ யம் என்பதற்காக, அதில் ஒரு மகிழ்ச்சியில்லை, அது விறைத்துப்போனது, உயிரற்றது. உங்கள் குழந்தைக்கு என்றுமே உங்களை மன்னிக்க முடி யாது, ஏனென்றால் பாசமற்ற அந்த ஷொட்டு அரு வருப்பானது.

குழந்தை இதனால் சங்கடப்படுகின்றது, நீங்க ளும் சங்கட உணர்வு கொள்கிறீர்கள்.

நீங்கள் உங்களுக்குரியவரோடு கூடலில் ஈடு படுகின்றீர்கள். ஆனால் அதிலும் முழுமையா கப் போவதில்லை. அது உங்களை உண்மை யில் வெகுதூரம் இட்டுச் செல்லமுடியும். இறு திப் பேரின்ப நிலைக்கு இட்டுச் செல்ல முடி யும், அதில் நீங்கள் கரைந்துபோகலாம். ஆனால் உங்கள் கோபத்தை நீங்கள் அனுமதிக்காதபோது, உங்கள் கோபத்தில் நீங்கள் கரைந்து போகாத போது எவ்வாறு நேசம் உங்களைக் கரைக்க அனு மதிக்கப்போகிறீர்கள்? இது பல முறை நடந்துள் ளது. ஒரு காதலன் தன் காதலியைக் கொன் றுவிட்டான் என்பதைக் கேட்டால் நீங்கள் ஆச்ச ரியப்படுவீர்கள், இதற்குக் காரணம் அவன் தன் காதலை, நேசத்தை முழுமையாக அனுமதிக்கா தததுதான், இதனால் திடீரெனக் கோபம் எழுகின் றது. பலமுறை காதலன் தன் தனக்குரியவளைக் கொன்றுவிடுவது நன்கு அறிந்த விஷயம், அவளை மூச்சுத்திணற வைக்கிறான். அவன் கொலைகா ரன் இல்லை, சமுதாயம்தான் இதற்குக் காரணம். அவன் வெறுமனே துணிந்து கூடலில் வெகு ஆழ மாகப் போய்விடுகிறான். நீங்கள் எதிலும் வெகு

ஆழமாகப் போகையில் நீங்கள் கட்டற்றுப் போய் விடுவீர்கள். காரணம் உங்கள் பண்பாடு என்பது மேலோட்டமானது. கோபம் எழுகின்றது. அதன் பிறகு உங்களுக்குள் மறைந்து கிடப்பது எல்லாம் எழுகின்றது, நீங்கள் கிட்டத்தட்ட பைத்தியமாகிறீர் கள்.

இந்தப் பைத்தியக்காரத்தனத்தைத் தவிர்க்க நீங் கள் மேலோட்டமான கூடலில் ஈடுபடுகிறீர்கள். ஆம், 'இது வெறும் தும்மல் போன்றது' என்று மனிதர்கள் சொல்வது சரிதான்; அது இறுக்கத் தைப் போக்குவிக்கின்றது, உங்கள்மீது பாரமா கிக்கொண்டிருந்த குறிப்பிட்ட சக்தியை விடுவிக் கின்றது. ஆனால் நேசத்தைப் பற்றிய உண்மை யான காட்சி இதுவல்ல. கூடல் என்பது மெய் மறந்த மகிழ்ச்சி. ஆனந்தப் பரவசமாக இருக்க வேண்டும், தும்மலைப் போன்று இருக்கக்கூடாது. வெறும் விடுபாடாக இருக்கக்கூடாது. அது அறித லாக இருக்க வேண்டும், ஒரு வீடுபேறாக இருக் கவேண்டும். கூடலை, நேசத்தை ஒரு ஆனந்தப் பரவசமாக, வீடுபேறாக, சமாதிநிலையாக நீங்கள் அறியவில்லை என்றால் நீங்கள் நேசத்தை அறிந்து இருக்கவில்லை. ஆனால் இது நீங்கள் போலியாக இல்லை என்றால் மட்டுமே சாத்தியம், நீங்கள் எல் லாவற்றிலும் நம்பத்தக்க வகையில் இருந்தீர்கள் என்றால், நீங்கள் கோபத்தை அனுமதித்து இருந் தீர்களானால், சிரிப்பு, கண்ணீர் என எல்லாவற்றை யும் அனுமதித்து இருந்தீர்களானால், நீங்கள் என் றும் ஒரு தடுக்கும் சக்தியாக இருந்ததில்லை என் றால், கட்டுப்பாடுகளை விதிக்கவில்லையென் றால், விதிகளற்ற வாழ்க்கை வாழ்ந்து உள்ளீர்கள்

என்றால் அந்த உண்மையான நேசம், கூடல் சாத்தியமாகிறது. அதே சமயத்தில் நினைவிற்கொள்ளுங்கள், நான் கட்டுப்பாடுகளற்ற வாழ்க்கை என்று சொல்லும்போது, நான் கட்டற்ற, மிகு சிற்றின்பப் பற்றுள்ள வாழ்க்கை முறையைக் குறிப்பிடவில்லை. கட்டுப்பாடுகளற்ற வாழ்க்கை மிகுந்த நெறியுடையதாய் இருக்க முடியும். ஆனால் இந்த நெறிமுறைகள் வெளியிலிருந்து திணிக்கப்படுவதில்லை. அது ஏற்றுக்கொள்ளப்பட்ட மனப்பான்மையல்ல. கட்டுப்பாடுகள் உங்கள் சொந்த உள் அனுபவங்களிலிருந்து வரக்கூடியவை. உங்கள் உயிர் உரு எதிர்கொள்ளும் எல்லாச் சாத்தியக் கூறுகளிலிருந்தும் அது வரும். எல்லா அம்சங்களையும் அனுபவிக்கும்போது வரக்கூடியது. அது அனைத்துப் பரிமாணங்களையும் ஆராய்வதின் மூலம் அமையக் கூடியது. அது புரிதலின் அடிப்படையில் வருவது. நீங்கள் கோபத்தில் இருக்கிறீர்கள், அதில் ஏதோ ஒன்றைப் புரிந்து கொள்கிறீர்கள். அந்தப் புரிதல் ஒரு நெறிமுறையைத் தருகின்றது. அது கட்டுப்பாடு என்பது இல்லை. கட்டுப்பாடு அசிங்கமானது, நெறிமுறை அழகானது.

'டிசிப்பிளின்' என்ற ஆங்கிலச் சொல் நெறிமுறையை, ஒழுங்கு முறையைக் குறிக்கின்றது. இந்த மூலச் சொல்லிலிருந்து வந்ததுதான் 'டிசைபிள்' அதாவது சீடன் என்று அர்த்தம். அது கட்டுப்பாடில்லை. அதனால் 'டிசிப்பிளின்' என்றால் கற்றுக் கொள்ளும் திறன் இருக்கிறது என்று பொருளாகிறது. ஒழுக்க முறையோடு இருக்கும் ஒரு மனிதன் தன் வாழ்க்கை அனுபவங்கள் மூலம் தொடர்ந்து கற்றுக்கொண்டேயிருக்கிறான். எல்லாவற்றிலும்

துணிவோடு இறங்கும் மனிதன், அவன் இடர்க ளைக் கண்டு அஞ்சுவதில்லை. புத்தாய்வு செய் பவன், வீரதீரங்களில் ஈடுபடுபவன், எப்போதும் இருண்ட அறியாத பகுதிகளில் பிரவேசிக்கத் தயங் காதவன். அம் மனிதன் எப்போதும் சாக்கடையில் விழத் தயாரானவன், மற்றவர்களின் நகைப்பிற்குத் தயாரானவன். 'முட்டாள்' என்று அழைக்கப்படுவ தைத் துணிவுடன் ஏற்கத்தக்க மனிதர்களே வாழ, நேசிக்க, அறிய மற்றும் உளதாயிருக்கத் தகுதியா னவர்கள்.

முதிர்ச்சி என்பது மேலும் மேலும் ஆழமான வாழ்க்கை அனுபவங்களினால் வரக்கூடிய ஒன்று, வாழ்க்கையைத் தவிர்ப்பதினால் வருவதன்று. வாழ்க்கையைத் தவிர்ப்பதினால் நீங்கள் குழந் தைத்தனமாகவே இருப்பீர்கள்.

மேலும் ஒரு விஷயம்: நான் குழந்தையைப்போல் இருங்கள் என்று சொல்லும்போது, குழந்தைத்த னம் என்ற பொருளில் சொல்லவில்லை.

ஒரு குழந்தை குழந்தைத்தனத்தோடு இருக்க வேண்டும், இல்லை என்றால் அது தன் குழந்தைப் பருவ அனுபவங்களை இழக்க நேரிடும். ஆனால் நீங்கள் இளைஞரோ அல்லது வயதானவரோ, குழந்தைத்தனம் என்பது நீங்கள் வளரவில்லை என்பதைக் காட்டுகிறது. குழந்தைபோல் இருப்பது என்பது முற்றிலும் வேறு ஒன்று. அது எதைக் குறிக் கின்றது?

ஏசு பலமுறை கூறுவது: "நீங்கள் ஒரு குழந் தைபோல் இல்லாவிட்டால் கடவுளின் ராஜ்ஜியத் திற்குள் நுழையமுடியாது." ஆதலினால் நானும்

உங்களிடம் கூறுகிறேன்: "நீங்கள் குழந்தை போல் இல்லாவிட்டால் என் கடவுளின் ராஜ்ஜி யத்திற்குள் நுழைய முடியாது." அவர் "குழந்தை போல்" என்று எந்த அர்த்தத்தில் சொல்கிறார்? அவர் பலவற்றைக் குறிப்பிடுகிறார். முதலில் ஒரு குழந்தை எப்போதும் முழுமையோடு இருக்கிறது. குழந்தை என்ன செய்தாலும், அதில் முற்றிலும் மூழ்கி விடுகிறது, அது எப்போதும் பகுதியளவாய் இருப்பதில்லை. அது கடற்கரையில் சிப்பிகளைப் பொறுக்கிக் கொண்டிருந்தால் மற்றவை எல்லாம் அதன் நினைவிலிருந்து அகன்று விடுகின்றது. அதன் கருத்தெல்லாம் கடற்கரையில் கிடக்கும் சிப்பிகள் மட்டுமே. அதிலேயே ஆழ்ந்துபோகிறது. அதிலேயே தன்னை இழக்கின்றது. குழந்தையாய் இருப்பதற்கு இந்த 'முழுமைப் பண்பு' ஒரு அடிப்ப டைத் தேவையாகும். இதுதான் ஒரு அடிப்படைத் தேவையாகும். இதுதான் ஒருமுகப்பு, இதுதான் தீவிரம், இதுவே முழுமைத்தன்மை.

இரண்டாவதாக, குழந்தை வெகுளியானது, மாசற்றது. அறியாநிலையிலிருந்து குழந்தை செயல்படுகின்றது. அது அறிவுநிலையிலிருந்து செயல்படுவதில்லை, ஏனென்றால் குழந்தைக்கு அது இல்லை.

நீங்கள் எப்போதும் அறிவைக் கொண்டு செயல் புரிகின்றீர்கள். அறிவு என்பது கடந்த காலம், அறிவு என்பது பழையது மற்றும் சொல்லப் பட்டது, மற் றும் சேகரிக்கப்பட்டது. ஒவ்வொரு புதிய சூழ்நிலை யும் புதியது. அதற்கு எந்த அறிவும் பொருந்தாது. நான் இங்கே பொறியியல் அல்லது தொழில்நுட்பம் பற்றிப் பேசவில்லை. அங்கே பழையது பொருந்

தும், ஏனென்றால் ஒரு இயந்திரம் இயந்திரம்தான். ஆனால் நீங்கள் ஒரு மனிதச் சூழலில் பழகும் போது, உயிருள்ளவர்களோடு தொடர்பு கொள் ளும்போது எந்தச் சூழ்நிலையும் மற்றதைப்போல் இருப்பதில்லை. ஒவ்வொரு சூழ்நிலையும் தனித் தன்மை வாய்ந்தது. நீங்கள் சரியான முறையில் செயல்பட வேண்டும் என்று விரும்பினால் நீங்கள் ஒரு குழந்தையைப் போலவே அறியா நிலையி லிருந்து செயல்பட வேண்டும். உங்கள் அறிவை அதில் கொண்டு வராதீர்கள், அறிவு எல்லாவற் றையும் மறந்துவிடுங்கள். புதியதிற்கு புதிதாக எதிர் வினையாற்றுங்கள். புதியதிற்கு பழையதிலிருந்து எதிர்வினையாற்றாதீர்கள், பழையதிலிருந்து பதில் சொன்னால் நீங்கள் தவற விடுவீர்கள். உங்க ளுக்கும் உங்களைச் சுற்றி நடப்பவற்றிற்கும் ஒரு பாலம் இருக்காது. நீங்கள் எப்போதும் தாமதமா கப் போவீர்கள், எப்போதும் ரயிலைத் தவறவிட்டுக் கொண்டேயிருப்பீர்கள்.

ஆனந்த் மைத்ரேயன் மீண்டும் மீண்டும் ஒரு ரயி லைப் பற்றிக் கனவு கண்டுகொண்டேயிருப்பார், எப்போதும் அதைத் தவறவிடுவார். ஓடோடி ரயில் நிலையத்திற்கு வந்து சேருகிறார், ரயில் போய்க் கொண்டிருக்கிறது.

இது மைத்ரேயனின் கனவு மட்டுமல்ல, இது லட் சக்கணக்கானோர் காணும் கனவு. இது வழக்க மாக வரும் கனவுகளில் ஒன்று. பூமியில் வாழும் கோடிக்கணக்கான மனிதர்களுக்கு ஏன் மீண்டும் மீண்டும் இந்தக் கனவு வருகிறது. அவர்கள் வாழ்க் கையை இழந்துகொண்டிருக்கிறார்கள். அவர்கள் எப்போதும் தாமதமாக வருகிறார்கள். ஒரு இடை

வெளி இருக்கிறது. முயற்சி செய்கின்றனர், ஆனால் பாலம் கட்டப்படுவதேயில்லை. அவர்களால் உறவு கொண்டாட முடியவில்லை, அவர்களால் எதிலும் இறங்க முடிவதில்லை. ஏதோ ஒன்று தடுக்கின்றது. அது என்ன? அறிவுதான் தடையாய் இருக்கிறது.

நான் உங்களுக்கு அறியாமையை ஒரு குழந்தைபோல் இருங்கள் என்று சொல்வது, எப்போதும் கற்றுக்கொண்டே இருங்கள் என்ற அர்த்தத்தில் சொல்கிறேன். என்றும் அறிவார்ந்த நிலையை அடைந்து விடாதீர்கள். கற்றுக்கொண்டேயிருங்கள். கற்பது முற்றிலும் வேறானது. அறிவு இறந்து போன ஒன்று, கற்றல் உயிருள்ள வழிமுறை. கற்றுக்கொள்பவர் இதை நினைவில் வைத்துக்கொள்ள வேண்டும். அறிவு என்ற நிலைப்பாட்டிலிருந்து அவர் செயல்பட முடியாது.

நீங்கள் கவனித்தது இல்லையா? சிறு குழந்தைகள் வேகமாகக் கற்றுக்கொள்வர். பன்மொழி பேசும் சூழலில் ஒரு குழந்தை வாழுமானால் அது எல்லா மொழிகளையும் கற்றுக்கொள்கிறது. அதன் தாய் பேசும், தந்தை பேசும், மற்றும் அண்டை வீட்டார் பேசும் மொழிகளனைத்தையும் கற்றுக் கொள்கிறது. வெகு எளிதாக நான்கு ஐந்து மொழிகளை எந்தப் பிரச்சினையும் இல்லாமல் பேசக் கற்றுக் கொள்கிறது. நீங்கள் ஒரு மொழியைக் கற்றுக்கொண்டீர்களானால் வேறு ஒரு மொழியைக் கற்பது கடினமாகிறது. ஏனென்றால் இப்போது நீங்கள் அறிவு மதி நிலையில் இருந்து செயல்படத் தொடங்குகிறீர்கள்.

கிழட்டு நாய்க்குப் புதிய தந்திரங்களைக் கற்றுக் கொடுக்க முடியாது என்று சொல்வார்கள். ஆனால் ஒரு நாயை எது வயதானதாக்குகிறது? தேக ரீதி யான வயதல்ல. ஏனென்றால் ஒரு சாக்ரடீசால் இறு திவரை கற்றுக்கொண்டே இருக்க முடிகிறது, புத் தர் இறுதி வரை கற்றுக்கொண்டிருந்தார். எது ஒரு நாய்க்கு வயதைக் கொடுக்கின்றது? அறிவுதான் நாயை வயதானதாக்குகிறது.

புத்தர் இளமையாக இருக்கிறார், கிருஷ்ணர் இளமையாக இருக்கிறார். புத்தரை வயதானவரா கக் காட்டும் ஒரு சிலை கூட நம்மிடம் இல்லை. அல்லது வயதான கிருஷ்ணன் உருவம் இல்லை. அவர்களுக்கு வயதாகவே இல்லை என்று அர்த்த மில்லை. கிருஷ்ணர் எண்பது வயதுவரை வாழ்ந் தார், மிகவும் வயதடைந்தார், ஆனால் அவருக் குள் ஏதோ ஒன்று எப்போதும் இளமையாகவே இருந்தது. ஒரு குழந்தையைப்போல் இருந்தது. அவர் அறியாநிலையிலிருந்து தொடர்ந்து செய லாற்றினார். ஆக முதலில், நான் ஒரு குழந்தை போல் இருங்கள் என்றால் முழுவதுமாக இருக்க வும் என்று பொருள்படச் சொல்கிறேன்.

இரண்டாவதாக, கற்றுக்கொள்பவராக இருங்கள், அறியாநிலையிலிருந்து செயல்படுங்கள். அதுதான் மாசற்ற நிலை.

மூன்றாவதாக, நம்பிக்கை எனும் பண்பு குழந் தையிடம் இயற்கையாகவே உள்ளது, இல்லை யென்றால் குழந்தை உயிர்வாழ முடியாது. குழந்தை பிறந்ததும் அது தன் தாயை நம்புகிறது, பாலை நம்புகிறது, பால் தனக்கு சக்தி தரும் என்று நம்

புகிறது. எல்லாமே சரிதான் என்று நம்புகிறது. அதன் நம்பிக்கை முழுமையானது. எதைப்பற்றியும் அதற்குச் சந்தேகம் இல்லை. அது எதற்கும் அஞ்சுவதில்லை. குழந்தையின் அம்மாவிற்குதான் பயம், ஏனென்றால் அது பாம்புடன்கூட விளையாடப் போய்விடும், தீயிற்குள் கையை விடும். அதன் நம்பிக்கை அந்த அளவிற்கு இருப்பதனால், அது பயமறியாது. சந்தேகம் கொள்ளாது, இது மூன்றாவது குணமாகும்.

நீங்கள் நம்பிக்கை என்பது என்ன என்று அறிந்து கொண்டால், நம்பிக்கையின் வழிமுறைகளை மீண்டும் கற்றுக்கொண்டால் மட்டுமே கடவுள் என்பது என்ன என்று அறியமுடியும். அப்போதுதான் உண்மையை உணர முடியும், இது புரிந்துகொள்ள வேண்டிய ஒன்று.

அறிவியல் சந்தேகத்தை நம்பியிருக்கிறது. அதனால்தான் முழுக் கல்வியுமே சந்தேகத்தின் கல்வியாகிவிட்டது. அறிவியல் சந்தேகம் இல்லாமல் வளரமுடியாது. சமயம் நம்பிக்கையைச் சார்ந்து இருக்கிறது, நம்பிக்கையில்லாமல் சமயமில்லை. இவை இரண்டும் நேர் எதிர் எதிரானவை.

நினைவிருக்கட்டும், அறிவியல் சார்ந்த வேலையில் நீங்கள் நம்பிக்கையைப் புகுத்தினால் கருத்தைத் தவறவிடுவீர்கள். உங்களுக்கு எதுவும் கிடைக்காது, எதையும் கண்டுபிடிக்க முடியாது. அங்கே சந்தேகமே வழிமுறையாகும். நீங்கள் சந்தேகம், சந்தேகமென ஏதாவது தட்டுப்படும் வரை தொடர்ந்து சந்தேகப்பட்டுக் கொண்டேயிருக்க வேண்டும். அந்த விஷயம் சந்தேகத்திற்கு

அப்பாற்பட்டதாக இருக்க வேண்டும், ஐயத்திற்கு இடமற்றதாக இருக்க வேண்டும். பிறகு ஒரு உத வியற்ற நிலையில் நீங்கள் ஏற்றுக்கொள்ள வேண் டும், அப்பொழுதும்கூட, ஒருவேளை நாளை புதிய விவரங்கள் தெரியவரலாம். அப்போதுமே முழுவ தையும் கைவிட வேண்டிவரும் என்ற சந்தேகக் கீற்று இருக்கும். அது தற்பொழுதிற்கு மட்டுமே, அறிவியல் இறுதியான உண்மைக்கு என்றுமே வரு வதில்லை, தோராயமான, தேர்வுமுறையான உண் மைக்கு அருகேதான் வரமுடியும்.

இப்பொழுதிற்கு உண்மை என்று ஏற்றுக்கொள் ளப்படும். ஏனென்றால், நாளையே ஆராய்ச்சியா ளர்கள் புதிய விவரங்களை, புதிய தகவல்களைக் கண்டுபிடிப்பர். யார் அறிவார்? ஆகவே அறிவிய லானது தேர்வு முறை அல்லது புனைவுகோளுக்கு வந்து சேர்கிறது. நியூட்டன் கண்டுபிடித்தது ஐன்ஸ் டீனால் தூக்கி எறியப்பட்டது, இவர் கண்டுபிடித்தது வேறு ஒருவரால் தூக்கி எறியப்படும். அறிவியலில் சந்தேகமே வழிமுறை. நம்பிக்கை இங்கே தேவை யில்லை. சந்தேகத்திற்கு வழியில்லை என்கின்ற போது மட்டுமே நம்பிக்கை வைக்க முடியும். அது வும் தற்காலிகமாக, ஒரு வகையான ஆற்றாமை யின் காரணமாக. நீங்கள் என்ன செய்ய முடியும்? ஏனென்றால் சந்தேகத்திற்கு வழியில்லை. எல் லாத்திசையிலும் பார்த்தாகிவிட்டது, சந்தேகங்கள் கரைந்துவிட்டன. ஒரு வகையான நிச்சயத்தன்மை எழுகின்றது.

சமயம் என்பது இதற்கு நேர் எதிரான பரிமாணம். அறிவியலில் சந்தேகம் எப்படி ஒரு வழிமுறையோ, சமயத்தில் நம்பிக்கைதான் வழிமுறை. நம்பிக்கை

என்றால் என்ன? நாம் வாழ்க்கை அல்லது உலக முழுமையிலிருந்து தனித்து இருப்பதில்லை. நாம் அதில் ஒரு பகுதி, அதுவே நம் வீடு. நாம் அதைச் சேர்ந்தவர், அது நம்மைச் சேர்ந்தது, நாம் வீடற்றவர் இல்லை. இந்தப் பிரபஞ்சம் ஒரு தாய்மை உணர்வுள்ள பிரபஞ்சம்! தேவை ஏற்படும்போது தன் தாய் கவனித்துக் கொள்வாள் என்று நம்பிக்கையோடு இருக்கும் குழந்தைபோல நாமும் இப்பிரபஞ்சத்தின் குழந்தைகளாக இருக்கலாம் - பசிக்கும்போது பாலூட்டுவாள், குளிரெடுத்தால் அணைத்துக் கொள்வாள், அன்பைத் தருவாள். குழந்தை நம்புகிறது. அது செய்ய வேண்டியதெல்லாம், ஏதாவது தேவைப்படும்போது, கத்தி அழ வேண்டும், இதனால் குழந்தையின்பால் தாயின் கவனம் திரும்பும், அவ்வளவே.

இந்தப் பிரபஞ்சம் நம் தாய் அல்லது தந்தை என்று சமயம் சொல்கிறது. இதிலிருந்து வந்ததுதான் சில சொற்தொடர்கள். ஏசு கடவுளை 'அப்ப்பா' (abba) என்று அழைத்தார். இது தந்தை என்று சொல்வதை விடமேலானது. தந்தை என்பது சம்பிரதாய சொல். 'அப்ப்பா' இயல்பானது. 'அப்ப்பா' என்பதை சரியாக மொழிபெயர்த்தால் அது தந்தை என்பதை விட அப்பா என்பதற்கு அருகில் வரும். ஆனால் கடவுளை அப்பா என்று அழைப்பது சற்று அபத்தமாகத் தோன்றுகிறது; சர்ச் இதை அனுமதிக்காது. சர்ச் இதைத் தவறு என்று சொல்லும். ஆனால் ஏசு 'அப்ப்பா' என்று கடவுளை அழைத்தார்.

உண்மையில் பிரார்த்தனை இயல்பாக இருக்க வேண்டும். 'தந்தை' அல்லது பிதா நெருக்கமின்றி இருக்கிறது. கடவுளைத் 'தந்தையே' என்று

அழைத்து நாம் அவரை வெகு தொலைவில் எங்கோ சொர்க்கத்தில் வைத்துவிட்டதில் ஆச்சரியம் ஒன்றுமில்லை. அப்பா என்கின்றபோது நெருக்கத்தை உணரலாம். நீங்கள் அவரைத் (கடவுளை) தொட முடியும், பேச முடியும். பரலோகத்தில் இருக்கும் பரமபிதாவை நீங்கள் எவ்வளவு கத்தி அழைத்துக்கொண்டிருந்தாலும் அவரிடம் அது சென்று அடையுமா என்ற நம்பிக்கை உங்களுக்கு வராது.

சமயம் என்பது பிரபஞ்சத்தை நோக்கி ஒரு குழந்தை போன்ற அணுகுமுறையாகும். நீங்கள் இயற்கைக்கு எதிரானவர் அல்ல. அதனுடன் சண்டையிடுபவர் அல்ல. சண்டை இல்லை பெரும் ஒத்துழைப்பு இருக்கிறது. சண்டை முட்டாள்தனமாகும். அபத்தமாகவும் இருக்கிறது. எப்படி அறிவியல் ஆராய்ச்சியில் நம்பிக்கை வேலை செய்வதில்லையோ, அதேபோல் சமய அனுபவம் என்று வரும்போது சந்தேகம் பயன்தருவதில்லை. அறிவியல் என்பது வெளியிலிருப்பதை, புறத்தை ஆராய்வது. சமயம் என்பது உள்ளிருப்பதை, அகத்தை ஆராய்வதாகும். பொருட்களின் சமயம்தான் 'அறிவியல்'. உளதாயிருத்தலின் அறிவியல்தான் 'சமயம்'. எவ்வளவுதான் கூரான செவி இருந்தாலும் காதால் ஒரு மலரைப் பார்க்க முடியாது, காதால் சப்தங்களை மட்டுமே கேட்கமுடியும். அதற்கு வரையறைகள் உள்ளது. உங்களுக்கு வர்ணத்தைக்காண வேண்டும், ஒளியையும், வடிவத்தையும் பார்க்க வேண்டுமானால் நீங்கள் கண்களால்தான் பார்க்க முடியும். கண்கள் அழகாக இருந்தாலும் அதன் மூலமாக இசையைக் கேட்க முடியாது.

பித்தோவான் அல்லது மோசார்ட் போன்ற மிகப் பெரிய இசைக்காவியங்கள்கூட கண்களைத் துளைத்துக் கொண்டு உள்ளே புகமுடியாது. கண்கள் செவிடு, நீங்கள் காதால்தான் கேட்க வேண்டும்.

சந்தேகம் என்பது பொருட்களுக்கான வாயில். நம்பிக்கை உளதாயிருத்தலுக்கான வாயிற்கதவு. நம்பிக்கையின் மூலமாகத்தான் கடவுள் அறியப்படுகின்றார்.

நினைவிற் கொள்ளவும், போலி வாதத்தில் இரண்டு வழிகளில் ஈடுபடலாம். சமயவாதிகள் என்று அழைக்கப்படுபவர்கள். அறிவியலோடு சண்டையிட்டுக் கொண்டிருக்கிறார்கள். சர்ச் அறிவியலோடு சண்டையிடுகிறது. அது ஒரு முட்டாள் தனமான சண்டை, ஏனென்றால் அறிவியல் நம்பிக்கை சார்ந்து இருக்க வேண்டும் என்று சர்ச் சொல்கிறது. இப்போது அறிவியல் பழிவாங்குகிறது. இப்போது சமயம் சந்தேகத்தைச் சார்ந்து இருக்கவேண்டும், ஒரு ஐயுறுவாதம் மற்றும் தர்க்க வாதத்தை அடிப்படையாக கொண்டு இருக்க வேண்டும் என்று சொல்கிறது.

அவ்வளவு முட்டாளான மனிதன் திரும்பத் திரும்ப அதே தவறுகளைச் செய்து கொண்டிருக்கிறான். இடைநிலைக் காலத்திய சர்ச் முட்டாள்தனமாகச் செயல்பட்டது. இப்போது விஞ்ஞானிகள் என்று கூறிக் கொள்பவர்கள் அதே முட்டாள்தனத்தைச் செய்கின்றனர்.

புரிதலுக்கு உகந்த மனிதன் சந்தேகம் தனக்கென ஒரு உலகைக் கொண்டிருக்கிறது என்று

சொல்வான். நீங்கள் சந்தேகத்தை ஒரு வழிமுறையாகப் பயன்படுத்தலாம், ஆனால் அதற்கு வரையறைகள் உள்ளன. அதேபோல் நம்பிக்கைக்கும் தனி உலகம் இருக்கிறது, அதற்கும் வரையறைகள் உள்ளன. பொருட்களைப் பற்றித் தெரிந்துகொள்வதற்கு நம்பிக்கை தேவையில்லை, அகமறியச் சந்தேகம் அவசியமில்லை, அறிவியல் ஆய்விற்கு நம்பிக்கை பயன்படுத்தப்பட்டிருந்தால் அறிவியல் பிறந்தேயிருக்காது. இதனால்தான் கிழக்கில் அறிவியல் பண்டைய நிலையிலேயே இருக்கிறது.

நான் இந்திய விஞ்ஞானிகளைச் சந்தித்து இருக்கிறேன். இந்தியாவில் கல்வி பெற்ற ஒரு விஞ்ஞானி, மேற்கத்திய நாடுகளில் கல்வியறிவு எல்லாம் பெற்றும், பல விருதுகள் வாங்கியும், ஒருக்கால் நோபல் பரிசுகூட வென்று இருந்தாலும், அவர் வெகு ஆழத்தில் மூடநம்பிக்கையோடு, விஞ்ஞானத்திற்கு ஒவ்வாமல் இருப்பார். தெரிந்தோ தெரியாமலோ, உணர்ந்தோ அல்லாமலோ அவர் சில வழிகளில் நம்பிக்கையை வெளி உலகத்தின் மேல் திணிக்க முயற்சி செய்து கொண்டிருப்பார். மேற்கு சந்தேகத்தின் சாத்தியக் கூறுகளை ஆராய்ந்து உள்ளது, கிழக்கு நம்பிக்கையின் சாத்தியக் கூறுகளை ஆராய்ச்சி செய்துள்ளது. இரண்டும் இரு வேறு பரிமாணங்கள். அவை இரண்டும் எங்கும் சந்திக்காது. அகமும் புறமும் எந்த இடத்திலும் சந்திக்காது. நீங்கள் இரண்டையும் பயன்படுத்தவேண்டும்.

இரண்டையும் பயன்படுத்தும் மனிதனை நான் புரிதலுக்குரிய மனிதன் என்று அழைப்பேன். ஆய்வு கூடத்தில் வேலை செய்யும்போது அவன்

சந்தேகத்தை, தர்க்க வாதத்தைப் பயன்படுத்துகிறான். கோவிலில் பிரார்த்தனை செய்கையில் நம்பிக்கை கொள்வான். அவன் கட்டற்றவன். அவன் நம்பிக்கை அல்லது சந்தேகத்தினால் கட்டுண்டவன் அல்ல.

என் சன்னியாசிகளுக்கான அணுகுமுறை இது தான். கண்கள் அல்லது காதுகளால் கட்டுப்படாதீர்கள். இல்லையென்றால் வறிய நிலையில் இருப்பீர்கள். இரண்டும் உங்களுக்கு இருக்கிறது! - பார்ப்பதற்குக் கண்களைப் பயன்படுத்தி, கேட்கும்போது கண்களை மூடிக் கொள்ளுங்கள். இசையை மெய் மறந்து கேட்கும்போது மனிதர்கள் கண்களை மூடிக்கொள்வது தற்செயலானதல்ல. உங்களுக்கு இசையை எப்படிக் கேட்பது என்று தெரிந்து இருந்தால், நீங்கள் கண்களை மூடிக் கொள்வீர்கள், காரணம் கண்கள் இனித் தேவையில்லை.

இதேதான் சந்தேகம் மற்றும் நம்பிக்கை பற்றியும். நம்பிக்கை என்பது குழந்தையின் பண்புநலன். இந்த மூன்று குணங்கள், முழுமையாக இருப்பது, அறிவு பெற்று இருந்தும் அறியாநிலையில் இருப்பது மற்றும் நம்பிக்கை எனும் பண்புநலன். இது தான் அதற்கான அர்த்தம்.

குழந்தைத்தனம் என்பது ஒரு வகையான உணர்ச்சி வயப்பட்ட நிலை. அது உங்களுக்குத் தேவையில்லை. ஒவ்வொரு குழந்தையும் குழந்தைத்தனத்தோடு இருக்க அனுமதிக்க வேண்டும். பெரியவர்கள் பெரிய மனிதத்தன்மையோடு இருப்பதுபோல. ஆனால் ஒரு பெரியவர் குழந்தைக்குரிய குணங்களைக் கொண்டிருக்கலாம். ஆனால்

குழந்தைத்தனம் தேவையில்லை, குழந்தையின் திடீர் உணர்ச்சி தேவையில்லை. உணர்ச்சி வயப் படத் தேவையில்லை. குழந்தைக்கான பண்புக ளோடு முதிர்ச்சி மிக நன்றாகவே ஒத்துப்போகும். இரண்டிற்கும் முரண்பாடு இல்லை. உண்மையில் நீங்கள் குழந்தைபோல் இருந்தால்தான் முதிர்ச்சி யடைய முடியும்.

*முதிர்ச்சியோடு இருக்க வேண்டும் என்று ஒரு நாள் வலியுறுத்துகிறீர்கள். மற்றொரு நாள் "குழந்தை போல்" இருக்க வேண் டும் என்கிறீர்கள். நான் ஒரு முதிர்ச்சிய டைந்த மனப்பான்மையை ஏற்றுக் கொண் டுள்ளேன். என்னுள் இருக்கும் 'குழந்தை' அடக்கி வைக்கப்பட்டு வெளிப்பாட்டிற்காக ஏங்குகிறது. என் 'குழந்தையை' ஆட, பாட நான் அனுமதித்தால், கூடவே குழந்தைத்த னமான நடத்தைகளும், விருப்பப் - பொரு ளோடு தொத்திக்கொண்டு இருப்பதுபோல் வெளிவருகிறது. நான் என்ன செய்வது?*

அனுமதியுங்கள். உங்கள் குழந்தைத்தனம் நிறைவேறாமல் இருந்துள்ளது. அது வெளிப்பட்டு நிறைவேறட்டும். விரைவாக வருவது நல்லது. இல்லையென்றால் அது உங்களின் முடிவுவரை உங்களோடு ஒட்டிக்கொண்டேயிருக்கும். அதை வெளிப்பட அனுமதியுங்கள், பிறகு அது தானா கப் போய்விடும். வெறுமனே கொட்டித் தீருங்கள்; இந்த இடத்தில்தான் நீங்கள் அதை எளிதாகச் செய்ய முடியும், யாரும் தலையிட மாட்டார்கள்.

சில நாட்களுக்கு முன்னால் ஷிஃபாலி என்ற வயதான சன்னியாசினி இருந்தார். அவருக்கு எழுபது வயதிருக்கும். அவருக்கு குழந்தை போன்ற உணர்வு ஏற்பட்டது, ரொம்பவும் கவலைப்பட்டார். "கவலைப்படாதீர்கள், குழந்தைத்தனத்தோடு இருங்கள்" என்று அவரிடம் சொன்னேன். அவர் சிறு குழந்தைகளுடன் விளையாடத் தொடங்கிவிட்டார். குழந்தைகள் கூட சற்றே சங்கடப்பட்டன. "என்ன ஆயிற்று?" என்பதுபோல. ஆனால் விரைவிலேயே அவர்களும் ஏற்றுக் கொண்டனர்.

குழந்தைகள் மிகவும் ஏற்றுக்கொள்ளும் தன்மையுடையவர்கள். அந்த மூதாட்டியின் வயதை விரைவிலேயே அவர்கள் மறந்துவிட்டனர். ஷிஃபாலியும் அனுபவித்து மகிழ்ந்தார். அந்த அனுபவத்திலிருந்து அந்தளவு கற்றுக் கொண்டவர் என்னிடம் சொன்னது, "என் முழு வாழ்க்கையும் வீண்!" அவர் உண்மையிலேயே மீண்டும் ஒரு குழந்தையாகிவிட்டார், ஆச்சரியம் மற்றும் வியப்பும் நிறைந்து இருந்தார். பாடுவதும், ஆடுவதும், விளையாடுவதும், பட்டாம்பூச்சிகள் பின்னே ஓடுவதும், பூக்கள் மற்றும் வண்ணக் கற்களை சேகரிப்பதுமாக ஒரு குழந்தையாகிவிட்டார். அந்த வயதான பெண்மணியைப் பார்ப்பதே ஒரு அழகான அனுபவமாக இருந்தது. அவர் முகமே மாறிவிட்டது. அதில் திடீரென ஒரு பிரகாசம் தெரிந்தது, முகத்தில் ஒரு அருள் வந்ததுபோல் இருந்தது.

நீங்கள் அனுமதியுங்கள். ஒருமுறை அனுமதிக்கப்பட்டால், அது தன் நேரத்தை எடுத்துக் கொள்ளும், பிறகு விலகிவிடும். அது உங்களுக்கு மிகுந்து

நிறைவை விட்டுச் செல்லும். அதைத் தள்ளிப்போடுவதைவிட இப்போதே அதில் இறங்குவது நல்லது, ஏனென்றால் நீங்கள் அதை மேலும் மேலும் தள்ளிப்போட அது மேலும் கடினமாகும். இதிலிருந்து ஒரு குழந்தைக்குரிய பண்பு எழுவதைப் பார்க்கலாம். குழந்தைத்தனம் மறைந்துவிடும். தற்காலிகமாக இருக்கும், பிறகு போய்விடும், உங்கள் 'குழந்தை' இளமையாகவும் புத்தம் புதிதாகவும் இருக்கும். அந்தக் 'குழந்தை' கிடைக்கப்பெற்ற பிறகு நீங்கள் வளரத் தொடங்குவீர்கள். அதன்பிறகு நீங்கள் முதிர்ச்சியடையலாம். உங்களைச் சுற்றி உள்ள இந்தப் பொய்கள் அனைத்தையும் சுமந்து கொண்டு நீங்கள் முதிர்ச்சியடைய முடியாது. நீங்கள் உண்மையானவரான பிறகு, உண்மைச் சார்பு கொண்ட பிறகுதான் நீங்கள் முதிர்ச்சி பெற முடியும்.

## இரண்டாவது கேள்வி:

*ஒருவர் அமெரிக்காவைப் போன்ற ஒரு நாட்டில் வாழ்ந்து, போட்டி மிகுந்த தொழிலில் ஈடுபடுத்திக் கொண்டு, அதே வேளையில் சமய ஆர்வத்துடன் வாழ்ந்து ஞானத் தேடலில் தொடர்வது சாத்தியமா?*

ஆலன் ரூடிக்கிடமிருந்து இந்தக் கேள்வி.

என்ன நினைத்துக் கொண்டிருக்கிறீர்கள்? இந்தியாவில் ஒருவர் சமயப்பற்றுடையவராகிவிட முடியுமா?

நான் நினைப்பது என்னவென்றால் உங்களுக்குச் சமயப்பற்றுடன் இருக்க வேண்டுமானால் அமெரிக்காதான் சிறந்த இடம். அது 'தெரிந்து கொள்

வதில்' வெற்றி கண்டுள்ளது. பல நூறாண்டுகளாக மனிதன் விரும்பியவற்றையெல்லாம் அமெரிக்கா கொண்டிருக்கிறது. ஆனால் அந்த வெற்றியில் தான் அமெரிக்கா தோற்றுவிட்டது. அந்த வெற்றியே அதன் தோல்வியாகிவிட்டது.

உலகத்தின் பணம் எல்லாம் உங்களிடம் உள்ளது. ஆனால் உள்ளே ஏழையாய் இருக்கிறீர்கள். உங்களிடம் எல்லா நவீனக்கருவிகளும் இருக்கின்றன. ஆனாலும் நிறைவின்றி இருக்கிறீர்கள். அந்த நிறைவை வேறு திசையில், வேறு ஒரு பரிமாணத்தில் தேடுகிறீர்கள். அமெரிக்காவில் இது வெளிப்படையாகத் தெரிகிறது. இந்தியாவில் அவ்வாறு இல்லை. இந்தியாவில் அவ்வளவு வெளிப்படையாக இல்லை. இந்தியாவில், குறைந்தபட்சம் நவீன இந்தியாவில் அது அவ்வளவு வெளிப்படையாக இல்லை. முன்பு வெளிப்படையாக இருந்தது.

புத்தர் வாழ்ந்தபோது, அமெரிக்கா இன்று உள்ளதுபோல் இந்தியா இருந்தது. உலகெங்கிலும் இந்தியா ஒரு 'தங்கப் பட்சியாக' அறியப்பட்டது. அப்படித்தான் இருந்தது! அந்தக் காலத்தில் அது தான் வளமிக்க நாடு. வளமிக்க நாட்டில்தான் சமயம் மலரும், இல்லை என்றால் நடக்காது. இந்த செல்வ நிறைவின் உபபொருள்தான் புத்தர். காரணம் செல்வ வளத்தில்தான் உங்கள் நம்பிக்கைகள் மறையும். நீங்கள் நம்பிக்கையற்றுப் போவீர்கள். வெளியில் செல்ல இனிப் பாதையில்லை. முழுப் பாதையையும் நீங்கள் பார்த்துவிட்டீர்கள், இறுதிவரை சென்றாகிவிட்டது; எதுவுமே இல்லை. தானாகவே கண்கள் உள்முகமாகத் திரும்புகின்

றன. ஒரு ஏழை நாடு சமயமல்லாமல் கம்யூனிசம் பற்றி சிந்திக்கத் தொடங்குவது தற்செயலானதல்ல.

இந்தியாவில் நீங்கள் அரசியல் ரீதியாகப் பலம் பெற வேண்டுமானால் நீங்கள் சோசலிசம், கம்யூனிசம் என்று கத்திக் கொண்டேயிருக்க வேண்டும். சமயம் பற்றி எந்த சப்தமும் நீங்கள் கேட்க மாட்டீர்கள். ஏன்? சமய சார்புள்ள ஒரு நாட்டில் அரசியல்வாதிகள் சமயத்தை ஏன் பயன்படுத்திக் கொள்வதில்லை? யாருக்கும் சமயம் வேண்டாம் என்பது அவர்களுக்குத் தெரியும், மக்களுக்கு சமயம் அலுத்துவிட்டது. மக்கள் சமயப்பற்று கொண்டு இல்லை. சம்பிரதாயமாக சமயப்பற்றுடன் தோற்றமளிப்பார்கள். ஆனால் அவர்கள் சமயப்பற்றுள்ளவர்கள் அல்ல. அவர்கள் பட்டினியோடு இருக்கிறார்கள், பசியோடு இருக்கிறார்கள். அவர்களுக்கு உணவு இல்லை, உறைவிடம் இல்லை, தேவைகள் நிறைவேற்றப்படவில்லை. பிறகு கடவுளைப் பற்றிச் சொல்வதற்கு என்ன இருக்கிறது?

தேவைகளுக்கு ஒரு படிநிலை அமைப்பு இருக்கிறது. உடல் ரீதியான தேவைகள் அடிப்படையானவை. அவை நிறைவேற்றப்பட்டால் ஒழிய மன ரீதியான தேவைகளை நீங்கள் புரிந்து கொள்ள முடியாது. பசியில் இருக்கும் ஒருவனுக்கு பீத்தோவன், ஷேக்ஸ்பியர் அல்லது லியோனார்டோ டாவின்சி பற்றி ஆர்வமிருக்காது. பசியோடு இருப்பவனுக்கு உணவைப் பற்றிய அக்கறை மட்டுமே இருக்கும், அது இயல்பானதுதான். அதில் தவறொன்றுமில்லை. பசித்தவனுக்கு எப்படி உடலுக்கு உணவளிப்பது, எப்படி உயிரோடு இருப்பது என்பதைப் பற்றி மட்டுமே அக்கறை இருக்கும்.

பிழைத்து இருத்தல் என்ற கேள்வி வரும்போது யாருக்கு சங்கீதத்தைப் பற்றிய கவலை இருக் கும். ஆனால் உங்கள் பசி அடங்கிவிட்டால், உடல் வெதுவெதுப்பாய் இருக்கும்போது, குடியிருக்க வீடு இருக்கும்போது, திடீரென உங்களுக்கு புதிய விஷயங்கள்மீது ஆர்வம் ஏற்படும். இசை, கவிதை, கலை, வேதாந்தம் என்று இதுவரை நீங்கள் ஆர் வம் கொள்ளாத விஷயங்கள்மீது உங்கள் கவனம் திரும்பும். இவை எல்லாம் மனம் சார்ந்த தேவை கள். பெரிய விஷயங்களைப் பற்றிச் சிந்திக்கத் தொடங்குவீர்கள். உடல் திருப்தியடைந்துவிட்டது. மனம் சொல்லும்: "இனி என் தேவைகளை நிறை வேற்றிக் கொள்ள முடியும்."

மனம் சார்ந்த தேவைகள் எல்லாம் பூர்த்தியாகி விட்ட பின்பு - நீங்கள் எல்லாவிதமான இசைக ளையும் கேட்ட பிறகு, எல்லாவிதமான நாட்டியங் களையும் ஆடி முடிந்த பிறகு, கலை, கவிதை, சிற்பம், தத்துவம் என்று எல்லாவற்றிலும் ஆழமா கப் போனபிறகு நீங்கள் நிறைவை உணர்கின்றீர் கள். ஒரு தெவிட்டு நிலை ஏற்படுகின்றது. இந்தக் கட்டத்தில்தான் மூன்றாவது வகையான தேவை எழுகின்றது. அதுதான் சமயம். அதுதான் 'இறைத் தேவை', ஆன்மீகத் தேவை. இதுதான் மிக உயர்ந்த தேவையாகும்.

பசித்தவன் ஒருவனுக்குக் கடவுள்மீது ஆர்வமி ருந்தால், அவன் கடவுள் உண்மையான கடவு ளாக இருக்க முடியாது. அவன் கடவுள் உண வளிக்கும் கடவுளாக மட்டுமே இருப்பார். அவன் கடவுளிடம் "இன்றைக்கான உணவை எனக்குக் கொடு" என்று கேட்பான். அவர் ஏழையின் கடவுள்.

கிறிஸ்தவப் பிரார்த்தனையான "இன்றைக்கான உணவை அளியுங்கள்" என்பது விசித்திரமானது ஒன்றுமில்லை. புத்தரோ அல்லது கிருஷ்ணரோ இப்படியொரு பிரார்த்தனையை எண்ணிப் பார்த் திருக்க மாட்டார்கள். அன்றைய தினச் சாப்பாட் டைக் கேட்பதா? சமயச் சார்பற்றதாக இருக்கிறது. ஆனால் ஏசுவே ஏழையாக இருந்தார். ஏழைக ளைச் சார்ந்தவர். அவர் ஏழைகளுக்கு கற்றுக் கொடுத்துக் கொண்டிருந்தார். அதனால் அளிப்ப வர் ஒருவரைக் கடவுளாக உருவாக்க வேண்டிய நிலை.

அதேபோல் ஏசுவைப் பின்பற்றுபவர்கள் ஏசுவின் அற்புதங்களைப் பற்றி ஓயாமல் பேசிக் கொண் டிருப்பது தற்செயலானதல்ல. அந்த அற்புதங்கள் என்ன? முதலில் அவை மனரீதியானவை. பார் வையற்ற மனிதனுக்கு பார்வை வழங்கப்படுகிறது, நோயாளி குணப்படுத்தப்படுகிறான், அல்லது ஏசு கற்களை ரொட்டித் துண்டுகளாக மாற்றும் அற் புதங்களை நிகழ்த்துகிறார். கொஞ்சம் யோசியுங் கள்! இந்த அற்புதங்கள் எல்லாம் ஒன்றைச் சொல் கின்றன. ஏசு கற்களை சமயச் சொற்பொழிவுக ளாக மாற்றவில்லை, ரொட்டியாக மாற்றுகிறார். கற் கள் இசையாகவில்லை, ஆனால் ரொட்டியாகிறது. அவர் தண்ணீரை வைன் - மதுவாக மாற்றுகிறார். இதுபோன்ற அற்புதங்கள் புத்தரைச் சுற்றி இல்லை. அற்புதங்கள் நடந்துள்ளன, ஆனால் அவை முற் றிலும் வேறுபட்டவை - புத்தருடைய அற்புதங்கள் வெகுவாக மாறுபட்டவை. அதைக் கேட்டு நீங்கள் ஆச்சரியப்படுவீர்கள்.

புத்தரிடம் ஒரு பெண்மணி செல்கிறாள். அவள் குழந்தை இறந்துவிட்டது. அவள் அழுதுகொண்டிருக்கிறாள். அவள் ஒரு விதவை, இன்னொரு குழந்தை பெற்றுக்கொள்ள முடியாது. தன் அன்பு மற்றும் முழு கவனத்திற்குரிய ஒரே குழந்தை இறந்துவிட்டது. அழுதுகொண்டும் புலம்பிக் கொண்டும் புத்தரிடம் செல்கிறாள். அவள் ஏசுவிடம் போயிருந்தால் ஏசு லாசரசை உயிர்ப்பித்தது போல குழந்தையை தொட்டு உயிர்கொண்டு வந்து அற்புதம் நிகழ்த்தியிருப்பார். புத்தர் என்ன செய்தார்? புத்தர் புன்னகை செய்தவாறு, "நீ ஊருக்குள் சென்று எந்த வீட்டில் சாவு ஏற்படட்டதில்லையோ அங்கிருந்து கொஞ்சம் கடுகு வாங்கி வா" என்று அனுப்பி வைத்தார். ஊருக்குள் ஓடிய அப்பெண் வீடுவீடாகப் போனாள். எங்கே சென்றாலும், அங்கே "எவ்வளவு வேண்டுமானாலும், கடுகு தருகிறோம், ஆனால் நிபந்தனைதான் ஒத்துவராது. ஏனென்றால் எங்கள் வீட்டில் பலர் இறந்து போய் உள்ளனர். அம்மணி, பைத்தியம்போல் இருக்காதே, புத்தர் உன்னிடம் ஒரு தந்திரம் செய்திருக்கிறார். நீ பூமி முழுவதும் தேடினாலும் அப்படியொரு வீடு கிடைக்காது" என்று சொன்னார்கள்.

ஆனால் அவளுக்கு ஒரு நம்பிக்கை, "ஒரு வேளை... யாருக்குத் தெரியும்? சாவறியாத வீடு ஏதோ ஒன்றாவது இருக்கலாம்" நாள் முழுவதும் சுற்றிச் சுற்றி வந்தாள். மாலைக்குள் ஒரு பெரிய புரிதல் அவளுக்கு ஏற்பட்டது. "இறப்பு வாழ்க்கையின் ஒரு அங்கம், அது நடக்கும். அது ஏதோ தனிப்பட்ட விஷயமல்ல, அது ஏதோ தனக்கு மட்டும் ஏற்பட்ட

தனிப்பட்ட பேரிடர் இல்லை" இந்தப் புரிதலோடு அவள் புத்தரிடம் சென்றாள்.

புத்தர் கேட்டார், "கடுகு எங்கே?" அவள் புன்னகை செய்தாள். "சாதித்து விட்டீர்கள்" என்று சொல்லி அவர் காலில் விழுந்தாள். மேலும் "எனக்கு தீட்சை கொடுங்கள், இறவாப் பொருள் அறிய விரும்புகிறேன். என் குழந்தையைத் திரும்பக் கேட்கப்போவதில்லை, அவள் எனக்கு கிடைத்தாலும் மறுபடியும் இறப்பாள். அதனால் என்ன பயன்? எனக்குள் இருக்கும் மடிந்து போகாத விஷயத்தைப் பற்றி எனக்குக் கற்றுக் கொடுங்கள்." இது முற்றிலும் வேறுபட்ட கதை.

ஏசுவின் அற்புதமே அதிக அற்புதமாக இருக்கிறது, ஏனென்றால் பூமி அப்போது ஏழ்மையிலேயே இருந்தது. கருத்து புரிகிறதா? கிழக்கு கிறிஸ்தவமயமாகிறது, மேற்கு பௌத்தம் நோக்கித் திரும்புகிறது. மேற்கு மேலும் அதிகமாக வளம் பெற இன்னும் அதிகமாக பௌத்தமயமாகும். புதிய கிறிஸ்தவர்கள் கிழக்கில் பிறக்கின்றனர். அதாவது ஏழை இனக்குழுக்கள், பழங்குடியினர், தீண்டத்தகாதவர்கள், ஒடுக்கப்பட்டோர் என பலவகையினர். இவர்களுக்கு ஏசு கவர்ச்சியாகத் தெரிகிறார். அவர்கள் பசியோடு இருக்கின்றனர், கற்களை ரொட்டியாக மாற்றக்கூடிய எவரையாவது விரும்புவார்கள். புத்தரிடம் அவர்களுக்கு என்ன வேலை? புத்தர் அவர்களுக்கு மேற்குடியாளர் போல் தோன்றுகிறார். ஏழை மற்றும் பட்டினியில் இருப்போருக்கு அர்த்தமாகாத பெரிய விஷயங்களைப் பற்றிப் பேசுகிறார், அவர்களுக்குப் புத்தர் வேண்டாம்.

இரண்டாம் உலகப் போரின்போது ஒரு அற்புதம் நிகழ்ந்தது. கிழக்கத்திய நாடான ஜப்பான் அமெரிக்காவுடன் போர் செய்தது. கிழக்கிற்கும் மேற்கிற்கும் இதுவே முதல் பெரிய அளவிலான போர் நிகழ்வு. என்ன நடந்தது? இப்போது லாஸ் ஏஞ்சல்ஸ் ஜப்பானுக்கு நகர்ந்துவிட்டது. எல்லா ஜென் புத்த மையங்களும் அமெரிக்காவிற்குப் புலம் பெயர்ந்துள்ளன. இதுவே ஒரு அற்புதம்! உங்களுக்கு ஜென் வேண்டுமென்றால் நீங்கள் அமெரிக்காவிற்குப் போக வேண்டும். ஜப்பானுக்குப் போய்விடாதீர்கள். அங்கே உள்ள மனிதர்கள் நீங்கள் ஒரு முட்டாள் என்று நினைப்பார்கள். "ஜென்னா? பைத்தியம் பிடித்துவிட்டதா உங்களுக்கு? நீங்கள் இந்த நூற்றாண்டைச் சேர்ந்தவர்கள் அல்ல""நீங்கள் சமகாலத்தவர் அல்ல" என்று அவர்கள் நினைப்பார்கள்.

ஜென் மையங்களை கண்டுபிடிக்க வேண்டுமென்றால், அவை அமெரிக்காவில் செழித்தோங்குகின்றன. ஆனால் உங்களுக்கு மேம்பட்ட கார் தொழில்நுட்பம், மேலும் சிறப்பான ரேடியோக்கள், கைகடிகாரங்கள் வேண்டுமென்றால் ஜப்பானுக்கு போங்கள்.

இது எப்போதும் நடந்துகொண்டிருக்கிறது. காலங்காலமாய் நடப்பது இது. ஒரு படிநிலை அமைப்பு உள்ளது. மேலும் சிறப்பான கார்கள், ரேடியோக்கள், டெலிவிஷன்கள்மீது ஜப்பானுக்கு ஆர்வம் இருக்கிறது. அமெரிக்காவிற்கு இவையெல்லாம் அலுத்துப்போய்விட்டது!

சில நாட்களுக்கு முன்பு ஒரு பல்கலைக்கழகத்தில் ஒரு புத்தம் புதிய கெடிலாக் கார் வாங்கி அதை எரித்து விட்டார்கள். அதீத அடையாளக் குறிப்பீடு... மக்களுக்குக் கார்கள், எலக்ட்ரானிக் சாதனங்கள் எல்லாம் அலுத்துப்போய்விட்டது. அவர்களுக்கு மேலும் பெரியதாய் ஏதோ தேவைப்படுகின்றது. ஏசு இனிப்பொருத்தமாக இருக்கமாட்டார். புத்தரே பொருத்தமாவார். ஏசுவின் அற்புதங்கள் மிகச் சாதாரணமாகத் தோன்றும். ஏனென்றால் விஞ்ஞானத்தால் அவற்றைச் செய்ய முடியும். புத்தரின் அற்புதங்கள் மிக மிகப் பெரியதாய் தோன்றும், காரணம் விஞ்ஞானத்தால் அதைச் செய்ய முடியாது.

*நீங்கள் கேட்கிறீர்கள், "ஒரு மனிதன் அமெரிக்காவில் சமயப்பற்றுடன் இருக்க முடியுமா?"*

வேறு எங்கு முடியும்? அமெரிக்காவில்தான் சமயத்திற்கு வருங்காலமே இருக்கிறது.

இந்தியாவிலும் சீனாவிலும் சமயத்திற்கு வருங்காலமே இல்லை. ஆம், இந்தியாவில் சமயத்திற்கு கடந்த காலம் இருந்தது, ஆனால் வருங்காலம் கிடையாது. கிழக்கில் சூரியன் அஸ்தமனமாகிக் கொண்டிருக்கிறது, மேற்கில் அது உதயமாகிக் கொண்டிருக்கிறது. அமெரிக்காவில் எப்படி சமயப் பற்றோடு இருப்பது என்பதைப் பற்றி கவலைப்படாதீர்கள். இந்தியாவில் சமயப் பற்றுடன் இருக்க முடியாது. இந்தியா சமயப்பற்றுடன் இருப்பதாக பாசாங்கு செய்கின்றது. மேலும் அதன் சமயம் மிக மிகக் கீழ்நிலையான சமயமாக இருக்கிறது. நினைவிற் கொள்ளுங்கள், நான் கடந்த காலத்தைப்

பற்றிப் பேசிக்கொண்டிருக்கவில்லை. நான் உபநிஷத்துக்கள், கீதை மற்றும் புத்தர் பற்றியெல்லாம் பேசவில்லை. அந்த நாட்களில் இந்தியா அமெரிக்காவாக இருந்தது. இப்போது எல்லாம் போய்விட்டது.

புரிந்து கொள்ளவேண்டிய நுணுக்கமான கருத்து ஒன்று உள்ளது. இப்படித்தான் வரலாற்றின் சக்கரம் சுழல்கிறது. எப்போதெல்லாம் ஒரு நாடு மிகவும் வளம்பெறுகிறதோ அது சமயசார்பு கொள்கிறது. ஏனென்றால் அப்போதுதான் உயரிய தேவைகள் உறுதிபடத் தொடங்குகின்றன. எப்போதெல்லாம் சமயம் மலரத் தொடங்குகிறதோ நாடு கூடிய விரைவில் வளம் குன்றத் தொடங்குகிறது. சிந்தித்துப் பாருங்கள்: அமெரிக்காவில் ஹிப்பிக்கள் அதிகமாகிக் கொண்டே போனால், ஜென் மையங்கள் வளர்ந்து கொண்டே இருந்தால் மற்றும் என் சன்னியாசிகள் அமெரிக்காவில் அதிகமாகிக் கொண்டே இருந்தால் எவ்வளவு காலம் அமெரிக்கா பணக்கார நாடாக இருக்க முடியும்? அமெரிக்காவை வளம்பெறச் செய்யும் தொழில்நுட்பத்தை யார் கவனிப்பார்கள்? மக்கள் தியானம் செய்துகொண்டிருப்பார்கள். பல்கலைக்கழகங்களுக்குப் போகமாட்டார்கள். பாதியிலேயே விட்டு விடுவார்கள். யார் சாதாரண உலகாயத விஷயங்களைப் பற்றி கவலை கொள்வார்கள்? அவர்கள் கண்களை மூடிக்கொண்டு அமைதியாகவும், நிறைவாகவும் மற்றும் மகிழ்ச்சியாகவும் இருப்பார்கள். இனி விஞ்ஞானிகள் இருக்கமாட்டார்கள்.

இப்படித்தான் சக்கரம் சுழல்கிறது. தொடக்கத்தில் ஒரு நாடு ஏழையாக இருக்கிறது: அது

தொழில்நுட்பத்தை நோக்கி ஓடுகிறது, சிறந்த அறிவியல், மேலும் சிறந்த வாழ்க்கை முறை, மேலும் உயர்தரமான வாழ்க்கை, ஒரு நாள் அது உச்சத்தை எட்டியபிறகு, திடீரெனக் குப்புற விழுகிறது. இந்த முயற்சியெல்லாமே வீண் என்பதை உணர்கின்றது. நாம் எங்கும் சென்றடையவில்லை, ஒரு மாயத் தோற்றத்தை, கானல் நீரைத் துரத்திக் கொண்டிருந்தோம்; திடீரென மக்கள் விட்டுவிடத் தொடங்குகின்றனர். அதுவே சன்னியாசம் ஆகும்.

புத்தரின் காலத்தில் ஆயிரக்கணக்கான மக்கள் உலக வாழ்க்கையைத் துறந்து புத்தரைப் பின்பற்றினர். உலகாயத ஆசைகளின் மாயத் தோற்றத்தைக் கண்டுவிட்டனர். ஆனால் நாடு ஏழ்மையடையத் தொடங்கியது. கூடிய விரைவில் நாடு ஏழையாகியது. மனிதர்கள் அதிகமாக தியானத்தில் இறங்கும்போது நாடு ஏழையாகிறது. மக்கள் 'வேறு உலகத்தை' பற்றிச் சிந்திக்கத் தொடங்குகின்றனர், இயல் உலகம் ஏழ்மை அடைகிறது. உலகம் ஏழையாகும்போது அவர்கள் சமய எதிர்ப்பு கொள்கிறார்கள். 'கம்யூனிஸ்ட்' ஆகின்றனர், சமய சார்பு தவிர எதுவாக வேண்டுமானாலும் ஆகிவிடுவர். மறுபடியும் சக்கரம் சுழலத் தொடங்குகிறது.

இப்போது ஜப்பான் ஜென்னைக் கைவிட்டுவிட்டது, சமயத்தைவிட்டது, தியானத்தை விட்டது; அது மிகவும் உலகாயத கலாச்சாரங்களில் ஒன்றாகிவிட்டது. விரைவிலேயே மிகவும் வளம் பெற்றுவிடும், வளம் அடைந்து கொண்டிருக்கும். வளமடைந்தும், அந்த வளத்திற்கு எதிர்ப்பு உண்டாகும், ஏழ்மையின் அழகைப் பற்றி மக்கள் சிந்திக்கத் தொடங்குவார்கள், உடைமை மறுப்பின் அழகு

மற்றும் பற்றற்ற நிலை பற்றி சிந்திக்கத் தொடங் குவார்கள். எப்படி நாடோடியாகத் திரிவது என்று யோசிப்பார்கள். ஏன் வீட்டிலேயே கூண்டிலிட்டாற் போல் வாழ வேண்டும்? ஏன் ஒரு நாள் இந்தக் கடற்கரையிலும் மற்றொரு நாள் அந்தக் கடற்கரை யிலும் கூடாரமிட்டுத் தங்கக்கூடாது? ஏன் இந்தப் பூமி முழுவதையும் அனுபவிக்கக் கூடாது?

இதுதான் சுழற்சிச் சக்கரம். ஏழ்மை, தொழில் நுட்பம், சமயம், ஏழ்மை, தொழில்நுட்பம் மீண்டும் சமயம். இப்படித்தான் விஷயங்கள் நடக்கின்றன. இந்தியாவில் நீண்ட காலம் வாழ்ந்தீர்கள் என்றால் நீங்கள் ஒரு கம்யூனிஸ்டாகி விடுவீர்கள்.

> *அமெரிக்காவைப் போன்ற ஒரு நாட்டில் வாழ்ந்து, போட்டி மிகுந்த தொழிலில் ஈடுப டுத்திக் கொண்டு அதே வேளையில் சமய ஆர்வத்துடன் வாழ்ந்து ஞானத்தேடலில் தொடர்வது சாத்தியமா?"*

இதற்கான சிறந்த இடம் அமெரிக்காதான், மேலும் குறிப்பாக கலிஃபோர்னியா.

சமயப்பற்றுடன் வாழ்வது என்றால் துறப்பது என்று அர்த்தமில்லை. எளிதாகச் சொல்வதென்றால், விஷயம் என்னவென்று பார்க்கவேண்டும். போட் டிக்கான நடைமுறை வழக்கம் என்றால் அதில் பிரச்சினை ஒன்றுமில்லை. அதைத் தீவிரமாக எடுத்துக்கொள்ளாதீர்கள். தீவிரமாக, சீரியஸாக எடுத்துக்கொள்வதுதான் பிரச்சினை, போட்டி ஒரு பிரச்சினையே இல்லை. அப்படியானால் அது ஒரு விளையாட்டாகிவிடும், அதை ரசியுங்கள், ஆனால் விளையாட்டு என்பதை அறியுங்கள். வெற்

றியோ, தோல்வியோ பெரிய வித்தியாசமில்லை. அது பொருட்டல்ல, தொடர்பற்றது. பொருட்படுத்த வேண்டியது, நீங்கள் அந்த விளையாட்டை அனுபவித்தீர்கள், அது வேடிக்கையாய் இருந்தது. வென்றவர், தோற்றவர் இருவரும் விளையாட்டை அனுபவித்தனர். ஒரு விளையாட்டு வீரருக்கு உரிய மனப்பான்மை வேண்டும் அவ்வளவே.

சீட்டு விளையாடும்போது உண்மையான நோக்கம் வெற்றி பெறுவதில்லை, ஆனால் பொழுதைப் போக்குவது. விளையாட்டை ரசிப்பது, அதன் யுக்திகளை மற்றும் சீட்டாட்டத்தின் நுணுக்கங்களை ரசிப்பதே உண்மையான விருப்பம். ஒருவர் கண்டிப்பாக ஜெயிப்பார், மற்றவர் தோற்பார். இது பிரச்சினையே இல்லை, இலக்கும் அதுவல்ல.

நீங்கள் இந்த உலகில் வாழ்ந்து கொண்டு அதை ஒரு விளையாட்டாக எடுத்துக் கொண்டீர்களானால், நீங்கள் எல்லாவிதமான உறவுமுறைகளுடனும் வாழ முடியும். நினைவிற்கொள்ளுங்கள். உலகம் ஒரு பெரிய நாடகம் - நாடக மேடையும் பெரிது, அது எங்கே தொடங்கி எங்கே முடிகிறது என்று உங்களால் பார்க்க முடியாது. ஆனால் அது ஒரு நாடகமே; நாடகமயமான உலகமிது - இது ஒரு நாடகம் என்பதை உங்களால் நினைவில் வைத்துக் கொள்ளமுடியும் என்றால் பிரச்சினை இல்லை. அப்படியென்றால் நீங்கள் வெறுமனே அதில் ஒரு பாத்திரமேற்று நடிக்கின்றீர்கள். அது உங்களுக்கு எந்தக் கவலையையும் உருவாக்காது. விளையாடி முடித்துவிட்டு மாலை வீட்டிற்குச் செல்லும்போது அதைப்பற்றி மறந்துபோய்விடுவீர்கள்.

ஆனால் அதைக் கருத்தூன்றி எடுத்துக் கொண்டீர்களானால், பிரச்சினைதான். நீங்கள் அதை விளையாட்டாக எடுத்துக்கொள்ளவில்லை என்றால், நீங்கள் உலகைத் துறக்கலாம், போட்டியான விளையாட்டுகளைத் துறந்துவிட்டு இமாலயத்திற்கு போகலாம். அங்கே ஒரு குகையில் அதே தீவிர மனப்பான்மையோடு 'சீரியசாக' உட்கார்ந்து கொண்டிருப்பீர்கள். உங்கள் தியானத்திலும் ஒரு தீவிரத்தன்மை இருக்கும், இது இறுக்கத்தை உண்டுபண்ணும். என்ன வேறுபாடு தெரியுமா? நீங்கள் 'வால் ஸ்ட்ரீட்டில்' (பங்குச் சந்தை) இருந்து கொண்டு அசாத்திய போட்டியில் போராடுகிறீர்கள். வெற்றி பெறுவோமா, மாட்டோமா என்று இரவும் பகலுமாக ஒரே கவலை. அப்படியானால் இமயமலைக் குகையில் உட்கார்ந்து, அதே இறுக்கத்துடன் தியானம் செய்துகொண்டிருப்பீர்கள். இங்கே வேறு எவர் கழுத்தையும் அறுக்க முடியாது, உங்களுடையதைத் தவிர. இப்பொழுது போட்டி உங்களுடன், உங்கள் உடலுடன், உங்கள் மனதுடன், தொடர்ந்து சண்டைதான். உங்களை நீங்களே பிரித்துக்கொண்டு சண்டையிடுவீர்கள். இப்போது நடக்குமா இல்லையா என்ற கவலை வந்துவிடும் - "எப்போது ஞானம் கிடைக்கப் பெறுவேன்?" கிடைக்குமா கிடைக்காதா? உங்களுக்கு நான் சொல்ல விரும்புவது, இது வால் ஸ்ட்ரீட்டில் இருப்பதைவிட அதிக கவலை தரும். காரணம் வால் ஸ்ட்ரீட்டில் பலர் வெற்றிபெற்றுள்ளனர். ஆனால் இமாலயக் குகைகளில் அதை அடைந்தோர் அரிது, எப்போதேனும் ஒரு முறைதான். ஆகவே நீங்கள் அதிகமான பிரச்சினையில் இருப்பீர்கள்.

என் ஆலோசனை: தீவிரத்தை விட்டு விடுங்கள். வாழ்க்கையை வேடிக்கையாக எடுத்துக்கொள் ளுங்கள், விளையாட்டாகக் கருதுங்கள். ரசித்து மகிழுங்கள். அது நிச்சயம் மகிழ்விற்குரியது. அது ஒரு அழகான விளையாட்டு, பார்க்க, கற்றுக் கொள்ள, புரிந்துகொள்ள இது ஓர் அரிய சந்தர்ப் பம். ஆனால் தீவிரமாகிவிடாதீர்கள்.

வாழ்க்கை நோக்கமற்றது. அது எங்கேயும் செல் வதில்லை, இலக்குமில்லை. பயணமே இலக்காகி றது! அதனால்தான் நான் என் சன்னியாசிகளைக் கற்றுக்கொள்ள வேண்டுமென்கிறேன். தீவிரமில் லாமல் விளையாட்டில் முன்னேறுங்கள். அதன் பிறகு நீங்கள் என்ன செய்தாலும் அது தியானமே. விளையாட்டாய் செய்யும் எந்தச் செயலும் தியா னமாகிறது. நீங்கள் ரசித்து ஈடுபடும்போது இயல் பாக எழும் பண்புதான் தியானம். ஆம், சீட்டாடுவது தியானமாகலாம், சூதாடுவதும் தியானமாகலாம். தொழில் செய்வதும் தியானமாகலாம். எதையும் தியானமாக மாற்றலாம். சேர்க்க வேண்டியது ஒன்று மட்டுமே, தீவிரமல்லாத விளையாட்டுப் போக்கு. அப்படியானால் அது உங்களுக்குள் எந்த இறுக் கத்தையும் ஏற்படுத்தாது, நெகிழ்வாய் இருப்பீர் கள். நெகிழ்வாய் இருக்கக் கற்றுக் கொண்டீர்களா னால் எந்த இமாலயக் குகையைப் போலவும் வால் ஸ்ட்ரீட்டும் சிறந்ததுதான்.

மேலும் அமெரிக்காவைச் சுற்றிவரும் ஆன் மீக சன்னியாசிகள் என்று அழைக்கப்படுபவர்கள் கூறும் "இந்தியா மட்டுமே ஆன்மீக பூமி" என்பதை நம்பி ஏமாறாதீர்கள். அவர்களால் ஏமாற்றப்படாதீர் கள். இப்பொழுதைய நிலையில் பூமியின் மிகை

யான உலகாயத நாடு இந்தியாதான். அதன் உலகாயதம் ஒடுங்கியிருக்கிறது, ஆழத்தில் அடக்கி வைக்கப்பட்டுள்ளது. சமய உணர்வு தோய்ந்த முகம் கொண்டிருக்கிறது, ஆனால் அந்த முகத்திற்கு பின்னால் உலகாயதம் தவிர நீங்கள் வேறு எதையும் கண்டுபிடிக்க முடியாது. அந்த முகத்தைக் கண்டு ஏமாறாதீர்கள்.

சமய ஆர்வமுடைய மனிதர்கள் சிலர் கூட இல்லை என்று நான் சொல்ல வரவில்லை, அவர்கள் இருக்கிறார்கள், ஆனால் அவர்கள் எங்கும் இருக்கின்றனர். கவிதைக்கு கிழக்கு, மேற்கு எல்லாம் ஒன்றுதான். கவிஞர்கள் எங்கும் இருக்கின்றனர், ஓவியர்கள் எங்கும் இருக்கின்றனர். நேசிப்பதற்கு, கிழக்கு மேற்கு என்று பார்க்கவேண்டியதில்லை. அதேபோல்தான் சமயப் பற்றும். சமயப் பற்றுள்ளவர்கள் அங்கும் இருக்கிறார்கள். குறைவாக இருக்கிறார்கள் என்பது உண்மைதான். அவர்களைக் கண்டு பிடிப்பதும் கடினம், அதுவும் உண்மை, ஆனால் எந்த நாட்டிற்கும் இதில் ஏக போகத் தனியுரிமை கிடையாது. இந்தியாவில் நீங்கள் ஆழமாக நோக்கினால், ஆழமாகக் கவனித்துப் பார்த்தால் ஆச்சரியப்படுவீர்கள்.

இந்த நொடிக் கதையைப் பற்றி யோசியுங்கள்.

சூதறியாத ஒரு பாதிரி நியுயார்க் டைம்ஸ் ஸ்கொயர் வழியாக நடந்துபோய் கொண்டிருந்தார். ஒரு இளம் பெண் அவரை அணுகி "உன்னுடன் வரட்டுமா? பத்து டாலர்கள்" என்றாள். ஒன்றும் பேசாமல் பாதிரி தன் வழியே போனார்.

இன்னும் சற்று தூரத்தில் வேறு ஒரு மாது அவரை இடைமறித்து, "ஃபாதர் உங்களுடன் வரட்டுமா? பத்து டாலர்கள் போதும்" என்று இனிதாய் கொஞ்சினாள்.

பாதிரி ஒன்றும் சொல்லாமல் நடந்தார்.

சர்ச்சை அடைந்தவுடன் பாதிரி ஒரு கன்னியாஸ்திரியை எதிர் கொண்டார், அவளிடம் பாதிரி "சகோதரி, வரும் வழியில் சில பெண்கள் என்னிடம், உன்னுடன் வரட்டுமா? என்று கேட்டார்கள். என்ன அது" என்றார் அப்பாவியாக. அவள் பாதிரியின் கண்களை நேராகப் பார்த்து "பத்து டாலர்கள்!" என்றாள்.

நீங்கள் ஒரு இந்தியரின் கண்களை நேராகப் பாருங்கள், பத்து டாலர்களைப் பார்ப்பீர்கள்! அவர்கள் பணத்திற்கு எதிராகப்பேசிக் கொண்டே இருப்பார்கள், ஆனால் பணத்திற்கு எதிரான பேச்செல்லாமே பணத்தை நோக்கித்தான். செக்ஸை எதிர்த்துப் பேசிக்கொண்டேயிருப்பார்கள். ஆனால் அந்தப் பேச்செல்லாம் ஒடுக்கி வைக்கப்பட்டுள்ள பாலுணர்வின் அடையாளம்தான். இந்த போலிகளைப் பற்றிக் கவனமாய் இருங்கள்.

## இறுதிக் கேள்வி:

*உண்மை ஒன்றுதான் என்று சொல்கிறீர்கள், பிறகு ஏன் இத்தனை சமயங்கள்?*

உண்மை ஒன்றுதான், ஆனால் விளக்கங்கள் பல, கோடிக்கணக்கில் கூட இருக்கலாம். உண்மை

ஒன்றுதான், ஆனால் உண்மையைக் காணும் மனிதர்கள் வேறுபடுகின்றனர். அவர்கள் கண்கள் வெவ்வேறு கோணங்களைக் காட்டுகின்றன.

ஏசு கிறிஸ்துவிற்கு என்று ஒரு தனித்தன்மை உண்டு. அதேபோல் கிருஷ்ணருக்கும். ஏசு உண்மையைப் பார்க்கும்போது, உண்மை அவர் கண்களில் பிரதிபலிக்கின்றது. அது கிறிஸ்துவ சமயமாகிறது. கிருஷ்ணர் உண்மையை பார்க்கும்போது, அது அவர் கண்களில் பிரதிபலித்து ஹிந்துமதமாகிறது. ஹிந்து மதம் நேரடியான உண்மையல்ல, கிறிஸ்துவமும் நேரடியான உண்மையல்ல. அவை பிரத்தியேகமான மனிதர்கள் வாயிலாக வந்துள்ளன. அந்தப் பிரத்தியேக மனிதர்களின் பிரத்தியேகத் தன்மை எப்போதும் அதில் பிரதிபலிக்கும். புத்தர் உண்மையைச் சந்திக்கும்போது, உண்மை பௌத்தமாகிறது. அது நடந்தாக வேண்டும். அது புத்தரின் வர்ணம் பூணுகிறது. நீங்கள் உண்மையைச் சந்திக்கும் தறுவாயில், உங்களுக்கும் உண்மைக்கும் இடையே ஒரு சந்திப்பு நிகழும். உண்மை உங்களை உருமாற்றம் செய்யும், நீங்கள் உண்மையை உருமாற்றம் செய்வீர்கள். இறுதிப் பலனாக உங்களுக்கும் உண்மைக்கும் இடையே ஒரு உட்கலப்பு ஏற்படும். அப்போது பைபிள் உபநிடதத்திலிருந்து வேறுபடும். தாவோ தே சிங் தம்மபதத்திலிருந்து வேறுபடும். அது தனிமனிதன் முழுமையைச் சந்திக்கும் நிகழ்வாகும், ஆனால் தனிமனிதன் தன் பிரத்தியேகத் தன்மையைக் கொண்டு வருவான்.

தோட்டத்திற்குள் வந்த ஓவியனின் பார்வையில் நீங்கள் இதுவரை அறியாதிருந்த ஆயிரமாயிரம் வண்ணங்கள் புலப்படும். அவன் பல பச்சை வண்

ணங்களைக் காண்பான், ஒரு பச்சை மட்டுமல்ல, பல்வேறு பச்சை வண்ணச் சாயல்கள். அவனுக்கு வண்ணங்களைக் காண்பதற்காகவே பழக்கப்பட்ட கண்கள். நீங்கள் பார்க்கும்போது மரங்கள் பச்சை யாகத் தெரியும், உங்கள் கண்கள் அதற்குப் பழக் கப்பட்டதல்ல. கவிஞர் ஒருவர் வந்தால், அவர் மரங்களைப் பற்றிப் பாட்டெழுதுவார், ஓவியர் மரங் களை ஓவியமாகத் தீட்டுவார். பாட்டும் ஓவியமும் வெவ்வேறானவை. இரண்டும் அதே தோட்டத்தில் நடந்தது என்றாலும், அதே தோட்டத்தின் மூலமாக நடந்தது என்றாலும் பொருள் விளக்கம் நிச்சயமாக வேறுபடும்.

உண்மை என்பது ஒன்று, சமயப்பற்று வேறொன்று. ஆனால் அது பூமியில் வந்திறங் கிய கணமே அது ஒரு வடிவெடுக்கின்றது. அந் தப் புறவடிவம் வேறாக இருக்கப் போகின்றது. இதை நாம் புரிந்துகொண்டோமானால் வடிவங் களுக்கிடையே சண்டையிராது. எல்லா வடிவங்க ளும் ஏற்றுக் கொள்ளப்படும். உண்மையில் பௌத் தம், தாவோயிசம், இந்து மதம், மற்றும் ஜைன மதம் என்று இருப்பதினால்தான் உலகம் வளமாக இருக்கிறது. கிறிஸ்தவம் மட்டுமே இருக்கும் ஒரு உலகை எண்ணிப் பாருங்கள். அதேபோல் பௌத் தம் மட்டும் உள்ள உலகைக் கற்பனை செய்யுங் கள். அது ஒரு வறிய உலகாக இருக்கும், பல் வகைத்தன்மை இருக்காது. உண்மைக்கு இழப்பு ஏற்படும். ஆக உண்மை என்பது ஒன்றுதான். ஆனால் பொருள் விளக்கம் பல இருக்கும். அது வும் நல்லதுதான், மேலும் அழகு ஊட்டும், இத னால் மேலும் வளமான உலகமாக இருக்கும்.

இன்று இது போதும்.

ஞானி ஒருவன், அவன் வாழ்ந்த காலத்தின் அற்புதம் ஆவான்.

வற்றாத ஞானக் களஞ்சியத்திலிருந்து தன் சீடர்களுக்குப் போதனை செய்பவன்,

தன் அறிவனைத்தையும் சமர்ப்பித்தான் அந்தப் பெருநூலுக்கு.

பெருமதிப்போடு வீற்றிருந்தது அவன் அறையில் - அந்தப் பெரு நூல்.

ஏட்டைப் பிரிக்கத்தான் அனுமதியில்லை எவருக்கும்.

அவன் மரித்தபோது, சுற்றியிருந்தோர் அனைவரும்

தாங்கள் தாம் அவன் வாரிசு என்று எண்ணி நூலேட்டைப் பிரித்துப் படிக்க ஓடினர்.

உள்ளிருப்பதை உடைமையாக்கிக் கொள்ளும் கவலை அவர்களுக்கு.

ஆச்சரியம், குழப்பம் கூடவே ஏமாற்றமும் சூழ்ந்ததே.

அவர்கள் கண்டதெல்லாம் ஒரு பக்க எழுத்து மட்டுமே.

அவர்கள் தம்முடைய கண்கள் கண்ட வாக்கியத்தின் பொருள் அறிந்திட முயன்றனர்.

அதனால் மேலும் தடுமாறினர், கோபம் கொண் டனர்.

அஃது இது:

கொள்கலம் மற்றும் அதில்

கொள்ளப்பட்ட பொருள் இவற்றின்

வேறுபாடு உணர்ந்தீரானால்

அடையப்பெறுவீர் அறிவுப் பொருள்.

மனிதன் முழு நிறைவாகப் பிறப்பதில்லை. முழுநிறைவு பெறாமல்தான் பிறக்கின்றான். அவன் ஒரு வழிமுறையாகப் பிறக்கின்றான். போகும் வழிப் பாதையில் ஒரு யாத்திரிகனாகப் பிறக்கின்றான். அதுவே அவனுடைய வேதனை மற்றும் பரவசம் - வேதனைக்குக் காரணம் ஓய்வெடுக்க முடியாது, அவன் முன்னேற வேண்டும், எப்போதும் முன்னே சென்று கொண்டிருக்க வேண்டும். அவன் தேட வேண்டும், புத்தாய்வு செய்யவேண்டும். அவன் 'உருவாக' வேண்டும், ஏனென்றால் உருவாகுதல் மூலமாகத்தான் அவனின் உயிர் உரு, அவன் சுயம் எழ முடியும். உருவாகுதலே அவன் உயிர் உரு. அவன் தொடர்ந்து முன்னே நகர்ந்து கொண்டிருந்தால் உளதாயிருக்க முடியும்.

பரிணாம வளர்ச்சி என்பது மனிதனின் இயல்புக்கு உயிர்க்கூறானது. அது அவனின் ஆன்மாவேயாகும். தம்மை ஒப்புக்கொள்ளப்பட்டவராக எடுத்துக் கொண்டவர்கள் எல்லோரும் நிறைவு பெறாமலேயே இருப்பர். முழுமையாகப் பிறந்துள்ளோம் என்று நினைப்பவர்கள் வளர்ச்சியடைவதில்லை. விதை விதையாகவே இருக்கின்றது, மரமாவதே இல்லை. அது வசந்தத்தின் மகிழ்வுகள், மற்றும் கதிரவனின் ஒளி அறிவதில்லை. கோடிப்பூக்களாய் வெடித்து மலரும் பரவச நிலை அறிவதில்லை.

அந்த வெடிப்புதான் நிறைவேற்றம், கோடி மலர்களாய் வெடித்து மலரும் அந்த வெடிப்புதான்

இறைவன் என்று சொல்லப்படுவது எல்லாம். அந்தப் பின் வளவாய்ப்பு அல்லது உள்ளார்ந்த ஆற்றல் நடைமுறையாகும்போது மட்டுமே மனிதன் நிறைவு பெறுகிறான். உள்ளார்ந்த ஆற்றலாகவே மனிதன் பிறக்கின்றான். இது மனிதனின் தனிச்சிறப்பாகும். மற்ற மிருகங்கள் எல்லாம் முழுமையாகவே பிறக்கின்றன, அவையெல்லாம் எப்படி இறக்கப் போகின்றனவோ அவ்வாறே பிறக்கின்றன. அவற்றின் பிறப்பிற்கும் இறப்பிற்கும் இடையே ஒரு பரிணாம வளர்ச்சியில்லை. அவை ஒரே சமநிலையில் நகர்கின்றன, எந்தவித உருமாற்றமும் ஏற்படுவதில்லை. தீவிர மாற்றம் அவற்றின் வாழ்க்கையில் எப்போதும் நடப்பதில்லை. அவற்றின் நகர்வு கிடைமட்டமானது, செங்குத்து அவற்றை ஊடுருவுவதே இல்லை.

மனிதன் கிடைமட்டத்திலேயே நகர்ந்து கொண்டிருந்தால் அவன் தன் மனிதத்தன்மையைத் தவறவிடுவான், அவன் ஒரு ஆன்மாவாக மாட்டான். எல்லா மனிதர்களுக்கும் ஆன்மா கிடையாது என்று குருஜீஃப் குறிப்பிடுவது இதைத்தான். ஆன்மாவுடைய மனிதன் அரிதானவன். ஆனால் இது ஒரு விசித்திரமான அறிவிப்புதான், ஏனென்றால் நீங்கள் ஆன்மாவோடுதான் பிறக்கின்றீர்கள் என்று உங்களுக்குக் காலங்காலமாய் சொல்லப்பட்டு உள்ளது. ஆனால் நீங்கள் ஒரு ஆன்மாவாக உருவாகக்கூடிய உள்ளார்ந்த ஆற்றலுடன் மட்டுமே பிறக்கின்றீர்கள், உண்மையான ஆன்மாவோடு பிறப்பதில்லை என்கிறார் குருஜீஃப். வரைபடம் இருக்கிறது. ஆனால் அதைச் செயல்முறைப்படுத்த வேண்டும். விதை உங்களிடம் உள்ளது.

ஆனால் நீங்கள் விளை நிலத்தைக் கண்டுபி டிக்க வேண்டும், மற்றும் அந்த விதை வெடித்து வளர்வதற்கு ஏற்ற பருவம், தட்பவெப்பநிலை மற் றும் சரியான தருணத்தையும் நீங்கள் கண்டுபிடிக்க வேண்டும்.

கிடைமட்டத்திலேயே நகர்ந்து கொண்டிருந்தால் நீங்கள் தொடர்ந்து ஆன்மாவற்று இருப்பீர்கள். செங்குத்தானது உங்களை ஊடுருவும்போது நீங் கள் ஒரு ஆன்மாவாகின்றீர்கள். 'ஆன்மா' என்றால் செங்குத்து கிடைமட்டத்தை ஊடுருவி விட்டது என்று பொருள் கொள்ளலாம். அல்லது கம்பளிப் புழு, புழுக்கூடு, பிறகு பட்டாம்பூச்சி என்ற உதார ணத்தையும் நீங்கள் எடுத்துக்கொள்ளலாம்.

மனிதன் ஒரு 'முட்டைப் புழுவாகப்' பிறக்கி றான். துரதிர்ஷ்டவசமாக பலர் முட்டைப் புழுவா கவே இறந்து போகின்றனர், வெகு சிலர் கம்பளிப் புழுவாக வளர்கின்றனர். முட்டைப் புழு அசை யாதிருக்கும், அது அசைவறியாத ஒன்று, ஓரிடத் திலேயே ஒரே நிலையிலேயே இருக்கும். வெகு சிலர் கம்பளிப் பூச்சிகளாகின்றனர், கம்பளிப்பூச்சி நகரத் தொடங்குகிறது. இயக்காற்றல் தொடங்கு கிறது. முட்டைப் புழு நிலையானது. கம்பளிப்புழு நகர்கின்றது. அசைவின் காரணத்தினால் உயிர் அதிர்வு ஏற்படுகிறது. ஆனால் இன்னும் பலர் கம் பளிப்பூச்சிகளாகவே தொடர்கின்றனர். அவர்கள் தொடர்ந்து அதே கிடைநிலைக் கோட்டிலேயே, அதே பரிமாணத்திலேயே தொடர்வர். வெகு அரி தாகவே புத்தரைப் போன்ற ஒருவர், அல்லது ஏசு அல்லது ஜலாலுதீன் ரூமி அல்லது கபீர் போன்ற வர் அந்த பெரும்தாவலை எடுத்து ஒரு பட்டாம்பூச்

சியாக மாறுவர். அதன் பிறகே செங்குத்து உள்ளே வருகிறது.

முட்டைப்புழு நிலையானது; கம்பளிப்புழு நகர்வது, அது அசைவறியும்; பட்டாம்பூச்சி பறக்கக்கூடியது, உயரங்கள் அறியும். அது மேலே போகத் தொடங்குகிறது. பட்டாம்பூச்சி இறக்கைகளை வளர்த்துக் கொள்கிறது; அந்த இறக்கைகள்தான் இலக்கு. நீங்கள் இறக்கைகளை வளர்த்துக் கொண்டு ஒரு இறக்கையுடைய மெய்மையாக உருவாகாவிட்டால் உங்களுக்கு ஆன்மா இருக்காது.

உண்மை மூன்று நிலைகளில் அறியப்படுகின்றது. செமிக்கச்செய்தல் அல்லது தன் இயலாகுதல், சுதந்திரம் மற்றும் படைப்பாற்றல். இந்த மூன்று வார்த்தைகளையும் நினைவில் வைத்துக் கொள்ளுங்கள். அவை கருச் செறிவு வாய்ந்தவை, செமிக்கச் செய்தல், முட்டைப்புழுவின் வேலை இதுதான். அது வெறுமனே உணவை செரித்துக் கொண்டு இருக்கிறது, அது ஒரு கம்பளிப் புழுவாக மாற தன்னை தயார்படுத்திக் கொண்டு இருக்கிறது. அது ஏற்பாடு செய்து கொண்டு இருக்கிறது, பின் பயன் கருதிச் சேகரிக்கப்பட்ட ஒரு தொகுதி. சக்தி தயாரானதும் அது கம்பளிப் புழுவாகிவிடும். நகர்வதற்கு முன்னால் அதற்கான பெரும் சக்தி உங்களுக்குத் தேவை.

அடுத்து இரண்டாவது விஷயம் தொடங்குகிறது: சுதந்திரம் அல்லது தற்சார்பு. முட்டைப்புழு கைவிடப்படுகிறது. இப்போது ஓரிடத்தில் இருக்க வேண்டிய அவசியமில்லை. ஆய்வுப் பயணத்திற்கான

நேரம் வந்துவிட்டது, துணிந்து செயல்படும் காலம் வந்துவிட்டது. உண்மையான வாழ்க்கை, அசை விலிருந்து தொடங்குகிறது, அதுதான் தற்சார்பு. முட்டைப்புழு சார்ந்து இருக்கும் ஒன்று, சங்கிலி யிடப்பட்ட கைதி போன்றது. கம்பளிப்புழு இந்தத் தளைகளை உடைத்துவிட்டது, நகரத் தொடங்கி விட்டது. இறுகிய பனி இளகிவிட்டது. முட்டைப்புழு இறுகிய நிலையுடையது, கம்பளிப்புழு அசைவைக் குறிக்கிறது, ஆறு போன்றது.

மூன்றாவதாக வருவது படைப்பாற்றல். சுதந்திர மாக இருப்பது மட்டுமே பெரிய விஷயமல்ல. வெறு மனே சுதந்திரமாக இருப்பதால் நீங்கள் நிறைவு கொள்ள மாட்டீர்கள். சிறையைவிட்டு வெளியில் வருவது நல்லதுதான், ஆனால் எதற்காக? சுதந்தி ரம் எதற்காக?

ஞாபகம் இருக்கட்டும். சுதந்திரத்திற்கு இரண்டு அம்சங்கள் உள்ளன. முதலாவது, எதிலிருந்து விடுதலை, எதற்காக இந்தச் சுதந்திரம். பலருக்கு முதல் வகைச் சுதந்திரமே கிடைக்கிறது. பெற் றோரிடமிருந்து, சர்ச் அமைப்பு போன்றவற்றிலி ருந்து விடுதலை. அது இதுவென்று எல்லா வித மான சிறைகளில் இருந்தும் விடுபட்டு சுதந்திரம் கிடைத்துவிட்டது. ஆனால் இது எதற்காக? இது மிகவும் எதிர்மறையான சுதந்திரம். எதிலிருந்தா வது விடுதலை என்பதை மட்டுமே நீங்கள் அறிந் திருந்தால், நீங்கள் உண்மையான சுதந்திரத்தை அறிந்து இருக்கவில்லை. நேர்மறைச் சுதந்திரம் அறியப்பட வேண்டும் - படைப்பதற்கான சுதந்திரம் - உளதாயிருப்பதற்கு சுதந்திரம், வெளிப்படுத்துவ தற்கு, உங்கள் பாட்டைப் பாடுவதற்கு, ஆடுவதற்கு

சுதந்திரம். இதுதான் மூன்றாம் நிலை. படைப்பாற்றல்.

இதன் பிறகுதான் கம்பளிப்புழு ஒரு இறக்கையுள்ள மெய்மையாகிறது, தேன் சுவைக்கத் தொடங்குகிறது, அதைத் தேடுகிறது, புத்தாய்வு செய்கிறது, கண்டுபிடிக்கிறது, உருவாக்குகிறது. இதனால்தான் பட்டாம்பூச்சி அழகு பெறுகிறது. படைப்பாற்றல் மிக்கவர்களே அழகாக இருக்கின்றனர், ஏனென்றால் படைப்பாற்றல் மிக்க மனிதர்கள் மட்டுமே வாழ்க்கையின் பேரழகை அறிவர்: அவர்களுக்குப் பார்ப்பதற்குக் கண்கள் உள்ளன, கேட்பதற்குக் காதுகள் உள்ளன. உணர்வதற்கு இருதயம் உள்ளது. அவர்கள் முழு உயிரோட்டத்துடன் இருக்கின்றனர். தங்கள் தீப்பந்தத்தை இருபுறத்திலிருந்தும் எரிய விடுகின்றனர். அதிகபட்ச நிலையில் ஆழ்ந்த செறிவுடன் வாழ்கின்றனர். அவர்கள் முழுமையில் வாழ்கின்றனர்.

அல்லது, நாம் ஃபிரெட்ரிக் நீட்ஷே சொல்லும் உருவகத்தைப் பயன்படுத்தலாம். அவர் மனிதனின் வாழ்க்கையை ஆன்மாவின் மூன்று தொடர் உருமாற்றங்களாகப் பிரிக்கலாம் என்று சொல்கிறார். முதலாவதை அவர் 'ஒட்டகம்' என்று அழைக்கிறார், இரண்டாவதை சிங்கம் என்றும் மூன்றாவதை 'குழந்தை' என்றும் அழைக்கின்றார். மிகவும் உட்பொருளுடைய உருவகங்கள்... ஒட்டகம், சிங்கம் மற்றும் குழந்தை.

ஒவ்வொரு மனித ஜீவனும் தன் சமுதாயத்தின் கலாச்சாரப் பாரம்பரியத்தை, அதாவது அவன் பண்பாடு, அவன் சமயம், அவன் மக்கள்

அனைத்தையும் உள்வாங்கிக் கொண்டு அதை செமிக்கச் செய்யவேண்டும். கடந்த காலம் தரும் அனைத்தையும் உள்வாங்கிக்கொள்ள வேண்டும், இதைத்தான் நீட்ஷே ஒட்டக நிலை என்கிறார். பாலைவனத்தைக் கடந்து செல்வதற்கேற்ப ஏரா ளமான அளவு உணவையும் தண்ணீரையும் தன் உடலில் சேர்த்து வைத்துக்கொள்ளும் ஆற்றல் உடையது ஒட்டகம். தனிமனிதனுக்கு இதே சூழ் நிலைதான். பாலைவனத்தைக் கடக்கவேண்டுமா னால் நீங்கள் கடந்தகாலம் முழுவதையும் உள் வாங்கிச் சேமித்துக் கொள்ள வேண்டும். ஞாபகம் வைத்துக் கொள்வதோ, வெறுமனே மனப்பாடம் செய்வதோ பயன்தரப் போவதில்லை... செமிக்கச் செய்தல் வேண்டும். மேலும், கடந்த காலத்தை ஒருவன் வெறுமனே மனப்பாடம் செய்வதின் கார ணம், அவனால் அதை உள்வாங்கிக்கொள்ள முடி யவில்லை என்பதே. கடந்த காலத்தை நீங்கள் முற் றிலும் உள்வாங்கிக் கொண்டீர்களானால் நீங்கள் கடந்த காலத்திலிருந்து விடுபடுகின்றீர்கள். நீங்கள் அதைப் பயன்படுத்திக்கொள்ள முடியும். ஆனால் அது உங்களைப் பயன்படுத்த முடியாது. அது உங்க ளின் உடைமை, ஆனால் நீங்கள் அதன் உடைமை அல்ல.

நீங்கள் உணவைச் செரித்து விட்டால், அதைப் பற்றிய ஞாபகம் தேவையில்லை. அது உங்களிடமி ருந்து வேறுபட்டு இல்லை. அது உங்களின் ரத்தம், எலும்பு, மஜ்ஜையாகிவிட்டது. அது நீங்களாகிவிட் டது.

கடந்த காலத்தை ஜீரணித்துவிட வேண்டும். கடந்த காலத்தைப்பற்றித் தவறு ஒன்றுமில்லை.

அது உங்களின் கடந்த காலம். அரிச்சுவடியிலிருந்து நீங்கள் தொடங்க வேண்டியதில்லை. ஒவ்வொரு தனிமனிதனும் ஆனா, ஆவன்னாவிலிருந்து தொடங்க வேண்டுமென்று இருந்தால் பரிணாம வளர்ச்சி என்பது அவ்வளவாக இராது. இதனால்தான் மிருகங்கள் வளர்ச்சியடையவில்லை. லட்சக்கணக்கான வருடங்களுக்கு முன்னர் இருந்தது போலத்தான் இன்றும் நாய் இருக்கிறது. வளர்ச்சியடையும் ஒரே விலங்கு மனிதன் மட்டும்தான். எங்கிருந்து இந்தப் பரிணாம வளர்ச்சி வருகிறது? அதற்குக் காரணம், கடந்தகாலத்தை உள்வாங்கிக் கொள்ளக்கூடிய ஒரே உயிரினம் மனிதன் மட்டும்தான். கடந்த காலம் சேமிக்கப்பட்டு விட்டால் நீங்கள் அதிலிருந்து விடுதலை பெறுகிறீர்கள். நீங்கள் சுதந்திரமாக இருக்கலாம், உங்கள் கடந்த காலத்தைப் பயன்படுத்திக்கொள்ளலாம், இல்லையென்றால் நீங்கள் பல அனுபவங்களைக் கடந்து வரவேண்டும். உங்கள் வாழ்க்கை வீணடிக்கப்படும்.

உங்கள் தந்தை மற்றும் முன்னோர்கள், அவர்களின் தந்தையர் என்று இவர்களின் தோள்கள்மீது நீங்கள் நிற்கலாம். மனிதன் ஒவ்வொரு மனிதனின் தோள்மீதும் தொடர்ந்து நிற்பதால்தான் அவன் உயரத்தை எட்ட முடிகிறது. நாய்களால் அதை அடைய முடியாது, ஓநாய்களால் அது முடியாது, அவர்கள் தங்களையே சார்ந்து இருக்க வேண்டும். அவர்கள் உயரம் என்பது அவர்களின் உயரம் மட்டுமே. உங்கள் உயரத்தில் புத்தர் உள்ளடங்கியிருக்கிறார். கிறிஸ்து, பதஞ்சலி, மோசஸ், லாவோட்சூ என பலரும் உள்ளடங்கியிருக்கின்றனர். எவ்வ

ளவிற்கு எவ்வளவு உள்வாங்கிக்கொள்கிறீர்களோ அந்த அளவு உயரமாக நீங்கள் நிற்பீர்கள். நீங்கள் மலை உச்சியிலிருந்து பார்க்க முடியும், உங்கள் பார்வை மகத்தானதாக இருக்கும்.

அதிகமாக உள்வாங்குங்கள். உங்கள் சொந்த மக்களால் நீங்கள் வரையறுக்கப்பட்டு இருக்கத் தேவையில்லை. இப் பூமியின் எல்லா மனிதர்களின் முழுக் கடந்தகாலத்தையும் உள்வாங்கிக் கொள்ளுங்கள். பூமியின் குடிமகனாக இருங்கள். கிறிஸ்தவர், முகமதியர், ஹிந்து என்று கட்டுப்பட்டு இருக்க வேண்டியதில்லை. எல்லாவற்றையும் உள்வாங்குங்கள். 'குரான்' உங்களுடையதுதான், 'பைபிளும்' உங்களுடையது, 'டல்மத்தும்' உங்களுடையது. அதுபோல, வேதங்களும், தாவோ தே சிங்கும் உங்களுடையதே. எல்லாவற்றையும் செரித்து விடுங்கள். எவ்வளவு அதிகமாக உள்வாங்குகின்றீர்களோ, அந்த அளவு உயரமான உச்சியை நீங்கள் அடைந்து, வெகு தொலைவில் பார்க்கலாம். தூர தேசங்கள் மற்றும் தூரக்காட்சிகள் உங்களுடையதாகும்.

இதைத்தான் நீட்ஷே ஒட்டக நிலை என்கிறார். ஆனால் இங்கேயே சிக்கிக் கொள்ளக்கூடாது. ஒருவர் முன்னேற வேண்டும். ஒட்டகம்தான் முட்டைப் புழு. ஒட்டகம் சேமித்து வைக்கும் ஒன்று. இந்நிலையில் சிக்கினால் ஒட்டகமாகவே இருப்பீர்கள், வாழ்க்கையில் அழகு மற்றும் ஆசிகளையும் அறியமாட்டீர்கள். என்றும் கடவுளை அறியமாட்டீர்கள். ஒட்டகத்தால் கடந்தகாலத்தை உள்வாங்கிக் கொள்ளமுடியும். ஆனால் பயன்படுத்த முடியாது.

தன் தனிப்பட்ட வளர்ச்சிப் பாதையிலே ஒட்டகம் சிங்கமாக மாற வேண்டிய காலம் வரும். 'நீ இதைச் செய்யலாகாது' என்று கட்டுப்பாடு விதித்த பூதத்தைக் கிழித்துப்போடச் சிங்கம் முனைகின்றது. மனிதனுக்குள் இருக்கும் சிங்கம் அதிகாரங்கள் அனைத்தையும் எதிர்த்துக் கர்ஜனை செய்கிறது.

சிங்கம் ஒரு எதிர்வினை, அது ஒட்டகத்திற்கு எதிரான பணியாமை. தனிமனிதன் உண்மையான பண்புகளுக்கு எல்லாம் மூலகாரணம் தன்னுடைய உள் ஒளிதான் என்பதை இப்போது கண்டுபிடிக்கிறான். தன் சொந்தப் படைப்பாற்றலுக்கான அடிப்படைக் கடமையைப் பற்றி அவன் உணர்கின்றான். சிலர் இந்தச் சிங்கத்தின் நிலையிலேயே தங்கி விடுவர். அவர்கள் விடாமல் தொடர்ந்து கர்ஜனை செய்து கொண்டே இருப்பார்கள். கர்ஜனையிலேயே ஓய்ந்து போய் விடுவார்கள்.

சிங்கமாவது நல்லதுதான், ஆனால் ஒருவன் இன்னும் ஒரு துள்ளல் எடுக்க வேண்டும். துள்ளிக் குதித்துக் 'குழந்தையாக' வேண்டும்.

நீங்கள் ஒவ்வொருவரும் குழந்தையாக இருந்திருக்கிறீர்கள். ஆனால் அறிந்தவர் கூறுவார், முதல் குழந்தைப் பருவம் பொய்யான பருவம். அது பால் பற்கள் போன்றது. அவை பார்ப்பதற்குதான் பற்கள்போல இருக்கும், ஆனால் பயனில்லை, அவை விழுந்துவிடும். அதன் பிறகு உண்மையான பற்கள் வளரும். முதல் குழந்தைப் பருவம் பொய்யானது, இரண்டாம் குழந்தைப் பருவம்தான் மெய்யானது. இரண்டாம் குழந்தைப் பருவம்தான் 'குழந்தையின் நிலை' அல்லது 'சன்னியாசியின் நிலை'

என்று அழைக்கப்படுகின்றது. இரண்டுமே ஒன்றைத்தான் குறிக்கின்றன. ஒரு மனிதன் முற்றிலும் மாசற்று ஆனால்தான், கடந்த காலத்திலிருந்து தன்னை விடுவித்துக் கொண்டால்தான் அவன் விடுதலை பெறுகிறான். அவன் கடந்தகாலத்திற்கு எதிராகக்கூட இருக்கக்கூடாது, நினைவில் கொள்ளுங்கள், இன்னும் கடந்தகாலத்திற்கு எதிராய் உள்ள மனிதன் உண்மையில் சுதந்திரமானவன் இல்லை. அவன் இன்னமும் சில குறைகள், வன்மங்கள், சில காயங்களைச் சுமந்து கொண்டிருக்கிறான். ஒட்டகம் இன்னமும் சுற்றிச் சுற்றி வருகிறது, அதன் நிழல் பின்தொடர்கின்றது.

சிங்கம் இருக்கின்றது, ஆனால் அது இன்னமும் ஒட்டகத்தைக் கண்டு பயப்படுகின்றது. அது திரும்பி வந்துவிடுமோ என்ற பயம்.

ஒட்டகத்தைப் பற்றிய பயம் முற்றிலும் விலகிய பிறகு சிங்கத்தின் கர்ஜனை நிற்கின்றது. அதன் பிறகு குழந்தையின் பாடல் பிறக்கின்றது.

இந்த மூன்று நிலைகளுக்குள்ளும் நீங்கள் ஆழமாக, மிகவும் நுழைநோக்குடன் செல்ல வேண்டும் என்று நான் விரும்புகிறேன், ஏனென்றால், அவை மிகை மதிப்புடையவை.

ஒட்டகத்தின் உள்வாங்கிக் கொள்ளும் நிலை என்பது ஒரு குழந்தை கருவறையில் இருப்பதுபோல. அது எதையும் செய்யாது, வெறுமனே தாயைத் தின்றுகொண்டே இருக்கும், மேலும் மேலும் பெரிதாகிக் கொண்டே வரும். வெளி உலகிற்குள் பாய்வதற்குத் தயாராகிக் கொண்டு இருக்கும். இப்பொழுதிற்கு குழந்தைக்கு வேறு

வேலையில்லை. தாயின் கருப்பையில் ஒன்பது மாதங்கள் வெறுமனே உண்டு உறங்குவது மட்டும் தான். இரண்டே செயல்கள்தான். குழந்தை பிறந்து பல மாதங்கள் வரையிலும் அது அதையேதான் செய்கின்றது. சாப்பிடுவதும், தூங்குவதும். மெல்ல மெல்லத் தூங்குதல் குறைந்து, உண்பதும் குறை யத் தொடங்கும். அது தயாராகிவிட்டது, தனிமனி தனாகத் தயாராகி விட்டது. ஒரு தனிமனிதனா கக் குழந்தை தயாரான கணமே கீழ்ப்பணியாமை உள்ளே நுழைகின்றது. குழந்தை முடியாது என்று சொல்லத் தொடங்குகிறது. 'ஆம் உரைத்தல்' படிப் படியாக மறைந்துபோகிறது. கீழ்ப்படிவு இறந்துபோ கிறது, பணியாமை பிறக்கின்றது.

ஒட்டகத்தின் நிலை என்பது உள்வாங்கிக் கொள்ளும் நிலையாகும். ஒட்டகத்திற்கு மறுத்துப் பேசத் தெரியாது. இல்லை, என்று ஒட்டகத்திற்குச் சொல்லிப் பழக்கமில்லை. அது அந்த வார்த்தை களைக் கேட்டதே இல்லை, மறுத்துப் பேசுவதின் மகிழ்ச்சியை அது அறிந்ததே இல்லை. அதற்கு ஆம் என்பது மட்டுமே தெரியும். அதன் 'ஆம்' ஆழமாக இருக்க முடியாது, ஏனென்றால், 'இல்லை' என்பதை அறியாமல் உங்கள் 'ஆம்' ஆழமாக இருக்க முடியாது. அது மேலோட்டமாகத்தான் இருக்கும். இல்லை என்பதை அறியாத மனிதன், எவ்வாறு உண்மையில் 'ஆம்' என்பதை அறிவான். அவன் சொல்லும் ஆம் செயலற்றது, ஆண்மை யற்றது. அதேபோல், ஒட்டகத்தின் 'ஆம்' என்பதும் ஆண்மையற்றது. ஒட்டகத்திற்கு என்ன நடக்கின் றது என்பது தெரியாது, அது 'ஆம்' என்று சொல் லிக் கொண்டேயிருக்கும். ஏனென்றால், அதற்குக்

கற்றுக் கொடுக்கப்பட்ட ஒரே வார்த்தை அதுதான். கீழ்ப்படிதலும், நம்பிக்கையும் ஒட்டக நிலை என்று அழைக்கப்படுவதின் பண்புகள். ஞான மரத்திலி ருந்து பழத்தைத் தின்பதற்கு முன் ஆதாம் இந்த நிலையில்தான் இருந்தான். ஒவ்வொரு மனித ஜீவனும் இந்த நிலையைக் கடந்து போகின்றனர்.

இது மனதிற்கு முந்தைய, மற்றும் சுயத்திற்கு முந்தைய நிலையாகும். இன்னும் மனம் உருவா கவில்லை. மனம் வளர்ந்து கொண்டிருக்கிறது. ஆனால் முழுமையடையவில்லை. மிகவும் தெளி வற்று இருக்கிறது. இருண்டு மங்கலாக இருக்கி றது. சுயம் பயணித்துக் கொண்டிருக்கிறது, ஆனால் இன்னும் வழிப்பாதையில்தான் உள்ளது. தெளி வான விளக்கங்கள் இல்லை. குழந்தை தன் னைத் தனியாக உணரவில்லை. பழத்தைச் சாப் பிடுவதற்கு முன் ஆதாம் கடவுளின் ஒரு பகு தியாக இருந்தான். அவன் கருவறையில் இருந் தான், அவன் கீழ்ப்படிந்தான், 'ஆம்' என்பவனாக இருந்தான், ஆனால் அவன் சுதந்திரமாக இல்லை. 'இல்லை' என்ற வாயிலின் மூலமாகத்தான் சுதந் திரம் உள்ளே நுழைகின்றது. 'ஆம்' என்ற கருவி யின் வழியாகச் சார்ந்து இருத்தல் வருகிறது. ஆக, ஒட்டக நிலையில் சார்ந்து இருத்தல் மற்றும் ஆற் றாமை இருக்கிறது. உங்கள் சுயத்தை விட மற்றது முக்கியமாக இருக்கும். கடவுள் அதிக முக்கியமாக இருப்பார். தாய், தந்தையர் சமுதாயம் அதிக முக்கி யமாக இருப்பார்கள், பூசாரியும், அரசியல்வாதியும் அதிக முக்கியத்துவம் வாய்ந்தவர்களாக இருப்பர். உங்களைத் தவிர மற்றெல்லோரும் முக்கியமான வர்களாக இருப்பார்கள், மற்றதே முக்கியம், நீங்

கள் இன்னும் அங்கில்லை. இது ஒரு பிரக்ஞையற்ற நிலை. பெரும்பாலான மனிதர்கள் இந்நிலையில் சிக்கியுள்ளனர். அவர்கள் ஒட்டகங்களாக இருக்கின்றனர். கிட்டத்தட்ட தொண்ணூற்றி ஒன்பது சதவீத மக்கள் ஒட்டகங்களாகவே இருக்கின்றனர்.

இது வருந்தத்தக்க நிலையாகும் - தொண்ணூற்றி ஒன்பது சதவீத மனிதர்கள் முட்டைப் புழுவாகவே இருப்பது. இதனால்தான் இந்த அளவு துன்பமும் மகிழ்ச்சியின்மையும் நிலவுகிறது. நீங்கள் ஓயாமல் மகிழ்ச்சியைத் தேடிக் கொண்டிருக்கிறீர்கள், ஆனால் அதைக் கண்டுபிடிக்க முடியாது, ஏனென்றால் மகிழ்ச்சி அங்கே வழங்கப்படுவதில்லை. நீங்கள் ஒரு குழந்தையாய் மாறினால்தான், மூன்றாம் நிலையை எட்டினால்தான் முடியும். நீங்கள் ஒரு பட்டாம்பூச்சியாய் மாறினால் ஒழிய உங்களால் மகிழ்ச்சியை அறிய முடியாது. வெளியே கிடைப்பதல்ல மகிழ்ச்சி, அது உங்களுக்கு உள்ளே வளரும் ஒரு தரிசனம். அது மூன்றாவது நிலையில் மட்டுமே சாத்தியம்.

முதல் கட்டம் துன்பகரமானது, மூன்றாவது பரவச நிலை. இந்த இரண்டிற்கும் இடையேயுள்ளதுதான் சிங்கத்தின் நிலை. அது சில சமயங்களில் துன்பமாக இருக்கும். மற்ற சமயங்களில் ஆனந்தம் தரும். சில சமயங்களில் வலி உண்டாக்கும், வேறு சமயங்களில் மகிழ்வைத் தரும்.

ஒட்டக நிலையில் நீங்கள் கிளி போன்றவர்கள், வெறுமனே ஞாபகங்கள் மட்டுமே, வேறு எதுவும் இல்லை. உங்கள் முழு வாழ்க்கையும் மற்றவர்கள் தந்த நம்பிக்கைகளால் நிறைந்தது. இங்

குதான் நீங்கள், கிறிஸ்துவர்கள், மொகமதியர்கள், ஹிந்துக்கள், ஜைனர்கள் மற்றும் புத்தர்களைக் காண்பீர்கள். கிறிஸ்தவ தேவாலயங்கள், கோயில் கள், மசூதிகளுக்குச் செல்லுங்கள், அங்கே பெரும் திரளான ஒட்டகங்களைக் காண்பீர்கள். ஒரு மனித ஜீவனையும் பார்க்க முடியாது. அவர்கள் கிளிப்பிள் ளைபோல் சொன்னதையே சொல்லிக் கொண்டி ருப்பார்கள்.

நான் ஒரு கதை கேள்விப்பட்டிருக்கிறேன். இடைநிலை காலத்தின்போது உள்ளூரில் இருக் கும் புராண விலங்குகளைக் (டிராகன்) கொல்வ தற்கு பயிற்சி தரும் பள்ளி ஒன்றில் பயிற்சி பெற்றுக் கொண்டிருந்தான் பெரும் வீரன் ஒருவன். மெர் லின் எனும் மந்திரவாதி நடத்திய இப்பள்ளியில் பல இளம் வீரர்கள் பாடம் கற்றுக் கொண்டிருந்தனர்.

முதல் நாள் நம் வீரன் மெர்லினிடம் சென்று, தான் பாடம் சரியாக கற்றுக்கொள்ள முடியாது என் றும் தான் ஒரு கோழை, டிராகனை கொல்வதற்கு துணிவு இல்லை என்றும் கூறினான். கவலைப் பட வேண்டாம் டிராகனைக் கொல்லும் பிரத்தியேக மந்திர வாள் இருப்பதாகவும், அதை இந்த பயந் தாங் கொள்ளி வீரனுக்கு தருவதாகச் சொன்னார் மெர்லின். இந்த வாள் கொண்டு எந்த விலங்கை யும் வீழ்த்தலாம், தோல்விக்கே இடமில்லை என் றும் சொன்னார்.

முதல் பயணத்திலிருந்தே மந்திர வாளைக் கொண்டு பல விலங்குகளைக் கொன்று, பாவையர் பலரை மீட்டான் வீரன்.

பாடத்திட்டம் முடியும் தறுவாயில் மெர்லின் திடீ ரென மாணவர்களுக்கு ஒரு பரீட்சை வைத்தார். மாணவர்கள் களத்திற்குச் சென்று, அன்றே ஒரு டிராகனைக் கொல்ல வேண்டும். தங்கள் வீரதீரத் தைக் காட்ட இளம் வீரர்கள் எல்லோரும் ஓடினர். நம் கோழை வீரனும் சிறைபிடிக்கப்பட்ட ஒரு இளம் பெண்ணைக் காப்பாற்ற ஒரு குகை முன் நின்று கொண்டிருந்தான். வாயிலிருந்து நெருப்புக் கக்க விலங்கு வெளியே பாய்ந்தது. வீரன் வாளை ஓங்கி வெட்டப் போகையில், தான் தவறான வாளைக் கொண்டு வந்து இருப்பதை உணர்ந்தான், இது மந்திரவாள் இல்லை, ஆனால் நிறுத்துவதற்கெல் லாம் நேரமில்லை. ஓங்கிய வாளை பயிற்சிபெற்ற லாவகத்துடன் விலங்கை நோக்கி வீசினான், ஆச் சரியம் மற்றும் மகிழ்ச்சி தரும்படி விலங்கின் தலை துண்டானது.

விலங்கின் தலையை இடுப்பில் கட்டிக்கொண்டு, தான் காப்பாற்றிய இளம் பெண்ணை இழுத்துக் கொண்டு வகுப்பிற்கு வந்தான். தவறான வாள் பற் றியும் விளக்குவதற்கு கல்லாத மீட்பை பற்றியும் மெர்லினிடம் விவரித்தான். வீரன் சொன்னதைக் கேட்ட மெர்லின் சிரித்தார். "இதற்குள்ளாக யூகித் திருப்பாய் என்று நினைத்தேன், எந்த வாளுமே மந் திர சக்தியுடையதல்ல, ஒரே மந்திரம் நம்பிக்கை கொள்வதுதான்" என்றார் மெர்லின்.

நம்பிக்கை எனும் மந்திரத்தால் வாழ்கிறது ஒட் டகம். அது வேலை செய்கிறது. அது மாயங்களை நிகழ்த்தும். ஆனால் ஒட்டகம் ஒட்டகமாகத்தான் இருக்கும். வளர்ச்சி இருக்காது.

கோயில்களிலும் தேவாலயங்களிலும் பிரார்த் தனை செய்யும் மனிதர்கள் நம்பிக்கையின் தாக் கத்தில் செயல்படுகின்றனர். அவர்கள் கடவுள் என்பது என்ன என்று அறியமாட்டார். அது போன்ற எதையும் உணர்ந்ததில்லை. அவர்கள் நம்பிக்கை மட்டுமே கொள்கின்றனர். நம்பிக்கை எனும் மாயம் அவர்களுக்காகச் சில விஷயங்களைச் செய்து கொண்டே இருக்கிறது, ஆனால் அவை எல்லாமே பாசாங்கு. ஒரு வகையான கனவு உலகம். அவர் கள் தங்கள் தூக்கத்திலிருந்து, தங்கள் உணர் வற்ற நிலையிலிருந்து வெளிவரவில்லை. ஞாப கம் இருக்கட்டும் இந்தக் கட்டம் தேவையில்லை என்று நான் சொல்லவில்லை. அது முற்றுப்பெற்று விட்டால், அதிலிருந்து வெளிவரவேண்டும். அங் கேயே என்றென்றும் ஒட்டகம்போல் இருப்பதற்கு வரவில்லை.

மேலும், உங்கள் பெற்றோர், ஆசிரியர்கள் அல் லது குருமார்கள், அல்லது சமுதாயம்மீது கோபப் படாதீர்கள், ஏனென்றால் அவர்கள் ஒருவகையான கீழ்ப்படிதலை உங்களுக்குள் உருவாக்க வேண் டும். கீழ்ப்படிதலின் மூலமாகத்தான் நீங்கள் உள் வாங்கிக் கொள்ள முடியும். அப்பா, அம்மா கற்றுக் கொடுக்க வேண்டும், குழந்தை வெறுமனே உள் வாங்கிக் கொள்ள வேண்டும். உரிய காலத்திற்கு முன்னரே சந்தேகங்கள் தோன்றுமானால் உள் வாங்குதல் நின்றுவிடும்.

தாயின் கருப்பையில் இருக்கும் ஒரு சிசுவிற்குச் சந்தேகம் வருவதைப் பற்றி யோசித்து பாருங் கள் - அது இறந்துவிடும் - இந்தப் பெண்ணிட மிருந்து உணவு எடுத்துக் கொள்ளலாமா வேண்

டாமா? இந்த உணவு உண்மையிலேயே ஊட்டச் சத்து நிறைந்ததா? யாருக்குத் தெரியும் அது நச்சுத் தன்மை உடையதாகக்கூட இருக்கலாம்? இருபத்திநான்கு மணி நேரமும் தூங்கலாமா? தொடர்ந்து இருபத்திநான்கு மணி நேரம், ஒன்பது மாதங்களுக்கு தூங்குவதா? இது ரொம்ப அதிகமாகப்படுகிறதே. இப்படி குழந்தை கருவிலே சந்தேகப்படுமானால் அந்தச் சந்தேகமே குழந்தையைக் கொன்றுவிடும். ஆயினும், அந்தச் சந்தேகம் வரவேண்டிய நாள் வரும், அதைக் கற்றுக்கொள்ள வேண்டும், ஒவ்வொன்றிற்கும் ஒரு காலம் உள்ளது.

கார்ல் சான்ட்பர்க் எழுதிய இந்த அழகான கவிதையைக் கேளுங்கள்.

அவர் மகனுக்கு என்ன சொல்வார்?

தன் மகன் முழு வளர்ச்சிப் பருவம் எட்டுவதைக் காண்கின்றார் தந்தை.

அவர் அந்த மகனுக்கு என்ன சொல்வார்?

"வாழ்க்கை கடினமானது; எஃகாய் இரு, பாறையாய் இரு"

இது அவனைப் புயல்களிலிருந்து காப்பாற்றும், மாறுபாடற்ற, சலிப்பூட்டும் சூழல்களில் அவனுக்கு உதவும்,

எதிர்பாராத வஞ்சனைகளின்போது வழிகாட்டும்.

சற்றே நெகிழ்வுற்றால் அவனை இறுக்கி விடும்.

"வாழ்க்கை மென்மையான களிமண் போன்றது, இலகுவாக இரு" கனிவாக இரு"

இதுவும் அவனுக்கு உதவக்கூடும்.

சவுக்கடிகள் தோல்வியுற்றபோதும், நாகரிகமற்ற வர் நயம் பெற்றுள்ளனர்.

போகும் வழிப் பாதையில் பூத்த மெல்லிய மலர் கூட பாறைகளைத் தகர்த்துள்ளது.

சில வேளைகளில் கட்டுறுதியும் நிச்சயம் கணக் காகும், அவ்வண்ணமே ஆசையும்.

அதுபோலவே ஒரு வளமிகு மென் தேவையும்

வளமான வேண்டுதலின்றி வாராதொன்றும்.

சொல்லுங்கள் அவனிடம், அதிகக் காசு மனிதர் கள் பலரைக் கொன்று

புதைத்தலுக்கு முன்னரே மடிந்துவிட்டனர் அவர்;

எளிய இல்லாக்குறை தீர்ப்பதும் தாண்டி இழியா ததாய்ப் பணத்தேடல்

நல்மனம் கொண்ட மனிதரையும் ஈரமில்லா வடி வற்ற புழுவாக உருமாற்றியுள்ளதே.

சொல்லுங்கள் அவனிடம், நேரம் ஒரு பொரு ளாக வீணடிக்கவும் படலாம்.

சொல்லுங்கள் அவனிடம் முட்டாளாக இரு- அவ்வப்போது,

முட்டாளாயிருந்ததில் வெட்கம் கொள்ளத் தேவையில்லை,

ஆயினும் கற்க வேண்டும் ஏதாயினும் ஒவ்வொரு தவறிலும்.

மலிவுத் தவறுகளை, யாவற்றையும் மறுமுறை செய்யாதிருக்க நம்பிக்கை வேண்டும்.

இதனால் அடையப் பெறலாம் முட்டாள்கள் பலர் கொண்ட உலகைப் பற்றிய ஆத்ம புரிதல்.

சொல்லுங்கள் அவனிடம் தனித்து இருக்க வேண்டும் பலமுறை. அப்போது தன்னையே எதிர்கொள்ளட்டும் அவன்.

எல்லாவற்றிற்கும் மேல் மற்றவர்களிடம் கூறும் சிறு பொய்கள் மற்றும் பயன்படுத்தும் காப்பு, கவசங்கள் எல்லாம் அவன்பால் இருந்தும்,

தன்னைப் பற்றிய பொய்கள் தன்னிடமே வேண் டாம் என்று சொல்லுங்கள் அவனிடம்.

உறுதியோடு இருப்பான் எனில், சொல்லுங்கள் அவனிடம் தனிமையே படைப்பாற்றல் மிக்க தென்று,

மேலும் சப்தமில்லாத அறைகளில் எடுக்கப்படு வதுதான் இறுதி முடிவுகள்.

சொல்லுங்கள் அவனிடம் மாறுபடுவது இயல் பாய், எளிதாய் வருமெனில்

மற்றவரிடமிருந்து மாறுபட்டு இருக்கட்டும் அவன்.

ஆழமான எண்ணங்கள் நாடிடச் சோம்பலான நாட்களை அவன் அனுபவிக்கட்டும்,

ஆழமாய் தேடட்டும், ஏனெனில் இயற்கையாய் பிறந்தவன் அவன்.

இதன்பிறகு அவனுக்குப் புரியலாம் ஷேக்ஸ் பியர், மற்றும் ரைட் சகோதரர்கள், பாஸ்டர், பாவ்லோவ், மிகேல் ஃபேரடே மற்றும் கட்டற்ற கற்பனைகள்,

மாற்றங்களை எதிர்க்கும் உலகிற்கு மாற்றங்க ளைக் கொண்டு வருவான். அவன் வேண்டிய மட்டும் தனிமையில் இருப்பான்.

தன் பணி என தான் அறிந்ததைச் செய்ய நேரமும் கொடுப்பான்.

ஒவ்வொரு தந்தையும் எதிர்கொள்ளும் பிரச் சினை: என்ன சொல்வது மகனிடம், ஒவ்வொரு தாயும் எதிர்கொள்ளும் பிரச்சினை, மகனிடம் கூறப்போவதென்ன? ஒவ்வொரு ஆசிரியரும் கவ லைப்படுவது புதிய தலைமுறைக்கு என்ன கற் றுக் கொடுப்பது? குழந்தைக்குக் கற்றுக்கொடுக்க வேண்டியதே ஏராளமாய் கொண்டு உள்ளது. கடந் தகாலம், பல பெருமைகள், புரிதலின் உச்சங்கள் பல, இறுதி முடிவுகள் பல.

முதல் கட்டத்தில் எல்லோரும் ஒரு ஒட்டகமா கத்தான் இருக்க வேண்டும். ஆமாம் என்பவர் கள், தருவதெல்லாவற்றையும் நம்புவோர், உள் வாங்கிச் சேமிப்பவர்கள். ஆனால் இது பயணத்தின் தொடக்கம் மட்டுமே, முடிவல்ல.

இரண்டாம் நிலை கடினமானது. முதல் நிலையை சமுதாயம் உங்களுக்குத் தருகிறது, அதனால்தான் கோடிக்கணக்கான ஒட்டகங்களும் வெகு சில சிங் கங்களுமே உள்ளன. நீங்கள் ஒரு முழுமையான ஒட்டகமான பிறகு சமுதாயம் உங்களை விட்டு

விலகும். அதற்குமேல் சமுதாயத்தால் ஒன்றும் செய்ய இயலாது. பள்ளிக்கூடம், கல்லூரி, பல்க லைக்கழகமென சமுதாயத்தின் வேலை அங்கே முடிகிறது. உங்களை ஒரு முழுமையான ஒட்டக மாக, சான்றிதழுடன் விட்டுச் செல்கிறது.

நினைவிருக்கட்டும், நீங்களாகவே ஒரு சிங்கம் ஆகின்றீர்கள். சிங்கமாக வேண்டாம் என்று நீங் கள் முடிவு செய்தால் என்றுமே சிங்கமாக மாட்டீர் கள். இதற்கான விளைவிற்குரிய பொறுப்பை தனி மனிதன் ஒவ்வொருவனும் ஏற்கவேண்டும். இது ஒரு சூதாட்டம். இது ஆபத்தானதும்கூட. ஏனென் றால், ஒரு சிங்கமாவதால் உங்களைச் சுற்றியுள்ள ஒட்டகங்களுக்குக் கோபம், எரிச்சல் உண்டாகும். மேலும் ஒட்டகங்கள் எல்லாம் அமைதி விரும்பும் விலங்குகள்; அவை எப்போதும் சமரசத்திற்குத் தயாரானவை. அவை இடைஞ்சலை விரும்பா தவை, உலகில் புதிதாய் எதுவும் நடப்பதை விரும் பாதவை. ஏனென்றால் புதியவை அமைதியைக் குலைக்கும். ஒட்டகங்கள் புரட்சியாளர்கள் மற் றும் எதிர் எழுச்சி செய்பவர்களுக்கு எதிரானவை. கருத்தில் கொள்ளுங்கள், பெரிய மாற்றங்களைக் கொண்டு வரும் சாக்ரடீஸ், கிறிஸ்து போன்றவர்க ளுக்கு எதிரல்ல. ஒட்டகங்கள் பயப்படும் விஷயங் களைப் பற்றிக் கேட்டால் நீங்கள் ஆச்சரியப்படுவீர் கள். நான் கேள்விப்பட்டிருக்கிறேன்.

1842 டிசம்பர் மாதம் சின்சினாட்டி நகரைச் சேர்ந்த ஆதாம் தாம்சன் என்பவர், அமெரிக்காவில் முதன் முதலாகக் குளியல் தொட்டியைக் கண்டுபிடித்து அதைப் பயன்படுத்தினார். தாம்சனின் குளியல் தொட்டி பற்றிய செய்தி விரைவாகப் பரவியது. இந்

தப் புதிய கண்டுபிடிப்பு குடியரசின் ஜனநாயக எளிமையைக் குலைத்துவிடும் என்று பத்திரிகைகள் எழுதின.

ம்ம்ம் யோசித்துப் பாருங்கள்... ஒரு குளியல் தொட்டி ஜனநாயகக் குடியரசின் நேர்மையைக் குலைத்துவிடும்... மூட்டுவியாதி, நுரையீரல் அழற்சி என்று பல நோய்கள் பற்றி மருத்துவர்கள் வருமுன் கூறினர். பனிக்காலத்தில் குளிப்பதினால் ஆரோக்கியமான மக்கட்தொகை எண்ணிக்கை குறையும் என்றனர் அறிவார்ந்த மனிதர்கள். சுதந்திரத்தின் தொட்டில் என்று அழைக்கப்பட்ட ஃபிலடெல்ஃபியா மாகாணம் நவம்பர் ஒன்று முதல் மார்ச் ஒன்று வரை குளிப்பதற்குத் தடை விதிக்க முயன்றது. 1845ல் மருத்துவர் ஆலோசனையின்றிக் குளிப்பதைச் சட்டவிரோதமாக்கியது பாஸ்டன் நகரம்.

ஹார்ட்ஃபோர்ட், பிராவிடன்ஸ் வில்மிங்டன் என்று பல நகரங்கள் குளிக்கும் பழக்கத்தைத் தடுக்க அங்கு தண்ணீர் வரிகளை விதித்தன. மாகாணத்திற்குள் கொண்டுவரப்படும் ஒவ்வொரு குளியல் தொட்டிமீதும் வருடத்திற்கு முப்பது டாலர்கள் வரி விதித்து குளியலின் முகத்தில் அறைந்தது வெர்ஜீனியா. ஆனால் 1922க்குள் வருடத்திற்கு 889,000 குளியல் தொட்டிகள் உற்பத்தியாகிக்கொண்டிருந்தன.

இப்பொழுது வாழ்ந்து கொண்டிருக்கும் மனிதர்களின் காலத்தில், குளியல் என்பது அவனுக்கு நல்ல விஷயம் என்பதைக்கூட மனிதன் அறியாதவனாய் இருக்கிறான் என்பதை நினைக்கும்போது,

வேறு எந்த விஷயத்தைப் பற்றிய அவன் மதிப்பீட்டுத் திறன் காரணமாக, மனிதன் முற்றிலும் நம்புவதற்கல்லாத வர்க்கத்தைச் சேர்ந்தவன் ஆகிறான். புதியவை எதுவானாலும் ஒட்டகம் அதை வெறுமனே எதிர்க்கும், எது என்று பிரச்சினையில்லை. அது சாதாரணமான குளியல் தொட்டியாக இருந்தாலும்கூட உங்கள் எதிர்ப்பிற்குப் பகுத்தறிவு விளக்கம் கூறுவார்கள்.

பண்டைய கிரேக்கத்தில் நெடுநாளைய பழக்கம் ஒன்று இருந்தது. பொது மன்றத்தில் ஒரு மனிதன் புதிய சட்டம் ஒன்றை முன்மொழிவதானால் கழுத்தில் சுருக்குக் கயிற்றை மாட்டி ஒரு மேடை மீதிருந்து உரைக்க வேண்டும். சட்டம் ஏற்றுக்கொள்ளப்பட்டால் கயிற்றை எடுத்து விடுவார்கள், தோல்வியுற்றால் மேடையை அகற்றிவிடுவார்கள்.

சிங்கங்கள் வரவேற்கப்படுவதில்லை. எல்லாவிதமான இடையூறுகளையும் சமுதாயம் உருவாக்கும். ஒட்டகங்கள் இவர்களைக் கண்டு அஞ்சுகின்றன. சிங்கம் இவர்களது வசதிக்கு இடைஞ்சலாக இருக்கிறது, தூக்கத்தைக் கெடுக்கிறது, கவலை தருகிறது. அவர்கள் சிங்கங்களாவதற்கு ஆசையை ஒட்டகங்களின் மனதில் ஏற்படுத்துகின்றனர் - இது தான் உண்மையான பிரச்சினை.

ஏசு ஏன் சிலுவையிலிடப்பட்டார்? ஏன் மஹாவீரர் நகரங்களுக்குள் வரக்கூடாது? மன்சூருக்கு ஏன் சிரச்சேதம்? இவர்கள் தொல்லை கொடுப்பவர்கள், தூக்கம் கெடுப்பவர்கள், கர்ஜித்துக் கொண்டே இருப்பார்கள். புத்தர் தன் பிரசங்கங்களை "சிங்கத்தின் கர்ஜனை" என்று அழைத்தார்.

ஒட்டகத்தின் முதல் படிநிலை, சமுதாயம் வழங்கியது. இரண்டாம் நிலை தனிமனிதன் அடைய வேண்டும். அடைவதினால் நீங்கள் ஒரு தனிமனிதனாவீர், நீங்கள் தனித்தன்மை வாய்ந்தவராவீர்கள். இனி நீங்கள் ஒத்துப்போகுபவர் அல்ல, மரபின் ஒரு பகுதியல்ல. முட்டைப் புழு கைவிடப்பட்டு கம்பளிப்பூச்சி ஆகின்றீர்கள், நகரத் தொடங்குகின்றீர்கள்.

சிங்கத்தின் நிலைக்குப் பின்வரும் பண்புக்கூறுகள் இருக்கின்றன. சுதந்திரம், மறுத்துக் கூறுதல், அதிகாரம், சமய நூல்கள், சர்ச், பிடிவாதக் கருத்து, அரசியல் அதிகாரம், அரசு என்று எல்லாவற்றிற்கும் எதிரான அடங்காமை. சிங்கம் எல்லாவற்றிற்கும் எதிரானது! அதற்கு எல்லாவற்றையும் தகர்த்து எறிந்துவிட்டு உலகைப் புதியதாய் படைக்க வேண்டும் என்ற விருப்பம். அதுவே அதன் நெஞ்சிற்கு உகந்த ஆசை. மகத்தான கனவுகளும், கனவு உலகுகளையும் மனதில் கொண்டது. ஒட்டகங்களுக்கு சிங்கம் பைத்தியம் போலத் தோன்றும். ஏனென்றால் ஒட்டகங்கள் கடந்தகாலத்தில் வாழ்கின்றன. சிங்கம் வருங்காலத்தில் வாழத்தொடங்குகிறது. ஒரு பெரும் இடைவெளி உருவாகின்றது. சிங்கம் வருங்காலத்தைப் பற்றி முன்னறிவிப்பு செய்கிறது, மேலும் கடந்தகாலம் அழிக்கப்பட்டால்தான் வருங்காலம் உள்ளே வர முடியும். பழையது இல்லாமல் போய், புதியதிற்கு இடைவெளி உருவாக்கினால்தான் புதியது வரமுடியும். புதியது உளதாயிருக்கும் பொருட்டு பழையது இறந்துபோக வேண்டும். ஆகவே எப்போதும் ஒட்டகத்திற்கும் சிங்கத்திற்கும் இடையே சண்டை. இதில் ஒட்டகம் பெரும்பான்

மையாக இருக்கிறது. சிங்கம் எப்போதோ ஏற்படும் ஒரு நிகழ்வு, அது ஒரு விதிவிலக்கு. ஆனால் விதி விலக்குதான் விதியின் இருப்பை நிரூபிக்கின்றது.

நம்பிக்கையின்மைதான் அதன் பண்புக்கூறு, சந் தேகமே அதன் பண்புக்கூறு. ஞானமரத்தின் பழத்தை தின்கிறான் ஆதாம். மனம் பிறக்கின் றது, சுயம் ஒரு தீர்க்கமான இயல் நிகழ்வாகிறது. ஒட்டகத்திற்கு நான் என்ற எண்ணம் இல்லை. சிங்கம் அகங்காரம் மிகுந்தது. ஒட்டகம் அகங் காரம் அறியாத ஒன்று. சிங்கம் அகங்காரம் மட் டுமே அறியும். இதனால்தான் நீங்கள் கவிஞர்கள், ஓவியர்கள், இசைக்கலைஞர்கள் போன்றவர்கள், எதிர் எழுச்சியுடையவர்களாக புரட்சியாளர்களாக இருப்பதைக் காண்பீர்கள். தான் என்ற எண்ணம் அதிகம் கொண்டவர்கள். அவர்கள் நாடோடிகள். அவர்கள் வாழ்க்கையை வாழ்பவர்கள், அவர்க ளுக்கு விருப்பமானவற்றைச் செய்பவர்கள், மற் றவரைப்பற்றி சிறிதும் கவலைப்பட மாட்டார்கள். மற்றவர் எக்கேடு கெட்டாலும் இவர்களுக்கு அக் கறையில்லை! எந்த அமைப்பிற்கும் கட்டுப்பட்ட வர் அல்ல, இருக்கமாட்டார்கள், அமைப்புகளிலி ருந்து விடுபட்டவர்கள். நகர்வும், சிங்கத்தின் கர்ஜ னையும் அகங்காரத்தின் அடையாளங்கள். பெரிய அளவு அகங்காரம் இருந்தால்தான் இதில் அவர் கள் இறங்க முடியும்.

கிழக்கில் நீங்கள் அதிகமான ஒட்டகங்களைக் காணலாம். மேற்கில் சிங்கங்கள் அதிகம். அத னால்தான் கிழக்கில் சரணாகதி எளிதாகிறது. மேற்கத்திய மனதிற்குச் சரணாகதி என்பது கடி னமாகப் படுகிறது. ஆனால் ஒன்றை நினைவில்

வைத்துக்கொள்ள வேண்டும். சரணாகதி கிழக்கத்திய மனதிற்கு எளிதில் வரும், அதனால்தான் அந்தச் சரணாகதிக்கு மதிப்புக் குறைவு. அவன் ஏற்கனவே சரணடைந்து விட்டான், இல்லை என்று மறுக்கத்தெரியாது, அதனால்தான் 'ஆம்' என்று கூறுகிறான்.

சரணாகதி மேற்கத்திய மனதிற்குக் கடினமான ஒன்று, அது ஒரு போராட்டம். ஆனால் மேற்கத்திய மனம் சரணடையும்போது பெரும் உருமாற்றம் ஏற்படுகின்றது. ஏனென்றால் அந்தச் சரணாகதி கடினமாகவும், இடர்கள் நிறைந்த ஒன்றாகவும் இருக்கும், கிழக்கில் சரணாகதி மலிவானது, மேற்கில் விலைமிக்கது. இங்கே வெகு சில துணிவு உள்ளவர்களுக்கே இது கட்டுப்படியாகும்.

சிங்கம் ஆவதற்கான வாய்ப்புகள் இனி இல்லை என்பதாலேயே கிழக்கு சரணாகதியை ஏற்கின்றது. அதை வசதியாகக் கருதுகிறது. சரணடைந்து கூட்டத்தோடு ஒன்றாகிவிடுவது. மேற்கு அகங்காரத்தை உருவாக்கிவிட்டது. மேற்கு சிங்கத்திற்கு அதிக முக்கியத்துவம் அளித்துவிட்டது, சந்தேகம், நம்பிக்கையின்மை, அகங்காரம் - ஆனால் மேற்கத்திய மனம் சரண் அடைந்தால், அங்கே பெரிய உருமாற்றம் ஏற்படுகின்றது.

கிழக்கத்திய மனம் சரணடைந்தாலும், ஒட்டகமாகவே இருக்கிறது. மேற்கத்திய மனம் சரணடைந்தால், 'குழந்தை' உருவாவதற்கு சாத்தியம் இருக்கிறது. சிங்கம் சரணடைந்தால் அது குழந்தையாகின்றது. ஒட்டகம் சரணடைந்தால், அது ஒட்டகமாகவே இருக்கிறது. நான் முரண்படுவது போலத் தோன்

றலாம். ஆனால் நான் சொல்வதை நீங்கள் புரிந்துகொண்டால் அவ்வளவு கடினமாக இருக்காது, அப்போது முரண்பாடு உண்மையில் முரண்பாடு போல் தோன்றாது. ஒவ்வொரு தனிமனிதனுக்கும் நான் என்ற எண்ணம் கற்றுக்கொடுக்கப்பட வேண்டும். பின்னரே அவன் அதைக் கைவிட வேண்டும். ஒவ்வொரு தனிமனிதனும் ஒரு 'அகங்காரமாக' உருப்பெற்று, பின்னர் அதைக் கைவிட வேண்டும், இல்லையென்றால் பயன்தராது.

ஒட்டகத்தின் நிலை உணர்வுநிலையற்றது. இரண்டாவது சிங்கத்தின் நிலை ஆழ் மனமானது, இது உணர்வற்ற நிலையைவிட மேம்பட்டது. அறிவு நிலை பற்றிய சில கணநேரத் தோற்றங்கள் வரத் தொடங்குகிறது. சூரியன் உதயமாகும்போது, நீங்கள் படுத்துறங்கும் இருண்ட அறைக்குள் சில ஒளிக்கதிர்கள் உள்ளே வருகின்றன. உணர்வு நிலையற்றது. இனி அவ்வாறு இல்லை. உணர்வற்ற நிலையில் ஒரு சிற்றதிர்வு ஏற்பட்டு இருக்கிறது. ஆனால், பெரிதாக ஒரு மாற்றமும் இல்லை. அதாவது ஒட்டகத்திலிருந்து சிங்கமாக மாறுவது. ஒட்டகம் தலைகீழாக நிற்கத்தொடங்கியவுடன், சிங்கமாகின்றது. ஒட்டகம் 'ஆம்' என்கிறது, சிங்கம் இல்லை என்கிறது. ஒட்டகம் கீழ்ப்படிகின்றது, சிங்கம் கீழ்ப்படிவதில்லை. ஒட்டகம் நேர்மையானது, சிங்கம் எதிர்மறைக் குணம் கொண்டது. ஒட்டகம் 'ஆம்' என்று அதிகமாகக் கூறியதினால் 'இல்லை' என்று சொல்வதை அடக்கி வைத்துள்ளது. ஒரு கட்டத்தில் 'ஆம்' மீது 'இல்லை' பழிவாங்க நினைக்கின்றது. மறுக்கப்பட்ட பகுதி பழிவாங்க முற்படுகின்றது.

அதன்பிறகு சக்கரம் அப்படியே சுழல்கிறது, ஒட்ட கம் தலைகீழாகத் திரும்பிச் சிங்கமாகிறது.

சிங்கத்திற்கும், ஒட்டகத்திற்கும் இடையே வித்தியாசம் பெரிது. ஆனால் இரண்டுமே ஒரு தளத்தில்தான் இருக்கின்றன. புழுக்கூடும் ஓர் இடத்தில் நிலையாய் உள்ளது; கம்பளிப்புழு நகரத் தொடங்குகிறது. ஆனால் அதே பூமியில்தான் உள்ளது. நகர்தல் பிறக்கின்றது. ஆனால் குணம் ஒன்றுதான். முதலானது சமுதாயம் கொடுத்தது. நீங்கள் ஒட்டகமாக இருப்பது, சமுதாயம் உங்களுக்களித்த பரிசு. நீங்கள் ஒரு சிங்கமாக இருப்பது, உங்களுக்கு நீங்களே அளித்துக் கொண்ட பரிசு. உங்களை நீங்களே நேசிக்காவிட்டால் இது சாத்தியமாகாது. ஒரு தனிமனிதன் ஆகும் விருப்பமில்லாவிட்டால், உங்கள் வழியில் தனித்தன்மை வாய்ந்தவராய் இல்லாவிட்டால், ஒட்டகத்திற்கு எதிராய் துணிந்து செயல்படாவிட்டால், நீங்கள் சிங்கமாக முடியாது.

ஆனால் இயங்கு முறையைப் புரிந்து கொண்டீர்களானால்... ஒட்டகத்தின் இதயத்திற்குள் சிங்கம் உருவாக்கப்படுகிறது. மீண்டும் மீண்டும் 'ஆம்' என்று சொல்வது, 'இல்லை' என்று சொல்ல மறப்பதினால். 'இல்லை' என்பது சேர்ந்து கொண்டேயிருக்கும். பின்பு ஒருநாள் 'ஆம்' என்று சொல்வது அலுத்துப் போகும்; ஒரு மாற்றத்திற்காவது 'இல்லை' என்று சொல்லத் தோன்றும். நேர்மறை சலிப்பூட்டும், அதன் சுவை சோர்வூட்டும் - வெறுமனே ஒரு மாறுதலுக்காக ஒருவர் 'இல்லை' என்பதைச் சுவைக்க விரும்புவார்.

இப்படியாகத்தான் முதல் முறையாக ஒட்டகம் சிங்கத்தைப் பற்றிக் கனவு காண்கிறது. ஒருமுறை 'இல்லை' என்பதைச் சுவைத்துவிட்டீர்களானால், சந்தேகத்தை, அவநம்பிக்கை கண்டுவிட்டால், மறுபடியும் நீங்கள் ஒட்டகமாக முடியாது. ஏனென்றால் அது அந்தளவு சுதந்திரத்தை மற்றும் விடுதலையை அளிக்கின்றது.

பெரும்பாலானோர் ஒட்டக நிலையிலேயே சிக்கிக் கொள்கின்றனர். ஒரு சிறுபான்மையினர் சிங்க நிலையில் தங்கிவிடுகின்றனர். பெரும்பான்மை என்பது பொதுமக்கள். சிறுபான்மை என்பது கற்றறிந்தோர் வகுப்பு. கலைஞர்கள், ஓவியர்கள், இசை வல்லுனர்கள், சிந்தனையாளர்கள், வேதாந்திகள், புரட்சியாளர்கள் யாவரும் இரண்டாம் நிலையில் தங்கிவிட்டவர்கள். ஒட்டகத்தைவிட இவர்கள் மேம்பட்டவர்கள், ஆனால் இலக்கு இன்னமும் எட்டப்படவில்லை. அவர்கள் இன்னும் வீடு வந்துசேரவில்லை.

மூன்றாம் நிலைதான் 'குழந்தை'.

கவனமாகக் கேளுங்கள்: முதல்நிலை சமுதாயத்தால் வழங்கப்பட்டது, இரண்டாவது தனிமனிதன் தனக்குத்தானே வழங்கிக்கொண்டது, மூன்றாவது நிலை, கம்பளிப்புழு பட்டாம்பூச்சியாவதற்கு அருகிலேயாவது வரவேண்டும், இல்லையெனில் அது சாத்தியப்படாது. தானே பறக்க முடியும் என்று எப்படி ஒரு கம்பளிப்புழுவால் நினைத்துப் பார்க்க முடியும்? எப்படி இறக்கைகள் கொண்டு பறக்க முடியும் என்று கற்பனை செய்ய முடியும்? அப்படி நினைத்துப் பார்ப்பது நடக்காத காரியம். கம்பளிப்புழுவிற்கு

எப்படி நகர்வது என்று தெரியும், ஆனால் பறப்பது அபத்தமானது, அது தர்க்க ரீதியாக முரண்பட்டது.

பட்டாம்பூச்சிகள் கம்பளிப் புழுக்களுக்குப் பறக்கக் கற்றுக்கொடுப்பதைப் பற்றிக் கேள்விப்பட்டு இருக்கிறேன், அவை மறுப்பு கூறும். "இல்லை, உனக்கு அது சாத்தியமாகலாம், ஏனென்றால் நீ ஒரு பட்டாம்பூச்சி, நாங்கள் வெறும் கம்பளிப்பூச்சிகள் தாம், எங்களால் முடியாது" ஊர்ந்து போகிறவனுக்கு பறப்பதைப்பற்றி எப்படிக் கற்பனை செய்ய முடியும்? அது முற்றிலும் வேறுபட்ட பரிமாணம், அது செங்குத்தான பரிமாணம்.

ஒட்டகத்திலிருந்து சிங்கமாவது ஒரு பரிணாம வளர்ச்சி. சிங்கத்திலிருந்து குழந்தையாய் மாறுவது புரட்சி. இந்நிலையில் ஒரு குரு தேவைப்படுகிறார். சமுதாயம் உங்களை ஒட்டகமாக்கலாம், உங்களை நீங்களே சிங்கமாக்கிக் கொள்ள முடியும். ஆனால் அடுத்த நிலைக்குப் போக உங்களுக்கு ஒரு குரு வேண்டும். ஒரு புத்தர், ஏசு, ஒரு ரூமா வேண்டும் - இறக்கைகளுடைய ஒரு பட்டாம்பூச்சி உங்களுக்கு தேவை. இறக்கைகள் உள்ள அரிதான ஒன்றின் உதவியோடுதான் இறக்கைகள் பற்றிக் கனவு காணமுடியும். அறியாத ஒன்றைப் பற்றி நீங்கள் எப்படிக் கனவுகாண முடியும்? எங்கோ இமயமலையில் வாழும் ஒரு பழங்குடியினரால் ஒரு காரைப் பற்றிக் கனவுகாண முடியுமா? அவர்கள் அதைப் பார்த்ததேயில்லை. அவர்களால் அதைப் பற்றி யோசிக்க முடியாது. நீங்கள் ஒன்றைப் பார்த்திருந்தால்தான் கனவு சாத்தியமாகும் - நீங்கள் ஒரு ஏசு, புத்தர் அல்லது போதிதர்மரைப் பார்க்கும்போது. இது நடக்கக் கூடியது என்று அறிவீர்கள். இந்த மனி

தர்கள் உங்களைப் போன்றேயிருப்பார்கள். இருப்பினும் அவர்கள் உங்களைப் போன்றவர் அல்ல. அவர்களுக்கும் அதே உடல், அதே உடலமைப்பு தான். ஆயினும் அவர்களின் உயிருருவை ஏதோ ஒன்று அறியா இடத்திலிருந்து ஊடுருவியிருக்கிறது. அப்பால் உள்ளது அவர்களுக்குள் வந்துள்ளது. இந்த 'அப்பால்' தொட்டுணரத்தக்க வகையில் இருக்கிறது. நீங்கள் கருணையோடும் நேசத்தோடும் அணுகினால் அவர்களின் அகச் சூழலின் சில கணநேரத் தோற்றங்களைக் காண முடியும். அதை ஒருமுறை நீங்கள் கண்டுவிட்டால் பின்பு அதைப் பற்றிய கனவுகளைத் தொடங்கி விடுவீர்கள். ஒரு பெரும் அவா உங்களுக்குள் எழும். எவ்வாறு ஒரு இறக்கையுடைய - மெய்மையாவது? இறக்கையுடைய - மெய்மை?

இந்தத் தாக்கம்தான் குருவிடமிருந்து சீடனுக்கு வருகிறது. மூன்றாவது இயல் நிகழ்வு குருவின் மூலமாக நடக்கின்றது. 'குழந்தை' என்றாலே படைப்பாற்றல், கூட்டுச்சார்பு என்று பொருள்படும். இயல் உலகே கூட்டுச் சார்புடையது. எல்லோருமே ஒருவரை ஒருவர் சார்ந்து இருக்கின்றனர். எல்லாமே ஒன்றுதான்.

முழுமை உணர்வு பிறக்கின்றது. நான் என்பது இல்லை, நீ என்பது இல்லை. ஆம் அல்ல. எப்போதும் ஆம் என்றோ அல்லது இல்லை என்றோ சொல்ல வேண்டும் என்ற பிடிவாதம் இல்லை. அதிகமான இயல்பாக இயங்கும் நிலை, அதிக நெகிழ்வுத் தன்மை, கீழ்ப்படிதலும் இல்லை, எதிர்ப்பும் இல்லை. ஆனால் தன்விருப்பநிலை. பொறுப்பு பிறக்கின்றது. இயல் உலகிற்கு மறுமொழி

கூறுவதாகும், கடந்த காலத்தைக் கொண்டோ அல்லது எதிர்காலத்தை வைத்தோ எதிர்வினை யாற்றுவதல்ல.

'ஒட்டகம்' கடந்த காலத்தில் வாழ்கின்றது. 'சிங் கம்' வருங்காலத்தில் வாழ்கிறது. 'குழந்தை' நிகழ் காலத்தில் வாழ்கிறது, இங்கேயே - இப்பொழுதே. ஒட்டகம் மனதிற்கு முந்தையது, சிங்கம் என்பது மனம், குழந்தை மனதைக் கடந்தது. அதேபோல் ஒட்டகம் சுயத்திற்கு முந்தையது, சிங்கம் என்பது சுயம், குழந்தை சுயத்தைக் கடந்தது. மனமில்லா நிலை என்பதன் பொருள் இதுதான். சூஃபிக்கள் இதை 'ஃபானா' என்று அழைப்பார்கள். அகங்கா ரம் போய்விட்டது, மற்றது என்பதும் இல்லை. நீ - நான் என்பது எல்லாம் ஒரே சக்தியின் பகுதிதான். இரண்டுமே மறைந்து விடுகின்றன.

குழந்தை வருணனைக்கு அடங்காதது, விவரிக்க இயலாத ஒரு மர்மம், ஒரு அற்புதம். ஒட்டகத் திற்கு ஞாபகசக்தி இருக்கிறது, சிங்கத்திற்கு அறி வும் இருக்கிறது, குழந்தைக்கு ஞானம் இருக்கிறது. ஒட்டகம் கிறிஸ்தவன், ஹிந்து அல்லது மொகமதி யனாக இருக்கிறது, ஆத்திகனாக இருக்கிறது. சிங் கம் ஒரு நாத்திகன். குழந்தை ஆத்திகனோ நாத் திகனோ அல்ல, ஹிந்து, முஸ்லிம், கிறிஸ்தவனோ அல்லது கம்யூனிஸ்டோ அல்ல, குழந்தை வெறு மனே சமயப்பற்றுடன் இருக்கிறது, அது நேசம் மற் றும் மாசின்மை போன்ற பண்புக் கூறுகள் உடை யது.

ஆதாம் பழத்தைத் தின்று சிங்கமாகின்றான். ஞான மரத்தின் பழத்தைத் தின்பதற்கு முன்

ஆதாம் ஒட்டகமாக இருக்கிறான். ஆதாம் பழத்தைத் துப்பியவுடன், அறிவை விட்டவுடன் 'குழந்தையாகின்றான்'. குழந்தை என்றால் கிறிஸ்து. ஏசு கிறிஸ்து தன் சீடர்களிடம் மீண்டும் மீண்டும் சொல்வது 'வருந்து' அதாவது செய்ததற்கு மன வருத்தப்படு. ஹீப்ரு மொழியில் இது 'ரிபெண்ட்' என்று அழைக்கப்படுகிறது, அதாவது திரும்பிப்போ என்று பொருள். ஏடன் தோட்டம் உனக்காகக் காத்துக்கொண்டிருக்கிறது. அறிவு எனும் ஆப்பிள் பழத்தை வெளியே துப்பிவிட்டால், ஏடனின் கதவுகள் உனக்காகத் திறந்து விடப்படும்.

ஆதாம் பழத்தைத் தின்பதற்கு முன்னால் இருந்ததுதான் ஒட்டகம், தின்ற பின்பு சிங்கம். ஆதாம் வீடு திரும்பிய பிறகு, ஆதாம் கிறிஸ்து ஆன பிறகு ஆதாம் குழந்தையாகின்றான். புத்தர் அதை 'நிர்வாணம்' என்று, அழைக்கிறார். ஏசு அதை இறைவனின் ராஜ்ஜியம் என்கிறார். நீங்கள் எப்படி வேண்டுமானாலும் அழைத்துக் கொள்ளுங்கள். தாவோ, தம்மா, மோட்சம் - வார்த்தைகள் இங்கே பெரிதும் பொருள் கொள்ளாது. அது ஒரு வார்த்தைகளற்ற மௌனம், சிந்தனைகளற்ற மாசறுநிலை.

இப்போது கதைக்கு வருவோம்.

> *ஞானி ஒருவன், அவன் வாழ்ந்த காலத்தின் அற்புதம் ஆவான். வற்றாத ஞானச் சுரங்கத்திலிருந்து சீடர்களுக்கும் போதனை செய்பவன்.*

ஒவ்வொரு வார்த்தையிலும் உள்ள மறைபொருள் காணவேண்டும். ஞானி ஒருவன்... ஞானி என்பவன் யார்? - குழந்தை. ஞானம் என்றால்

அறிவு என்று பொருளாகாது. ஞானம் அறிவல்ல, அறிவு என்பது செல்லாக் காசு, அது வெறும் போலி ஞானம். அது கடன் வாங்கப்பட்டது, சேகரிக்கப்பட்டது. அது இறந்து போனது. ஞானம் என்பது உங்களுக்குள் எழுந்தது. அது உங்களுள் மலர்ந்தது. அது உங்கள் உயிருருவிலிருந்து வெளிவருவது. உங்கள் சொந்த மூலத்தில் உருவானது. அது உயிருள்ளது. ஞானம் என்பது நீங்களாகவே உண்மையைத் தெரிந்துகொள்வது. அறிவு என்பது மற்றவர் அறிந்து அல்லது அறியாமல் திரட்டி வைத்திருந்த விஷயங்களை நீங்கள் உள்வாங்கிக் கொள்வதாகும். யாருக்குத்தெரியும்? அது வெறும் நம்பிக்கை, அது வெறும் நினைவாற்றல், குப்பை.

ஞானி என்பவன் இறைவனுக்குள் நுழைந்தவன், வாழ்க்கையின் மர்மத்தை ஊடுருவியவன், மெய்மையை எதிர்கொண்டவனாவான். ஒரு ஞானி அறிவுடையவனாகவும் இருக்கலாம், இல்லாமலும் இருக்கலாம், அது ஒரு பொருட்டல்ல. ஞானத்திற்கும் அறிவிற்கும் எந்தத் தொடர்பும் இல்லை. ஏசு அறிவார்ந்த மனிதரல்ல. அவர் காலத்தில் வாழ்ந்த எந்த யூத குருவும் ஏசுவைவிட அறிவிற்சிறந்தவராய் இருந்திருப்பார். புத்தரும் பெரும் அறிவாளியல்ல. எந்த ஒரு பிராமணப் பண்டிதரும் அவரைவிட அதிகம் அறிந்தவராய் இருந்திருப்பர். புத்தர் வேதங்கள் பற்றி அதிகம் அறிந்தவர் அல்ல. அறிவு நினைவாற்றலின் மூலமாக வருவது, ஞானம் தியானத்தின் மூலமாகக் கிடைப்பது. இயந்திரத்திற்குக்கூட அறிவு சாத்தியப்படும், அதனால்தான் கம்ப்யூட்டர்கள் அறிவுடன் இருக்கின்றன. ஆனால் எந்தக் கம்ப்யூட்டரும் ஞானம் பெற்று

இருக்க முடியாது. ஞானியான கம்ப்யூட்டர் பற்றி நீங் கள் கேள்விப்பட்டு இருக்கிறீர்களா? அறிவுடைய கம்ப்யூட்டர் சாத்தியம்தான், மனிதனைவிட அதிக அறிவுடையது, அதிகத்திறமையுடையது, குறைவா கத் தவறுகள் செய்யக்கூடியது, உடனடி மற்றும் வேகம் கொண்டது. கேள்வி கேட்டால் பதில் வரும், ஆனால் ஏற்கனவே கம்ப்யூட்டருக்குத் தரப் பட்ட பதிலாகத்தான் இருக்கும். அது புதிதாக இருக்காது, சொந்தப் படைப்பாக இருக்காது, அது ஞானம் கொண்டு இருக்க முடியாது. அதை ஒரு மனித ஜீவனாக உங்களுடன் தொடர்பு படுத்திக் கொள்ள முடியாது. அது வெறுமனே உங்கள் கேள் விக்கு ஒரு பதிலாகத்தான் இருக்க முடியும். இந்த வேறுபாட்டைக் கவனியுங்கள்.

நீங்கள் என்னிடம் வந்தீர்களானால் உங்கள் கேள்வி அவ்வளவு முக்கியமல்ல, நீங்கள்தான் அதிக முக்கியம். உங்கள் கேள்விக்குப் பதில் கூறுவதென்பது உண்மையில் நான் உங்களுக்கு பதில் கூறவேண்டும் என்பதற்காகத்தான், கேள்வி இரண்டாம் பட்சம்தான். ஆனால் நீங்கள் ஒரு கம்ப்யூட்டர், அறிஞர் அல்லது ஒரு பண்டிதரி டம் போனீர்களானால், நீங்கள் ஒரு பொருட்டாக மாட்டீர்கள், கேள்விதான் அங்கு முக்கியம். அவர் உங்கள் கேள்விக்குப் பதில் கூறுவார். அறிவார்ந்த மனிதர் கேள்விக்குப் பதில் சொல்வார், ஞானியா னவர் கேட்பவருக்குப் பதில் கூறுவார். அறிவார்ந்த மனிதர் எப்போதும் மாறாது இருப்பார். நீங்கள் அவரிடம் "கடவுள் இருக்கிறாரா?" என்று கேளுங் கள், அறிவார்ந்த மனிதர் ஒரு உறுதியான பதிலை வைத்திருப்பார். அவர் நம்பிக்கையுள்ளவர் என்

றால் 'ஆம்' என்பார். கேள்வி கேட்பது யார் என்பது வித்தியாசத்தை ஏற்படுத்தாது.

ஒரு நாள் புத்தரிடம் ஒரு மனிதன், "கடவுள் இருக்கிறாரா?" என்று கேட்டான். "இல்லை" என் றார் புத்தர். அதே நாள் மதியம் வேறு ஒருவன் "கடவுள் இருக்கிறாரா?" என்று கேட்டான், அதற்கு புத்தர் "ஆம்" என்றார். அன்று மாலையே மூன்றா மவன் "கடவுள் இருக்கிறாரா?" என்று கேட்டான். புத்தர் மௌனம் சாதித்தார். இது கம்ப்யூட்டரால் முடியாத ஒன்று. தெரியும் அல்லது தெரியாது. கம்ப் யூட்டருக்கு விடை தெரியும், உங்களுக்கு அதை அளிக்கின்றது. ஏன் புத்தர் மூன்று மனிதர்களிடம் வெவ்வேறு விதமாய் நடந்து கொண்டார். அவரது சீடர் ஆனந்தனுக்கு குழப்பமாக இருந்தது, இதைப் புரிந்து கொள்ள முடியவில்லை. அவர் அந்த மூன்று பதில்களையுமே கேட்டிருந்தார். இரவில் புத்தரிடம் ஆனந்தன் கேட்டார், "என்னால் இன்று தூங்க முடியாது, கேள்வி ஒன்றேதான், ஆனால் நீங்கள் ஏன் வெவ்வேறு விதமாய் பதில் சொன் னீர்கள்? ஒருவனிடம் இல்லை என்றீர்கள், மற்றவ னிடம் ஆம் என்றீர்கள். மூன்றாவது மனிதனுக்கு பதில் சொல்லாமல் மௌனமாக இருந்துவிட்டீர் கள், கண்களையும் மூடிக்கொண்டீர்கள். ஏன்? துல்லியமாக அதே கேள்விதானே."

புத்தர் சொன்னார்: "ஆனந்தா, கேள்வி ஒன்று தான். ஆனால் கேட்பவர்கள் வெவ்வேறானவர்கள் அல்லவா. நான் கேள்வி கேட்டவர்களுக்கு பதில் சொன்னேன். ஒருவர் நாத்திகவாதி, கடவுளை அவர் நம்பவில்லை. அவர் தன்னுடைய நம்பிக் கையைப் பலப்படுத்துவதற்காக மட்டுமே வந்தார்.

அவர் நான் 'இல்லை' என்று பதில் சொல்ல விரும்பினார், இதனால் அவர் நம்பிக்கை உறுதிப்படும். நான் யாருடைய நம்பிக்கைக்கும் உதவ முடியாது. நம்பிக்கைகளை நான் தகர்க்க வேண்டும். அந்த மனிதரிடம் "ஆம் - கடவுள் இருக்கிறார்" என்றேன். ஏனென்றால் நம்பிக்கைகள் சற்றே அசைக்கப்பட்டால் ஒழிய யாரும் அறிய மாட்டார். மற்றொரு மனிதன் ஆன்மீகவாதி, கடவுள் நம்பிக்கையுள்ளவர். என் ஆதரவு வேண்டி வந்தவர். யாருடைய நம்பிக்கைகளுக்கும் ஆதரவளிப்பதற்கு நான் இங்கே இல்லை. அவற்றை அழிப்பதற்கே இங்கே இருக்கிறேன். இதனால் மனம் நம்பிக்கையிலிருந்து மீண்டு அறிதலில் எழ முடியும். அதனால்தான் நான் அவனுக்கு வேறொன்று சொல்ல வேண்டியிருந்தது; கடவுள் இல்லை என்றேன்.

"மூன்றாவது மனிதன் ஆத்திகனோ நாத்திகனோ அல்ல. ஆக, ஆம் அல்லது இல்லை என்ற பதில் தேவைப்படவில்லை. நான் மௌனமாக இருக்க வேண்டியிருந்தது. அவனுக்கு என் செய்தி, "நீ அமைதியாகிவிடு. நீ அறிவாய். வெறுமனே நான் செய்வதை நீ செய். கண்களை மூடி மௌனமாய் இரு, நீ அறிவாய். ஆம் அல்லது இல்லை என்று சொல்லக்கூடிய கேள்வி அல்ல அது. ஆழமான கேள்வி, நீ ஆழ் அமைதியில் மூழ்கினால் நீ அறிவாய். கேள்வி மறைந்தவுடன்தான் நீ அறிய முடியும்; அதன் பிறகு பதில் உன்னுள் எழும்.

இப்படிப்பட்டவர் ஞானி. இதை ஒரு கம்ப்யூட்டர், பண்டிதர் அல்லது இயந்திரத்திடமிருந்து எதிர்பார்க்க முடியாது.

*ஞானி ஒருவன், அவன் வாழ்ந்த காலத்தின் அற்புதம் ஆவான்.*

ஞானி எப்போதுமே ஒரு அற்புதம்தான், ஏனென்றால் ஞானி விவரிப்பிற்கு அப்பாற்பட்டவன். ஞானி மர்மமானவன். ஒரு ஞானியின் அருகாமை உங்களைத் தூரப் பயணங்களுக்கு அழைத்துச் செல்லும். ஞானியானவன் உங்களின் அற்புதம் உறுதிப்பட உதவி செய்வான். அவன் உங்களுக்கு அறிவு புகட்ட மாட்டான், அவன் உங்கள் அறிவை அழித்து, உங்கள் அற்புதத்தை வெளிக்கொண்டு வருவான். உங்களை மீண்டும் குழந்தையாக்குவான். உங்கள் உயிருருவை அற்புதங்களாலும் கவிதை, பாட்டு மற்றும் மர்மங்களால் நிரப்புவான்.

*ஞானி ஒருவன், அவன் வாழ்ந்த காலத்தின் அற்புதம் ஆவான். வற்றாத ஞானக் களஞ்சியத்திலிருந்து தன் சீடர்களுக்குப் போதனை செய்பவன்.*

ஞானம் வற்றாதது. அறிவு வற்றக்கூடியது. ஏனென்றால் ஞானியாக இருப்பதென்பது, முழுமையின் எல்லையற்ற மூலத்துடன் தொடர்பு கொண்டிருப்பதாகும். கடவுளுக்குள் இருப்பதென்றால் ஞானம் கொண்டு இருப்பதாகும். கடவுள் என்றும் வற்றிப்போகாத விஷயம். ஞானியானவன் ஒரு சமுத்திரம்: நீங்கள் வேண்டிய அளவு எடுத்துக் கொள்ளலாம், எதுவும் குறையாது, அவன் முன்னர் இருந்ததைப் போலவே இருப்பான். உங்களால் எல்லையற்றதைக் குறைக்க முடியாது. ஆனால் அறிவு என்பது வரையறைக்குட்பட்டது, அது இவ்வளவுதான்.

*பெருமதிப்புடன் வீற்றிருந்தது அவன் அறை யில் - அந்தப் பெருநூல். தன் அறிவ னைத்தையும் சமர்ப்பித்தான் அந்தப் பெரு நூலுக்கு.*

எதற்காகத் தன் அறிவை, ஒரு பெருநூலுக்கு ஞானி சமர்ப்பிக்கவேண்டும்? அதற்குக் காரணம் ஒட்டகங்கள்தாம். அவர் ஞானத்தின் மர்ம மூலா தாரத்தை அவை புரிந்து கொள்ளாது. அவர்கள் புரிந்து கொள்வதற்காக ஒரு பெரிய நூலை வைத் திருந்தார். ஞானி அவர்களிடம் சொல்வதுண்டு, "என் ஞானமெல்லாம் அந்த நூலில் இருந்து பெறப் படுகிறது" இது புரிந்துகொள்ளக்கூடியதுதான். என் ஞானம் வேதங்களிலிருந்து பெறப்பட்டது" என்று யாராவது சொன்னால் நீங்கள் புரிந்துகொள்வீர் கள், பழைய (விவிலிய) ஏற்பாட்டிலிருந்து, அல்லது யூத மத நூல் தல்மத்திலிருந்து பெறப்பட்டது என்று சொன்னால் நீங்கள் புரிந்து கொள்வீர்கள். ஆனால் யாராவது "என் ஞானம் எங்கிருந்தும் பெறப்பட வில்லை" என்று சொன்னால் புரிதல் ஏற்படுவ தில்லை. ஒட்டகத்திற்கு "எங்கிருந்தும் இல்லை" என்பதைப் புரிந்து கொள்ள முடியாது. ஒட்டகம் கட்புலனாகிற உலகில் வாழ்கிறது, கண்ணுக்குத் தெரியவேண்டும். அதற்கு புத்தகத்தைப் புரிந்து கொள்ள முடியும், இதயத்தைப் புரிந்துகொள்ளத் தெரியாது. கடவுள் பற்றிய கருத்துக்களைப் புரிந் துகொள்ளமுடியும், ஆனால் கடவுளையே புரிந்து கொள்ள முடியாது.

*பெருமதிப்போடு வீற்றிருந்தது அவன் அறையில் - ஏட்டைப் பிரிக்கத்தான் அனும தியில்லை எவருக்கும்.*

அது இயற்கைதான், ஏனென்றால் அதில் ஒன்று மில்லை. அது வெறுமையாக இருந்தது. அது மர்ம மாகவே வைக்கப்பட்டிருந்தது, யாருக்கும் அனும தியில்லை. காவலில் இருந்தது.

*அவன் மரித்தபோது, சுற்றியிருந்தோர் அனைவரும்*

*தாங்கள்தாம் அவன் வாரிசு என்று எண்ணி ஓடினர். நூலேட்டை பிரித்துப்படித்து*

*உள்ளிருப்பதை உடைமையாக்கிக் கொள் ளும் கவலை அவர்களுக்கு.*

இந்த ஒட்டகங்களைப் பாருங்கள்! உயிரோட் டத்தோடு மூலம் இருந்தது, ஆனால் நூலின் மீது இருந்த ஆர்வம் உயிருள்ள மூலத்தின்மீது இல்லை. இது போன்ற கோடிக்கணக்கான ஒட் டகங்கள் இருக்கின்றன, அவர்களுக்குப் புத்தகங் கள்மீதுதான் அக்கறை. அவர்கள் தங்களுடனே கீதை அல்லது பைபிளைச் சுமந்து செல்வார்கள். கீதையை மனப்பாடம் செய்வார்கள், அதையே திரும்பத் திரும்பச் சொல்வார்கள். அதே கீதை யைப் பலமுறை படிப்பார்கள். கிருஷ்ணரே அங்கே இருக்கலாம், ஆனால் அவர்கள் தொடர்ந்து புத் தகத்தைப் படித்துக் கொண்டிருப்பார்கள். அவர் கள் கிருஷ்ணரிடம், "எங்களைத் தொந்தரவு செய் யாதே" என்று சொல்வார்கள். நீங்கள் பைபிளைப் படித்துக் கொண்டிருக்கும் போது, ஏசு வந்தால்கூட, "சும்மா இருங்கள். நான் என் பைபிளைப் படித் துக் கொண்டிருக்கிறேன், பின்னர் வாருங்கள், இது நேரமல்ல, நான் பிரார்த்தனை செய்துகொண்டி ருக்கிறேன்" என்று சொல்வார்கள். சிரிக்காதீர்கள்.

இதுதான் சூழ்நிலை. மனிதர்கள் புத்தகத்தை அதிகமாகவே நம்புகின்றனர். உண்மையைவிட, புத்தகம், வார்த்தை அதிக முக்கியமாகி விடுகிறது. ஆக குரு இறந்தவுடன்,

*சுற்றியிருந்தோர் அனைவரும் தாங்கள்தாம்*
*அவர் வாரிசு என்று எண்ணி ஓடினர்...*

அவர்கள் இல்லை. ஒட்டகங்கள் வாரிசுகளாக இருக்க முடியாது. மூன்றாவது கட்டத்தில் ஒரு குழந்தையாக இருக்கும்போது மட்டும்தான் குருவின் வாரிசாக முடியும். அதற்கு முன்னால் அல்ல. ஒட்டகங்கள் தொடர்ந்து ஆம் என்று சொல்லிக் கொண்டேயிருக்கும். கீழ்ப்பணிவதினால் வாரிசுகளாகலாம் என்று அவை எண்ணுகின்றன. அது நடக்காது, ஏனென்றால் "இல்லை" என்று சொல்ல அவை இன்னும் கற்றுக்கொள்ளவில்லை.

ஒரு பிரபலமான கதை உள்ளது:

யூத குரு ஒருவர் தன் சீடன் ஒருவன் கடவுளின் இருப்பைப் பற்றி ஓயாத குற்றம் கண்டு பேசி வருவதைக் கேட்டார். குரு அவனை அழைத்துப் பேசினார். "நீ பைபிளின் இருபத்தி நான்கு புத்தகங்களையும் முழுமையாகப் படித்துவிட்டாயா?" என்று கேட்டார் குரு. சீடன் நேர்மையாக "எல்லாவற்றையும் இல்லை, நிச்சயமாக முழுமையாக அல்ல." அடுத்த கேள்வியாக, "தல்மாத் படித்துவிட்டாயா? அதன் அறுபது பகுதிகளையும் முடித்துஆகிவிட்டதா?" என்றார்.

"இல்லவே இல்லை" என்று பயத்துடன் சொன்னான் சீடன்.

"அப்படியானால் மகனே, சந்தேகப்படும் சிறப்புரிமையை எடுத்துக் கொள்ளும் அளவிற்கு நீ படிக்கவில்லை" என்று சொல்லி முடித்தார் குரு.

சந்தேகப்படுவது ஒரு சிறப்புரிமை. உள்வாங்கிக் கொண்டே இருந்தால் ஒழிய நீங்கள் ஒரு சிங்கமாக முடியாது. இல்லை என்று மறுப்பதற்கு, சந்தேகப்படுவதெல்லாம் சிறப்புரிமையாகும். அது நம்பிக்கை கொள்வதைவிட உயர்வான நிலையாகும். ஏனென்றால், எந்தக் கோழையும் நம்பிக்கையோடு நடந்து கொள்ள முடியும். இல்லை என்று மறுப்பதற்கும், சந்தேகம் உருவாக்குவதற்கும் துணிவு தேவைப்படுகிறது. இது எப்போதும் இப்படித்தான் இருந்திருக்கிறது; ஆத்திகர்கள் என்று அழைக்கப்படுபவர்கள் நாத்திகர்களைவிடக் கீழான ஆன்மீக நிலையில்தான் இருக்கிறார்கள். நாத்திகன் மறுத்துக் கூறினாலும் சற்றே உயர்நிலையில்தான் இருக்கிறான். அவன்தான் சிங்கம்.

இந்த மனிதர்கள் தங்கள் குருவைச் சொல்லுக்குச் சொல் மாறாமல் பின்பற்றியிருப்பார்கள்போல. இயல்பாகவே தாங்கள்தான் அவருடைய வாரிசுகள் என்று நினைத்துக்கொண்டிருந்தனர். புத்தகத்தைத் திறந்து பார்க்க ஓடினர். பல வருட காலம் குரு இவர்களோடு இருந்துள்ளார், இவர்கள் குருவைத்திறந்து பார்க்க ஓடவில்லை, அவர் இதயத்தினுள் பார்க்கவில்லை, அவரைப் புரிந்து கொள்ளவேயில்லை. அவர் மூலத்திலிருந்து பருகவேயில்லை. ஆனால் இப்போது குரு இறந்துவிட்டார், அவர்களின் முதல் ஆர்வமே புத்தகத்தில் என்ன எழுதியிருக்கிறது என்று தெரிந்து கொள்வதுதான்.

அவசியமற்ற அற்பமானவற்றின் மீது மக்கள் பற்றுக் கொண்டு இருக்கிறார்கள் என்பதைப் பாருங்கள்.

*நூலேட்டைப் பிரித்துப் படிக்க ஓடினர்*

*உள்ளிருப்பதை உடைமையாக்கிக் கொள் ளும் கவலை அவர்களுக்கு.*

ஒட்டகங்கள் ஒட்டகங்கள்தாம். அவர்களுக்கு அறிவாகவே ஆவதைவிட அறிவை உடைமையாக்கிக் கொள்வதில்தான் ஆர்வம் அதிகம். கொள்ளப்பட்ட பொருளைவிட கொள்கலத்தின் மீதே அவர்களுக்கு ஆர்வம் அதிகம். இப்போது 'கொள்ளப்பட்ட பொருள்' போய்விட்டது. விளக்கில் ஜோதியில்லை, அது மறைந்துவிட்டது, அவர்களுக்கு ஜோதியின்மீது ஆர்வம் இல்லை, விளக்கின்மீதுதான் நாட்டம். இனி என்றென்றும் விளக்கை வழிபட்டுக் கொண்டிருப்பார்கள். விளக்கிலிருந்து இனி ஒளி வராது. அவர்கள் குருவைத் தவறவிட்டதற்கு காரணம் அவர்களின் அறிவைப் பற்றிய கருத்து எல்லாமே உடைமை மட்டும்தான். நீங்கள் அறிவை உடைமையாக்கிக் கொள்ள முடியாது. அப்படிச்செய்தால் அது அறிவுடைமையாக்கிக் கொள்ளும் பண்பு மட்டுமே தவிர வேறில்லை. நீங்களே அறிவைத் தெரிந்து கொள்பவராகிவிட்டால் உங்களுக்கு அறிவு என்பது இல்லை. இருப்பதாகப் பாசாங்கு வேண்டுமானால் செய்யலாம்.

*ஆச்சரியம், குழப்பம் கூடவே ஏமாற்றமும் சூழ்ந்ததே*

*அவர்கள் கண்டதெல்லாம் ஒரு பக்க எழுத்து மட்டுமே.*

ஒட்டகங்களுக்கு எப்போதுமே அளவின் மீது தான் அக்கறை, தரத்தின் மீதல்ல. முழுப் புத்தக மும் எழுத்துக்களால் நிரப்பப்பட்டிருந்தால் அவர் கள் மிகவும் மகிழ்ச்சியடைந்திருப்பார்கள். ரசித்து இருப்பார்கள். ஆனால் ஒரு பக்கத்தில், அதுவும் ஒரு மூலையில் மட்டுமே எழுதப்பட்டு இருந்தது. மற்றபடி முழுப் புத்தகமும் வெறுமையாக இருந்தது.

ஆச்சரியம் குழப்பம் கூடவே ஏமாற்றமும் சூழ்ந்ததே

அவர்கள் கண்டதெல்லாம் ஒரு பக்க எழுத்து மட்டுமே.

நினைவிற்கொள்ளுங்கள், ஒட்டகத்தின் அக்க றையெல்லாம் அளவின்மீது. சிங்கத்தின் அக்கறை தரத்தின்மீது. குழந்தை இந்த இரட்டைத் தன்மை யைக் கடந்து போகிறது. குழந்தைக்கு அளவு அல் லது தரம் இரண்டைப் பற்றியும் அக்கறையில்லை. அது இருமைகளைக் கடந்து நிற்கின்றது.

அவர்தம் கண்கள் கண்ட வாக்கியத்தின் பொருள்

அறிந்திட முயன்றனர்.

அதனால் மேலும் தடுமாறினர், கோபமுற்ற னர்.

அங்கே சிறிதே எழுதப்பட்டிருந்தது, ஒரே வரி தான்.

அஃது இது: கொள்கலம் மற்றும் அதில் கொள்ளப்பட்ட பொருள் இவற்றின்

வேறுபாடு உணர்ந்தீரானால்

அடையப்பெறுவீர் அறிவுப்பொருள்.

நினைத்துப் பாருங்கள், நீங்கள் பலவருட கால மாக அந்தப் புத்தகத்தில் உள்ளதைப் பார்ப்பதற் காக ஆவலோடு காத்திருக்கிறீர்கள். பிறகு இப் படிப்பட்ட ஒன்றை எதிர் கொள்கிறீர்கள். நீங்க ளும் கோபப்பட்டு இருப்பீர்கள். இந்த குரு ஒரு ஏமாற்றுக்காரர், "என் ஞானமெல்லாம் இந்த நூலி லிருந்து பெறப்பட்டது" என்று தொடர்ந்து சொல் லிக்கொண்டே இருந்தார், ஆனால் அதில் ஒன்று மில்லை, வெறுமனே இந்த ஒற்றை வரிதான்.

ஆனால் இந்த ஒரு வரிதான் விதை. இதை நீங் கள் புரிந்துகொண்டால், உலகத்தின் சமய நூல்கள் அனைத்தையும் புரிந்துகொள்ளலாம். அனைத் துச் சமய நூல்களும் இதில் செறிவாக்கப்பட்டுள் ளது. குரான்கள், வேதங்கள், எல்லா பைபிள்கள் அனைத்தும் இந்த ஒரு வரியில் சுருக்கப்பட்டுள் ளது. மிகவும் ஆற்றல் வாய்ந்த ஒரு வரி. அதைப் பற்றி தியானம் செய்யுங்கள்.

கொள்கலம் மற்றும் அதில் கொள்ளப்பட்ட பொருள்

இவற்றின் வேறுபாடு உணர்ந்தீரானால் அடையப்பெறுவீர் அறிவுப்பொருள்.

ஒட்டகங்களுக்கு கொள்கலம் மீதுதான் ஆர் வம், கொள்கலம்தான் எல்லாமே, பொருளைப்பற் றிச் சிந்திப்பதில்லை. சிங்கங்கள் கொள்ளப்பட்ட பொருள்மீது மட்டுமே அக்கறை காட்டுகின்றன, கொள்கலத்தை எதிர்க்கின்றன. குழந்தை இரண் டையும் ஏற்றுக்கொண்டு, இரண்டையும் கடந்து

போகிறது. கொள்கலம் இல்லாமல் கொள்பொருள் இல்லை, மற்றும் கொள்ளப்பட்ட பொருள் இன்றி கொள்கலம் இல்லை என்பது குழந்தைக்குத் தெரியவருகிறது. கொள்கலம் ஒரு கொள்கலமாக இருப்பதற்குக் காரணம் அதில் கொள்ளப்பட்ட பொருள்தான். இரண்டும் இணைந்து போகக்கூடியவை. மனம் மற்றும் பொருள் ஒன்றாகவே இருக்கின்றன, அதேபோல் இறைவனும் இயல் உலகமும் ஒன்றாகவே இருக்கின்றன. இரண்டையும் பிரிக்க முடியாது.

நீங்கள் மலரை எறிந்து விட்டீர்களானால் அத்தோடு நறுமணத்தையும் வெளியே வீசுகின்றீர்கள், ஏனென்றால் உடலும் ஆன்மாவையும் போல இணைந்திருப்பவை. ஒட்டகம் சவத்தை மட்டுமே நம்புகிறது, ஆன்மாவையல்ல. ஒட்டகத்திற்கு ஆன்மா பற்றிய கருத்தேயில்லை. சிங்கம் ஆவியை நம்புகிறது, உடலை எதிர்க்கின்றது.

ஆனால் நீங்கள் இரண்டையும் கடந்து வந்து விட்டால், நீங்கள் ஆம் அல்லது இல்லை என்று சொல்வதைக் கடந்து விட்டால், நீங்கள் ஆத்திகம் அல்லது நாத்திகத்தைப் பிடிவாதமாகப் பற்றிக் கொண்டு இருப்பதை விட்டுவிட்டால், நீங்கள் பாரம்பரியம் அல்லது அதற்கு எதிரானவர் என்ற நிலையைக் கடந்துவிட்டால், அந்தக் கருத்துக்களையெல்லாம் கடந்து மாசற்றவராகும்போது, உங்கள் கண்ணாடி தூசிகள் இல்லாமல் பரிசுத்தமாகும்போது, நீங்கள் சிங்கம் அல்லது ஒட்டகத்தோடு உங்களை அடையாளப்படுத்திக் கொள்ளாதபோது, நீங்கள் ஒரு பிற்போக்கானவர் அல்லது புரட்சியாளர் என்றில்லாதபோது, நீங்கள் அங்கே

வெறுமனே இருக்கையில், ஒரு சலனமற்ற கண்ணாடியாகும்போது, அந்த நேரத்தில் கொள்கலமும் கொள்ளப்பட்ட பொருளும் ஒன்றாய் இருக்கின்றன என்பதை உணர்வீர்கள். கொள்கலம் கொள்ளப்பட்ட பொருள் இல்லையென்றாலும், கொள்ளப்பட்ட பொருள் கொள்கலம் இல்லை என்றாலும் இரண்டும் ஒன்றாய் இருக்கின்றன. அவற்றை ஒன்றாய் பார்க்கும் அதே வேளையில் அவை தனித்து இருக்கின்றன என்று உணரும் போது ஞானம் எழுகின்றது. ஒருவர் அறியப் பெறுகிறார்.

இறுதியாக, கோடிக்கணக்கான ஒட்டகங்கள் இருப்பதினால் பல குருமார்கள், மோசஸ், முகமதைப் போன்றோர் ஒட்டகங்களின் மொழியில் பேசியுள்ளனர். அப்படியானால்தான் ஒட்டகங்களால் புரிந்துகொள்ளமுடியும். அதில் பரிவன்பு இருக்கிறது, ஆனால் ஆபத்தும் உள்ளது. ஒட்டகங்கள் ஒட்டகங்களாகவே இருக்கும். வெகு சில குருக்களே பேசுவதற்கு சிங்கத்தின் மொழியைத் தேர்ந்தெடுத்திருக்கின்றனர். உதாரணமாக ஏசு, புத்தர். மொழிநடையைப் பொறுத்தவரையில் அது மோசஸ் அல்லது முகமது பயன்படுத்தியதைவிடச் சிறந்தது, ஆனால் அது பொதுமக்களால் புரிந்து கொள்ள முடியாதது. அதுதான் பிரச்சினை. ஒட்டகங்களால் அதை உள்வாங்கிக் கொள்ள முடியாது. ஒட்டகங்கள் கோபம் கொண்டதினாலேயே ஏசு கொல்லப்பட்டார். அறிவிற்கெட்டாத வேறு ஒரு மொழியை அவர் பேசிக்கொண்டிருந்தார். அவர்களுக்கு அது அர்த்தமற்றதாகப்பட்டது. இந்த மனிதன் ஒரு பைத்தியக்காரன்! யோசித்துப்பாருங்கள்,

ஒட்டகங்கள் நிரம்பிய ஒரு உலகில் சிங்கம் ஒன்று வந்து பேசத் துவங்குகிறது, ஒரு ஒட்டகத்திற்கும் ஒன்றும் புரியாது. ஏசு கொல்லப்பட்டபோது, அவருக்கு இருந்த பன்னிரண்டு சீடர்களும், அந்த கிறித்துவர்கள் எல்லோரும் ஒட்டகங்கள். ஏசு சிங்க மொழி பேசும் ஒரு குழந்தை, அவர்கள் ஒட்டகங்கள். இவர்கள் கிறிஸ்தவ மதத்தை உருவாக்கினார்கள். ஒட்டகங்கள் கிறிஸ்தவத்தை உருவாக்கியவுடன் அது உலக சமயமாகிவிட்டது.

குழந்தைக்குச் சொந்தமாக ஒரு மொழி கிடையாது. மாசற்ற நிலை வார்த்தைகளற்றது. ஆதலினால் தேவையின் காரணமாகக் குழந்தை சிங்கத்தின் மொழியைப் பேச வேண்டியிருந்தது. தன்னை வெளிப்படுத்துவதற்கு இவ்வளவு அருகில்தான் அவரால் வரமுடிந்தது. இது புத்தரின் காலத்தில் நடந்தது. புத்தர் சிங்கங்களின் மொழியில் பேசினார். நாடு இருந்த நிலையில் பல சிங்கங்கள் இருந்தன. அது உச்சகட்டம். அது இருண்ட பள்ளத்தாக்கல்ல, சூரிய ஒளி படர்ந்த மலைமுகடு. ஆயிரக்கணக்கான வருடங்களாய் இந்தியா உண்மையைத் தேடிக்கொண்டும், அதை ஆய்வு செய்துகொண்டும் அதை அறியவும், உண்மையை அடையவும் உழைத்துக் கொண்டு இருந்தது. பலர் புத்தரைப் புரிந்துகொண்டனர். புத்தரின் சீடர்கள் ஒட்டகங்கள் அல்ல, அவர்கள் சிங்கங்கள். ஏசுவின் சீடர்கள் ஒட்டகங்கள். ஏசு சிங்கத்தின் மொழி பேசும் குழந்தையாக இருந்தார். புத்தர் இறந்ததும் அவரின் சீடர்கள் அதிக உறுதியோடு இருந்தார்கள், ஒட்டகங்களோடு சமரசத்திற்கு தயாராக இல்லை. அவர்களுக்கு லஞ்சம் கொடுக்கப்பட்

டது, நிர்ப்பந்திக்கப்பட்டனர். ஆனால் அவர்கள் உடன்படவேயில்லை. அவர்கள் தொடர்ந்து கர் ஜித்துக் கொண்டே இருந்தார்கள். இந்தியாவிலி ருந்து பௌத்தம் வேரோடு பிடுங்கப்பட்டது. ஒட்ட கங்கள் இறுதியாக அதை அழித்தனர்.

பௌத்தர்கள் இந்தியாவிலிருந்து தப்பிச் சென்ற தில் ஒரு பாடம் கற்றுக்கொண்டனர்; ஒரு சமயமாக நிலைத்து இருக்கவேண்டுமானால் ஒட்டகத்தின் மொழியைப் பேசவேண்டும். சீனாவில் அவர்கள் புத்தரின் கர்ஜனையைக் கைவிட்டனர். ஜப்பான், கொரியா, சிலோன், பர்மா என்று பல நாடுக ளில் அவர்கள் ஒட்டகத்தின் மொழியைப் பேசத் தொடங்கினர். மகாயானா சிங்கத்தின் கர்ஜனை யாகும். அதே சிங்கத்தின் கர்ஜனை ஒட்டகத்தின் மொழியில் மொழியாக்கம் செய்யப்பட்டால் அது ஹினாயானவாகும். அதன்பிறகு பௌத்தம் ஆசியா முழுவதும் பரவியது. ஒரு விசித்திரம் நடந்தது. பௌத்தம் இந்தியாவில் பிறந்தது, ஆனால் இந்தி யாவிலிருந்து காணாமல் போய்விட்டது. ஆனால் ஆசியா முழுவதும் பௌத்தமயமாகியது.

குழந்தையின் மொழியைப் பேசியவர்கள் வெகு சிலரே. அவர்கள் நிறையச் சீடர்களை ஈர்க்கமாட் டார்கள். அவர்களால் முடியாது. ஒட்டக மொழி பேசினால் பெருந்திரளான மக்களை உங்களைச் சுற்றிச் சேர்த்துக்கொள்ள முடியும். சிங்கத்தின் மொழியில் பேசினால் அறிவார்ந்த மனிதர்களை உங்களைச் சுற்றி சேர்த்துக்கொள்ள முடியும். ஜெ. கிருஷ்ணமூர்த்தி சிங்கத்தின் மொழி பேசுவதால் அவரைச் சுற்றிக் கற்றறிந்தோர் வட்டத்தை உரு வாக்கிக் கொள்ள முடியும். லாவோட் சூ அல்லது

ரமணர் குழந்தையின் மொழியில் பேசுகின்றனர். யாரும் அவர்கள் பேசுவதைப் புரிந்துகொள்ள முடியவில்லை, அவர்கள் கொல்லப்படுவதும் இல்லை. நினைவிற் கொள்ளுங்கள்; அவர்கள் யாரும் சிலுவையில் இடப்படவுமில்லை. யாரும் அவர்களைப் புரிந்து கொள்வதில்லை, பின்பற்றுவதில்லை. அவர்களைப் பற்றிக் கவலைப்படுவதுமில்லை, நல்ல மனிதர்கள், ஆனால் கொஞ்சம் விசித்திரமானவர்கள் என்று கருதப்படுகிறார்கள். மக்கள் இவர்களிடம் போகிறார்கள், இவர்கள் அருகில் இருப்பதே அழகுதான், ஆனால் இவர்கள் உலகில் பெரும் புரட்சியை ஏற்படுத்துவதில்லை. லாவோட்சூ வந்து மறைந்தார் - ஒரு சுவடும் விட்டுச் சொல்லவில்லை. ரமணர் வந்து மறைந்தார் - ஒரு சுவடும் விட்டுச் செல்லவில்லை.

இவைதான் மூன்று மொழிகளாகும். நான் மூன்றையும் பேசுகிறேன். ஆகையினால் என்னைச் சுற்றி ஒட்டகங்கள், சிங்கங்கள் மற்றும் குழந்தைகளைக் காணலாம். இதனால் நான் முரண்படுபவனாகத் தோன்றுகிறேன். நான் ஒரே வகையாய் இருக்க முடியாது. ஒட்டகத்திடம் பேசும்போது நான் ஒட்டக மொழியில் பேசுவேன். சிங்கத்திடம் பேசும்போது, கர்ஜிப்பேன். ஒரு குழந்தை என்னிடம் வரும்போது, நான் சிரிப்பேன், புன்னகைப்பேன், அதோடு அமைதியாய் உட்கார்ந்து கொள்வேன்.

இந்தப் பரிசோதனை முன்னர் செய்யப்பட்டதேயில்லை. யாருமே மும்மொழி பேசியதில்லை. ஏனென்றால், அது தொந்தரவானது. ஒரு மொழி நல்லதுதான், ஏனென்றால் ஒருவர் ஒருசீராக இருக்க முடியும். என்னோடு எப்போதும் நான்

சொல்வதை நீங்கள் உறுதியாக எடுத்துக்கொள்ள முடியாது. நீங்கள் எப்போதுமே குழப்பத்தில்தான் இருப்பீர்கள். ஆனால் நான் குழப்பத்தையும் ஒரு கருவியாகப் பயன்படுத்துகிறேன். ஒட்டகத்திற்குக் குழப்பம் ஏற்பட்டதென்றால் அது சிங்கமாக வள ரும். ஏனென்றால் முழுக் குழப்பம் ஏற்படவில்லை என்றால் அது வளரவே செய்யாது. சிங்கத்திற்குக் குழப்பம் என்றால், குழந்தையாக வளரும், குழப்பம் தான் வளர்ச்சிக்கு அடிப்படை. இருக்கும் இடத்தில் இருப்பதில் அர்த்தம் இல்லை என்று நீங்கள் உண ரும்போது, நீங்கள் உயர உயர வளரத் தொடங்கு கிறீர்கள். மேலும் உயரமான உச்சங்களைத் தேடத் தொடங்குகிறீர்கள். ஒருவேளை அங்கிருந்து ஒரு மகத்தான பார்வை, அகண்ட பார்வை கிடைக் கலாம். உங்களை நான் குழப்புவது ஒரு யுக்தி யாகத்தான். நான் ஒட்டகங்களைக் குழப்புவேன், சிங்கங்களைக் குழப்புவேன், குழந்தைகளைக் குழப்ப முடியாது. அவர்கள் புரிந்துகொள்வார்கள். ஏனென்றால் நான் மூன்று மொழிகளையும் பேசுவ தால் என் முரண்பாடுகள் எல்லாம் முரண்பாடுகள் அல்ல, அவை வெறுமனே அப்படித் தோன்றுகின் றன என்பதை அவர்கள் புரிந்து கொள்வார்கள்.

இந்தக் கதையைப் பற்றித் தியானம் செய்யுங்கள்.

என்னுடன் இருக்கையில் வார்த்தைகளைப் பற் றிச் சிந்திக்காதீர்கள். என் செய்தியானது வார்த் தைகளில் இல்லை. ஆனால் அதன் இடைவெ ளிகளில் உள்ளது. என் செய்தி நான் சொல்வ தில் இல்லை. ஆனால் நான் என்னவாக இருக் கிறேனோ அதில் உள்ளது. என் செய்தியைக் கருத்தியலாக அமைப்புகளாகச் சுருக்க முடியாது.

என்னுடன் சேர்ந்து அதை வாழ்ந்து பார்க்கலாம் அல்லது தவறவிடலாம். அது உயிரோடு இருக்கும் ஒரு இயல் நிகழ்வு. நான் சென்ற பிறகு நீங்கள் புத்த கங்களில் தேடுவீர்கள், என்மீது கோபப்படுவீர்கள், காரணம் தவறவிட்டோம் என்ற உணர்வு உங்க ளுக்கு ஏற்படும்.

நான் இங்கே இருக்கையில் என்னால் ஊட்டச் சத்துப் பெற்றிருங்கள். என்னையே அருந்திடுங் கள். உங்களுக்காக வெளிப்படுத்தப்படும் இந்த மர்மத்தில் உங்களையே தொலைத்திடுங்கள். அப் படியானால் நீங்கள் உங்கள் முட்டைப் புழு நிலை யிலேயே இறவாமல் பிழைக்க வாய்ப்புண்டு. நீங் கள் ஒரு கம்பளிப் புழுவாக மாறலாம். இறுதியாக வளர்ச்சி பெற்றுப் பட்டாம்பூச்சியாகலாம். இறக்கை களை வளர்த்துக் கொள்ளுங்கள். இறக்கைகள் வளர்ந்து கொள்வதற்காகப் பெரும் கனவுகளைக் காணுங்கள். நீங்கள்தான் விதை. உங்கள் மூலம் மிகப் பெரிய விஷயம் நடக்கச் சாத்தியமுள்ளது. நீங்கள் மலர்ந்தால்தான் கடவுள் என்பது என்ன, உண்மை என்ன என்பதை உணர்வீர்கள்.

இன்று இது போதும்.

# பாலைவனச் சோலை உங்கள் விழிப்புணர்வில் இருக்கிறது

அத்தியாயம் - 5

## முதல் கேள்வி:

*சூஃபிக்கள் நேசத்தின் பாதையில் செல்கின்றனர் என்று சொல்லியிருக்கிறீர்கள், அப்படியானால் ஏன் பல யுக்திகளைக் கற்றுக் கொடுக்கின்றனர்?*

அது ஒட்டகங்களினால் தான். ஒட்டகங்களுக்குப் பல வழிமுறைகள் தேவை. ஒட்டகங்களுக்கு வழிமுறை, அல்லது தொழில் நுட்பத்தின்மீது தான் நம்பிக்கை. அவர்கள் கிட்டத்தட்ட இயந்திரம், ரோபோக்கள்போல. கண்ணுக்கு அப்பால் உள்ளதை அவர்களால் காண முடியாது. அவர்கள் இதயம் வேலை செய்யத் தொடங்கவில்லை. இதயம் இயங்கத் தொடங்கிவிட்டால் அவர்கள் சிங்கங்கள் ஆகிவிடுவர், ஆன்மா இயங்கத் தொடங்கி விட்டால் அவர்கள் குழந்தைகளாகிவிடுவர்.

அது இம்மாதிரியானது: முட்டைப்புழு அல்லது ஒட்டகங்களுக்குப் பல வழிமுறைகள் தேவை. சிங்கங்களுக்கு ஒரே வழிமுறை போதும். ஒன்று நேசம் அல்லது விழிப்புணர்வு. குழந்தைக்கு எதுவும் தேவையில்லை. குழந்தை ஏற்கனவே வீடு பேறு பெற்றுவிட்டது. அது இனி எங்கும் செல்லத் தேவையில்லை.

சூஃபிகள் நேசத்தின் பாதையில் பயணிப்பவர்கள். நேசத்திற்கு யுக்திகள் என்று ஏதுமில்லை. நேசமே அதற்குப் போதுமானதுதான் - ஆனால்

இதயம் இயங்க வேண்டும். ஆனால் முட்டைப்பு ழுவிற்கு இதயம் பற்றி எந்தக் கருத்தும் கிடை யாது. உணர்ச்சிகள் என்றால் என்ன? நேசம் என் பது என்ன? அதைப்பற்றிக் கனவுகூடக் கண்டது இல்லை. ஒரு கம்பளிப் புழுவாக வேண்டும் என்று முட்டைப் புழு கனவுகூடக் காண்பதில்லை. அதே போல் கம்பளிப்புழுவும் பட்டாம்பூச்சியாக வேண் டும் என்று கனவு கண்டதில்லை.

இரண்டு கம்பளிப் புழுக்கள் புல்தரையில் ஊர்ந்து சென்றுகொண்டிருந்தன. அப்போது திடீரென அவர்களுக்கு மேலே ஒரு பட்டாம்பூச்சி பறந்து சென்றது. இரண்டும் மேலே பார்த்தன, அதில் ஒன்று மற்றொன்றைச் சற்றே இடித்துச் சொன்னது: "ஒரு கோடி ரூபாய் கொடுத்தாலும்கூட அதைப் போல் ஒன்றின்மீது நீ என்னை ஏற்றி அனுப்ப முடி யாது."

முட்டைப்புழுவால் ஏதோ ஒன்று சாத்தியப்படும் என்று நம்பமுடியாது: எதுவுமே சாத்தியமில்லை. சுவர்களுக்குப் பின்னே ஒரு மூடப்பட்ட உலகில் வாழ்கிறது முட்டைப்புழு. அந்தச் சுவர்கள் இடிக் கப்பட வேண்டும். அந்தச் சிறையை உடைக்க வழிமுறைகள் தேவைப்படுகின்றன. அச்சிறையி லிருந்து முட்டைப்புழுவைக் கிட்டத்தட்ட இழுத்து வெளியே கொண்டுவர வேண்டும், சுதந்திரம் அதன்மீது திணிக்கப்பட வேண்டும். அது விடு தலையைக் கண்டு அஞ்சுகிறது, இறக்கைகள் அதற்கு அச்சமூட்டுகின்றன, வானத்தைப் பார்த் துப் பயம். அது தனக்குள்ளாகவே இருக்கிறது, அது தொடர்பு கொள்ள முயற்சிப்பதில்லை. உறவு முறைகள் சாத்தியம் என்று அது நம்புவதில்லை.

உலகம் முழுவதும் முட்டைப்புழுக்கள் மற்றும் ஒட் டகங்களால் நிரம்பியிருக்கிறது.

பரிவன்பினால், நேசத்தின் காரணமாய் சூஃபிகள் மற்ற வழிமுறைகளைப் பற்றிப் பேசுகிறார்கள். நீங் கள் புரிந்துகொண்டால் வேறெந்த வழிமுறையும் தேவையில்லை. அதன் பிறகு விழிப்புணர்வு அல் லது நேசம் ஏதாவது ஒன்று இருக்கும். விழிப்புணர் வைப் பின்பற்றுவதற்கு வேறு வழி தேவையில்லை, ஒன்றே போதும். நேசத்தின் பாதையில் நடப்ப வருக்கு விழிப்புணர்வு தேவையில்லை, ஒன்றே போதும். விழிப்புணர்வானது உங்கள் மனதைச் சுத்தப்படுத்துகிறது, உங்கள் சிந்தனைப்போக்கை, உங்கள் அறிவைச் சுத்தப்படுத்துகிறது, நீங்கள் வீடு பெறுகிறீர்கள். நேசம் உங்கள் உணர்ச்சிகளைச் சுத்தப்படுத்துகிறது, உங்கள் இதயத்தைச் சுத்தப்ப டுத்துகிறது. நீங்கள் வந்தடைகிறீர்கள்.

குழந்தைக்கு எந்தவித வழிமுறையும் தேவை யில்லை. அதற்கு நேசமோ, விழிப்புணர்வோகூடத் தேவையில்லை; குழந்தையே நேசம்தான். குழந் தைதான் விழிப்புணர்வு.

ஆக, அது சூழ்நிலையைப் பொறுத்தது. சூஃபி ஒட்டகத்திடம் பேசிக்கொண்டிருந்தால், அவர் வழி முறைகளைக் கொடுப்பார். சிங்கத்திடம் பேசிக் கொண்டிருந்தால் அவர் நேசம் அல்லது விழிப்பு ணர்வைத் தருவார். அவர் குழந்தையிடம் பேசிக் கொண்டிருந்தால் என்ன செய்யவேண்டும் என்ப தைப் பற்றி எதுவும் சொல்லமாட்டார். செய்வதற் கான தேவை அங்கு இல்லை. செயலின்மையே

போதும். வெறுமனே 'இருத்தல்' மட்டுமே போதுமானது.

## இரண்டாவது கேள்வி:

*குரு ஒருவருக்கு என்ன செய்ய முடியும்?*

இந்தக் கேள்வி வித்யாவின் அம்மா சிக்ரிட்டிடமிருந்து: வித்யாவைப் பற்றிக் கவலை அவருக்கு, இங்கே வித்யாவிற்கு என்ன நடக்கிறது. மேலும் அவர் வித்யாவைத் திருப்பி அழைத்துச்செல்ல நச்சரித்துக் கொண்டேயிருக்கிறார். அது இயற்கைதான், அதில் தவறு ஒன்றும் இல்லை. என்ன இருந்தாலும் ஒரு தாய் தாய்தான். அம்மா அன்பைப் பொழிகின்றாள், அக்கறை காட்டுகிறாள், நீங்கள் அன்பையும், அக்கறையும் தருவதினால் நீங்கள் அச்சமும் கொள்கிறீர்கள். உங்கள் குழந்தைக்கு இங்கே என்ன நடக்கிறது? அதனால்தான் இந்தக் கேள்வி, "ஒருவருக்கு குரு என்ன செய்யமுடியும்?"

ஒரு குரு இரண்டு விஷயங்களைச் செய்ய முடியும். அவர் உங்களை முதலில் உருவிழக்கச் செய்து பின்னர் உங்களை மறு உருவாக்க முடியும். உங்களை அழித்துப் பின்பு உங்களுக்கு ஒரு புதிய வாழ்க்கையை வழங்க முடியும். குரு ஒரு 'சிலுவை' மற்றும் 'மீட்டெழுச்சியாகவும்' இருக்க முடியும்.

இங்கே வருபவர்கள் வெளியாட்களாக இருப்பாரென்றால் அவர்கள் குருவை சிலுவையாக மட்டுமே பார்க்கமுடியும். ஏனென்றால் மீட்டெழுச்சி என்பது அகம் தொடர்புடைய அனுபவம். சிலுவை புறமானது.

ஏசுநாதரின் கதையில் நீங்கள் கவனிக்கவில்லையா? அவரைச் சிலுவையில் அறைந்தபோது ஆயிரக்கணக்கான மக்கள் அதைக் கண்டனர். அது அவ்வளவு எளிதானது. ஏசு சிலுவையிலிடப் படுவதைக் காண்பதற்கு உள்முக நோக்கு எதுவும் தேவையில்லை. இதற்கு முன் ஏசுவைக் கண்டிரா தவர்கள் எல்லாம், ஆர்வம் மேலிட வந்து சிலுவை யிலிடப்படுவதைக் கண்டனர். ஆனால் ஏசு மீண் டெழுந்தபோது, அவரின் சொந்த சீடர்களினால் கூட அவரை உடனே அடையாளம் காணமுடிய வில்லை. மேரி மேக்டலின்தான் முதலில் அடையா ளம் கண்டார்.

இது அடையாளக் குறியீடு போன்றது: இதன் பொருள் என்னவென்றால், ஒரு மீட்டெழுச்சியை அடையாளம் காண உங்களுக்கு ஒரு பெண் ணியல்புடைய இதயம் வேண்டும், உள்ளுணர்வு சார்ந்த இதயம் வேண்டும்.

அதன்பிறகு ஏசு தன் சீடர்களைத் தேடிச் சென் றார். "எல்லாம் முடிந்து விட்டது" என்று நினைத்து எல்லோரும் தப்பிச் சென்றுவிட்டனர். கூட்டத் தோடு கூட்டமாக மறைந்து இருந்தனர். ஏனென் றால் ஏதோ ஒரு அற்புதம் நடக்கும் என்று எதிர் பார்த்து இருந்தனர். அற்புதம் நடந்தது. ஆனால் அதை அறிய சாதாரணக் கண்கள் போதாது. இந் தச் சாதாரணக் கண்களால் உரு அழிப்பை மட் டுமே காண முடியும். மறு உருவாக்கலைக் காண் பதற்கு உங்களுக்கு வேறு வகையான கண் கள் வேண்டும். அற்புதம் நிகழத்தான் செய்தது. ஆனால் யாரும் பார்க்கவில்லை. ஏனென்றால் எவ

ரும் பார்ப்பதற்குத் தயாராக இல்லை, பார்க்கும் அளவிற்கு யாருக்கும் முதிர்ச்சியில்லை.

ஏசு தன் மீட்டெழுச்சிக்குப் பிறகு தன் சீடர்களைத் தேடிச்சென்றார். வேறொரு கிராமத்தை நோக்கிப்போய் கொண்டிருந்த இரண்டு சீடர்களைக் கண்டார். அவர்களோடு சேர்ந்து நான்கு மைல்கள் நடந்தார், பேசிக்கொண்டிருந்தார். அவர்கள் ஏசுவை அடையாளம் கண்டுகொண்டதாய் தெரியவில்லை. இது நடப்பதற்கல்லாத விஷயமாய் தோன்றினாலும் அதுதான் நடந்தது. அவர்களோடு சென்று பேசிக்கொண்டு இருந்தாலும் சீடர்களால் யார் வந்திருக்கிறார்கள் என்று தெரிந்துகொள்ள முடியவில்லை. அந்நியன் யாரோ என்று நினைத்தனர். உண்மையில் ஏசு உயிரோடு இருந்தபோதிலும், இந்த மனிதர்களுக்கு ஏசு அந்நியராகவே தான் தோன்றினார். அவர்களது அங்கீகாரம் மேம்போக்கானது.

ஆக, இங்கே அந்நியராய் வருபவர்கள் வெறுமனே உருக்குலைதலை மட்டுமே பார்க்க முடியும். மனிதர்கள் இங்கே அழிக்கப்படுவதையும், மனம் சுத்தி செய்யப்படுவதையும், மனவசியம் செய்யப்படுவதையும் மற்றும் எல்லாவிதமான எதிர்மறை விஷயங்களை மட்டுமே காண்பார்கள். அவர்களால் நேர்மறையானவற்றைக் காணமுடியாது. நேர்மறை அறிய நீங்கள் அதில் ஒரு உறுப்பாக வேண்டும். பங்குபெறுபவராக வேண்டும். என்னுடன் தொடர்பு விடாநிலையில் லயித்து இருக்க வேண்டும். எனக்குள் நீங்கள் வரவேண்டும், மேலும் என்னை உங்களுக்குள் புக அனுமதிக்க வேண்டும். அதன் பிறகு ஒரு குருவால் என்ன

செய்ய முடியும் என்பதை உங்களால் அறிந்து கொள்ள முடியும்.

உங்களுக்கு உண்மையிலேயே புரிந்துகொள்ள வேண்டுமானால் சீடராகிவிடுங்கள்! பிறகு குருவிற்கு அருகில் வாருங்கள். நான் என் அருகில் வரவேண்டும் என்று சொல்லவில்லை, எந்தக் குருவானாலும் சரி! போய் உங்கள் குருவைக் கண்டுபிடியுங்கள், ஆனால் அருகில் செல்லவேண்டும். ஒரு குருவைப் புரிந்துகொண்டால் கடந்தகாலம், நிகழ்காலம், வருங்காலம் என்று எல்லாக் குருக்களையும் நீங்கள் புரிந்துகொள்வீர்கள். ஏனென்றால் அவர்கள் செயல் அனைத்தும் அதேதான், மாறுபடுவதில்லை. குருவின் வேலை, சீடரை அழித்து. அதனால் சீடர் ஒரு சீடராய் இல்லாமல் ஒரு குருவாக உருவாகிவிடுவார். அதைத்தான் ஒரு குரு செய்ய முடியும். அவர் உங்களையும் ஒரு குருவாக்கிடுவார்.

## மூன்றாவது கேள்வி:

*ஒவ்வொரு நாளும் நீங்கள் சொல்வதைக் கேட்டுக் கொண்டிருப்பதும், உங்களை ஆழமாகப் பருகுவதாலும் நான் மதிமயங்கிப் போகிறேன். என் பாதுகாப்பான மற்றும் பைத்தியமாக்கும் வேலையை விட்டு இனம் அறியா வருங்காலத்தைச் சந்திக்கத் தயாராக இருக்கிறேன். ஆனால் இதற்கு முன்னரும் நான் முட்டக் குடித்து இருக்கிறேன், மறுநாள் குடியின் பின் விளைவுகளோடு எழுந்து அதே குப்பைகளைக் கையாள வேண்டியிருக்கும். அதேபோல் ஒருநாள் உங்களிடமி*

*ருந்து பெற்ற பின்விளைவுகளோடு எழுந்தி ருக்க வேண்டிய சாத்தியக்கூறுகள் உண்டா?*

ஆனந்த புத்தா, இது முற்றிலும் வேறு மாதிரியான மயக்கமாதலால் இதை பற்றிய அனுபவம் உனக்கு கிடையாது என்பதை என்னால் சொல்ல முடியும்.

என்னால் மதிமயக்கமுற்றால் அது உன்னைத் தூங்க வைக்காது, அதனால் என்றாவது ஒரு நாள் நீ பின்விளைவுகளோடு எழுந்திருக்க வாய்ப் பில்லை. உன்னை இது முழுவதும் விழித்திருக்க வைக்கும், அதனால் பின் விளைவுகளோடு எழு வது என்ற கேள்விக்கே இடமில்லை. என்னோடு இருப்பது என்பது விழித்தெழுவதுதான். வேறெந்த விழிப்பூட்டுதல் பற்றி நீ பேசிக் கொண்டிருந்தாய்.

மதிமயக்க வைக்கும் மது உன்னை உன் அகங் காரத்தின் எல்லை வரையில்தான் மூழ்கடிக்க முடி யும், ஆனால் உன் உணர்வு நிலையை தொடாது. உன் ஆளுமையை மூழ்கடிக்கலாம், உன் தனித் தன்மையை அல்ல. உன் ஆளுமையிலிருந்து விழித்து எழுந்து உன் தனித்தன்மையை உணர அது உதவி செய்கின்றது. தற்போது உன் தனித் தன்மையைப் பொறுத்தவரை நீ தூங்கிக் கொண் டிருக்கிறாய், ஆனால் உன் ஆளுமையில் விழித்தி ருக்கிறாய்.

இந்த வகையில் பார்ப்போம்; நீ தூங்கிவிட்டாய், அதில் ஒரு கனவு காண்கிறாய். கனவில் நீ விழித் திருக்கிறாய் - சில பொருட்கள் வாங்கக் கடைத் தெருவிற்குச் செல்கிறாய். கனவில் நீ விழித்திருக் கிறாய். கனவில் நீ தூங்கிவிட்டாயானால், 'உண் மையில்' நீ விழித்திருக்கிறாய். ஆனால் கனவில் நீ

விழித்திருக்கிறாய். உண்மையில் நீ குறட்டை விட்டுக்கொண்டு ஆழ்ந்த தூக்கத்தில் உள்ளாய்.

ஆனந்தா இப்போது உன் விழிப்புணர்வு உண்மையான விழிப்பு அல்ல. நீ ஆழ்ந்த உறக்கத்தில் இருக்கிறாய், ஆயிரத்தொரு கனவுகளைக் கண்டு கொண்டு இருக்கிறாய். உன்னை அடிக்க எனக்கு அனுமதி கொடுத்தாயானால் முதல் முறையாக நீ விழித்துக்கொள்வாய். உன் கனவுகள் கலையும், உன் தூக்கம் தடைபட்டு நீ யார் என்பதை முதல் முறையாகத் தெரிந்துகொள்வாய். அந்த விழிப்புணர்வை ஒரு முறை நீ ருசித்துவிட்டால் மறுபடியும் உன்னால் தூங்க முடியாது. அந்த ருசியானது, உன் முழு உயிருருவையும் ஊடுருவக்கூடியது. உன்னுள் பரவக்கூடியது, உன்னை முழுவதுமாக ஆட்கொள்ளும். இந்த மதிமயக்கமானது உன்னை விழித்திருக்க வைப்பதற்காகத்தான். அதற்காகத் தான் நான் உனக்கு சுவாமி ஆனந்த புத்தா என்று பெயர் சூட்டியிருக்கிறேன். ஆனந்தமான விழிப்புணர்வு. நீ தூங்கிக் கொண்டிருக்கிறாய், உள்ளார்ந்த ஆற்றல் இருக்கிறது, உன்னால் விழித்தெழ முடியும். அதன் முதல் அசைவுகளை நீ உணரத் தொடங்கியுள்ளாய்.

துணிவு கொள்! உன் கனவுலகத்தில் பாதுகாப்பானது எதுவும் இல்லை, உன் பாதுகாப்பான வேலை உட்பட. உன்னுடைய 'உலகம் என்று அழைக்கப் படுவதில்' எதுவும் நிச்சயமில்லை. கனவு உலகம் உறுதியானதாக இருக்க முடியாது, அது ஒரு தொடர் பெயர்ச்சி. எல்லாமே மாறிக்கொண்டும் நகர்ந்து கொண்டும் இருக்கின்றன. இன்று நீ பாதுகாப்பான வேலையில் இருக்கிறாய், நாளை நீ

அதில் இல்லாமல் போகலாம். இன்று ஒரு பெண் ணோடு வாழ்கின்றாய், நாளை அவள் போய்விடு வாள். இன்று உனக்கு ஒரு அழகான குழந்தை இருக்கிறது, நாளை கடவுள் அதை எடுத்துக் கொள்வார். எது பாதுகாப்பானது இங்கே?

விழித்தெழுதலைத் தவிர இங்கே வேறு எது வும் பாதுகாப்பானதல்ல. எல்லாமே மாயக்காட்சி கள்தாம். அனைத்துமே உங்களையே ஏமாற்றிக் கொள்வதாகும். புதிய புதிய கானல் நீர் தோற் றங்களை உருவாக்கிக் கொள்வதாகும். பாலைவ னச் சோலை இங்கு இல்லை. இந்த உலகம் ஒரு பாலைவனம். பாலைவனச் சோலையானது உங் கள் விழிப்புணர்வில் மட்டுமே இருக்கிறது. அந்த விழிப்புணர்வுச் சோலையை உருவாக்குங்கள். அதற்குத் தேவையானவற்றையெல்லாம் செய்யுங் கள். அதற்கு என்ன விலை தர வேண்டுமோ அதைக் கொடுங்கள். துணிந்து செயல்பட வேண் டிய இடத்தில் துணிவைக் காட்டுங்கள், ஏனென் றால் மற்றவையெல்லாம் உங்களிடமிருந்து எப்ப டியாயினும் எடுக்கப்படும். இறப்பு வரப்போகிறது, உங்கள் வேலை, மற்றும் மனைவி, குழந்தைகள் மற்றும் உங்கள் பெயர், புகழ் எல்லாம் பறிக்கப் படப் போகிறது. சாவு வருமுன் விழிப்புணர்வைத் தேடுங்கள், காரணம் வாழ்க்கையில் விழிப்புணர் வடைந்தோருக்கு இறப்பு என்பதில்லை. அவர்கள் இறவாத் தன்மை அடைகின்றனர். அவர்கள் அம ரத்துவம் அறிவார்கள். காரணம், உங்கள் விழிப்பு ணர்வில் நீங்கள் அறியப்போவது உங்கள் உடலை அல்ல. ஆனால் அதில் வசிப்பவரை.

## நான்காம் கேள்வி:

*என்ன நடக்கின்றது என்பது எனக்குப் புரியவில்லை என்றாலும், வெறி மயக்க மருந்துகள் மூலம் நான் ஞானம் தரும் அனுபவங்களைப் பெற்றிருக்கிறேன். LSD (போதை மருந்து) பொய்யானது என்று நான் அறிவேன். ஆனால் காளான் உணவு பற்றிய உண்மை ஏதாவது இருந்தால், அது என்ன?*

இந்தக் கேள்வி ரீஸ் கத்திடமிருந்து வந்துள்ளது. LSD பொய்யானதல் ல, மற்றெல்லாவற்றையும் போல LSDயும் உண்மையானதுதான். ஆனால் அது தரும் சமாதி அனுபவம்தான் பொய்யானது. நான் சொல்லும் வேறுபாட்டைக் கவனியுங்கள், LSD பொய்யானதல்ல, ஆனால் அதன் தாக்கத்தினால் ஏற்படும் அனுபவம்தான் பொய்யான ஒன்று என்கிறேன்.

நீங்கள் சொல்கிறீர்கள், "ஞானம் தரும் அனுபவங்களை நான் பெற்றிருக்கிறேன்" அவை ஞானம் தரும் அனுபவங்கள் அல்ல. ஒருக்கால் அவை மின்னல் கீற்றுத் தோற்றங்களாக இருந்திருக்கும், மெய்ஞானக் கீற்றுகள் அல்ல. இவற்றின் மூலம் நீங்கள் ஞானம் அடையப் பெறமாட்டீர்கள், ஒரு புத்தராக மாட்டீர்கள். உண்மையில் இவற்றின் காரணமாக மேலும் குழம்பிப் போவீர். LSD உங்கள் உடல் ரசாயனத்தை மாற்றி அமைக்கும். காளான்களும் இதைச் செய்யும். அது உங்களை மாற்றாது, உங்கள் உடலை மட்டுமே மாற்றும். உணவு உங்கள் உடலை மாற்றும். காற்று, பருவநிலை உங்கள் உடலை மாற்றும். நிலவு, மற்றும் முழு நிலவு உங்கள்

உடலை மாற்றும். ஆனால் உங்களை மாற்றாது. அதே போலத்தான் போதைப் பொருட்களினால், உடல் மாறும், நீங்கள் மாறமாட்டீர்கள். எல்லா மாற்றங்களும் உடலில் ஏற்படுகின்றன. அந்த மாற்றங்கள் எல்லாம் ரசாயன மாற்றங்கள், ரசவாத மாற்றங்கள் அல்ல. அப்படியானால் ரசவாத மாற்றம் என்பது என்ன? உங்கள் உணர்வு நிலை மாற்றமே அது. வெளியிலிருந்து வரும் எந்த விஷயத்தாலும் உணர்வு நிலையை மாற்ற முடியாது.

இந்த உணவு, அந்த உணவு என்று உணவினால் மட்டும் உணர்வு நிலையை மாற்றமுடியாது. அதேபோல், உண்ணாமல் இருப்பதாலும் உண்ணாநோன்பு இருப்பதாலும் உணர்வு நிலையை மாற்ற முடியாது. LSD பயன்படுத்துவோருக்கும், நீண்ட விரதம் மேற்கொள்வோருக்கும் இடையே வித்தியாசம் ஒன்றுமில்லை என்பதை நினைவிற் கொள்ளுங்கள். இரண்டுமே உடல் ரசாயனத்தை மாற்ற முயற்சிக்கின்றன. காளான் மற்றும் பிற போதை வஸ்துக்களை எடுத்துக் கொள்பவர்கள் யோகம் பயில்பவர்களிடமிருந்து வேறுபடவில்லை. ஏனென்றால் இரண்டு வகையிலும் உடல்தான் மாறுபடுகிறது. மாற்றம் உணர்வு நிலையில் ஏற்படவில்லை. உணர்வு நிலை அனைத்து ரசாயனங்களையும் கடந்து இருக்கும் ஒன்று.

நீண்ட காலம் உண்ணாமல் இருந்தால் இயற்கையாகவே உங்கள் உடலின் ரசாயன நிலை அதே போல் இருக்கப்போவதில்லை. சில விஷயங்கள் இல்லாமல் போகும், வேறு சில அதிகமாகிவிடும். உங்கள் உடலில் வேறுவிதமான ரசாயனக் கூட்டுச் சேர்க்கை இருக்கும். ஒரு மாத நோன்பிற்

குப் பின் நீங்கள் அழகானவற்றை உணர்வீர்கள். ஆனால் அவையெல்லாம் ரசாயன மாற்றங்களால் உருவானவை. சாப்பிடத் தொடங்கினால் அந்த அழகானவையெல்லாம் மறைந்துபோகும். சில யோக நிலைகளைத் தொடர்ந்து பல வருடங்கள் செய்து கொண்டிருந்தால், உடல் கட்டமைப்பைச் சில இடங்களில் அழுத்துவது, உடலின் நாடிகளை சில குறிப்பிட்ட மையங்களில் அழுத்துவதைத் தொடர்ந்து செய்து கொண்டிருந்தால் உடல் ரசாயனம் மாறுபடும். ஒரு குறிப்பிட்ட வகையில் சுவாசிக்கப்பழகினால், உடல் ரசாயனம் மாறும், காரணம் உங்கள் சுவாச முறையினால் பிராணவாயு மற்ற கரியமில வாயுவின் சமச்சீர் மாற்றப்படும்.

நீங்கள் கோபமாக உள்ளபோது நீங்கள் வேறு வகையில் சுவாசிப்பதைக் கவனித்து இருக்கிறீர்களா? அந்த மாறுபட்ட வகைச் சுவாசம் உடலில் சில ரசாயனங்கள் வெளிவரச் செய்கிறது, இது கோபத்தோடு இருப்பதற்கு உதவுகிறது. அப்படி வேறுவிதமாகச் சுவாசிக்கவில்லை என்றால் உங்களால் கோபப்பட முடியாது. முயற்சி செய்து பாருங்கள், பௌத்தர்களின் வழியில் சுவாசித்தால் உங்களால் கோபப்பட முடியாது. இந்த வகைச் சுவாசம் கோபப்படுவதற்குத் தேவையான ரசாயனங்கள் வெளிவர அனுமதிக்காது.

பயப்படுகின்றீர்களா? நீங்கள் வேறு வகையில் சுவாசிக்கவேண்டும். ஏனென்றால் பயத்தில் இருக்கும் மனிதன் உடனே தப்பிப் போகவேண்டும். ஓட்டம் அவனுக்கு தேவை, வேகமாக ஓடித் தப்புவதற்கு சில குறிப்பிட்ட ரசாயனங்கள் உதவும். அதேபோல் புணர்ச்சி வேகத்தில் இருந்தால் உங்

கள் சுவாசம் மாறும். சாதாரணமாக சுவாசித்துக் கொண்டிருந்தால் உங்களால் புணர்ச்சிப் பரவச நிலையை எட்ட முடியாது. இதற்கும் ஒரு வகை சுவாசம் தேவைப்படுகிறது.

ஆனால் இந்த மாற்றங்கள் யாவும் தேக ரீதியானது, இவை உங்கள் உணர்வுநிலைமீது தாக்கம் ஏற்படுத்தாது. உணர்வு நிலையானது இந்த மாற்றங்களுக்கெல்லாம் சாட்சியாக அமர்ந்து கொண்டிருக்கிறது. புரிந்துகொள்ள முயற்சி செய்யுங்கள். நீங்கள் பசியோடு இருக்கிறீர்கள், உடலுக்குப் பசிக்கின்றது. உணர்வு நிலையானது வெறுமனே உடல் பசித்திருக்கிறது என்ற உண்மையை மட்டும் குறித்துக் கொள்கிறது. உணர்வுநிலை என்றும் பசித்திருப்பதில்லை, அதற்கு பசி இருக்க முடியாது, அதற்கு வயிறு இல்லை. அது சாட்சியாக மட்டுமே இருக்கிறது. உணர்வுநிலை என்பது சாட்சியாக இருப்பதாகும். இந்த சூத்திரத்தை நினைவிற்கொள்ளுங்கள். உணர்வுநிலை சாட்சியாக இருப்பது. நீங்கள் பசியோடு இருக்கிறீர்களா? உணர்வுநிலை பசியைப் பிரதிபலிக்கின்றது. அது கண்ணாடிபோல, உடலுக்குப் பசிக்கின்றது என்று சொல்லும். நீங்கள் சாப்பிட்டுத் திருப்தி அடைந்தால் "உடல் திருப்தி அடைந்துவிட்டது" என்று சொல்லும். உணர்வுநிலைக்கு பசி, திருப்தி இரண்டும் இல்லை. இரண்டு விஷயங்களிலும் உணர்வு நிலை வெறுமனே சாட்சி கூறுகிறது - பசி / திருப்தி, பாலுணர்வு / அதில் நிறைவு / கோபம் / கோபத்தின் வெளிப்பாடு.

நீங்கள் LSD அல்லது வேறு ஏதோ ஒரு போதைப் பொருளை எடுத்துக் கொள்கிறீர்கள். அதன் கார

ணமாக ஒரு மின்னல் ஒளிக்கீற்று அனுபவங்கள் ஏற்படுகின்றன. உணர்வுநிலை வெறுமனே நின்று கவனிக்கின்றது. "அழகான விஷயங்கள் நடக்கின்றன" என்று சொல்கிறது உணர்வுநிலை. ஆனால் அவையெல்லாம் உணர்வு நிலைக்கு ஏற்படுவதில்லை.

ஆன்மீக வளர்ச்சி என்பது இந்தச் சாட்சியாக இருப்பதின் வளர்ச்சிதான்! குறிப்பிட்ட அனுபவங்களுக்கும் ஆன்மீக வளர்ச்சிக்கும் எந்தத் தொடர்பும் இல்லை. புதிய அனுபவங்களைத் தேடிப் போவதல்ல ஆன்மீக வளர்ச்சி. உண்மையைச் சொல்வதானால், எந்த அனுபவத்தையும் "ஆன்மீக அனுபவம்" என்று சொல்வதே முற்றிலும் தவறு. ஏனென்றால் எல்லா அனுபவங்களுமே ஆன்மாவைச் சார்ந்தது அல்ல. அனுபவிப்பவர் தான் ஆன்மா. சாட்சியாக இருப்பது மட்டுமே ஆன்மீக நிகழ்வாகும். எல்லா அனுபவங்களும் மறைந்த பிறகு, அதாவது பசி, திருப்தி, கோபம், வெளிப்பாடு, நேசம், வெறுப்பு, குண்டலினி எழுவது, சக்கரங்கள் திறப்பது, உங்களுக்குள் தாமரை மலர்வது, ஒளிக்கீற்றுக்கள் பாய்வது, தெய்வீக ராகங்கள் கேட்கப் பெறுவது, பெரும் இடைவெளி உணர்வது, ஆனந்தம் கொள்வது என்று இவையெல்லாமே அனுபவங்கள்தான்.

உண்மையான ஆன்மீக மையம் என்னவென்றால், அனுபவம் இல்லாத நிலை. அனுபவிப்பவர் தனியாக விடப்படுவது, முற்றிலும் தனியாக இருப்பதாகும். அனுபவிப்பதற்கு பொருள் ஏதுமில்லை, ஆனால் சாட்சி மட்டுமே இருக்கிறது. சப்தமில்லாமல் சாட்சியாயிருத்தல். அப்படியானால் நீங்கள்

வந்தடைந்து விட்டீர்கள் என்று அர்த்தம். இதுவே சமாதி நிலை. எதையும் காணாமல் சாட்சியாய் இருப்பது சமாதி. இதையே புத்தர் 'நிர்வாணம்' 'ஏது மில்லாதது' வெறுமை என்கிறார்.

உங்கள் கேள்வி அர்த்தமுள்ளது. இந்தக் கேள்வி விசித்திரமான அனுபவங்களைப் பற்றியது மட்டுமல்ல, எல்லாவிதமான அனுபவங்களுக்கும் தொடர்புடையது. உள்ளபடியே அனுபவங்கள் ஆன்மீகத் தன்மையற்றவை எல்லாவிதமான அனுபவங்களும் மறைந்தபிறகு, நீங்கள் எதையுமே உணராதபோது, மேலும் நீங்கள் தூங்கிவிடாதபோது... தூக்கத்திலும் அந்த அனுபவங்கள் மறைந்துபோகும். ஆழ்ந்த உறக்கத்தில் கனவுகள் இல்லாதபோது, அனுபவங்கள் மறைந்துபோகையில், அனுபவிப்பவரும் இருக்க மாட்டார். இதை பதஞ்சலி 'சுஷிப்தி' என்று அழைக்கிறார். சுஷிப்தியும் சமாதியும் ஒரே மாதிரியானவை, ஆயினும் முற்றிலும் நேர்மாறானவை என்று சொல்கிறார் பதஞ்சலி. ஒற்றுமைகள் என்ன? இரண்டிலும் அனுபவங்கள் காணக் கிடைக்காது. வேற்றுமை என்று பார்த்தால், சுஷிப்தியில் அதாவது ஆழ் உறக்கத்தில் அனுபவிப்பவரும் இருக்க மாட்டார். சமாதி நிலையில் அனுபவங்கள் மறைந்தாலும் அனுபவிப்பவர் அமைதியாக இருந்து கவனித்துக் கொண்டிருப்பார், வெறுமைக்குச் சாட்சியாக இருப்பார். இதுவே ஞானம் பெறுதல். மற்ற அனுபவங்கள் மின்னல் ஒளிக்கீற்றுகளாய் வரலாம், அழகானவையாக இருக்கலாம், உங்களுக்கு அவை பெருமகிழ்ச்சி தரலாம். ஆனால் அவை எல்லாம் ஞானம் அல்லது வீடு பேறடைதல் அல்ல.

ஆக, ஞானமடைதல் என்றால் ஒளி இருக்கிறது. ஆனால் அது எதன் மீதும் விழுவது இல்லை, எந்தப் பொருளும் அந்த ஒளியினால் தெரிவதில்லை - இதுவே விடுதலை. அனுபவங்களிலிருந்து விடுதலை, உலகிலிருந்து விடுதலை. 'உலகம்' என்று சொல்லும்போது எல்லாவிதமான அனுபவங்களையும் அது குறிக்கின்றது. சீனர்கள் பத்து ஆயிரம் அனுபவங்கள் என்பார்கள். அவற்றைத்தான் உலகம் தனக்குள் கொண்டிருக்கிறது.

*நீங்கள் சொல்வது, "என்ன நடக்கிறது என்று எனக்குப் புரியாவிட்டாலும், போதை வஸ்துக்கள் பயன்படுத்தியதன் மூலம் எனக்கு ஞானம் தரும் அனுபவங்கள் ஏற்பட்டு இருக்கின்றன. LSD பொய்யானது என்று எனக்குத் தெரியும், ஆனால் காளான் போன்ற உணவு பற்றிய உண்மை என்ன?"*

உண்மை என்னவென்றால் அவை உங்களுக்கு அழகான அனுபவத்தைத் தரலாம் அல்லது விரும்பத்தகாத அனுபவங்களையும் தரலாம். தங்கக் கனவுகள் வரலாம் அல்லது துர்சொப்பனங்களும் வரலாம். அது உங்களைப் பொறுத்தது.

போதைப் பொருள் ஒரு வழிமுறையை தூண்டிவிடுகிறது. வெடிக்கத் தயாராய் உள்ள கனவு உங்களுள் வெடிக்கும். இதனால் முரண்பாடான அனுபவங்கள் விவரிக்கப்பட்டுள்ளன.

ஆல்டஸ் ஹக்ஸிலி தான் சொர்க்கத்தை அனுபவித்ததாகக் கூறியிருக்கிறார். கார்ல் ரானர் நரகமாக இருந்தது என்கிறார். கார்ல்ரானர் போதை மருந்துகளுக்கு எதிரானவர், ஆல்டஸ் ஹக்ஸ்லி

அவற்றை முழுவதுமாக ஆதரிப்பவர். போதைப் பொருட்களுக்கு நீங்கள் ஆதரவு கொடுப்பவர் என்றால் உங்கள் முற்சாய்வு நிலை உங்களுக்கு அழகான அனுபவங்கள் கிடைக்க உதவி செய்யும். அழகானவை நடக்கக் காத்துக் கொண்டிருப்பீர்கள். அந்த நம்பிக்கையே மாயாஜாலத்தை உருவாக்கும். தொடக்கத்திலிருந்தே எதிர்ப்புக் கொண்டிருந்தீர்களானால் பயம், சந்தேகம் இருந்தால், நரகத்தை அனுபவிக்கப் போகிறோம் என்று நீங்கள் முன்பே அறிந்து இருந்தீர்களானால் அது தான் நடக்கும்.

ஒரு பண்டைய சூஃபி பழமொழி: "நரகம் அதை நம்புவோருக்காகப் பாதுகாக்கப்பட்டு இருக்கிறது." அதேபோல் சொர்க்கமும் அதன்மீது நம்பிக்கையுள்ளவர்களுக்காகப் பாதுகாக்கப்படுகிறது. ஆனால் எல்லாமே வெறும் பாசாங்குதான். சொர்க்கமும் இல்லை, நரகமும் இல்லை. நீங்கள்தான் உங்கள் சொர்க்கத்தை அல்லது நரகத்தை உருவாக்குகிறீர்கள். எதிர்மறை எண்ணங்களோடு இருக்கும்போது LSD எடுத்துக்கொண்டால் கொடுங்கனவுகள் தோன்றும். நேர்மறையான மனநிலையில், அன்பு நிறைந்து இருக்கும்போது எடுத்துக் கொண்டால் அது உங்களைச் சொர்க்கத்திற்கு இட்டுச் செல்லும்.

போதை வஸ்துக்களைப் பயன்படுத்தியவர்களில் மிகவும் பழமைவாய்ந்தவர்கள் இந்தியாவில் இருந்திருக்கிறார்கள். வேறெந்த நாட்டையும்விட இந்தியாவிற்குப் போதை பொருட்களைப் பற்றி அதிகமாகத் தெரியும். குறைந்தபட்சம் பத்தாயிரம் ஆண்டுகளாக ரிக்வேத காலத்திலிருந்து

இன்றுவரை தொண்ணூற்றிஒன்பது சதவீத இந்திய சன்னியாசிகள் சோமாவிலிருந்து LSD வரை போதைப் பொருட்களை எடுத்துக் கொண்டிருக்கிறார்கள். இந்தியா அதிகம் தெரிந்து வைத்துள்ளது. போதைப் பொருளை உட்கொள்வதற்கான தொழில்நுட்பம், வழிமுறைகள் மற்றும் யுத்திகளை இந்தியா உருவாக்கியுள்ளது. போதைப் பொருளை எடுத்துக் கொள்ளும் அனுபவம் வழிகாட்டுதலோடு இருக்கவேண்டும். ஒரு வழிகாட்டி தேவை. வழிகாட்டி சூழ்நிலையை உருவாக்குவார், யோசனையைத் தருவார், மெதுவாக, படிப்படியாக அவர் உங்களை அறிதுயில் நிலைக்கு இட்டுச் செல்வார். போதையேறிய நிலையில் ஒரு மனிதர் எளிதாக ஆலோசனைகளை ஏற்றுக்கொள்ளும் நிலையில் இருப்பார். பகுத்தறிவது முற்றிலும் இருக்காது. கனவுகாணும் திறன் இயங்கத் தொடங்கிவிடும், கற்பனாசக்தி கட்டவிழ்த்து விடப்படும். கற்பனை இரண்டையும் செய்யக்கூடியது, சொர்க்கம் அல்லது நரகம் எதையும் உருவாக்கமுடியும். ஆதலால் உங்களுக்கு ஒரு வழிகாட்டி தேவை. அவர் படிப்படியாக உங்களை ஒரு சொர்க்கம் போன்ற அனுபவங்களுக்கு அழைத்துச் செல்வார். உங்களைச் சுற்றிக் கவிநயம் படைத்த ஒரு கனவைப் பின்னுவார். நீங்கள் இதில் வீழ்வீர்கள்.

வழிகாட்டுதலோ அல்லது இல்லாமலோ போதை அனுபவம் அல்லது உண்ணாமல் இருக்கும் அனுபவம் எல்லாமே பொய்யானது. அனுபவமே பொய்யானது.

சாட்சியாக இருப்பவர் தனிமையை உணர்ந்து எதையும் காணாதநிலை அடைகிறபோது சமா

திநிலை அடைகிறார். அதுதான் உண்மையான ஆன்மீக அனுபவம், அதாவது அதை அனுபவம் என்று சொல்ல என்னை நீங்கள் அனுமதித்தால், அதுவே உண்மையானது. ஆனால் அதை அனுப வம் என்று சொல்லமுடியாது. காரணம் அனுபவத் திற்கு மூன்று விஷயங்கள் தேவைப்படுகின்றன. அனுபவிப்பவர், அனுபவிக்கப்படும் பொருள் மற் றும் அனுபவம். இங்கே மூன்று விஷயங்களே கிடையாது. ஒரே ஒரு சாட்சி, எதையும் காணாத சாட்சி, சூன்யத்திற்கு, வெறுமைக்கு மட்டுமே சாட்சியாக உள்ளது மட்டுமே எஞ்சியிருக்கிறது. இதுவே உண்மையான அனுபவம்.

உண்மையான அனுபவம் என்பது அனுபவமின் மைதான். நீங்கள் அனுபவமின்மை என்ற நிலை அடைந்துவிட்டீர்கள் என்றால் மட்டுமே வீடுபேறு அடைந்து விட்டீர்கள் என்று நம்பலாம். மாறாக ஒளிக்கீற்றுகள் வந்து போகும், மனதின் கீற்றுகள், கனவுச் சமாச்சாரம், அவ்வளவே.

## ஐந்தாவது கேள்வி:

*சன்னியாசியாவது ஒரு வழிமுறையா அல் லது கணநேர நிகழ்வா? எப்போதும் குரு ஒருவரது மனதில் குடிகொண்டிருப்பாரா னால் எல்லா நேரமும் ஜப மாலை மற்றும் மஞ்சள் காவி உடை அணிய வேண்டிய அவ சியம் என்ன? ஏகலைவன் உண்மையான சீடன் இல்லையா?*

கேள்வி கார்த்திக்கிடமிருந்து வருகிறது. இந்த கேள்வி ஒரு இந்திய மனதில் தோன்றியது, ஏதோ

ஒரு இந்தியர். பல விஷயங்களைப் புரிந்துகொள்ள வேண்டும்.

*முதலில், "சன்னியாசியாவது ஒரு வழிமுறையா அல்லது கண நேர நிகழ்வா?" என்று கேட்கிறீர்கள்.*

இரண்டும்தான். காரணம் அது ஒரு பெரிய புனித யாத்திரையின் தொடக்கம் - ஆக இது ஒரு கணம், ஒரு நிகழ்வு மற்றும் ஒரு வழிமுறையும்கூட. ஒரு சன்னியாசி ஆனதினால் நீங்கள் வீடுபேறு அடைவதில்லை, வந்து சேரத் தொடங்கியுள்ளீர்கள். அது ஒரு மகத்தான நேரம். ஏனென்றால் உங்களின் சாதாரண இவ்வுலக வாழ்க்கையிலிருந்து, மற்றும் செல்வாக்கு, அதிகாரத் தேடலிலிருந்து அது ஒரு பெரும் தாவல் ஆகும்.

உண்மையைத் தேடிக் கண்டுபிடிக்க நீங்கள் நகர்ந்திருக்கிறீர்கள். உலகை நோக்கி வெளியில் போவதிலிருந்து உள்முகமாகப் பிரயாணிக்க முடிவு எடுத்திருக்கிறீர்கள். புறத்திலிருந்து அகத்தை நோக்கித் திரும்பியுள்ளீர்கள். அது ஒரு மகத்தான கணம்தான், காரணம் உள்நோக்கும் இயல்பு இக்கணத்தோடு பிறந்திருக்கிறது. உங்கள் வாழ்க்கை முறையிலிருந்து, உங்கள் வாழ்க்கை உரு அமைப்பிலிருந்து இது ஒரு மாபெரும் மாற்றம். நீங்கள் பழைய மாதிரியாக இனி எப்போதும் இருக்கப் போவதில்லை. இது ஒரு தீர்க்கமான மாற்றம், அது ஒரு தொடர்பின்மை - கடந்த காலம் விடப்பட்டு உங்களை நீங்களே புதிதாக உருவாக்கிக் கொள்கிறீர்கள், அதே சமயம் இது ஒரு வழிமுறையும்கூட. ஏனென்றால் இது தொடக்கம் மட்டுமே.

உள்ளே நகரத் தொடங்கிவிட்டீர்கள், ஆனால் நீங்கள் நகர்ந்து கொண்டேயிருக்கவேண்டும்.

லாவோட் சூ சொல்வது: "ஒரு பத்தாயிரம் மைல் பயணம் முதல் அடியெடுப்பில்தான் துவங்குகிறது". முதல் அடி என்பது மகத்தான ஒரு கண நேரம். யோசித்துப் பாருங்கள், முட்டைப் புழு கம்பளிப்புழுவாக மாறுகின்றது. - அது மகத்தானது, முட்டைப் புழு அசையாது, கம்பளிப்புழு அசையக்கூடியது, ஊர்ந்து போகக்கூடியது, ஆனால் அது இன்னும் பட்டாம்பூச்சியாகவில்லை. அதற்குப் பறப்பது பற்றி ஒன்றும் தெரியாது, மலர்களை அறியாது, இன்னமும் அது இறக்கை கட்டிக் கொள்ளவில்லை. ஆனால் பயணம் தொடங்கிவிட்டது. பத்தாயிரம் மைல் பயணத்தின் முதல் அடியை எடுத்து வைத்தாகிவிட்டது, அது ஊர்ந்து செல்லத் தொடங்கி விட்டது. ஊர்வது சாத்தியமென்றால் என்றாவது ஒருநாள் பறப்பதும் சாத்தியமே. முட்டைப்புழு பட்டாம்பூச்சியாக முடியாது, கம்பளிப்புழுதான் பட்டாம்பூச்சியாக முடியும். உலகாயத மனிதன் வீடு பேறு அடைய முடியாது, ஒரு சன்னியாசியால்தான் முடியும். முட்டைப்புழு மற்றும் பட்டாம்பூச்சிக்கு இடையே இருப்பது சன்னியாசி, ஒரு பிணைப்பு. ஆக சன்னியாசி பயணத்தின் தொடக்கம் மற்றும் வழிமுறை என்று இரண்டும்தான். அது ஒரு கண நேரம் மற்றும் ஒரு வழிமுறை.

'சன்னியாசியாக ஒரு குரு அவசியமா?' என்று கேட்கிறீர்கள். இந்தக் கேள்வியைக் கேட்பதற்குக் கூட நான் உங்களுக்குத் தேவைப்படுகின்றேன். உங்களாலேயே பதில் கூறமுடியவில்லை. இதை விடப் பெரிய கேள்விகளுக்கு எப்படிப் பதில்

கூறப்போகின்றீர்கள்? இது ஒரு முட்டாள்தனமான, அசட்டுக் கேள்வி. நான் உங்களுக்கு மரியாதை தர வேண்டும் என்பதற்காக, ஒரு ஒட்டகத்தை மதிக்க வேண்டும் என்பதற்காக இக்கேள்விக்கு நான் பதில் சொல்கிறேன்.

*இதுபோன்ற ஒரு சாதாரணமான அசட்டுக் கேள்விக்குக்கூட உங்களால் பதில் சொல்ல முடியவில்லை என்றால் நீங்களாகவே எப்ப டிச் சன்னியாசி ஆக முடியும்?*

கம்பளிப்புழுவிற்கு ஒரு பட்டாம்பூச்சி தேவை. பட் டாம்பூச்சி சிறகடித்துப் பறப்பதைக்காண வேண் டும், மலர்களையும் தேனையும் ரசிப்பதைப் பார்க் கவேண்டும். சூரிய ஒளியை ரசிப்பதைப் பார்க்க வேண்டும். இவையெல்லாம் அவசியம் தேவை யானவை. அதனால் கம்பளிப் புழுவிற்குள் ஒரு ஆசை, தேடல் வேட்கை பிறக்கும். அது ஒரு கனவை உருவாக்கும், மெய்ப்படுவதற்கான ஒரு கனவு உருவாகும். கம்பளிப்புழு கனவு காணத் தொடங்கவில்லை என்றால், சாத்தியமே இல்லை. அறியாதவற்றைப் பற்றி நீங்கள் எப்படிக் கனவு காண முடியும்? அறிந்தவற்றைப் பற்றி மட்டுமே கனவு காண முடியும். கடந்த காலத்தில் நீங் கள் அனுபவித்ததைப் பற்றி மட்டுமே உங்க ளால் சிந்திக்க முடியும்: எப்படி உங்களால் கட வுள், உண்மை அல்லது நிர்வாணம், சமாதி பற் றியெல்லாம் சிந்திக்க முடியும்? இவையெல்லாம் உங்களுக்கு வெற்று வார்த்தைகள், அர்த்தமற்ற விளங்கா மொழி. யாரேனும் ஒருவருக்குள் சமா திநிலை உயிரோட்டத்துடன், துடித்துக் கொண்டு சுவாசித்துக் கொண்டு இருக்கும் மனிதருடன்

நீங்கள் நெருங்கிய தொடர்பு கொள்ளவேண்டும். உண்மை அறிந்த ஒருவருடன் தொடர்பு ஏற்படுத்திக் கொள்ள வேண்டும், அவருள் நீங்கள் கடவுளின் கண நேரப் பார்வை கிடைக்கப் பெறலாம். அவ்வளவுதான் தேவை. கடவுள் எனும் நோய் உங்களுக்குத் தொற்றிக் கொள்ள வாய்ப்புள்ள ஒருவருடன் தொடர்பு உங்களுக்கு வேண்டும். குடி மயக்கம் கொண்ட ஒருவருடன் போகவேண்டும், அவரின் மட்டற்ற மகிழ்ச்சி, ஆனந்தம், அமைதி மற்றும் அவரின் சலனமற்றதன்மை இவற்றை எல்லாம் நீங்கள் காண வேண்டும், இதனால் உங்களுக்குத் தாகம் ஏற்படும். இதுவரை நீங்கள் ருசித்திராத ஒன்றிற்காகத் தாகம் ஏற்படும்.

ஒரு குருவைப் பற்றியதெல்லாம் இவ்வளவே. இதை நீங்களாகவே செய்ய முடியுமென்றால், மிக்க நன்றி. தயவுசெய்து செய்யுங்கள். "நீங்களே செய்ய முடியும்" போன்ற அமெரிக்கப் புத்தகங்களை வாங்கிப் படியுங்கள். ஆனால் நீங்கள் ஏற்கனவே இருக்கும் குழப்பத்தை அதிகமாக்கத்தான் முடியும். நீங்கள் இருக்கும் குழப்பத்தில், நீங்கள் என்ன செய்தாலும் மேலும் அதிகமான குழப்பமே ஏற்படும்.

நீங்கள் ஏற்கனவே சிதறிக்கொண்டிருக்கும் ஒரு கூட்டமாய் இருக்கின்றீர்கள். உங்களையே நீங்கள் ஒன்றுசேர்க்க முடியவில்லை. சிலசமயங்களில் இது நடக்கும், இல்லை என்று நான் சொல்லவில்லை. தங்களை ஒருமுகப்படுத்திக் கொண்டவர் இருந்திருக்கின்றனர். ஆனால் இவர்கள் அசாதாரணமானவர்கள், இதுபோன்ற கேள்விகளைக் கேட்பதற்கு அவர்கள் இங்கே வருவதில்லை.

ஒருமுறை ஒரு இளைஞர் என்னிடம் வந்து, "பக வான், திருமணங்களைப் பற்றி என்ன நினைக் கின்றீர்கள்? நான் மணம் செய்து கொள்ளலாமா, வேண்டாமா? நான் உண்மையை நாடு பவன், அதைத் தேடிக்கொண்டிருக்கிறேன்" என்றார். நான் அவனிடம், "தயவுசெய்து திருமணம் செய்து கொள்" என்றேன். அந்த இளைஞருள், "ஆனால் இது ரொம்ப எதிர்பாராத ஒன்று! நீங்கள் ஏன் திரு மணம் செய்து கொள்ளவில்லை? திருமணம் செய் யாதே என்று சொல்வீர்கள் என்று நினைத்து உங்க ளிடம் வந்தேன். நீங்கள் ஏன் மணம் செய்துகொள் ளவில்லை?" என்றான்.

"ஏன் என்றால் நான் யாரிடமும் சென்று கேட்க வில்லை, அது எப்போதும் என் வழியாக இருந்த தில்லை. நான் யாரிடமும் எந்தக் கேள்வியும் கேட் டதில்லை."

நீங்கள் தந்திரமாக உள்ளீர்கள். உங்களுக்குப் பதில் வேண்டும், வழிகாட்டுதல் வேண்டும், இருந் தாலும் உங்களை அர்ப்பணித்துக் கொள்ளத் தயா ராக இல்லை. எல்லா வழிகாட்டுதலும் மலிவாக வேண்டும் என்று நினைக்கின்றீர்கள்.

நான் யாரையும் ஒரு கேள்விகூடக் கேட் டதில்லை. நான் பல்கலைக்கழகத்தில் இருந் தபோது என் பேராசிரியர்கள் என்மீது மிகுந்த கோபம் கொண்டிருந்தார்கள், ஏனென்றால் நான் எப்போதும் பதில் அளித்துக் கொண்டிருப்பேனே தவிர, கேள்வி கேட்டுக் கொண்டிருக்க மாட்டேன். அதிகமான கோபம் இருக்கும், அது இயற்கையா னதுதான், நீங்கள் பேராசிரியருக்குப் பதில் சொல்

விக் கொண்டிருந்தால் அவர் கோபப்படுவார். பல கல்லூரிகளிலிருந்து நான் வெளியேற்றப்பட்டிருக்கிறேன். என் ஒரே குற்றம் நான் பதில் சொல்வதுதான். ஒருவேளை நான் கேள்வி கேட்டால்கூட, அந்த கேள்வியே உண்மையில் பதில் போல இருக்கும், கேள்வியாக இருக்காது. அதனால் பேராசிரியர்கள் கோபப்பட்டார்கள். பதில் சொல்வதற்கான கேள்வி அவர்களுக்கு தேவை, ஏனென்றால் அதற்கான பதில் அவர்களிடம் இருந்தது.

நீங்கள் உண்மையைத் தேடிக் கொண்டிருந்தீர்கள் என்றால், தேடலில் இறங்கிவிட்டீர்கள் என்றால் உங்களுக்கு ஒரு குரு அவசியம். ஞாபகம் வைத்துக்கொள்ளுங்கள், நான் மீண்டும் சொல்கிறேன், தானாகவே நடக்க முடியாது என்றில்லை. எனக்கு தனியாகத்தான் நடந்தது, ஆக தனியாக நடக்காது என்று நான் எப்படிச் சொல்லமுடியும்? லாவோட் சூ சொன்னது: "உங்கள் வீட்டை விட்டு நீங்கள் வெளியே செல்ல வேண்டாம். கதவுகளையோ ஜன்னல்களையோகூடத் திறக்க வேண்டாம். எல்லாவற்றையும் உங்கள் அறைக்குள் இருந்துகொண்டே கண்டுபிடிக்க முடியும்." அவர் சொன்னது சரிதான். ஆனால் அப்படி நடப்பது மிகவும் அரிது. நீங்கள் தந்திரமாய் இருக்கிறீர்கள்; உங்களுக்கு வழிகாட்டுதல் வேண்டும். அதே சமயம் குருவிற்குத் தலை வணங்க மாட்டீர்கள். மேலும், *"எப்போதும் குரு ஒருவரது மனதில் குடிகொண்டிருப்பாரானால், எல்லா நேரமும் ஜபமாலை மற்றும் மஞ்சள் காவி உடை அணிய வேண்டிய அவசியம் என்ன?"*

அப்படியென்றால் தேவையில்லை, இந்தக் கேள்விகூட அவசியமில்லை! குரு உங்கள் மனதில் இருபத்திநான்கு மணி நேரமும் வாழ்ந்து கொண்டிருக்கிறார் என்றால் நீங்கள் ஒரு புத்தராகி விட்டீர்கள். உங்கள் குருவை இருபத்தி நான்கு வினாடிகளுக்கு மனதில் நிறுத்துவதே நடவாத காரியம். நீங்கள் இருபத்தி நான்கு மணி நேரத்தைப் பற்றிப் பேசுகிறீர்கள்.

என்னை இருபத்தி நான்கு வினாடிகளுக்கு நினைவிற்குக் கொள்ள முயற்சியுங்கள். கைக்கடிகாரத்தை வைத்துக்கொண்டு இருபத்துநான்கு வினாடிகளுக்கு என்னைப் பற்றி நினையுங்கள், இருபத்தி நான்காயிரம் முறை கோட்டை விடுவீர்கள். ஒரு கணம் போனால் உங்கள் தொழிலைப் பற்றி நினைக்கத் தொடங்குவீர்கள், அல்லது இன்று எந்தப் படத்திற்குப் போகலாம் என்று எண்ணம் போகும். பிறகு நீங்கள் சுதாரித்துக் கொண்டு என்ன செய்கிறோம் என்று நினைவுபடுத்திக் கொள்ளுமுன் ஐந்து வினாடிகள் கடந்திருக்கும். ஒருக்கால் மறுபடியும் ஒரு கண நேரம் என் ஞாபகம் வரும், அது ஏனோ தானோ என்று இருக்கும், ஆழமாக இராது. மறுபடியும் தொலைந்துபோகும். தொடர்ந்து இருபத்தி நான்கு வினாடிகளுக்கு என்னை நினைவுபடுத்திக் கொள்ளமுடியுமானால், எந்த விதமான கவனச் சிதறலும் இல்லாமல் இருக்க முயற்சி செய்யுங்கள், முடிந்ததென்றால் உங்களுக்கு மஞ்சள் காவி மற்றும் எந்த மாலையும் தேவைப்படாது. நான் உங்களைச் சன்னியாசியாக அறிவிக்கிறேன்.

நீங்கள் இருபத்திநான்கு மணி நேரம் என்கிறீர்கள்: ஆனால், உங்கள் மனதில் வாழும் குரு மஞ்சள் காவி அணிந்துகொள் என்று சொன்னால் என்ன செய்வீர்கள்? குரு சொல்வதைக் கேட்பீர்களா மாட்டீர்களா? மஞ்சள் காவி அணிந்திருக்கும் மனிதர்களைப் பற்றி என்ன நினைத்துக் கொண்டிருக்கிறீர்கள்? விருப்பத்தோடு மஞ்சள்காவி அணிந்து கொண்டிருக்கிறார்களா? குரு சொல்லிவிட்டார், என்ன செய்வது? குருவின்மீது காதல் கொண்டு விட்டனர். இப்போது குரு பைத்தியம் போலாகிவிட்டார். "மஞ்சள் காவி போட்டுக் கொள்" என்கிறார்.

குரு விசித்திரமானவர், முதலில் நீங்கள் குருவின் மீது நேசம் கொள்ள வேண்டும், அதன் பிறகு குரு உங்கள்மீது குறும்புச் செயல்களைப் புரிவார். "மஞ்சள் ஆடை அணிந்துகொள், முட்டாள்போல இரு, வெளியுலகத்திற்குள் செல். மக்கள் உன்னைப் பார்த்து சிரிக்கட்டும்!" என்று சொல்வார்.

ஆனால் குரு உங்கள் இதயத்தில் இருபத்திநான்கு மணி நேரமும் குடியிருக்கிறார் என்றால், அவர் சொன்னால் நீங்கள் தற்கொலைகூட செய்துகொள்வீர்கள்.

*அதற்குப் பிறகு நீங்கள் கேட்பது, ஏகலைவன் உண்மையான சீடன் இல்லையா?*

முதலில் நான் உங்களுக்கு ஏகலைவனின் கதையைச் சொல்கிறேன், அப்போதுதான் நீங்கள் புரிந்து கொள்ள முடியும்.

உங்களுக்கு பகவத்கீதை தெரியும், குரு கிருஷ்ணர். அவரின் சீடர் அர்ஜுனன் பற்றித் தெரிந்திருப்பீர்கள். தன் மாணவக் காலத்தில் அர்ஜுனன் ஒரு மாபெரும் வில்வித்தை வீரன். துரோணரிடம் பாடம் கற்றுக்கொண்டிருந்தான். அந்தக் காலத்தில் அவர்தான் மிகப்பெரிய வில்வித்தை வீரர். அர்ஜுனன் ராஜ குடும்பத்தைச் சேர்ந்தவன், ஆக, ராஜ குடும்பத்துப் பிள்ளைகள் எல்லோருமே துரோணரிடம் வித்தை கற்றுக்கொண்டிருந்தனர். அர்ஜுனன்தான் சீடர்களில் சிறந்தவன்.

துரோணர் ஒரு பிராமணர். ஏகலைவன் அப்போது வந்தான். ஏகலைவனுக்கும் துரோணரின் சீடனாக விருப்பம். ஏகலைவன் ஒரு சூத்திரன், தீண்டத்தகாதவன். துரோணர் ஏற்றுக்கொள்ள மறுத்தார். துரோணர் பிராமணர், அவர் எப்படி ஒரு தீண்டத்தகாத சூத்திரனைச் சீடனாக ஏற்றுக்கொள்ளமுடியும்? ஹிந்து மதத்தின் மிகப்பெரிய மனநோய்களில் இது ஒன்று. இதனால்தான் ஹிந்து மதம் நோய்ப்பட்டு ஆரோக்கியமில்லமல் இருந்தது. பல மகத்தான விஷயங்களை அவர்கள் செய்திருந்தாலும் இந்த ஒரு செயல் அந்த மகத்தானவற்றை எல்லாம் அழித்துவிட்டது. உலகில் இந்தளவு மோசமாக மனிதர்கள் பழிக்கப்பட்டதில்லை. சமய சார்புள்ளவர்கள் என்று அழைக்கப்பட்டவர்கள் இதைச் செய்துள்ளார்கள். இவர்கள் தங்களை உலகிலேயே மிகப் பெரிய சமயவாதிகள் என்று கூறிக்கொள்பவர்கள். ஆனால் இவர்கள் மிகவும் அசிங்கமானதைச் செய்து கொண்டிருந்தனர். லட்சக் கணக்கானவர்களை மனிதர்களாகவே சேர்த்துக் கொள்ளவில்லை. இந்த

தாழ்த்தப்பட்ட, ஒடுக்கப்பட்டவர்களைச் சேர்ந்த வன் ஏகலைவன். ஆனால் அவன் அழகான உடல் அமைப்பு கொண்டிருந்தான். மாபெரும் குருவான துரோணருக்கு இப்படிப்பட்டவன் உலகின் முதன்மை வில் வீரனாக முடியும் என்பதை உணர முடிந்தது. நேரடியாக அவரால் பார்க்க முடிந்தது. ஏகலைவனின் நடை, அவன் பேச்சின் பாங்கு, அவன் ஒருமுகப்பு எல்லாவற்றையும் கண்ட துரோணர், இந்த இளைஞன் அக்காலகட்டத்தின் மிகப் பெரிய வில் வீரனாக உருவாக முடியும் என்பதை கண்டு கொண்டார். அப்படியானால் என் சீடன் அர்ஜுனனின் கதி என்னாவது? அவன் அரசனாகப் போகிறவன்!... இது தன்னலப் பற்று. அவர் மறுத்துவிட்டார், அவர் இரண்டு காரணங்களுக்காக மறுத்தார். ஒன்று, நீ ஒரு சூத்திரன், நான் பிராமணன். நான் உன்னை ஏற்றுக் கொள்ள முடியாது. சூத்திரனின் நிழல்கூட ஏற்கலாகாது. சூத்திரர்களின் நிழல் தங்கள்மீது பட்டாலும் கூட பிராமணர்கள் குளிப்பதை வழக்கமாக கொண்டிருந்தனர். நிழல் போதும், யாரையும் தொடக்கூட வேண்டியதில்லை. இவர்கள்தாம் ஆன்மீகவாதிகள். மேலும் நிழல் ஒரு இல்லாப் பொருள். நீங்கள் அமர்ந்து இருக்கும்போது அவ்வழியே போகும் ஒரு சூத்திரனின் நிழல் உங்கள்மீது பட்டால் நீங்கள் குளிக்க வேண்டும். அவனால் நீங்கள் அசுத்தமாகி விட்டீர்கள்.

இந்தச் சூத்திரர்கள் பாவம் செய்தவர்கள் அல்ல. அவர்கள் ஏழைமக்கள், உழைக்கும் வர்க்கம், ஏய்க்கப்பட்டவர்கள், அவ்வளவே. "முதலில், நீ ஒரு சூத்திரன். அதனால் நான் உன்னை ஏற்றுக்

கொள்ள முடியாது" என்றார் துரோணர். இதைச் சொன்னதினால் அவர் ஒரு ஆன்மீகவாதி இல்லை என்று சொன்னாற்போலாகிவிட்டது. அவர் பெரிய வில்வித்தைக்காரராக இருக்கலாம், ஆனால் ஆன்மீகக் குருவல்ல. ஏகலைவனை மறுத்ததினால் அவர் ஒரு குரு இல்லை என்று நிரூபித்து விட்டார். ஏனென்றால் ஒரு குரு யாரையும் மறுக்கக்கூடாது. பாவம் செய்தவர் வந்தால்கூட குரு மறுக்க முடியாது, அதற்காகத்தான் அவர் இருக்கிறார்.

சில சமயங்களில் மக்கள் என்னிடம் சொல்வது: "நாங்கள் மதிக்கத்தக்கவர்கள் அல்ல. நாங்கள் இந்தத் தவறை, அந்தத் தவறை எல்லாம் செய்திருக்கிறோம். பகவான், நீங்கள் எங்களை ஏற்றுக் கொள்வீர்களா?" நான் சொல்வது என்னவென்றால், "நான் யாருக்காக இங்கேயிருக்கிறேன்? ஒரு மருத்துவர் நோயாளியிடம், உனக்கு பல நோய்கள் இருக்கிறது, அதனால் நான் உன்னை ஏற்றுக்கொள்ள மாட்டேன் என்று சொன்னால், அந்த மருத்துவர் இருந்து என்ன பயன்? ஆரோக்கிய மானவர்களை மட்டுமே ஏற்றுக் கொள்வதானால் அவர் எதற்கு இருக்கிறார்.

துரோணர் ஒரு குருவல்ல, ஒரு ஆன்மீகக் குருவல்ல. ஒரு இழிந்த அரசியல்வாதியாக இருந்திருக்க வேண்டும். "நீ ஒரு சூத்திரன் என்பதால் ஏற்பதற்கில்லை" என்று அவர் சொன்னது மேலெழுந்தவாரியாக இருக்க வேண்டும். ஆனால் ஆழ்மனதில் அவரின் தருக்கம் என்னவென்றால், இந்த ஏகலைவன் மாணவனாக ஏற்றுக்கொள்ளப் பட்டு, பெரிய வில்லாளியாகிவிட்டால், அவருடைய

நேசத்திற்குரிய சீடன் அர்ஜுனனின் கதி என்னாகும். தன் சீடன் அர்ஜுனன்தான் ராஜாவாகப் போகிறான், ஏகலைவன் அல்ல. என் விருப்பத்துக்கு உகந்த சீடனோடுதான் என் முழு வருங்காலமே இருக்கிறது. அர்ஜுனன் ராஜாவானால், நான் ராஜகுருவாகி விடுவேன். இயல்பாகவே ராஜாவைவிட அதிக அதிகாரம் படைத்திருப்பேன். ராஜா என் காலைத்தொட்டு வணங்குவார், என் ஆணையே ஆணையாக இருக்கும். அர்ஜுனன்தான் மிகப் பெரிய வில்வித்தை வீரனாக இருக்க வேண்டும் என்று விரும்பினார், ஏகலைவன் மறுக்கப்பட்டான்.

ஏகலைவன் காட்டிற்குள் சென்றான். வில்வித்தையின்மீது அவனுக்கிருந்த அதீத ஈடுபாட்டினால், அவன் துரோணரின் சிலையை வடித்து, அதன் முன்னே பழகத் தொடங்கினான். ஏகலைவன் துரோணரின் வழிகாட்டுதலின்றி, தனியாகவே முன்னேறிக் கொண்டு வருகிறான் என்ற செய்திகள் துரோணருக்கு எட்டியது. ஏகலைவனின் முழு ஈடுபாட்டினால், அவனுக்கு குருவின் சிலையே போதுமானதாக இருந்தது.

பின்பு ஒருநாள் அர்ஜுனன் இனி ஏகலைவனுக்கு இணையானவன் இல்லை என்ற செய்தி வந்து சேர்ந்தது. துரோணர் ஏகலைவனைப் பார்க்கச் சென்றார். மன்னிக்கவே முடியாத ஒன்றைச் செய்தார் துரோணர். அங்கே சென்றவர், ஏகலைவனை அவன் திறமைகளைக் காட்டச்சொன்னார். அவர் கண்டதில், அர்ஜுனன் இனி ஏகலைவனுக்கு ஈடு இணை இல்லை என்பது திட்டவட்டமாகியது. ஏகலைவன் அர்ஜுனன் உட்பட எல்லா சீடர்களையும்

விஞ்சிவிட்டான், உண்மையில் அவன் துரோண ரையே விஞ்சிநின்றான்.

அவர் ஏகலைவனிடம், "நீ என் சிலையை வைத் துக் கற்றுக்கொண்டாய், இப்போது நீ எனக்கு குரு தட்சிணை தரவேண்டும் என்றார்" சீடன் குருவி டமிருந்து கற்றுக்கொண்டதற்கு, நன்றிக் கடனாக ஏதாவது பரிசு தரவேண்டும், அடையாளமாக ஏதோ ஒன்று. ஏகலைவன் அழத் தொடங்கினான், "என்னிடம் ஏதுமில்லையே, நீங்கள் என்ன வேண் டுமானாலும் கேட்கலாம்" என்றான் ஏகலைவன். துரோணர் அவனின் வலது கை கட்டைவிரலைக் தட்சிணையாகக் கேட்டார். மறுகணமே ஏகலை வன் தன் கட்டைவிரலை வெட்டி துரோணருக்குச் சமர்ப்பித்தான். துரோணர் வலது கட்டைவிரலைக் கேட்டதிற்கு காரணம், அது இல்லாமல் அவன் இனி எப்போதும் விற்தொழில் பழக முடியாது. வில் லாளியாக முடியாது.

இந்த மனிதர் துரோணர் ஹிந்து எண்ணத் தொகுதியில் ஒரு கரும் புள்ளி. அவர் ஒரு ஆன் மீகக் குருவேயல்ல. அவர் ஒரு கீழ்த்தரமான அர சியல்வாதி, அவர் ஒரு நல்ல வில்வித்தைவீரராக இருந்திருக்கலாம், ஆனால் அது யாரையும் ஆன் மீகவாதி ஆக்காது. முதலில் ஏகலைவனை மறுத் துவிட்டு என்ன ஒரு நெஞ்சழுத்தம் இருந்தால், இப்போது அவனிடம் சென்று, "எனக்குச் சன்மா னம் தா, நான் உன் குரு" என்று சொல்கிறார். அப் போது சீடனாக ஏற்றுக் கொள்ள மறுத்தவர் இப் போது "நான் உன் குரு" என்கிறார்.

ஏகலைவன் உண்மையிலேயே அரிதானவன். மா ஆத்மா அவன். அவன் கால்களைத் தொடக்கூட துரோணருக்கு அருகதை இல்லை. ஏகலைவன் எதுவும் சொல்லவில்லை. "நீங்கள் என்னை ஏற் றுக் கொள்ளவில்லையே" என்று சொல்லியிருக்க லாம். ஆனால் அவன் அப்படிச் சொல்லவில்லை. அப்படியொரு யோசனையே அவன் மனதில் எழ வில்லை. மறுக்கப்பட்டாலும் துரோணரைத் தன் குருவாகப் பாவித்து நம்பினான். அவரை நேசித் தான், அவருக்காக எதையும் தரத்தயாராக இருந் தான். தன் வலது கை கட்டை விரலை கொடுத்து வாழ்நாள் முழுவதும் முடமானான், அதன் பிறகு ஏகலைவன் பற்றி யாரும் கேள்விப்படவில்லை. அவன் ஒருக்கால் காட்டுக்குள் சென்று பழையபடி தன் கூட்டத்தாரோடு சேர்ந்து வாழ்ந்துகொண்டு, தெருக்களைப் பெருக்கிக் கொண்டிருந்திருக்க லாம். வில்வித்தை பற்றி எல்லாம் நினைத்திருக்க மாட்டான். ஒரு மாபெரும் விற்தொழில் வீரன் அழிக்கப்பட்டான். இதுதான் கதை.

"*ஏகலைவன் உண்மையான சீடன் இல்லையா*" என்பது கார்த்திக்கின் கேள்வி.

ஏகலைவன் உண்மையான சீடன், துரோணர் உண்மையான குருவல்ல. ஆனால் கார்த்திக் நீங் கள் இந்தக் கேள்வியைக் கேட்கக் கூடாது, ஏனென்றால் நீங்கள் வெறுமனே மஞ்சள் காவி மற் றும் மாலையை தவிர்க்கப் பார்க்கிறீர்கள். ஏகலை வன் குருவால் புறக்கணிக்கப்பட்டாலும், காட்டிற் குள் சென்று குருவின் சிலையை உருவாக்கினான். நீங்கள் ஏகலைவனின் பெயரை இதில் இழுக்கக் கூடாது. நீங்கள் அவனுக்கு நேர் எதிர்.

மாலை என்பது என்ன? அது ஒரு தோற்றம், உருமாதிரி. அங்கே குரு மறுக்கிறார், இங்கே குரு உங்களை ஏற்றுக்கொள்ளத் தயாராக உள்ளார். குரு நிராகரித்தாலும் ஏகலைவன் குருவின் உருவச்சிலையை வடித்து அதன்மூலம் இலக்கை அடைந்தான். ஆனால் நீங்கள் ஏகலைவனை உங்கள் கேள்வியில் கொண்டு வரக்கூடாது. அது முரண்பாடாக இருக்கிறது. அது நீங்கள் சரியென்று நிரூபிக்கவில்லை. அது நீங்கள் முற்றிலும் தவறு என்பதையே நிரூபிக்கின்றது. ஏகலைவன் போன்ற ஒரு மனிதனுக்கு குருவின் உருமாதிரி இல்லாமல் சாதிக்க முடியவில்லை. அது தேவைப்பட்டது, அது உதவி புரிந்தது, அது ஒரு விதமான சூழலை உருவாக்கிற்று, ஏற்புடைய பருவ நிலை உருவாயிற்று, நேசம் முழுமையானது என்றால் மாலை உயிரற்றதல்ல. இது வெறும் மரமல்ல. அது உங்கள் இதயம். மாலையில் பதிந்திருக்கும் உருவம் வெறும் சித்திரமல்ல. அது உங்கள் நேசத்தைப் பொறுத்தது, நீங்கள் எவ்வளவு பாசத்தைப் பொழிகின்றீர்களோ அந்த அளவு அதற்கு உயிரோட்டம் இருக்கும். அது தேவைதான். அது ஒரு பருவநிலையை உங்களைச் சுற்றி உருவாக்கும், மேலும் ஒரு குறிப்பிட்ட பருவநிலையில்தான் நீங்கள் மலரமுடியும்.

## ஆறாவது கேள்வி:

*ஒருவர் ஆன்மீக ரீதியாக வளர்ச்சியடையும்போது, புணர்ச்சி இன்பத்தில் நாட்டம் குறைகின்றது. அப்படியானால் இந்நாட்களில் எனக்குப் புணர்ச்சியில் ஈடுபாடு அவ்வளவாக இல்லை. எனக்கு வயதாகிக் கொண்*

டிருக்கிறதா அல்லது ஞானமடைதலுக்கு அருகில் வந்து விட்டேனா?

முடிவிற்கு வர ஒரு அளவுகோல் இருக்கிறது. உங்கள் புணர்ச்சி நாட்டம் மறைந்து உங்கள் நேசம் அதிகமாகி விட்டிருந்தால் அது வயதானதற்கான அறிகுறி அல்ல. ஆனால் பால் ஈடுபாட்டோடு நேசிக்கும் பண்பும் மறைந்துவிட்டது என்றால் அது வயோதிகம்.

நீங்கள் கவனித்தது இல்லையா? வயதானவர்கள் நேசமிழந்து, நச்சரிப்பு அதிகமாகி, கோபம் மற்றும் முரட்டுத்தன்மை உடையவர்களாக, எப்போதும் துன்புறுத்துவதற்கு மற்றும் பழித்துக் கூறுவதற்காக காரணங்கள் கண்டுபிடித்துக் கொண்டு இருப்பதைப் பார்த்திருப்பீர்கள். என்ன நடக்கிறது? ஒருவருக்கு பால் உணர்வுகள் குறையத் தொடங்கியவுடன் சாறுகள் வற்றத் துவங்குகின்றன. வேட்கை எனும் மாயம் அழிந்தவுடன் மனிதர்கள் பாலைவனம் போல் ஆகிவிடுகின்றனர். அவர்களுடைய பசுமை எல்லாம் அவர்களின் பாற்பண்பு மற்றும் சிற்றின்பம் சார்ந்து உள்ளது. அவர்களின் மலர்ச்சி அனைத்தும் பாலுணர்வு சார்ந்தது, வேறு ஒன்றுமேயில்லை. ஆக பாலுணர்வு முக்கியமல்ல என்று ஆகும்போது, அவர்களின் பசுமையும் மறையத் தொடங்குகிறது. தகவல் தொடர்பின்றி இருந்திருக்கிறார்கள், எப்போதும் கோபப்படுகின்றனர், தங்களின் அகங்காரத்திலேயே திளைத்து இருக்கின்றனர்.

யாருக்குமே வயதானவர்களைப் பிடிக்காது, அவர்கள் சொந்தப் பிள்ளைகள் உட்பட. வயோதி

கம் காரணமாக அல்ல. ஆசை எனும் மாயம் போன பின்பு அவர்கள் பாறையாய் இறுகிப் போகின்றனர். அவர்கள் ஆசைகள் போன பிறகு மற்றவர்களின் ஆசைகள் கண்டு பொறாமை கொள்கின்றனர். நீங்கள் ஒருவரை நேசிப்பதை ஒரு வயதானவரால் சகித்துக் கொள்ள முடியாது. பழிப்பு இயல்பான பார்வையே எப்போதும் இருக்கும். ஏனென்றால் இவையெல்லாம் முட்டாள்தனம் என்று தனக்குத் தெரியும் என்பார். 'நான் இதை வாழ்ந்து பார்த்த வன், பயனற்ற விஷயம்' என்று சொல்வார். இது வயதான மனிதர்களுக்கு நடக்கும், பழமையான நாடுகளுக்கு இது நடக்கும்.

பூனா நகரில் நீங்கள் ஒரு பெண்ணோடு கைகோர்த்து நடந்து சென்றால் மக்கள் கண்ட னம் செய்வர், காரணம் வேறொன்றுமில்லை. இந்த நாட்டிற்கு வயதாகிவிட்டது. நாட்பட்டு விட்டது. இது மிகவும் பழமை வாய்ந்த நாடு, ஆசை எனும் மாயம் மறைந்துவிட்டது. வயதானவர்களால் நிரம்பியுள் ளது. இளைஞர்களை ஏற்றுக் கொள்ளும் மனப் பான்மை இல்லை. வயதானவர்களால் இளைஞர் களை, இளமை தரும் மகிழ்வை ஏற்றுக் கொள்ள முடியாது, அது அவர்களைக் காயப்படுத்துகிறது. ஆக அடிப்படைத் தத்துவம் இதுதான். நீங்கள் வெறுமனே வயோதிகம் அடைந்தீர்கள் என்றால், பாலுணர்வற்றுப் போவது மட்டுமல்லாமல் நீங்கள் காய்ந்த சருகாய், சோர்ந்து உயிரற்றுப் போய் விடுவீர்கள். இளமையானவர்களைக் குறைகூறத் தொடங்கிவிடுவீர்கள். இது ஒரு வகையான பழி வாங்குதல். உள்ளூர இருக்கும் பொறாமை. "என் ஆசைகள் போய்விட்டும்கூட இவர்கள் இன்ன

மும் ஆசைப்படுகிறார்களே? நான் இங்கே செத்துக் கொண்டிருக்கிறேன், நீங்கள் நேசிக்கிறீர்களா? சாவு ஒவ்வொரு கணமும் என்னை நெருங்கிக் கொண்டிருக்கிறது; நீங்கள் ஒரு ஆண் அல்லது பெண்ணைத் தேடிக் கொண்டிருக்கிறீர்கள், இன்னமும் ஆடிப் பாடிக் கொண்டிருக்கிறீர்கள்?" இது வயதானவர்களுக்கு ஏற்புடையதல்ல.

ஆனால் வயோதிகம் என்பது வெறும் முதுமையடைதல் மட்டுமல்லாது, ஞானம் அடைதலும்கூட என்று இருந்தால் அது முற்றிலும் வேறுபட்ட விஷயமாக இருக்கும். ஒருவரை ஒருவர் நேசிக்கும் மனிதர்களோடு மிக மிக மகிழ்ச்சியாக அந்த வயதானவரால் இருக்க முடியும். அவருள் ஆசிகளும் அருள் வளமும் எப்போதும் ஊற்றெடுத்துக் கொண்டிருக்கும். நேசிக்கும் ஒருவரை இப்படிப்பட்டவர் கண்டால் அவர் கண்களில் மகிழ்ச்சி பொங்கும். அவர்களை ஆசீர்வதிப்பார், ஏனென்றால் ஆசைக்குக் கால அளவு உண்டு என்பதை அவரறிவார். ஒருவர் அனுபவத்தின் மூலமாக மட்டுமே கற்றுக்கொள்ள முடியும். ஆம், இப்போது தான் மாயையிலிருந்து மீண்டுவிட்டோம் என்பதை அறிவார். ஆனால் அதே சமயம் தன் தந்தை மாயையிலிருந்து விடுபட்ட நிலையில் இருந்தபோது அவர் சொல்லைத் தான் கேட்கவில்லை என்பதையும் அவர் நன்கு அறிவார்.

இப்போது அவருக்கு நன்றாகத் தெரியும். இவருடைய மகனும் இவர் சொல்லைக் கேட்கப் போவதில்லை. கேட்காமலிருப்பதும் ஒரு வகையில் நல்லதுதான், அப்படிக் கேட்டு நடந்து கொண்டால் அவனால் தன் இளமையை அனுபவித்து

வாழ முடியாது. வாழ்ந்து அனுபவிக்காத இளமையானது முதுமையை ஊடுருவுகிறது. அப்படி நடக்கும்போது முதுமை விகாரமடைகிறது, அது ஆண்மையற்றுப் போகின்றது. இப்போது உங்களால் அந்த அனுபவங்களை வாழ்ந்து பார்க்க முடியாது. அவை மனதில் சம்மட்டியாய் அடித்துக் கொண்டே இருக்கும். அவை தொடர்ந்து கனவுகளாய், ஆசைகளாய் வந்து கொண்டேயிருக்கும். உடலால் இதில் ஈடுபட முடியாது. ஆனால் மனம் இந்த விஷயங்களில் தொடர்ந்து ஈடுபடும். பாலுணர்வு மூளை சம்பந்தப்பட்டதாகிவிடும். பாலியல் மூளை தொடர்புடையதாக இருக்குமானால் அது மிகவும் வக்கிரப்பட்டுப் போகும். அது பாலுறுப்புகள் சார்ந்ததாக இருக்க வேண்டும், மூளை சார்ந்தல்ல. ஆனால் பாலுணர்வு இயங்கவில்லை என்பதால் அது தலைக்கேறிவிட்டது.

ஒரு மனிதன் தன் குழந்தைப் பருவத்தில் முழுமையாக வாழ்ந்திருந்தால் அவன் அதிலிருந்து ஒரு வயது வந்த மனிதனாக வெளிவருவான். அந்த மனிதன் தன் இளமையை அனுபவித்திருந்தால் அதிலிருந்து ஒரு வயது வந்த முதியவனாக வெளிவருவான். அவன் ஞானத்தோடு, மகிழ்ச்சியாய் சாந்தமாக, நேசமிக்கவனாய் வெளிவருவான். பாலுணர்வு மறைவதினால் நேசம் மறைவதில்லை. உண்மையில் நேசம் அதிகமாகும். ஏனென்றால் பாலுணர்விற்கு தேவைப்பட்ட சக்தி இப்போது அதில் ஈடுபடுத்தப்படவில்லை. அந்தச் சக்தி அனைத்தும் நேசத்திற்கு கிடைக்கக் கூடியதாகிறது. எந்த ஒரு இளைஞனாலும் இருக்க முடியாத அளவு நேசத்தோடு ஒரு வயதானவரால் இருக்க

முடியும். ஏனென்றால் இளைஞனுக்கு வேறுபல ஈடுபாடுகள் இருக்கும்.

நேசம் என்பது ஒரு இளைஞனுக்கு இரண்டாம் பட்சம்தான். அவன் முழு ஆர்வமே செக்ஸ், பால் உறவுதான். ஒரு இளைஞன் ஒரு பெண்ணிடம், "நான் உன்னைக் காதலிக்கிறேன்" என்று சொல்வானானால் அவன் வெறுமனே அப்பெண்ணை எப்படிப் படுக்கைக்கு கூட்டிச் செல்லலாம் என்று திட்டமிட்டுக் கொண்டிருக்கிறான். இவையெல்லாம் அபத்தம் என்று அவனுக்குத் தெரியும், ஆனால் இதைச் செய்தாக வேண்டும், இது ஆட்டத்தின் ஒரு பகுதியாகும். ஒரு பெண்ணைப் பார்த்து திடீரென 'சம்மதமா?' என்று கேட்டீர்களானால் அவள் கூச்சலிட்டு, போலீசை அழைக்கலாம்; இது எதிர்பாராதது. நீங்கள் இணங்க வைக்க வேண்டும். அவளும் யோசித்துக் கொண்டிருப்பாள், நீங்களும் இணங்க வைக்கிறேன் என்று ஓயாமல் "நான் உன்னைக் காதலிக்கிறேன், நான் உன்னை விரும்புகிறேன்" என்று கூறிக்கொண்டிருந்தால் அவளுக்குச் சலிப்பு ஏற்படும். படுக்கைக்கு செல்லும் அறிகுறியே இல்லையென்றால் அவளுக்கும் அலுத்துப் போகும். அறிமுகம் அளவோடு இருக்க வேண்டும். ஜார்ஜ் பெர்னாட்ஷா நூலைப்போல இருக்கக்கூடாது. அதில் நூற்பொருள் நூறு பக்கங்கள் என்றால், முகவுரை இரு நூறு பக்கங்களுக்கு இருக்கும். பிறகு நூலுக்கு யார் காத்திருப்பார்கள்? அறிமுகம் அறிமுகமாக இருக்கவேண்டும். அது விஷயங்களை எளிமையாக்குகின்றது.

ஆக இளைஞனின் ஆர்வம் பால் உறவில்தான், காதல் அல்ல. காதல் வெறும் சாக்குதான், காதல் நேசம் எல்லாம் பணிவு, கலாச்சாரம் மற்றும் நயம் ஆகும், ஆனால் அவனின் உண்மையான ஆர்வம் பால் உறவில்தான். காதல் என்பது நாம் கசப்பு மருந்துடன் தரும் தேனைப் போன்றது. அவனின் உண்மையான ஈடுபாடு பாலுறவுதான்.

உலகெங்கிலும் இளைஞர்கள் பால் உறவை 'மேக்கிங் லவ்' (அதாவது காதல் செய்வது என்று நேர்ப்பொருள் காண்க) என்று அழைக்கத் தொடங்கியிருப்பது தற்செயலானது அல்ல. அவ் வளவுதான், அவர்கள் காதல் நேசம் எல்லாம். ஆழத்தை அவர்கள் அறிய மாட்டார்கள். இளை ஞன் மேலோட்டமாக இருக்கவே வரையறுக்கப் பட்டுள்ளான். பாலுறவு ஆழமற்றது, மேலோட்ட மானது. ஆக இளைஞனும் மேலோட்டமானவன். இளமைக்கு ஆழம் இல்லை, அதற்கு அமை தியான புரிதல் கிடையாது. இளமை பரபரப்புக் குணம் கொண்டது, அது போராட்டமான நேரமா கும். நல்லது, அதைத் தவறு என்று நான் சொல் லவில்லை. அது வளர்வதற்கான சாத்தியத்தை வழங்குகிறது. நீங்கள் கசப்பு மற்றும் இனிப்பு என்று பல அனுபவங்களைக் கடந்து வரவேண்டும். நீங் கள் பரபரப்பு, கிளர்ச்சி, பரவசம் என்று பல நிலை களைக் கடந்து வரவேண்டும், அதன் பிறகுதான் ஒரு கண நேரம் வரும், நீங்களும் புரிந்து கொள் ளத் தொடங்குவீர்கள். இந்த அனுபவங்கள் உங்க ளைத் தயார்படுத்தும், உங்களைச் சுத்தி செய்யும். நீங்கள் இளமை எனும் அக்னியில் பிரவேசித்து

வெளிவந்தால்தான் மூப்பு எனும் சுத்தத் தங்கமாக உருவாக முடியும்.

ஒரு வயோதிகர் அறிவார்ந்தவர். அவருள் ஒரு ஒளி இருக்கின்றது. அவர் தன் வாழ்க்கையை வாழ்ந்திருக்கிறார், விளைந்து, கனிந்திருக்கிறார். வாழ்க்கை என்னவென்பது அறிவார். அதன் மகிழ்வுகள், சோகங்கள், ஏற்றத்தாழ்வுகள் எல்லாம் அறிவார். வாழ்க்கையின் சொர்க்க நரகங்களை அவர் நன்கு அறிவார். எல்லாவற்றையும் அவர் பார்த்திருக்கிறார். எல்லாவற்றையும் பார்த்ததினால் ஒரு பெரும் புரிதல் அவருக்குள் எழுந்துள்ளது, அதே போல் பாசமும் பரிவன்பும் எழுந்துள்ளது.

ஆக இதுதான் அளவீடு. பாலுணர்வு மறையும். அதே சமயத்தில் பாசம், பரிவன்பு மற்றும் புரிதல் எல்லாமே தோன்றினால் நீங்கள் மூப்பு மட்டும் அடையவில்லை. நீங்கள் ஞானம் பெறுதலுக்கு அருகில் வந்து கொண்டிருக்கிறீர்கள். அப்படி இல்லை என்றால் நீங்கள் வெறுமே வயோதிகத்தை எட்டிக் கொண்டிருக்கிறீர்கள். வயதாவது ஒரு பெரிய தகுதி ஒன்றுமில்லை. அவரவர் நேரம் வந்தால் எல்லோரும் அடையக்கூடியதுதான், அது தானாகவே நடப்பது. ஆனால் அறிவில், ஞானத்தில் வளர்ச்சி பெறுவது நிச்சயமாக ஒரு தகுதிதான்.

* மிக அழகான இளம் பெண் ஒருத்திக்கு சொர்க்கத்தின் வாயிலில் நேர்முகத் தேர்வு நடத்திக் கொண்டிருந்தார் செயின்ட் பீட்டர்.

"நீ பூமியில் இருந்தபோது குடி, ஆட்டம்பாட்டம் மற்றும் வரைமுறையற்ற பாலுறவில் அல்லது வேறு வகையான தீயவற்றில் ஈடுபட்டாயா?"

"ஐயையோ இல்லவே இல்லை" என்று மறுத்தாள் அப்பெண்.

"சரி, அப்படியானால் நீ ஏன் இங்கு முன்னரே வரவில்லை? நீ செத்துப் பல வருடங்களாகி விட்டதே" என்றார் செயின்ட் பீட்டர்.

நினைவிற் கொள்ளுங்கள். இறப்பதற்கு முன்பே செத்து விடாதீர்கள். உயிரோட்டத்தோடு இருங்கள்.

நான் மேலும் கேட்டது: மனித இன ஆராய்ச்சியாளர் ஒருவர் ஜாவா நாட்டின் பெரிதும் அறியப்படாத ஒரு பழங்குடியினரின் விசித்திரமான இறுதிச் சடங்கினைக் கண்டார். ஒரு மனிதன் இறந்துவிட்டால் அவனை அறுபது நாட்களுக்குப் புதைத்துவிடுவர். பின்னர் அவன் உடல் தோண்டி எடுக்கப்படும். அவன் உடல் ஓர் இருண்ட அறையில் குளிர்ச்சியான தட்டைக் கல்லின்மீது வைக்கப்படும். அக்குடியைச் சேர்ந்த மிக அழகான இருபது பெண்கள் முற்றிலும் நிர்வாணமாக சடலத்தைச் சுற்றிக் கிளர்ச்சியூட்டும் வகையில் மூன்று மணி நேரம் ஆட்டம் போடுவார்கள்.

"இதை ஏன் செய்கின்றீர்கள்?" என்று குடித் தலைவரிடம் கேட்டார் ஆராய்ச்சியாளர். அதற்கு அவர், "அவன் எழுந்திருக்கவில்லை என்றால், அவன் இறந்துவிட்டான் என்பது எங்களுக்கு உறுதியாகிவிடும்."

ஆக, மேலும் மேலும் 'செத்துக்' கொண்டிருப்பதால் நீங்கள் ஞானத்திற்கு அருகில் வந்துவிட்டீர்கள் என்று நினைக்க வேண்டாம். ஞானம் என்பது

இறப்பின் பண்பல்ல, அது ஒரு 'பழுத்த' வாழ்வின் பண்பாகும், ஒரு வளமான வாழ்வின் பண்பாகும். தன் வாழ்க்கையைப் பற்பல வகைகளில் வாழ்ந்த வர், நல்ல மற்றும் கெட்ட வழிகளில், பாவி மற்றும் யோகி, எல்லா வகைகள் மற்றும் சாத்தியக் கூறுக ளின் அனுபவங்களையும் வாழ்ந்து பார்த்தவர்தான் கனிந்து போகிறார். அந்த முதிர்வில்தான் வளமை உள்ளது. பெருமிதம் உள்ளது.

இதுவே அடிப்படையாக இருக்கட்டும், இந்த அளவுகோலைக் கொண்டே மதிப்பிடுங்கள். நேசம் வளர்கின்றது என்றால் பரிவன்பு வருகிறது, புரிதல் கூடுகிறது என்றால் நீங்கள் சரியான பாதை யில் போகின்றீர்கள். ஆனால் உங்கள் பால் உணர் வோடு நேசம் மடிந்து, புரிதல் மற்றும் பரிவன்பு தொலைந்து போயிற்று என்றால் நீங்கள் தவறான பாதையில் செல்கிறீர்கள்.

## இறுதிக் கேள்வி:

*நேசிப்பது மற்றும் விரும்புவது ஆகிய இரண் டின் வேறுபாடுகளைப் பற்றி நீங்கள் பேசிய போது என்னைக் குழப்பத்தில் ஆழ்த்தி விட் டீர்கள். நேசம் என்பது ஒரு உள்ளார்ந்த ஈடுபாடு என்றீர்கள். ஆனால் ஈடுபாடும் மற் றொரு வகையான பற்றுதல் என்று நான் நினைத்தேன். நான் நேசிக்கும் பல மனிதர் கள் இருக்கிறார்கள், ஆனால் எனக்கு ஈடு பாடு கிடையாது. நாளை அவர்களை நான் நேசிப்பேனா என்று எப்படி கணிப்பது?*

இது முக்கியமான கேள்வி. நீங்கள் மிக மிகப் புரிதலோடு இருக்க வேண்டும், ஏனென்றால் அது மிகவும் சிக்கலானது மற்றும் நுட்பமானதும்கூட. நான் நேசம் என்பதில் ஈடுபாடு இருக்க வேண்டும் என்று சொல்லும்போது அதன் பொருள் என்ன? அடுத்த நாளுக்காக ஒரு வாக்குறுதி தரவேண்டும் என்று நான் சொல்லவில்லை. ஆனால் வாக்குறுதி என்பது இருக்கத்தான் செய்கிறது. இதில் சிக்கலும் நுட்பமும் கலந்து இருக்கிறது. "நான் உன்னை நாளைக்கும் நேசிப்பேன்" என்று நீங்கள் சொல்வதில்லை, ஆனால் அந்த நேசத்தில் வாக்குறுதி உள்ளடங்கி இருக்கிறது, முற்றிலுமாக இருக்கிறது. சொல்லுதல் அவசியமில்லை.

நீங்கள் ஒருவரை நேசிக்கும்போது வேறு விதமாய் சிந்திக்கவே முடியாது. என்றாவது ஒருநாள் இந்த நபரை நான் நேசிக்க மாட்டேன் என்று உங்களால் சிந்தித்துப் பார்க்க முடியாது. நீங்கள் இந்த உறவு முறையிலிருந்து வெளிவர முடியாது என்று நான் சொல்லவில்லை. முடியும், முடியாமல் போகலாம், அது முக்கியமல்ல. ஆனால் அந்த நேசக் கணத்தில், இரண்டு பேருக்கிடையே சக்தி பாய்ந்து கொண்டிருக்கையில் ஒரு பாலம் உருவாகிறது, தங்கத்தினால் ஆன பாலம். அதன்மூலம் இருவரும் இணைக்கப்படுகின்றனர். ஒரு நேரத்தில் நான் இவரோடு இருக்கமாட்டேன் அல்லது இந்த மனிதர் என்னோடு இருக்கமாட்டார் என்று மனதால் நினைத்துக்கூட பார்க்கமுடியாது, புரிந்து கொள்ள முடியாது. இதுதான் ஈடுபாடு. இதை வெளிப்படையாகச் சொல்வதில்லை. "என்றென்றும் உன்னுடனேயே இருப்பேன்" என்று நீதிமன்றத்திற்கு போய்

பொது அறிவிப்பு செய்யப்போவதில்லை. உண்மை யைச் சொல்லப்போனால், அப்படிப்பட்ட அதிகா ரப்பூர்வமான அறிவிப்புச் செய்தால் அதில் நேசம் இல்லை, காதல் இல்லை என்பது தெளிவாகிறது. அப்படியானால் சட்டபூர்வமான ஏற்பாடு தேவைப் படுகின்றது. ஈடுபாடு இருக்கும்போது சட்ட ரீதியான ஏற்பாடு எதுவும் தேவையில்லை.

நேசம் இல்லாததால்தான் திருமணம் தேவைப் படுகின்றது. ஆழமான நேசம், காதல் இருந்தால் திருமணம் தேவையில்லை. திருமணத்தில் என்ன அர்த்தம் இருக்கிறது? அது ரோஜாவிற்கு சிகப்பு வர்ணம் பூசுவது போலவும், பாம்பிற்கு கால் வைப் பது போலவும் உள்ளது. அது தேவையில்லை. ஏன் நீதிமன்றம் போக வேண்டும்? உங்களுக்குள் ஏதோ ஒருவித அச்சம் இருக்க வேண்டும், நேசம் முழு மையாக இல்லை.

ஆழமாக ஒரு பெண்ணை நேசிக்கும்போதுகூட அப்பெண்ணை விட்டு விலகும் சாத்தியக்கூறைப் பற்றி யோசிக்கின்றீர்கள். மேலும், "யாருக்கு தெரி யும்? நாளையே இந்த மனிதர் என்னை விட்டு போகலாம். நீதிமன்றத்திற்கு போவது நல்லதுதான். முதலில் இதைச் சட்டபூர்வமாக்கலாம், அப்படியா னால் நம்பலாம்" என்று அந்தப் பெண்ணும் சிந் தனை செய்வாள். ஆனால் இது எதைக் காட்டு கிறது? வெறுமனே நேசம் முழுமையாக இல்லை என்பதை இது வெளிப்படுத்துகிறது. மாறாக, முழு மையான காதல் என்றால் ஈடுபாடு என்ற பண்பு உள்ளியல்பானது. அதைக் கொண்டுவரத் தேவை யில்லை, அது ஓர் உள்ளார்ந்த பண்பு.

நீங்கள் காதலிக்கின்றீர்கள் என்றால் அது இயல்பாகவே வரக்கூடியது. அதை நீங்கள் திட்டமிடுவதில்லை. இந்த உணர்வு இயற்கையாய் வரும், சில சமயங்களில் அது வார்த்தைகளாய் வெளிப்படும். "நான் உன்னை என்றென்றும் நேசிப்பேன்" என்பதுபோல. இது இக்கணத்தின் ஆழம். அது நாளை பற்றி ஏதும் சொல்வதில்லை. நினைவிற் கொள்ளுங்கள், இது வாக்குறுதியல்ல. நேசத்தின் ஆழம் மற்றும் முழுமை காரணமாக தானாகவே வருவதால், "என்றென்றும் உன்னை நேசிப்பேன், சாவு கூட நம்மைப் பிரிக்காது" என்று நீங்கள் சொல்லலாம். அதுவே முழுமையான காதலின் உணர்வு.

மறுபடியும் சொல்கிறேன், நாளையே நீங்கள் ஒன்றாக இருப்பீர்கள் என்று அர்த்தமில்லை. யாருக்குத் தெரியும்? அது கருத்தல்ல. நாளைய தினம் தன்னைப் பார்த்துக் கொள்ளும். காதல் வசப்பட்டிருக்கும் ஒரு மனதிற்குள் நாளை என்ற எண்ணம் புகுவதில்லை. நாளை கருத்தாக்கப்படுவதேயில்லை, வரும் காலம் மறைந்துபோகிறது, இக்கணம் சாசுவதமானது. இதுதான் ஈடுபாடு.

நாளை வரும்போது, நீங்கள் ஒன்றாக இல்லாமல் போகலாம், ஆனால் நீங்கள் துரோகம் செய்யவில்லை. ஏமாற்றவில்லை. நீங்கள் இதனால் கவலைப்பட மாட்டீர்கள், வருத்தம் இருக்கும், ஆனால் நீங்கள் பிரிந்து போக வேண்டும். இப்படித்தான் நடக்கும் என்று நான் சொல்லவில்லை, அப்படி நடக்காமலும் போகலாம். அது ஆயிரத்தொரு விஷயங்களைப் பொறுத்தது.

வாழ்க்கை உங்கள் நேசத்தை மட்டுமே சார்ந்து இருக்கவில்லை. அப்படியிருந்தால் நீங்கள் முடிவில்லாமல் வாழ்ந்து கொண்டிருப்பீர்கள். வாழ்க்கை ஆயிரத்தொரு விஷயங்களைச் சார்ந்து இருக்கிறது. "நாம் என்றென்றும் சேர்ந்து வாழ்வோம்" என்ற உணர்வுடையது நேசம். ஆனால் நேசம் மட்டுமே வாழ்க்கையல்ல. அது இருக்கையில் வெகு தீவிரமாய் இருக்கிறது, அதில் மூழ்கியிருப்பார். ஆனால் ஆயிரத்தொரு விஷயங்கள் உள்ளன, சில சமயங்களில் அவை சிறிய விஷயங்கள்.

நீங்கள் ஒரு மனிதரைக் காதலிக்கலாம். அந்தக் கணத்தில் அவருடன் நரகத்திற்குக்கூடப் போகத் தயாராய் இருக்கலாம், அதை வெளிப்படையாகவும் சொல்லலாம். நீங்கள் ஏமாற்றுவதாக அர்த்தமில்லை. "உன்னுடன் நரகத்திற்கு போக வேண்டுமென்றால், நான் தயார்" என்று உண்மையாகவும் நேர்மையாகவும் கூடச் சொல்லலாம். நான் மறுபடியும் சொல்கிறேன் நீங்கள் சொல்வது உண்மைதான் பொய்யல்ல. ஆனால் நாளையே, அந்த மனிதருடன் வாழும்போது, ஒரு சிறிய விஷயம்கூட, உதாரணமாக ஒரு அசுத்தமான குளியலறைகூட உங்கள் உறவைச் சலனப்படுத்தலாம். நரகம் வெகு தொலைவில் இருக்கிறது, அவ்வளவு தூரம் போக வேண்டாம், ஒரு அசுத்தமான கழிவறை போதும், அல்லது ஒரு சிறு பழக்கவழக்கம், குறட்டை விடும் கணவன் உங்களைப் பைத்தியமாக்கலாம். ஆனால் நீங்கள் நரகத்திற்குக்கூடப் போகத் தயாராக இருந்தீர்கள், அது உண்மைதான். அந்தக் கணத்தில் அது உண்மையான

துதான், உங்களுக்கு வேறு எந்த யோசனையும் இல்லை. ஆனால் அந்த மனிதர் இரவில் குறட்டை விடுகின்றார், அவரின் வியர்வை நாற்றம் சகிக் கவில்லை, முத்தமிடுகையில் சுவாசம் துர்நாற்றம் வீசுகிறது, உங்களுக்கு சித்ரவதையாக இருக்கின் றது. வெறும் சிறிய விஷயங்கள், சாதாரணங்கள், காதலில் இருக்கும்போது இவையெல்லாம் புலப்ப டுவதில்லை.

குறட்டை மற்றும் குளியலறை பற்றி யார் கவலைப் படப் போகிறார்கள்? ஆனால் ஒருவரோடு சேர்ந்து வாழும்போது ஆயிரத்தொரு விஷயங்கள் இருக் கின்றன, ஒரு சிறிய விஷயம் கூட பாறையாக இறுகி காதல் எனும் மலரை அழித்துவிட முடியும்.

ஆகவே ஈடுபாட்டில் வாக்குறுதி இல்லை என்று நான் சொல்லவில்லை. நான் சொல்வதெல்லாம் நேசம் உருவாகும் கணத்தில் ஈடுபாடும் உள்ள டங்கியிருக்கிறது. நீங்கள் முற்றிலும் அதில் இருக் கின்றீர்கள், அது அந்தளவு தீர்க்கமானது. இயல் பாகவே இந்தக் கணத்திலிருந்து அடுத்தது பிறக் கும், அதனால் நீங்கள் சேர்ந்து இருப்பதற்கான எல்லா சாத்தியக் கூறுகளும் உள்ளன. இன்றைய தினத்திலிருந்து நாளை பிறக்கும். இன்றைய தினம் நேசமிக்கதாய் இருந்ததென்றால், நாளையும் அவ் வாறே இருக்கும். அது ஒரு தொடர் நேர்வு. ஆக, நீங்கள் தொடர்ந்து நேசிப்பதற்கு எல்லாச் சாத்தி யக்கூறுகளும் இருந்தாலும்கூட எப்போதும் "ஒரு வேளை" என்பதற்கு இடமுண்டு. இதை நேசம் புரிந்துகொள்ளும்.

என்றாவது ஒருநாள் ஒருவர் பிரிந்துபோக முற்படும்போது, "இப்படிச் செய்வது நியாயமா, என்றும் உன்னுடன் வாழ்வேன் என்று சொன்னாயே, இப்போது என்னவாகிவிட்டது. நீ ஏன் போகிறாய்?" என்று கூச்சலிட மாட்டீர்கள். நீங்கள் காதல் புரிந்திருந்தால், நீங்கள் நேசத்தை அறிந்திருந்தால் நீங்கள் புரிந்து கொள்ளமுடியும். நேசத்திற்கு இந்த ஈடுபாடு என்ற பண்பு இருக்கிறது.

நேசம் மர்மமானது. அது இருக்கும்போது எல்லாமே சொர்க்கமாகத் தோன்றும். அது போய் விட்டால், எல்லாமே பழையதாய், அர்த்தமற்றதாய் தோன்றும். இந்தப் பெண் இல்லாமல் வாழ முடியாது என்ற நிலைமாறி இந்தப் பெண்ணோடு வாழவே முடியாது என்று ஆகிவிட்டது. இரண்டுமே மெய்யான நிலைகள்தான்.

## நீங்கள் கேட்பது:

*"நேசிப்பது மற்றும் விரும்புவது ஆகிய இரண்டின் வேறுபாடுகளைப் பற்றி நீங்கள் பேசும் போது என்னைக் குழப்பத்தில் ஆழ்த்தி விட்டீர்கள். நேசம் என்பது ஒரு உள்ளார்ந்த ஈடுபாடு என்கிறீர்கள், ஆனால் ஈடுபாடும் மற்றொரு வகையான பற்றுதல் என்று நான் நினைத்தேன்."*

ஈடுபாடு என்பதை நீங்களும் நானும் வெவ்வேறு விதமாகப் பொருள்படுத்துகிறோம். உங்கள் பொருள் சட்ட ரீதியானது. நான் சொல்வது சட்டரீதியான அர்த்தமல்ல. நான் நேசத்தின் பண்பை மட்

டுமே விவரித்தேன். அதை நீங்கள் அரவணைக்கும்போது என்ன நடக்கும். ஈடுபாடு ஏற்படும்.

என் சன்னியாசிகள் ஆழ்ந்த ஈடுபாடு கொண்டுள்ளார்கள், ஈடுபாடு நேசத்தை உருவாக்காது, நேசம்தான் ஈடுபாட்டை உருவாக்கும். முதலில் நேசம், ஈடுபாடு அதைப் பின்தொடரும். ஒரு நாள் நேசம் மறைந்து போனால், ஈடுபாடும் போய்விடும். அது வெறும் நிழல். நேசம் இல்லாதபோது ஈடுபாடு பற்றிப் பேசவேண்டாம். அப்படியானால் நீங்கள் அறிவின்றி நடந்து கொள்கின்றீர்கள். அது நேசத்தின் நிழல். அது நேசத்தோடுதான் வரும். நேசம் இல்லையேல் அதுவும் மறைந்துவிடும். அதைப் பற்றியே பேசிக் கொண்டிருக்காதீர்கள். ஈடுபாடு என்னவாயிற்று? வாக்குறுதி என்னவாயிற்று? நேசம் இல்லையென்றால், ஈடுபாடும் போய்விடும், இதுதான் நான் தரும் அர்த்தமாகும்.

நீங்கள் சொல்வதும் எனக்குப் புரிகிறது. நீங்கள் அர்த்தப்படுத்திக் கொள்வது என்னவென்றால், "நேசம் போய்விட்டது, ஈடுபாடு, வாக்குறுதி இருக்கிறதே, அது என்னவாகும்? இது உங்கள் அர்த்தமாகும். நேசம் போனபின்பும் நீங்கள் ஈடுபாடு தொடர வேண்டும் என்று நினைக்கின்றீர்கள். ஈடுபாட்டைப் பற்றிய உங்கள் கருத்து சட்ட ரீதியானது.

எப்போதும் ஞாபகம் வைத்துக் கொள்ளுங்கள். நான் சொல்வதைக் கேட்கும்பொழுது, 'என்' அர்த்தத்தையும் புரிந்து கொள்ளுங்கள். கடினம்தான், ஆனால் நீங்கள் முயற்சி செய்ய வேண்டும். அந்த முயற்சியில் நீங்கள் பொருள்படுத்திக் கொண்டதிலிருந்து வெளிவந்து விடுவீர்கள். மெல்ல,

மெல்ல படிப்படியாக ஒரு ஜன்னல் திறக்கும், நான் சொல்வதை உங்களால் புரிந்து கொள்ளமுடியும். இல்லையென்றால் குழப்பம்தான். நான் ஒன்று சொல்ல, நீங்கள் வேறொன்று கேட்டுக் கொண்டிருப்பீர்கள்.

ஒரு குறிப்பிட்ட விஷயத்தைப் பற்றி என்ன புரிந்து கொள்கிறீர்கள் என்பது உங்களைப் பொறுத்தது. அதன் பொருள் உங்கள் கடந்த காலத்திலிருந்து வருகிறது. அர்த்தத்தை நீங்கள் தருகிறீர்கள். நினைவிற்கொள்ளுங்கள், நான் சொல்வதைக் கேட்கும்போது, அதற்கு நீங்களே பொருள் தருவதை தவிர்த்து விடவும். நான் சொல்வதின் பொருள் என்ன என்று கண்டுபிடிக்க முயற்சி செய்யுங்கள். அப்படியானால் குழப்பம் இருக்காது. இல்லையென்றால் வார்த்தைகள் என்னுடையதாக இருக்கும், பொருள் உங்களுடையதாக இருக்கும் - இதனால் உங்கள் மனதில் பெரும் குழப்பம் ஏற்படும்.

என்னுடன் இருப்பது காதலிப்பது போன்றதாகும். என்னுடன் இருப்பது ஒரு வகையான சக்தியை உருவாக்குவது போன்றதாகும், அதை நானே தனியாக உருவாக்க முடியாது, நீங்களாகவே தனியாக உருவாக்கவும் முடியாது. இரண்டு பேர் ஆழ்ந்த நேசத்தில் ஈடுபடும்போது மட்டுமே அந்தச்சக்தி உருவாகும், இருவரும் அதற்குப் பங்களிக்கின்றனர். இங்கு உருவாக்கப்படும் சூழல் நானோ, நீங்களோ இல்லாமல் உருவாக்க முடியாது. நீங்களும் அதற்கு அதிகமாகப் பங்களிக்க வேண்டும். சீடன் வெறுமனே செயல்படாமல் இருக்க வேண்டியதில்லை, சீடன் நேசத்தில் செயல் முனைப்போடு

கலந்து கொள்ளவேண்டும். குருவும் சீடனும் செய லாற்றலோடு இருக்கும்போது, செயல்முனைப் போடு ஒருவரை ஒருவர் நோக்கிச் செல்லும்போது, அந்தச் சாதாரண இயல் உலகை வெளியிலிருந்து ஏதோ ஒன்று துளைக்கின்றது.

புத்தர் தனியாக இருப்பது ஒரு விஷயம். அதே புத் தர் தன் 'சங்கத்தோடு' சீடர் குழாத்தோடு இருப்பது வேறு ஒரு விஷயமாகும். தனியாக இருக்கும் புத் தர் ஒரு அழகான மலர், ஆனால் இயல் உலகோடு தொடர்பற்று இருக்கிறார். அப்படிப்பட்டவர் விரை விலேயே மறைந்துபோய் விடுவார், அவர் புராத னமாகிவிடுவார். அப்படிப்பட்ட ஒருவர் இருந்தாரா, இல்லையா என்று மக்கள் யோசிப்பார்கள்.

சங்கத்தோடு இருக்கும் புத்தர் ஒரு உறுதியான மெய்மையாவார், வெறும் மலர் அல்ல, பூமியோடு வேரூன்றி இருப்பார். தன் சீடர்களின் மூலமாகத் தான் குரு பூமியில் வேரூன்ற முடியும். குரு வானத் தைச் சேர்ந்தவர், அவரால் பறக்க முடியும், இறக் கைகள் உடையவர், ஆனால் அவரிடம் வேர்கள் இல்லை. அவர் அந்த வேர்களை உங்கள் மூலமா கத்தான் கண்டுபிடிக்க முடியும். குருவிற்குப் பூமி யில் வேர்கள் இருக்குமானால், மிகப்பெரிய மதிப் புடைய ஒரு விஷயம் பூமிக்கு நடக்கும். ஒரு களம் உருவாக்கப்படுகிறது, ஒரு சூழ்நிலை உருவாக் கப்படுகிறது. மனிதர்களின் புதிய நடத்தைமுறை அதாவது உளவியல் உதயமாகின்றது, உருவாகி றது. இதில் பற்பல மலர்கள் பூக்கின்றன.

நேசம் ஒரு அற்புதம். அது ஒரு இரசவாதம்.

லிட்டில் பிரின்ஸ் என்ற கதையில் ஒரு ஏட்டுரைப் பகுதி.

ராஜகுமாரன் நரியோடு இருந்தான். "உன்னுடன் நான் விளையாட முடியாது, நான் பழக்கப்பட்ட விலங்கு அல்ல" என்று நரி சொன்னது.

"ஓ, மன்னித்துக்கொள்" என்றான் குட்டி ராஜகுமாரன். சற்று யோசித்து, 'பழக்குவது என்றால் என்ன?' என்று கேட்டான்.

"அது பெரும்பாலும் புறக்கணிக்கப்பட்ட ஒரு செயல். தொடர்பு ஏற்படுத்திக் கொள்வது என்று அர்த்தம்" நரி விளக்கம் கூறியது.

"தொடர்பு ஏற்படுத்திக் கொள்வதா?"

"அதேதான்" என்ற நரி, தொடர்ந்து "என்னைப் பொறுத்தவரையில் நீ மற்ற ஆயிரமாயிரம் சிறுவர்களைப்போல இன்னுமொரு சிறுவன். வேறு ஒன்றுமில்லை. நீ எனக்குத் தேவையில்லை. உனக்கும் நான் தேவையில்லை. பல்லாயிரம் நரிகளில் நானும் ஒன்று. ஆனால் நீ என்னைப் பழக்கப்படுத்தினால், நாம் ஒருவருக்கொருவர் தேவைப்படுவோம். எனக்கு, நீ உலகத்திலேயே பிரத்தியேகமானவனாய் இருப்பாய். அதே போல் நான் உனக்கு உலகிலேயே பிரத்தியேகமாகிவிடுவேன்..." "புரிந்து கொள்ளத் தொடங்குகிறேன்" என்றான் குட்டி ராஜகுமாரன்.

குருவிற்கும் சீடனுக்கும் இடையே மிகப்பெரிய நேசப் பிணைப்பு ஏற்படுகின்றது, மிகப் பெரிய பழக்குதல் ஏற்படுகின்றது. நீங்கள் ஒரு சீடரல்லா

விட்டால், கோடிக்கணக்கான மனிதருள் நானும் ஒருவன். உங்களைப் பொறுத்த மட்டிலும் நான் பெரிதும் பொருள்பட மாட்டேன். ஆனால் சீடரா கிவிட்டால் நான் உங்களுக்கு பிரத்தியேகமானவ னாக, தனித்தன்மை வாய்ந்தவனாகி விடுவேன், பிறகு வேறு எவரையும் என்னோடு ஒப்பிட முடி யாது. பிணைப்புகள் ஏற்படுத்தப்படுகின்றன. உங் கள் மூலம் நான் வேர்களைப் பாய்ச்சத் தொடங் குகிறேன். வானும் பூமியும் சந்திக்கின்றன. இந்த சந்திப்பில் எல்லாம் சாத்தியமாகின்றது. நடக்கவே முடியாததுகூடச் சாத்தியமாகும்.

நான் சொல்வதைக் கேட்கும்போது, என் வார்த் தைகளை மட்டும் கேட்காதீர்கள். வார்த்தைகள் தேவைதான், அவை கொள்கலம்தான். கொள் ளப்பட்ட பொருள் அல்ல. கொள்கலம் மற்றும் கொள்ளப்பட்ட பொருள் இரண்டிற்கும் இடையே உள்ள வேறுபாட்டை உணர்வதுதான் ஞானத்தின் தொடக்கமாகும்.

இன்று இது போதும்.

## முதல் கேள்வி:

*நேசம் மற்றும் தியானத்தில் கரைந்து போகும், மறைந்து போகும் கணம் அளப்ப ரிய அழகானது. அகங்காரமற்ற நிலை எட் டாத, மெய்ஞ்ஞானம் அடையாத ஒரு மனி தனால் அதே வகையில் உணர்வு நிலை யிலேயே சாவை எதிர்கொண்டு, வரவேற்று அனுபவிப்பது சாத்தியமா? நீங்கள் எங்கும் இருக்கின்றீர்கள். ஆனால் நாங்கள் இறந்த பிறகு நீங்கள் பூத உடலில் இருந்தாலும் இல் லாவிட்டாலும்கூட நாங்கள் உங்களோடு தொடர்பு நிலையில், பொருந்தி இருப்பது சாத்தியமா? தயவுசெய்து சாவைப் பற்றிப் பேச முடியுமா?*

இது முக்கியமான கேள்வி, அவசரமானதும் கூட. இக்கேள்வி மா ஆனந்த ஷிஃபாலியுடையது. இவர் மிகமிக வயதானவர், இப்போது அல்லது கொஞ்ச காலத்திலோ சாவை சந்திக்கப் போகின்றார். தயா ராக இருப்பது நல்லது. தயார் நிலையில் சாவிற்குள் போவதும் நல்லதுதான்.

சாவைப் பற்றி முதலில் புரிந்து கொள்ளவேண்டி யது என்னவென்றால், நீங்கள் நேசத்தை அறிந்து இருந்தீர்களானால் நீங்கள் சாவை அறிந்துள்ளீர் கள், நீங்கள் தியானம் அறிந்திருந்தீர்களானால் நீங் கள் சாவை அறிந்திருக்கிறீர்கள். சாவு புதியதாய் எதையும் கொண்டு வருவதில்லை. நேசிக்காதவர்

களுக்கும், தியானம் செய்யாதவர்களுக்கும் மட்டும் தான் சாவு புதிதானது.

ஷிஃபாலி பயப்படத் தேவையில்லை. அவர் ஆழ்ந்த தியானத்தில் இருந்திருக்கிறார், தீவிர மாய் நேசித்திருக்கிறார். சில நாட்களுக்கு முன்னர் நான் குறிப்பிட்ட ஒரு குழந்தையாகிவிட்ட, மூதாட்டி இவர்தான். இவர் இனி ஒரு ஒட்டகமோ, சிங்கமோ இல்லை. இவர் குழந்தையாகிவிட்டார். இவர் தன் உடலை மறந்துவிட்டார், உடல் ஒரு பொருட்டல்ல. உடலுக்குத்தான் வயதாகிறது. உடல் காலநே ரக் கணக்கில் வாழ்கின்றது, அகத்தில் இருக்கும் மையம் காலத்தைக் கடந்த ஒன்று; அது பிறப்பதும் இல்லை, இறப்பதும் இல்லை. மனம் தொடர்ந்து பிறந்து, இறந்து கொண்டிருக்கிறது, ஆனால் உங்க ளுக்குள் இந்த லீலையைப் பார்த்துக் கொண்டே யிருக்கும் சாட்சி இருக்கிறது. அந்தச் சாட்சிதான் உங்களின் உண்மையான ஜீவன். அது வெறுமனே கவனிக்கின்றது. அது பிறப்பைப் பார்க்கின்றது, நேசத்தைப் பார்க்கின்றது, தியானத்தைக் கவனிக் கின்றது, அது சாவையும் கவனிக்கின்றது. ஒரே குணம் சாட்சியாக இருப்பது மட்டுமே, கண்ணாடி யாய் பிரதிபலிப்பது மட்டுமே. எது நடக்கின்றதோ அதைப் பிரதிபலிக்கின்றது.

ஷிஃபாலி அச்சப்படத் தேவையில்லை. தன்மீது அவரின் செயல்பாட்டைப் பற்றி எனக்கு மிக்க மகிழ்ச்சிதான். அவருக்குப் பெரும் துணிவு. ஒரு குழந்தையாய் மறுபடியும் மாறுவதற்கு துணிவு வேண்டும். துணிவு, ஏனென்றால் முழு உலகமே உங்களைப் பார்த்து, சிரித்துக் கொண்டிருக்கும். நீங்கள் பைத்தியமாகி விட்டீர்கள் என்று உலகமே

நினைக்கும். எங்குமே ஆதரவு கிடைக்காது, மரியாதையை இழப்பீர்கள். மக்கள் உங்களைத் தவிர்ப்பார்கள். அதுதான் ஷிஃபாலிக்கு நடந்தது. அவர் ஹாலந்திற்குத் திரும்பிச் சென்றவுடன் எனக்கு கடிதம் எழுதினார்: "விசித்திரமாய் இருக்கிறது, நண்பர்கள் என்னைத் தவிர்க்கிறார்கள், என் வாழ்நாள் முழுவதும் நான் அறிந்த மனிதர்கள் எனக்கெதிரே வர மறுக்கின்றனர். அவர்களுக்கு மட்டற்ற மகிழ்ச்சியை நான் கொடுத்திருக்கிறேன், நான் திறந்த மனதோடு வந்திருக்கிறேன்."

ஆனால் யாருக்குத் திறந்த மனது வேண்டும்? யாருக்குத் தேவை மகிழ்ச்சி? துயரைத்தான் மனிதர்கள் தேடிக் கொண்டிருக்கின்றனர். துயரத்தைச் சேமித்து வைக்கின்றனர், நரகத்தை விடாப்பிடியாகப் பிடித்துக் கொண்டிருக்கின்றனர். எவ்வளவு முடியுமோ அந்தளவு மகிழ்ச்சி தரும் எதையும் தவிர்க்கின்றனர். எப்போதும் சாக்குப்போக்கு மற்றும் தர்க்க வாதம் கண்டுபிடிப்பார்கள். பேரானந்தத்தைப் பழிப்பார்கள், துயரைப் போற்றுவார்கள்.

பரவச நிலையில் உள்ள ஒரு மனிதரை நீங்கள் பார்க்கும் போதெல்லாம் "இவருக்குப் பைத்தியம் பிடித்துவிட்டதா?" என்ற கேள்வி உங்களுக்குள் எழும். இதற்குக் காரணம் இயல்பான அறிவு நிலையில் இருப்போர் எல்லாம் உண்மையில் மகிழ்ச்சியாக இருப்பது இல்லை. ஆக இந்த இயல்பு நிலை என்பது துன்பம், தொங்கிய முகம், கவலை ஆகியவற்றிற்குச் சமானமாகிவிட்டது. அதீத உணர்ச்சிகள் என்றாகிவிட்டது. தேவையில்லாமல் மனச்சுமை ஏற்றிக் கொண்டாற் போன்றது. இது எங்கேயும் இட்டுச் செல்லப்போவதில்லை சாவைத் தவிர.

அறிவுநிலை என்பது வாழ்க்கையே அர்த்தமற்றது என்ற கருத்திற்கு இணைப் பொருளாகிவிட்டது, மற்றும் மகிழ்வோடு இருப்பது என்பது முட்டாள்த னம் என்பது போலவும் ஆகிவிட்டது.

உலகின் கூட்டம் முழுவதிற்கும், இந்தத் துன்பகர மான கூட்டத்திற்கு எதிராகப் போவதற்கு உண்மை யிலேயே துணிச்சல் வேண்டும். எவருக்கும் மகிழ்ச் சியின் வழிகள் தெரியவில்லை. திடீரென நீங்கள் பாடத் தொடங்குகிறீர்கள், எல்லோரும் அதிர்ச்சி அடைகின்றனர். "ஏதோ தவறாகிவிட்டது" எல் லோரும் உங்களை மேம்படுத்தத் தொடங்குகின் றனர், உங்களுக்கு அறிவுரை தருகிறார்கள். எல் லோரும் உங்களுக்கு எதிராக உள்ளனர். நீங் கள் ஆபத்தானவர். கூட்டத்தினருக்கு இடையே அச்சம் எழத் தொடங்குகிறது. "யாருக்குத் தெரி யும்? நீங்கள் சரியாக இருக்கலாம்." அப்படியானால் அவர்கள் எல்லோரும் தவறானவர்கள். இதை ஏற் றுக் கொள்வதற்கில்லை. நீங்கள் தவறாக இருக்க வேண்டும். அப்படி என்றால்தான் அவர்கள் சரியாக இருக்க முடியும், பாதுகாப்பாக உணர முடியும். ஆக வேதான் அவர்கள் ஏசுவைச் சிலுவையிலிட்டார் கள்.

கிறிஸ்தவர்கள் ஏசுவைச் சோகமாகவும், துன்ப கரமாகவும் சித்தரிக்கின்றனர். அவர் உண்மையி லேயே அப்படிப்பட்ட ஒரு மனிதராய் இருந்திருந் தால், எவரும் அவரைச் சிலுவையில் அறைவதைப் பற்றிக் கவலைப்பட்டிருக்க மாட்டார்கள். மக்கள் அவரை நேசித்திருப்பார்கள், மரியாதை செலுத் தியிருப்பார்கள், துறவி என்று அழைத்திருப்பார் கள். ஆனால் அவர் கொண்டாடும் மனிதராய்

இருந்தார், வாழ்க்கையின் சிறிய விஷயங்களைக் கொண்டாடினார். குடிப்பது, விருந்துண்பது, நண்பர்களைச் சந்திப்பது. அவர் சமயத்திற்கு முற்றிலும் வேறு ஒரு பண்பை கொண்டுவந்தார். அது ஏற்புடையதாய் இல்லை, அதைச் சகித்துக் கொள்ள முடியவில்லை. அவரைச் சிலுவையில் அறையத்தான் வேண்டும். அவர் வாயை அடைத்தாக வேண்டும், சும்மா இருக்கச் சொல்ல வேண்டும். அவர் அந்தளவிற்கு ஆபத்தானவர். ஆகையால், அவரை உயிரோடு விட்டு வைப்பதும் ஆபத்தானது. அவர் அழிக்கப்பட வேண்டும். அதன் பிறகு அவர்கள் சொந்தமாக ஒரு ஏசுவை உருவாக்கினார்கள், அவர்கள் விருப்பத்திற்கு ஏற்றாற்போன்ற ஒரு ஏசுவை உருவாக்கினார்கள், கவலைதோய்ந்த சிலுவையில் இடப்பட்ட துன்பகரமான ஏசுவை உருவாக்கினர். சிலுவையை, சாவை ஒரு அடையாளச் சின்னமாக கிறிஸ்துவம் ஏற்றுக்கொண்டது ஒரு விபத்தல்ல. அது உங்களைச் சோகமாக்கும்.

நீங்கள் ஒரு தேவாலயத்திற்குள் சென்றீர்களானால் அந்தச் சூழல் சோகமயமாக இருக்கும். ஒரு இடுகாட்டின் சூழல் நிலை நிலவும். அப்படி இருக்க வேண்டிய நிர்ப்பந்தம் இருக்கிறது. நினைவிற் கொள்ளுங்கள், சர்ச் ஏசுநாதரை மையமாக வைத்து உருவாக்கப்படவில்லை, அது சிலுவையைச் சுற்றி உருவாக்கப்பட்டது. ஆகவே நான் கிறிஸ்துவத்தை 'கிராஸ்சியானிட்டி' (சிலுவைமயமான) என்று அழைப்பேன். சிலுவையைச் சுற்றி உருவாக்கப்பட்ட வெற்றிடம் தான் 'சர்ச்'. சிலுவையை எடுத்துவிட்டால் கிறிஸ்துவம் இருக்காது.

ஏசு கிறிஸ்து ஆடத் தொடங்கினால் கிறிஸ்தவம் காணாமல் போய்விடும். ஏசு ஒரு புல்லாங்குழலை எடுத்து வாசிக்கட்டும், பாடட்டும், உங்கள் பிஷப்புகள், போப்பாண்டவர்கள், பாதிரிகள் எல்லோரும் அதிர்ச்சி அடைவார்கள்: "இந்த மனிதர் என்ன செய்கிறார்?" ஏசுவை மறுபடியும் சிலுவையில் அறைந்து விடுவார்கள். சிலுவையில் இடப்பட்ட வாழ்க்கையை மட்டுமே அவர்களால் நம்ப முடியும், அவர்களால் ஒரு சவத்தை மட்டுமே நம்ப முடியும். அவர்கள் வாழ்க்கைக்கு எதிரானவர்கள், வாழ்க்கையின் எதிரிகள்.

ஏசுவை சிலுவையில் அறைய வேண்டும் என்று முடிவு செய்தவர்களும் பிஷப்புகள், பாதிரிகள் சமயத்தலைவர்களும்தான். அந்த சமயத்தில் அவர்கள் பாதிரிகள், பிஷப் அல்லது போப் என்று அழைக்கப்படவில்லை. அவர்களை 'ராபி' (யூத மதகுரு) என்று அழைத்தனர் - ஆனால் இவர்களும் அதே வகையான மனிதர்கள்தான், ஒரு வித்தியாசமும் இல்லை.

ஷிஃபாலி துணிச்சல் உடையவர். வாழ்க்கையில் துணிச்சலோடு இருந்தவர். மரணத்திலும் துணிச்சலோடு இருப்பார். துணிவோடு இருப்பதுதான், 'இருப்பதற்கான' ஒரே வழி என்று அவர் கற்றுக் கொண்டுள்ளார். அவர் பயப்படத் தேவையில்லை. நடனமாடிக் கொண்டே அவர் மரணத்தை எதிர்கொள்ளலாம். நேசத்திலும், தியானத்திலும் வெளிப்படுத்தப்பட்டதைத்தான் மரணமும் வெளிப்படுத்தும் - அவ்வளவுதான். நேசத்திலும், தியானத்திலும் ஒரு கண நேரத் தோற்றமாக இருந்தது, மரணத்தில் முழுமையான மெய்

மையாக உருவாகப் போகின்றது. மரணம்தான் மிக உயர்ந்த வகையான நேசம், அதுதான் மிக உயர்ந்த தியான சக்தியாகும். இறப்பது எப்படி என்பதை ஒருவர் தெரிந்து கொண்டால், இறப்பு உருமாற்றப் படும். நீங்கள் அழிக்கப்படவில்லை! வரவேற்போடு புன்னகையோடு, உங்களுள் ஒரு சிரிப்போடு இறப் பது எப்படி என்பதை அறிந்து கொண்டீர்களானால் நீங்கள் மரணத்தை அழிக்கின்றீர்கள். அங்கே இறப்பு இல்லை; அது இறைவன் மட்டுமே, உங் கள் பேரன்புக்குரிய இறைவன் உங்களிடம் வருகி றார். அதை மரணம் என்று நீங்கள் அழைக்கும் போது ஒரு தவறான புரிதல் இருக்கிறது. உள்ளப டியே சாவு என்பதே இல்லை. ஒருவர் வெறுமனே தன் உடலை மாற்றுகிறார், பயணம் தொடர்கிறது. மரணம் என்பது அதிகபட்சம், ஓரிரவே தங்கிப்போ கும் சத்திரம் அவ்வளவுதான். காலையில் மறுப டியும் புறப்படுகின்றீர்கள். வாழ்க்கை தொடர்கின் றது. இறப்பு ஒரு ஓய்வாகும். மரணம் மரணமே அல்ல - நீங்கள் அழிக்கப்படுவதில்லை! வாழ்க்கை அழிக்க முடியாதது! வாழ்க்கை சாசுவதமானது, மரணம் அதில் ஒரு துணைக்கதை மட்டுமே. மேலும் மரணம் வாழ்க்கைக்கு எதிரானது அல்ல. வாழ்க்கைக்கு மரணம் பாராட்டுதல் போன்றது. அது ஓய்வு, ஒரு இடைநிறுத்தம். நீங்கள் இவ்வளவு நேரம் பாடிக்கொண்டிருக்கிறீர்கள், உங்களுக்குக் கொஞ்சம் ஓய்வு தேவை, தொண்டை வறண் டுவிட்டது. உங்கள் குரல்வளை அதிர்வு நாளங் கள் அயர்ந்துவிட்டன. அதிகமாகவே நடனமாடிக் கொண்டிருந்தீர்கள் - நீங்கள் எழுபது, எண்பது வருடங்களாக ஆடிக்கொண்டிருக்கிறீர்கள் கால்

கள் களைத்துப் போய்விட்டன. சற்றே இளைப் பாற விரும்புகிறீர்கள். இறப்பு அப்படிப்பட்ட ஒரு ஓய்வைத் தரும். நீங்கள் சிரித்துக் கொண்டும், நேசித்துக் கொண்டும், வாழ்ந்து கொண்டிருந்தீர் கள் - இறப்பு இதைப் புதுப்பிக்க ஒரு வாய்ப் புத் தருகிறது. இறப்பு உங்களுக்கு உயிரூட்டுகிறது, அழிப்பதில்லை. மரணம் உளதாயிருப்பதன்று, அது வெறும் ஆழ்துயில் - சற்றே நீண்ட, கொஞ்சம் ஆழ மானது, ஆனால் தூக்கத்தைப் போன்றதே.

நீங்கள் நேசித்திருந்தால், உங்கள் நேசம் எஞ்சி யிருக்கும். தியானம் செய்திருந்தால், உங்கள் தியா னம் எஞ்சியிருக்கும். உங்கள் அக உலகில் நீங்கள் பெற்றவையெல்லாம் நிலைத்திருக்கும், புற உல கில் பதுக்கி வைத்ததெல்லாம் போய்விடும். நீங் கள் உடைமையாய் கொண்டிருப்பதை மட்டுமே சாவினால் எடுத்துக் கொள்ள முடியும். நீங்கள் என் னவாக இருக்கின்றீர்களோ அதைச் சாவினால் பறித்துக்கொள்ள முடியாது. பணத்தை நீங்கள் உடைமையாக வைத்திருந்தால், அது எடுத்துக் கொள்ளப்படும். பதவி உங்கள் உடைமை, அது போய்விடும். தியானத்தை நீங்கள் உடைமையாய் கொள்வதில்லை, உடைமையாக்கிக் கொள்ள அது ஒரு பொருள் அல்ல, அது உங்கள் ஜீவ னின் பண்பாகும். அது நீங்களேதான். அதேபோல் நேசத்தையும் உடைமையாகக் கொள்வதில்லை, அது உயிரூரு. அகவளம் எல்லாம் உங்களோடு வரும், புறவளம் அனைத்தும் உங்களிடமிருந்து பறித்துக் கொள்ளப்படும். ஏனென்றால் புறம் உட லைச் சார்ந்தது, உடல் வீழும். அத்தோடு மொத்த புற உலகமும் வீழ்ந்து, மறைந்துவிடும்

ஷிஃபாலி மகிழ்ச்சியோடு போகலாம். மரணம் அவரை அண்டும் போது அவர் ஆடிக்கொண்டு, பிரார்த்தனை செய்துகொண்டு போகலாம். அதில் அவர் தன் பேரன்பிற்குரியவரைக் கண்டு உணர முடியும்.

அவருடைய அச்சமும் மெய்யானதே. தான் இன்னமும் அகங்காரமற்ற நிலை அடையவில்லை என்ற பயம் அவருக்கு உள்ளது. அதுதான் அகங்காரமற்ற தன்மைக்கான ஆரம்பம் - "நான் இன்னமும் 'தான்' என்ற எண்ணத்துடன் இருக்கிறேன்" இந்த உணர்வு இருக்கிறது. தான் என்ற எண்ணம் மேலோங்கி இருப்பவர்கள் இப்படி உணரமாட்டார்கள், அவர்கள் அகங்காரமற்றவர்கள் என்ற நினைப்புடன் இருப்பார்கள்.

"நான் இன்னமும் அகங்காரம் கொண்டு இருக்கிறேன்" என்ற எண்ணம்தான் முதல் நம்பிக்கைக் கோட்டை அளிக்கின்றது. "நான் இன்னும் ஞானம் பெறவில்லை" என்று அவர் சொல்கிறார். அது தான் மெய்யறிவு பெறுவதற்கான தொடக்கம். அது தான் முதல் உணர்வு, முதல் அனுபவம். "நான்" தொலைந்து போகிறது. "நான்" என்பது முற்றிலும் மறைந்துவிட்ட பிறகு ஞானம் பிறக்கிறது.

ஷிஃபாலி பற்றி என் எண்ணம் என்னவென்றால், அவரின் மரணம்தான் அவருடைய சமாதி நிலையைத் தரும். அவருடைய உள்நோக்கிய பயணத்தை நான் கூர்ந்து கவனித்து வருகிறேன். கடப்பதற்குச் சிறிது தூரம்தான் இருக்கிறது. அவர் மரணத்தை முழுமையாக ஏற்றுக் கொண்டால் அந்

தச் சிறிய இடைவெளியும் அழிக்கப்பட்டு விடும். அவர் அந்தப் பெருந் தாவலை மேற்கொள்ளலாம்.

ஞானம் பெறுவதற்கான மூன்று கருத்துக்கள் இவை. ஒன்று தியானம், அடுத்து நேசம், மூன் றாவது மரணம். மரணம்தான் மிக உயர்ந்தது. ஏனென்றால், மரணம்தான் மிக இயற்கையானது. நேசம் என்பது வரலாம், வராமல் போகலாம். அது தவிர்க்க முடியாததல்ல. கோடிக்கணக்கானோர் பாசமின்றி வாழ முடிவு செய்கின்றனர். வாழ்கின்ற னர், ஆனால் அவர்கள் என்றும் நேசிப்பதில்லை, ஆகவே அது அத்தியாவசியமான இயல் நிகழ் வல்ல, தவிர்க்கக் கூடியதுதான். அடுத்து தியானம் - நீங்கள் அதற்குள் புக வேண்டும். நீங்கள் முயற்சி கள் எடுக்க வேண்டும், நீங்கள் தேடி நாடவேண் டும், அது கடினமானது. வெகு சிலரே இந்தத் துணி கரத்தில் இறங்குவர். அந்த வகையில் நேசம் அதிக இயல்பான ஒன்று. காரணம், அது உங்கள் உயி ருருவில் கட்டமைக்கப்பட்டது. தியானம் அவ்வாறு சேர்ந்து உருவாக்கப்பட்டதல்ல. மனிதர்கள் நேசத் தையே தவற விடும்போது தியானத்தைப் பற்றி என்ன சொல்வது? இதைவிடக் குறைவானவர் களே தியானப் பாதையை மேற்கொள்கின்றனர்.

ஆனால் மரணம் தவிர்ப்பதற்கு இயலாத ஒன்று. ஒவ்வொருவரும் அதற்குள் நுழைந்துதான் ஆக வேண்டும். அது முழுமையானது, தட்டிக் கழிக்க முடியாது. உங்களால் முடிந்ததெல்லாம் அதற் குள் ஆடிப்பாடியபடியே போகலாம், அல்லது உயி ரைப் பற்றிக்கொண்டே விருப்பமின்றி நுழையலாம். விருப்பமின்றி இருந்தீர்களானால் நீங்கள் மரண அனுபவத்தைத் தவறவிடுவீர்கள். மகிழ்ச்சியோடு

சென்றால், மரணத்தின் அனுபவம் கிட்டும். மரணத்தின் அனுபவத்தைத் தவறவிடுவது என்பது கடவுளைத் தவற விடுவதாகும். ஏனென்றால் மரணத்தில் நேசமும் தியானமும் தானாகவே மலரும். மரணம் உங்கள் உடலை எடுத்துக் கொண்டு விடும். திடீரென உங்கள் வாழ்வின் தொண்ணூறு சதவீதம் மறைவுறும். மரணம் உங்கள் மனதை எடுத்துக் கொள்ளும், மீதம் இருக்கும் பத்து சதவீதம் போயிற்று. சாட்சி மட்டுமே இருக்கும். இதுவே தியானமாகும். மரணம் உங்கள் பற்றுதல்களை எல்லாம் எடுத்துச் சென்று விடும். காம மோகங்களை எடுத்துக் கொள்ளும், பற்றுதல்கள் மற்றும் காமம் அனைத்தும் போனபிறகு எஞ்சியிருக்கும் நேசசக்தி தூய்மையானது. அது இனி ஒரு உறவு முறையல்ல, அது ஒரு உயிருரு நிலை. மரணம் வெறுமனே உங்கள் நேசம் மற்றும் தியானத்தன்மையைச் சுத்தி செய்கிறது. உங்கள் உணர்வுநிலை மற்றும் நேசம் ஆகிய இரண்டும் நீராட்டப்படுகிறது. நீங்கள் மகிழ்ச்சியோடு நுழைந்தால் மரணம் உங்களுக்குச் சமாதியாகக் கூடும். அது ஆகக்கூடியது தான். நிச்சயமாக ஷிஃபாலிக்கு.

*அவர் கேட்பது, அகங்காரமற்ற நிலையடையாத ஒருவனுக்கு மரணத்தை உணர்நிலையோடு எதிர்கொள்ள முடியுமா, மேலும் அதை வரவேற்று அதே வகையில் அனுபவிக்க முடியுமா?*

*நீங்கள் எல்லா இடத்திலும் இருக்கிறீர்கள். நாங்கள் இறந்த பிறகு, நீங்கள் இந்தப் பூத உடலில் இருந்தாலும் இல்லாவிட்டாலும்*

*உங்களுடன் இசைவோடு இருக்கும் நிலை சாத்தியமா?*

மரணம் எந்த வித்தியாசத்தையும் ஏற்படுத்தாது. மரணம் ஒரு பொருட்டே இல்லை. நீங்கள் என்னை நேசித்திருந்தால், நீங்கள் என்னோடு இசைவுடன் இருந்திருந்தால், நீங்கள் என்னுடன் தொடர்ந்து இசைவோடு இருப்பது சாத்தியமே. மரணம் அதை மேலும் தீவிரமாக்கும், ஏனென்றால் எல்லாத் தடைகளும் அகற்றப்பட்டு விட்டன. உடல் ஒரு தடை, மனம் ஒரு தடை. எல்லாத் தடைகளும் அகன்ற பிறகு ஒரு பெரிய உருகுதல் ஏற்படும். குருவோடு உருகிப்போவது என்பது முதல் இறை அனுபவம் என்பதை சீடன் புரிந்துகொள்வான். இதுதான் சீடனுக்கான தனிச் சலுகை. இரண்டாவதாக இறைவனுள் உருகிப்போவது நடக்கும். முதல் உருகுதல் குருவோடு ஏற்படும், ஏனென்றால் சீடனுக்குக் குருதான் கடவுளாக இருந்தார். குருதான் தெய்வீகத்தின் அடையாளமாகத் தெரிந்தார். ஆக, முதல் அனுபவம் குருவிற்குள் உருகிப்போதல், குருவுடன் ஒன்றாகுதல். அடுத்த அனுபவம் இறைவனோடு உருகி ஒன்றாகுதல், இது சற்று எளிமையானது.

நேராக உங்களிடமிருந்து இறைவனிடம் ஒன்றாவது கடினம். அதன் பிரம்மாண்டத்தைக் கருதி நீங்கள் பின்வாங்குவீர்கள். உங்களுக்கும் கடவுளுக்கும் இடையே ஒரு ஏசுகிறிஸ்து தேவை, ஏனென்றால் கிறிஸ்து மனித மற்றும் தெய்வீகத் தன்மையுடைவர். அதுதான் கிறிஸ்து அல்லது குருவின் இருமைப் பண்பாகும். அவர் உங்களைப் போன்றவர், அவர் கைகளை நீங்கள் ஒருமுறை பிடித்

துக் கொண்டவுடன், மெதுவாக, படிப்படியாக அவர் கரங்கள் மறைவதைக் காணலாம். நீங்கள் உங் களையும் அறியாமல் பிரம்மாண்டத்திற்குள், எல் லையற்ற பெரும் பரப்பிற்குள் நுழைந்திருப்பீர்கள். இந்தச் சமயத்தில் உங்களால் பின்நோக்கிப் போக முடியாது, இதற்குள் நீங்கள் ருசித்து இருப்பீர்கள், நீங்கள் மூழ்கியிருப்பீர்கள்.

இறைவன் சமுத்திரத்தைப் போன்றவர். நீங்கள் பயப்படலாம். குரு ஒரு சிறிய நீரூற்று போன்றவர். நீங்கள் பயப்படத் தேவையில்லை, நீங்கள் அத னுடன் ஆடலாம், நீர் ஊற்று உங்கள் மீது விழ அனுமதிக்கலாம், நீர் பொழிவை அனுமதிக்கலாம். ஆனால் அந்த பொழிவிலேயே மெல்ல, மெல்ல நீங்கள் சமுத்திரத்திற்குள் போகத் தயாராக இருப் பீர்கள். பிரம்மாண்டத்திற்குள், எல்லையற்ற பரம் பொருளுக்குள் நீங்கள் போகத் தயாராகிவிடுவீர் கள்.

## இரண்டாவது கேள்வி:

*பகவான் நீங்கள் எப்போதாவது தவறு செய் வீர்களா? அப்படியானால் உங்கள் வாழ்க் கையின் மிகப்பெரிய தவறு எது?*

நான் வேறு எதையும் செய்வதில்லை. நான் தவ றுகளை மட்டுமே செய்கிறேன். நான் அவற்றின் மூலமாகத்தான் வாழ்கின்றேன், நிலைத்து இருக் கிறேன். எனக்குச் சின்ன விஷயங்கள் பிடிக்காது, சிறிய அளவிற்கு நான் எதிரானவன். நான் பெரி தையே விரும்புவேன்.

*நீங்கள் என்னைக் கேட்கிறீர்கள், உங்கள் வாழ்க்கையின் மிகப்பெரிய தவறு எது?*

உங்களுக்கு சன்னியாசம் வழங்கியது. இப்போது என்னிடம் உலகைச் சுற்றி வரும் 50,000 உயிருள்ள தவறுகள் இருக்கின்றன. நான் அவர்களோடு நிற்பேன், அவர்களோடு வீழ்வேன். ஜெ. கிருஷ்ண மூர்த்தி பாதுகாப்பானவர். அவர் தனியாகவே நிற்கின்றார். அவர் யார் ஒருவருக்கும் தீட்சையளித்து ஒரு தவறுகூடச் செய்யவில்லை.

நான் மனிதர்களுக்குத் தொடர்ந்து சன்னியாசம் வழங்கிக் கொண்டே இருக்கிறேன். நான் ஒவ்வொரு முறையும் சன்னியாசம் வழங்கும்போது, சீடர் ஞானம் அடைந்துவிட்டால், நான் தவறு செய்யவில்லை என்றாகும், அவர் ஞானம் அடையவில்லை என்றால், நான் தவறு செய்தவனாகிறேன். நான் தவறு செய்தேனா என்பதற்கான அளவுகோல் என்ன? அவர் ஞானம் அடைந்தால், அவரைச் சன்னியாசி ஆக்கியதில் தவறு இல்லை. அவர் ஞானம் பெறவில்லை என்றால், அது என் தவறு, நான் தவறான மனிதருக்குத் தீட்சை வழங்கியிருக்கிறேன் என்று அர்த்தமாகிவிடும்.

ஆனால் நான் தவறுகள் பற்றிக் கவலைப்படுவதில்லை. நான் மேன்மேலும் தவறுகள் செய்யப்போகிறேன். யார் கவலைப்படுகிறார்கள்? ஆயிரக்கணக்கான சன்னியாசிகளில் ஒருவர் ஞானம் பெற்றால்கூட உலகிற்கு அது மிகப்பெரிய ஆசீர்வாதமாகும். நினைவிற்கொள்ளுங்கள், இதுதான் கடவுளின் வழியும்கூட.

ஒரே ஒரு ஆண் இந்த முழு உலகையும் மனிதர்களால் நிரப்ப முடியும் என்பது உங்களுக்குத் தெரியுமா? அவனிடம் அந்த அளவு மனித ஜீவனின் விதைகள் உள்ளன. ஒரே ஒரு ஆள்! ஒரு புணர்ச்சியில் லட்சக்கணக்கான விந்து அணுக்களை ஆண் வெளியிடுகிறான். ஆனால் நடைமுறையில் அவன் அதிகபட்சம் ஒரு டஜன் குழந்தைகளுக்கு தந்தையாகிறான். ஆனால் லட்சக்கணக்கான குழந்தைகளுக்கு தந்தையாயிருக்க முடியும். இந்த பூமியின் முழு மக்கள் தொகையுமே ஒரு மனிதனைத் தந்தையாய் கொண்டிருக்க முடியும்.

ஒரே ஒரு மரம் லட்சக்கணக்கான விதைகளைக் கொண்டு வருகிறது. அந்த விதைகள் எல்லாமே மரங்களாகப் போவதில்லை, ஆனால் இறைவன் எப்போதுமே நிறைவளத்தின் மூலமாகத்தான் வேலை செய்வார். இறைவன் ஒரு செலவாளி, கஞ்சன் அல்ல. சில விதைகள் மட்டுமே மரங்களாகும் என்பதை அவர் அறிவார். அப்படியிருக்கும் போது இவ்வளவு விதைகளை உருவாக்குவதன் அர்த்தம் என்ன? அவர் லட்சக்கணக்கான விதைகளை உருவாக்குகிறார். முழு வாழ்க்கையுமே ஒரு அபரிதமான வாழ்க்கைதான், அது கருமித்தனமான இயல் நிகழ்வல்ல. இறைவன் அதிகமாகவே சலுகை தருபவர். ஒரே ஒரு மனிதன் ஞானம் அடைந்தால்கூட நான் மிகவும் நிறைவுகொள்வேன். எஞ்சியிருப்பவர்கள் என் தவறுகளை நிரூபிப்பார்கள். அவை தொடர்ந்து தவறுகளாகத்தான் இருக்கும், ஆனால் அந்த துணிவு தேவைதான்.

நீங்கள் என்மீது நம்பிக்கை வைத்த கணத்தில், நீங்கள் அறியாமல் இருக்கலாம், நீங்கள் என்னை

நம்பியதைவிட நான் அதிகமாகவே உங்கள் மீது நம்பிக்கை வைக்கிறேன். நீங்கள் இடர் நேர்வு பற்றி யோசிக்க எதுவுமே இல்லை. "நான் என்னை அர்ப் பணிக்கின்றேன்" என்று நீங்கள் சொல்லும்போது, நீங்கள் அர்ப்பணிப்பதற்கு உண்மையில் என்ன உள்ளது? துன்பத்தைத் தவிர உங்களிடம் என்ன உள்ளது? கவலைகள், வேதனைகள் இதைத்த விர அர்ப்பணிப்பதற்கு உங்களிடம் என்ன உள் ளது? உங்கள் இருள், உங்கள் நரகம், வேறென்ன இருக்கிறது உங்களிடம். இதில் துணிவதற்கு என்ன இருக்கிறது? என்மீது நம்பிக்கை வைப்ப தில் பெரிய துணிச்சல் தேவை. ஆபத்து உள் ளது என்று நினைக்கின்றீர்கள். நீங்கள் இழப்பதற்கு ஒன்றும் இல்லை. நான்தான் ஆபத்தைத் தழுவிக் கொள்கிறேன்.

தன் பன்னிரண்டு சீடர்களை ஏற்றுக் கொண் டபோது ஏசு கிறிஸ்து, எதிர்பாரா நேர்வுகளின் பொறுப்பையும் ஏற்றுக்கொண்டார். இப்போதுகூட அவர் யோசிக்கக்கூடும், "நான் ஏன் இந்தப் பன்னி ரண்டு சீடர்களையும் ஏற்றுக்கொண்டேன்? இவர் களை ஏற்றுக்கொண்டு இருக்காவிட்டால், சர்ச்சும், கிறிஸ்தவமும் மற்றும் அந்த முட்டாள்களும் எதுவும் இருந்திருக்காது. "ஏன் இவ்வளவு மனிதர்களைப் பிட்சுக்களாய் ஏற்றுக் கொண்டேன்?" என்று புத்தர் யோசித்துக் கொண்டேயிருப்பார். அவர்கள் அந் தளவு தொல்லைகளை உண்டுபண்ணினார்கள். ஆனால் இந்தத் துணிச்சல் தேவையாய் இருந்தது.

ஆனால் ஏசு கிறிஸ்து, இந்த இடர் எதிர்நோக் கித் துணிய வேண்டிய காரணம் என்னவென் றால் அதுவல்லாமல் சர்ச் இருந்திருக்காது, கிறிஸ்

தவர்கள் மற்றும் முகமதியர்களுக்கிடையே போர் இருந்திருக்காது. காலங்காலமாய் கிறிஸ்தவ சர்ச் நிகழ்த்திக் கொண்டிருந்த அசிங்கங்கள் எதுவும் நிச்சயமாக இருந்திருக்காது; ஆனால் அதே சமயம் எக்கார்ட், ஃபிரான்சிஸ், அல்லது ஜேகப் போம் என்று எவரும் இருந்திருக்க மாட்டார்கள். ஒரே ஒரு மெய்ஸ்டர் எக்கார்ட் பிறந்ததே போதும். அந்த ஆபத்தில் ஏசு இறங்கியதற்கு பலன் கிடைத்தது. அதேபோல் புத்தர் துணிந்து செயல்பட்டுப் பலரைச் சீடர்களாக்கும் தவறைச் செய்திருக்காவிட்டால், மஹாகஷ்யபர், நாகார்ஜூனா அல்லது விமலகீர்த்தி பிறந்திருக்க மாட்டார்கள் - உலகம் மிகவும் ஏழ்மை யுடன் இருந்திருக்கும்.

ஆம் தவறான விஷயங்கள் இருந்திருக்கின்றன, கோடிக்கணக்கான தவறுகள். ஆனால் போதிதர் மனைப் போன்ற ஒரே ஒரு இயல் நிகழ்வு எல்லா வற்றையும் சரி ஈடு செய்துவிட்டது. அந்த கோடிக் கணக்கான தவறுகள் எல்லாம் ஒன்றுமேயில்லை. ஒரே ஒரு போதிதர்மன் போதும்.

*நீங்கள் கேட்கிறீர்கள், "என் மிகப் பெரிய தவறு என்ன?"*

அது என் மிகப் பெரிய தவறு மட்டுமல்ல, அது எப் போதும் எல்லாக் குருக்களும் செய்கின்ற மிகப்பெ ரிய தவறாகும். அவர்கள் மனிதர்களுக்குத் தீட்சை அளித்து இடர் எதிர்நோக்கத் துணிகின்றனர். இப் போது இது உங்களைச் சார்ந்து இருக்கிறது. இதைத்தான் நான் அர்ப்பணிப்பு என்று அழைப் பேன். ஞானம் பெறுவதற்கு நீங்கள் உறுதி கொள் வது வளர்வதற்கான உங்கள் ஈடுபாடு. ஓரிடத்

தில் சிக்கிக் கொண்டு இருக்காதீர்கள். முன்னே றத் தொடங்குங்கள். உங்களுக்கென ஒரு பெரிய விதி, ஊழ் காத்திருக்கிறது, மாயங்கள் உங்களுக் குரியவை. சிறிய விஷயங்களை வைத்துத் திருப்தி கொள்ளாதீர்கள்.

நீங்கள் முழுவதையுமே உடைமையாக்கிக் கொள்ளலாம். ஆக சிறிய விஷயங்களைக் கொண்டு திருப்திப்பட்டுக் கொள்ளாதீர்கள், மிகச் சிறியவை, ஒரு சான்றிதழ், ஒரு பதக்கம், ஒரு பட் டம் என்று முட்டாள்தனமாக இராதீர்கள். புத்தி சாலித்தனத்தோடு கடுமையாக வேலை செய்யுங் கள். தவறுகள் எல்லாம் பெயர்ந்து போகும்வரை தொடர்ந்து உங்களையே உளியால் செதுக்கிக் கொண்டேயிருங்கள். நீங்கள் அக்னிப் பிரவேசம் செய்ய வேண்டும். அதனால்தான் நான் மஞ்சள் காவி நிறத்தைத் தேர்ந்தெடுத்திருக்கிறேன், அது நெருப்பின் வர்ணம். நீங்கள் அக்னியில் புகுந்து வெளிவரவேண்டும். அக்னிப் பிரவேசம் செய்தவர் கள் மட்டுமே சுத்தத் தங்கமாக உருவாக முடியும்.

நான் உங்களின் ரசவாதமாக இருக்கிறேன். சாதாரண உலோகத்தைத் தங்கமாக மாற்ற என்னை அனுமதியுங்கள். துணிகரமான விளை யாட்டுதான். தோல்விக்கான சாத்தியக் கூறுகளே அதிகம். உங்கள் இலக்கின் உயரம் அதிகமானால் தோல்விக்கான சாத்தியமும் அதிகமாகும். நீங்கள் பணக்காரராக வேண்டுமென்றால், எளிதாக ஆக லாம், அரசியல்வாதியாக வேண்டுமென்றால், எளி தாக ஆகலாம். புத்திசாலித்தனம் தேவையில்லை.

நான் கேள்விப்பட்டது:

* அரசியல்வாதி ஒருவருக்கு தலையில் கட்டி இருந்தது. மருத்துவர்கள் அறுவைச் சிகிச்சை செய்தனர். கட்டியை அகற்றும்போது முழு மூளைக் கட்டமைப்பும் பாதிக்கப்பட்டதைக் கண்டறிந்த னர், அதனால் மூளை முழுவதையும் சுத்தம் செய்ய வேண்டும் என்று எண்ணினர். மூளையை வெளியே எடுத்தனர். சுத்தம் செய்ய சில நாட்கள் ஆகும்போல இருந்தது. இது பழைய கதை: அந்த நாட்களில், அனஸ்தீசியா அவ்வளவு சக்திவாய்ந் தது இல்லை.

அடுத்த நாள் அரசியல்வாதி படுக்கையில் படுத் திருந்தார். அங்கே வந்த ஒரு மனிதன், "இங்கே என்ன செய்து கொண்டிருக்கிறீர்கள்? நீங்கள் நாட்டின் பிரதம மந்திரியாய் தேர்ந்தெடுக்கப்பட்டு இருக்கிறீர்கள்!" என்றான்.

அரைத் தூக்கத்தில் இதைக் கேட்டுக் கொண் டிருந்தார் அரசியல்வாதி, பிரதம மந்திரியாகிவிட் டோம் என்று கேட்டவுடன் எந்த அனஸ்தீசியா வும் வேலை செய்யப் போவதில்லை. படுக்கையிலி ருந்து துள்ளிக் குதித்து வெளியே போகத் தொடங் கினார்.

"எங்கே போகிறீர்கள்? உங்கள் தலையில் மூளை இல்லை!" என்றார் மருத்துவர்.

அதற்கு அரசியல்வாதி; இனி எனக்கு மூளை தேவைப்படாது, நான் பிரதம மந்திரியாகிவிட்டேன்.

நீங்கள் அரசியல்வாதியாக வேண்டுமென்றால் உங்களுக்கு அவ்வளவாக புத்திசாலித்தனம் தேவைப்படாது. எளிதாகவே வெற்றி பெறலாம்.

ஆனால் ஞானம் பெற வேண்டுமென்றால், உங்களிடம் உள்ளதனைத்தையும் பணயம் வைத்தாக வேண்டும். நீங்கள் உணர்வுநிலை மற்றும் அறிவின் அதீத ஜோதியாக உருவாக வேண்டும். இதுதான் ஈடுபாடு, அர்ப்பணிப்பு. நான் உங்களை நம்பித் துணிந்துவிட்டேன். இந்த ஈடுபாடு பெரிதாய் மலரும். அது உங்களைச் சார்ந்தது. நான் செய்வது தவறா, இல்லையா என்பது உங்களால் நிரூபிக்கப்படும். இப்போது என் கையைவிட்டுபோய்விட்டது, இதுதான் நான் உங்கள்மீது வைக்கும் நம்பிக்கை.

## மூன்றாவது கேள்வி:

*நேசம் என்பது என்ன? நான் ஏன் அதைக் கண்டு பயப்படுகிறேன்? ஏன் நேசம் தாங்க முடியாத வலிபோல் தோன்றுகிறது?*

ரேமண்ட் ஜான் போஹன் எழுதிய வரிகள்மீது தியானம் செய்யுங்கள்:

இப்பொழுது நம்மிடமிருந்து எதிர்பார்க்கப்படுவது என்னவென்றால், நாம் நிச்சயமின்மைக்குள் பிரவேசிக்க வேண்டும். இங்கே ஒவ்வொரு காலைப் பொழுதைப் போலவும் புதியவை எல்லாம் பழையதாக இருக்கும், நன்கு அறியப்பட்டதெல்லாம் அறியப்படாததாய் இருக்கும். நாம் மனிதர்களின் ஆழ் மனதிற்குள் செல்லவேண்டும், அங்கே உயிர்த்துடிப்புடன் இருக்கும் மனிதர்கள் மாயமாகிவிட்டனர், அவர்கள் இருப்பின் பொருள், அதன் இசை முடக்கப்பட்டு அடைக்கப்பட்டுவிட்டது. இப்போது நம்மிடம் முன்வைக்கப்படும் கோரிக்கை என்னவென்றால், அடைக்கப்பட்டு இருக்கும் நம் குகைகளை

நாம் உடைத்தெறிந்து, நாம் ஒருவரை ஒருவர் கண்டறிய வேண்டும் என்பதே. இதற்கும் குறைவா கக் காயப்பட்ட ஆன்மாவை வேறு எதுவும் குணப் படுத்த முடியாது. நேசிப்பதற்காக நம் இதயத்தை வேறு எதுவும் விடுவிக்க முடியாது.

*நீங்கள் கேட்கும் நேசம் என்பது என்ன?*

அது முழுமையுடன் ஒன்றாகக் கலந்திட விழை யும் ஒரு ஆழ்த்தூண்டுதல். நீங்களும் நானும் ஒரு மைக்குள் கரைந்திட ஒரு வலிமையான அறிவுறுத் தல். நம் மூலத்திலிருந்து நாம் பிரிந்து துணிந்து இருப்பதினால் அந்த முழுமையுடன் ஒன்றுசேர, அதற்குள் திரும்பிப்போக எழும் ஆசைதான் நேசம்.

நீங்கள் ஒரு மரத்தை அதன் மண்ணிலிருந்து பிடுங்கி எடுத்தால், மரம் தான் மண்ணிற்குள் மீண் டும் வேரூன்றப் பெரிதும் விரும்பும். ஏனென்றால் அதன் மெய்யான வாழ்க்கை அதுவே. இப்போது அது இறந்து கொண்டிருக்கிறது; தனியாக மரத் தால் உயிர்கொண்டு இருக்க இயலாது. அது பூமி யில், பூமியோடு இருக்க வேண்டும். அதுதான் நேசம்.

உங்கள் அகங்காரம்தான் உங்களுக்கும் உங்கள் மண்ணிற்கும் இடையே ஒரு தடையாய்விட்டது. மனிதன் மூச்சுத் திணறிக் கொண்டிருக்கிறான். அவனால் சுவாசிக்க முடியவில்லை, அவன் தன் வேர்களை இழந்துவிட்டான். அவன் ஊட்டமிழந்து இருக்கிறான். ஊட்டத்திற்கான விழைவே நேசம். இயல் உலகில், தன் வேர்களைப் பாய்ச்சுவதே நேசமாகும். நீங்கள் நேர்மாறாக இருக்கும்போது இந்த இயல்நிகழ்வு மேலும் எளிதாகிறது. அத

னால்தான் ஆண் பெண்ணால் ஈர்க்கப்படுகிறான், பெண்ணை ஆண் ஈர்க்கின்றான். தன் மண்ணை பெண்ணின் மூலமாக ஒரு ஆண் கண்டறிய முடியும். அந்தப் பெண்ணின் மூலமாகத் தன் மண்ணோடு அந்த ஆண் வேரூன்ற முடியும். அதே போல் பெண்ணும் ஒரு ஆணின் மூலமாகத் தன் மண்ணோடு வேரூன்ற முடியும். ஒருவருக்கொருவர் நிறைவு உண்டாக்குவர். ஒரு ஆண் மட்டும் பாதியாய் இருக்கிறான், அவன் முழுமையடையத் தீவிரமாய் உள்ளான். ஒரு பெண்ணும் தான் மட்டுமாக பாதியாய் இருக்கிறாள். இரண்டு பாதிகளும் சந்தித்து, ஒன்றெனக் கலந்து போகையில் முதல் முறையாக ஒருவர் வேரூன்றியிருப்பதாய், மண்ணில் பதிந்து இருப்பதாய் உணர்கின்றார். உளதாயிருத்தலில் பெரும் மகிழ்ச்சி எழுகின்றது:

நீங்கள் வேரூன்றுவது அந்தப் பெண்ணிடம் மட்டுமல்ல, அந்தப் பெண்ணின் மூலமாக இறைவனிடமும் வேரூன்றி நிலைநிறுத்திக் கொள்வீர்கள். ஆண் வெறும் கதவு மட்டுமே, அதேபோல் பெண்ணும் ஒரு கதவு மட்டுமே. இருவரும் இறைவனைச் சென்றடையும் வாயிற் கதவுகள். நேசத்தை விரும்புவது என்பது உண்மையில் இறைவனை விரும்புவதாகும்.

உங்களுக்குப் புரியலாம், அல்லது புரியாது இருக்கலாம். ஆனால் நேசத்திற்காக ஆசைப்படுவதென்பது இறைவன் உள்ளார் என்பதை உண்மையில் நிரூபிக்கின்றது. வேறு எந்தச் சான்றும் கிடையாது. மனிதன் நேசிப்பதனால் இறைவன் இருக்கிறார், நேசம் இல்லாமல் மனிதன் இருக்க முடியாது என்பதால் இறைவன் இருக்கிறார்.

நேசிப்பதற்கான தூண்டுதல் சொல்வது என்னவென்றால், தனியாக நாம் துன்பப்பட்டு இருக்கின்றோம். சேர்ந்து இருந்தால் நாம் வளர்வோம், அடைவோம், நிறைவு பெறுவோம்.

*நீங்கள் கேட்பது: "நேசம் என்பது என்ன? நான் ஏன் அதைக் கண்டு பயப்படுகிறேன்?"*

அதனால்தான் ஒருவர் நேசிக்கவும் பயப்படுகிறார் - ஏனென்றால் பெண்ணுடன் ஐக்கியமானவுடன் உங்கள் அகங்காரத்தை இழக்கின்றீர்கள், அதேபோல் பெண்ணும் ஆணுடன் ஒன்றிணையும்போது தன் அகங்காரத்தை இழக்கின்றாள்.

இப்போது இதைச் சரியாகப் புரிந்துகொள்ளவேண்டும், முழுமையோடு நீங்கள் வேரூன்ற வேண்டுமானால், நீங்கள் உங்களையே தொலைக்க வேண்டும், வேறு வழியில்லை. நீங்கள் முழுமையினால் ஈர்க்கப்படுவதற்குக் காரணம் நீங்கள் ஊட்டமின்றி உணர்வதால்தான். முழுமையில் நீங்கள் தொலைந்து போகவேண்டிய தருணம் வரும்போது நீங்கள் மிகவும் அச்சம் கொள்கின்றீர்கள். உங்களையே தொலைக்கப் போவதால் பெரும் அச்சம் எழுகின்றது. அதனால் பின்வாங்குகிறீர்கள். இது ஒரு இரண்டக நிலை. ஒவ்வொரு மனிதனும் இதை எதிர்கொள்ள வேண்டும், இதன் ஊடே போக வேண்டும், புரிந்துகொள்ள வேண்டும். இறுதியில் இதைக் கடந்து வரவேண்டும். இரண்டுமே ஒரு விஷயத்திலிருந்துதான் வெளிவருகிறது என்பதை நீங்கள் புரிந்து கொள்ளவேண்டும். மறைந்து போதல் மிக அழகாக இருக்கும் என்று நினைக்கின்றீர்கள். ஒரு கவ

லையில்லை, பொறுப்பில்லை, ஏக்கமில்லை. நீங்கள் மரங்களைப்போல, நட்சத்திரங்கள் இருப்பது போல, முழுமையின் ஒரு அங்கமாகி விடுவீர்கள். இந்த யோசனையே அபாரமானது. இது உங்கள் உயிருருக்குள் மர்மமான கதவுகளைத் திறக்கும், கவிதையைப் பிரசவிக்கும். இது காதல்மயமானது. ஆனால், நடைமுறையில் நீங்கள் இதில் இறங்கும் போது அச்சம் எழுகின்றது, "நான் மறைந்து போய் விடுவேன், அடுத்து என்ன நடக்கும் என்று யார் அறிவார்?"

பாலைவனத்தின் கிசுகிசுப்பைக் கேட்கும் நதியை நினைவு இருக்கிறதா? அதற்குத் தாண்டிப் போகத் தயக்கம், சமுத்திரத்தைத் தேடிப்போக அதற்கு விருப்பம், ஆசை இருக்கிறது, ஒரு சூட்சுமமான உணர்வு இருக்கிறது, உறுதியும் நம்பிக்கையும் இருக்கிறது. "என் விதி இதைக் கடந்து போவது" வெளிப் படையான காரணம் ஒன்றையும் தர முடியாது. ஆனால் அக உறுதி என்னவென்றால், "நான் இங்கேயே முடிந்துவிடக் கூடாது, நான் ஏதோ பெரியதாய் ஒன்றைத் தேடிப் போக வேண்டும். ஆழத்தில் ஏதோ ஒன்று சொல்கிறது, "நான் சொல்வதைக் கேள், ஒரே வழி, காற்றோடு ஆவியாய் கலந்துவிடுவதாகும். அவை உன்னைப் பாலைவனத்தைக் கடந்து கொண்டு விடும்." நதிக்கு பாலைவனத்தை கடந்துபோக விருப்பம். ஆனால், இயற்கையாய் ஒரு கேள்வி எழுகின்றது. "காற்று என்னை மறுபடியும் நதியாக மாற அனுமதிக்கும் என்பதற்கு என்ன உத்தரவாதம் இருக்கிறது? நான் மறைந்துவிட்டால், கட்டுப்பாடு என் கையில் இல்லை. அப்படியிருக்கும்போது மறுபடி

யும் அதே நதியாவதற்கு, அதே பெயர், அதே உடல் ஆவதற்கு என்ன உத்தரவாதம் இருக்கிறது? யாருக்குத் தெரியும்? நான் காற்றிடம் சரணடைந்த பிறகு நான் மறுபடியும் தனியாவேன் என்பதை எப் படி நம்புவது? இதுதான் நேசத்தின் பயம்.

நேசமின்றி மகிழ்ச்சியில்லை, நேசமில்லாமல் வாழ்க்கை இல்லை. அறியாத, நிறைவடையாத, வெறுமையான ஏதோ ஒன்றிற்காகப் பசித்திருக்கி றீர்கள் என்பதை நீங்கள் அறிவீர்கள், அதை நம்பு கிறீர்கள். நீங்கள் அந்த வெறுமையை, துயரத்தை உணர்கின்றீர்கள். உங்களுக்கு நிறைவைத் தருவ தற்கு வழிகள் என்பதை உறுதியாக நம்புகிறீர்கள். ஆனால் நேசத்திற்கு மிக அருகில் வரும்போது ஒரு பெரும் அச்சம் எழுகின்றது, சந்தேகம் வருகிறது: நீங்கள் நெகிழ்ந்தால், உண்மையிலேயே உள்ளே சென்றால், உங்களால் மறுபடியும் வெளியே வர முடியுமா? உங்கள் தனிப்பட்ட ஆளுமையை, உங் கள் அடையாளத்தைக் காப்பாற்றிக் கொள்ள முடி யுமா? இதனால் மனம் இப்படி துணிந்து செயல்பட மறுக்கிறது. ஏனென்றால், நீங்கள் ஊட்டம் இல் லாமல் இருந்தாலும், உணவளிக்கப்படாமல், பசி யோடு துன்பத்தில் இருந்தாலும்கூட நீங்கள் நீங் களாகவே இருக்கிறீர்கள். நேசத்தில் காணாமல் போனால் யாருக்குத் தெரியும்? நீங்கள் மறைந்து போவீர்கள், இறை அனுபவம் எல்லாம் கிட்டும் என்று என்ன உத்தரவாதம் உள்ளது?

ஒரு விதை மண்ணுக்குள் மரணிக்கத் தொடங் கும்போது இருக்கும் அதே பயம்தான், அது மர ணம்தான், ஆனால் மரணத்திலிருந்து உயிர் எழும் என்று விதையால் சிந்திக்க முடியாது.

நேசம் என்பது மரணம். மேலும், இந்த மரணம் தான் இந்தப் பக்கத்தில் இருக்கும் ஒரே மரணம் என்று காதலர்களால் புரிந்துகொள்ள முடியாது. மறுபக்கத்தில் இதுதான் உண்மையான பிறப்பு. "குரு ஒருவருக்கு என்ன செய்ய முடியும்?" என்று கேட்ட வித்யாவின் அம்மாவிற்கு நான் நேற்றுச் சொன்னேன்: "அவர் உங்களை அழிக்க முடியும், மீண்டும் மறு உருவாக்க முடியும்."

ஒரு குருவோடு இருப்பதென்பது ஒரு அளப்ப ரிய 'காதல் - விவகாரம்' உங்களை அழிக்க, கட்ட விழ்க்க குருவை அனுமதிக்க வேண்டும். இது வலி யுண்டாக்குவது. அச்சம் எழும், சந்தேகம் வரும், பலமுறை தப்பிச் செல்வீர். "இது செய்வதற்கல்லா தது" என்று நீங்கள் சொல்வீர்கள். உங்கள் மனம் சொல்லும். "நீ என்ன செய்து கொண்டிருக்கிறாய்? எதற்காக? உன்னைக் காப்பாற்றிக் கொண்டு தப்பி ஓடு" தப்பிப் போவதற்கு ஆயிரத்தொரு காரணங்க ளைத் தரும். காரணங்களை இட்டுக் கட்டிச் சொல் வதில் மனம் மிகவும் தந்திரமிக்கது. அது ஒரு பகுத் தறிவுவாதி. காரணமே இல்லையென்றாலும், அது ஒன்றை உருவாக்கும். அவை உங்களுக்கு ஏற்பு டையதாய் இருக்கும், ஏனென்றால் அவை அகங் காரத்திற்கு ஏற்புடையதாய் இருக்கும்.

இதுதான் துன்பமாகிறது, இதுதான் இருமை நிலை. மனிதனுக்கு நேசிக்க ஆசை, ஆனால் நேசிப்பதில் பயம். இதை நீங்கள் புரிந்து கொண் டால் ஒழிய, பயத்தையும் மிஞ்சி ஈடுபட்டால் ஒழிய உங்களால் நேசிக்க முடியாது. இதுதான் நம் பிக்கை, பற்று உறுதி. அச்சத்தையும் மீறி ஒரு விஷ யத்திற்குள் இறங்குவதுதான் நம்பிக்கையுறுதி.

## நான்காவது கேள்வி:

*உங்களுடைய சைமன், பீட்டர்கள் மற்றும் பால் ஆகியோர் அனைவரும் 'மணம் வீசாத' ஒட்டகங்களுக்காக ஏற்கனவே ஒரு சர்ச்சை நிறுவத் தொடங்கிவிட்டார்களா?*

அவர்கள் செய்யத் தேவையில்லை, நான் அதை அனுமதிக்க மாட்டேன். அதை நானே செய்து கொண்டிருக்கிறேன். ஏனென்றால் சென்ற முறை பால் மற்றும் பீட்டர்களுக்கு சர்ச் (கிறிஸ்துவ தேவா லயம்) உருவாக்க அனுமதி வழங்கப்பட்டபோது அதைக் குட்டிச்சுவராக்கி விட்டனர். இம்முறை நானே என் 'சர்ச்' உருவாக்கப் போகின்றேன். பால் களும், பீட்டர்களும் அதை உருவாக்க அனுமதிக் கப்பட மாட்டார்கள். கிழக்கத்திய வழிமுறைகள் பற்றி கிறிஸ்து அறியாமல் இல்லை. அவர் கிழக் கத்திய நாடுகளில் இருந்தார், இங்கிருந்து ஞானம் பெற்றார். இந்த மண்ணிலிருந்து, இந்தியாவிலிருந் துதான் அவர் உண்மையை அறிந்து கொண்டார்.

ஏசுவைப் பற்றிய முழுக் கதையையும் கிறிஸ்தவம் அறிந்து கொள்ளவில்லை. அது அவருக்கு முப்பது வயதாகும்போது தொடங்கி அவரது முப்பத்தி மூன் றாவது வயதில் முடிந்து விடுகிறது - வெறும் மூன்று வருடத்திற்கான பதிவுகள் மட்டுமே. முந்தைய முப் பது வருடங்கள் என்னவாயிற்று? ஏசு எங்கிருந்தார்? அவர் எகிப்து, இந்தியா, திபேத் ஆகிய நாடுகளில் பயணம் செய்து கொண்டிருந்தார். அவர் கடுமை யாக உழைத்துக் கொண்டிருந்தார். அவர் தன்னு டைய உயிருக்குள், ஜீவனுக்குள் நுழைய வழிக ளைத் தேடிக்கொண்டிருந்தார். அவர் தன் சொந்த

மக்களைச் சென்றடைந்தபோது, அவர் கிட்டத் தட்ட ஒரு வெளிநாட்டவர் ஆகிவிட்டார். மேற்கில் எப்படி என் சன்னியாசிகள் ஒருவர் உணர்வாரோ அதே போல. உண்மையில் ஒரு அந்நியராவது என்பது உங்கள் விதியாகிவிடும். நீங்கள் இந்தியா வில் இருந்தாலும் நீங்கள் ஒரு அந்நியராய் இருப் பீர்கள். இங்கிலாந்து, அமெரிக்காவில் இருந்தா லும் வெளிநாட்டவராய் உணர்வீர்கள். என்னோடு கைகோர்த்ததினால் நீங்கள் அந்நியராகி விட்டீர் கள். நான் ஒரு அந்நியன், வெளியிடத்தைச் சேர்ந் தவன், இந்த பைத்தியக்கார உலகின் ஒரு பாகம் இல்லை.

ஏசு, தன் சொந்த மக்களான யூதர்களிடம் திரும் பிச் சென்றபோது, அவர் பெரும்பாலும் ஒரு அந்நி யராகி விட்டிருந்தார். அவர் பேசுவது அவர்களுக் குப் புரியவில்லை. அவர்கள் கலாச்சாரத்திலிருந்து அவர் மேற்கோள் காட்டினாலும் அவர் அதன் அங்கமாக இருக்கவில்லை. ஆனால் அவர் மேற் கோள்களுக்குத் தந்த விளக்கம் முற்றிலும் விசித் திரமாயிருந்தது. அவர் மோசஸ் மற்றும் எசைக் கீயல் ஆகியோரின் பெயர்களைப் பயன்படுத்திக் கொண்டிருந்தாலும், அவை வெறும் பெயர்களாக மட்டும் இருந்தன. அவை கொள்கலன் மட்டுமே, கொள்பொருள் முற்றிலும் வேறுபட்டது. கொள் பொருள் யூதம் இல்லை. அது பௌத்தமாக இருந் தது. அடிப்படையில் அது பௌத்தம்தான். அவர் பௌத்த மதுவை யூத புட்டிகளுக்குள் ஊற்றிக் கொண்டிருந்தார். இதனால் யூதர்கள் கோபமுற் றது இயற்கையே. அவரால் நீண்ட நாள் வாழ முடி யவில்லை. இல்லையென்றால் அவர் தன் சொந்த

சர்ச் நிறுவியிருப்பார். ஒரு மூன்று வருட சமய குரு மார் தொகுதி பெரிது இல்லை. அவர் மிகவும் இளமையானவர், சிலுவையில் இடப்பட்டபோது அவருக்கு முப்பத்தி மூன்று வயதுதான். ஆகவே நேரம் போதவில்லை. புத்தர் தன் சொந்த சர்ச் நிறுவினார்.

இந்தக் காரணத்தினால்தான் கிறிஸ்துவ சர்ச்சின் மூலமாக வெகு சிலரே ஞானம் அடைந்துள்ளனர். அவர்களை விரல்விட்டு எண்ணிவிடலாம். அவர்கள் மிகக் குறைவானவர்கள், அவர்களுக்கிடையேயான கால அளவும் அதிகம். இவர்கள் வெகு அரிதானவர்கள். பல நூற்றாண்டுகள் கடந்த பிறகு ஒரு எக்கார்ட் அல்லது ஒரு ஃபிரான்சிஸ் தோன்றுகிறார். புத்தர் தன் சொந்த சர்ச் நிறுவினார். அவர் நீண்ட நாள் வாழ்ந்தார், அவர் எண்பத்தி நான்கு வருடங்கள் வாழ்ந்தார். முப்பத்தைந்து வயதாகும் போது ஞானம் பெற்றார் புத்தர். அவருக்கு பணி புரிய ஐம்பது வருடங்கள் இருந்தன. அவர் தன் சொந்த சர்ச் உருவாக்கினார்.

ஒரு புத்தரோ அல்லது கிறிஸ்துவோ ஒரு சர்ச் உருவாக்கும்போது அதன் பண்பு வித்தியாசமானது. ஒரு சர்ச்சை பால், பீட்டர், அல்லது டாம், அல்லது டிக் உருவாக்கும்போது அந்த சிறப்புத்தன்மை இருக்காது.

இம்முறை நான் அதை அனுமதிக்கப் போவதில்லை. பீட்டர்களும் பால்களும் இளைப்பாறலாம், கவலைப்படத் தேவையில்லை. இங்கு நடப்பதெல்லாம் நான் சொல்வதற்கேற்ப நடக்கின்றது, முற்றிலும் எனக்கேற்றாற்போல நடக்கிறது. ஆக, மற்றவர்கள்மீது பொறுப்பைத் திணிக்காதீர்

கள். நல்லதிற்கும் கெட்டதிற்கும் நானே பொறுப்பு. இங்கு நடப்பதற்கெல்லாம் நானே பொறுப்பு. முழுவதுமாக, முற்றிலுமாக நான் பொறுப்பு ஏற்கின்றேன். உங்கள் மனதிற்கு என் சன்னியாசிகளைக் குறை கூறுவது எளிது, என்னைக் குறை கூறுவது கடினம். ஆகவே நீங்கள் என் பாவப்பட்ட சன்னியாசிகள் மீது பாய்கின்றீர்கள்; அவர்களைக் குறை கூறுவது உங்களுக்கு எளிது. குறை கூற வேண்டுமானால் என்னைச் சொல்லுங்கள். மற்றவரைப் பலிகடா ஆக்காதீர்கள். எனக்கு எப்போதுமே நேரடி தகவல் தொடர்புதான் பிடிக்கும், நேரடியான உரையாடல். இங்கே பால், பீட்டர் யாருமில்லை. என் சன்னியாசிகள் செய்வதனைத்தும், வெறுமனே என் ஆணைகளுக்கு அடிபணிகின்றனர். உங்களுக்குக் குறை கண்டுபிடிக்க வேண்டுமானால் அவற்றை என்னிடம் காணுங்கள்.

எப்போதும் என் சன்னியாசிகளிடம் குறை காணாதீர்கள், அவர்களுக்கு அதில் எந்தப் பொறுப்பும் கிடையாது. சொன்னதைச் செய்கின்றனர். அதை அவர்கள் முழுமனதோடு தீவிரமாகச் செய்கின்றனர். அவர்கள் வளர்ச்சிப் பணியில் அது ஒரு அங்கம்.

ஆகவே பழிச்சொல் வேண்டாம். பீட்டர்கள், பால்கள் எல்லாம் ஏற்கனவே சர்ச் நிர்மாணித்து இருக்கின்றனர் என்று சொல்லாதீர்கள். இல்லை மறுக்கிறேன், நான் தொடங்கியிருக்கிறேன்.

குரு ஒருவர் தொடக்கி வைக்கும்போது சர்ச் தொடங்குகிறது. ஒரே ஒரு மனிதரைத் தீட்சை கொடுத்துத் தொடங்கினால் சர்ச்சும் தொடங்

கிவிடுகிறது. குருவிற்கும் சீடனுக்கும் இடையே யான உறவுமுறையில்தான் சர்ச் இயங்குகிறது. அது கோயில்களில், சர்ச் அல்லது வேறு அமைப்புக ளில் இல்லை. அது குரு-சீடர் உறவு முறையில்தான் இருக்கிறது. இது ஒரு மிக நெருக்கமான ஒரு இயல் நிகழ்வு. இதன் அதிர்வுகள் கூடிய விரைவில் பூமி முழுவதும் உணரப்படும். அது போகப்போக ஒரு பேரலையாக எழும்.

சர்ச் தன் நிலையிலேயே தவறானது இல்லை. சர்ச்சிற்குப் பின்னால் யார் இருக்கிறார்கள். அடிப்ப டையில் இதைத்தான் நினைவிற்கொள்ள வேண் டும். பீட்டர் மற்றும் பால் காரணமாக கிறிஸ்தவம் மிகவும் தவறான பாதையில் போய்விட்டது. அந் தளவு பௌத்தம் ஆகவில்லை. சில விஷயங்கள் தவறாக இருக்கலாம், அவை ஏற்றுக் கொள்ளப்பட வேண்டும், அது இயற்கையானது தான். மழைநீர் விழும்போது, அது சுத்தமாக இருக்கிறது, ஆனால் மண்மீது விழுந்ததும் அது கலங்கலாகிறது.

புத்தர் பேசும்போது அது சுத்தமான மழைநீர், சுத் தமான வடிகட்டிய நீர். ஆனால் உங்கள் காதில் விழும்போது அவை கலங்கலாகின்றன. இது இயற் கைதான், ஏற்றுக்கொள்ளப்பட வேண்டும். புத்தர் மறைந்த பிறகு மேலும் மேலும் மண் சேருகிறது. ஆனால் புத்தரின் செய்தியில் சிறிய பகுதியாவது அம்மண்ணில் புதைந்து இருந்தால், அந்த மண் உங்கள் தலையில் சுமந்து செல்வதற்கான தகுதி பெறுகிறது. உங்கள் இதயத்தில் சுமந்து செல்வதற் கான தகுதி பெறுகின்றது, ஏனென்றால் உண்மை யின் அந்தச் சிறிய கூறுகூட உங்களை உருமாற்ற முடியும்.

உண்மை என்றும் சிறியதல்ல. உண்மை சிறியதாக இருக்க முடியாது. அது அணுமயமாக இருக்கலாம், ஆனால் அதன் வெடிப்பு எப்போதும் அளவிட முடியாதது.

நான் என் சொந்த சர்ச் உருவாக்கப் போகிறேன். சன்னியாசம் தான் அதன் தொடக்கம் - அதை என் விருப்பத்திற்கேற்றாற் போல உருவாக்கப் போகிறேன், ஆக உங்களுக்கு ஏற்றாற்போல இல்லை என்று நீங்கள் நினைப்பதைப் பற்றி என்னிடம் நேரடியாக எதிர்கொள்ளுங்கள், என்னைக் குறை கூறுங்கள்.

## ஐந்தாவது கேள்வி:

*நீங்கள் நேசம் பற்றி பேசும்போது, உடனேயே கண்ணீர் வழிந்தோடுகிறது. அதைப்பற்றி ஏதாவது சொல்லுங்கள்?*

பிரார்த்தனைக்கான மிகப்பெரிய சாத்தியக்கூறு கண்ணீர்தான். அதைப் பகுத்தாய்வது பற்றிக் கவலைப்படாதீர்கள், கண்ணீருக்குப் பொருள் விளக்கம் தேடாதீர்கள். கண்ணீர் பொருள் விளக்கத்திற்கும் பகுத்தாய்வதற்கும் அப்பாற்பட்டது. கண்ணீரைப் பற்றிச் சொல்வதற்கு வார்த்தைகள் போதாது. வார்த்தைகளைவிட ஆழமான மூலத்திலிருந்து வருவது கண்ணீர். கண்ணீர் வருமானால், செய்ய வேண்டியதெல்லாம், அதைப்பற்றிச் சிந்திக்கக் கூடாது, அதை அனுமதிக்க வேண்டும், அதற்குரிய தீவிரத்தை அளிக்க வேண்டும். ஒரு வகையான முழுமையைத் தரவேண்டும். நீங்கள் கண்ணீருக்குள் நுழைய தயக்கம் காட்டா

தபோது உங்களையே எப்படியாவது கட்டுப்படுத்திக் கொள்ளாத போதுதான் நீங்கள் கண்ணீரைப் புரிந்து கொள்ளமுடியும். அதற்குள் முற்றிலுமாக நுழைந்து விடுங்கள். கண்ணீராய் மாறிவிடுங்கள், பிறகு கண்ணீர் வரும்போது அதை ரசித்திடுங்கள். நீங்கள் உணர்ச்சி ததும்பிப் பொங்கி வழிகின்றீர்கள். நேசத்தைப் பற்றி நினைக்கும்போது கண்ணீர் வரவில்லை என்றால் நீங்கள் நேசத்தைப் பற்றிச் சிந்திக்கவில்லை என்றாகிறது. இறைவனைப் பற்றி எண்ணும்போது கண்ணீர் வரவில்லை என்றால், உங்கள் கண்ணீர் பயனற்றது, வீரியமற்றது. நான் சொல்வதைக் கேட்கும்போது உங்களுக்குக் கண்ணீர் பொங்கவில்லையென்றால், உங்கள் இதயம் கேட்டுக் கொண்டிருக்கவில்லை, தலையின் மூலமாகக் கேட்கிறீர்கள், அதற்குச் செய்தி எட்டவில்லை, காது கேட்டுக் கொண்டிருக்கிறது. ஆனால் கவனம் இல்லை. அந்தக் கவனம் இருந்தால் இதயம் நடனமாடத் தொடங்கிவிடும். மேலும் இதயத்திற்குத் தன்னை வெளிப்படுத்திக் கொள்ள ஒரே வழிதான் உண்டு, அது கண்ணீரின் மூலமாகத்தான்.

உங்கள் கண்ணீரை நீங்கள் முழுவதுமாக அனுமதித்தீர்களானால் நீங்களும் உள்ளீர்கள்.

என் செய்தி சிரிப்பு மற்றும் கண்ணீரால் நிரம்பியது. அது முரணாகத் தோன்றினாலும் அப்படி இல்லை. உங்கள் உயிருருவின் ஆழத்தில் சிரிப்பும் கண்ணீரும் ஒன்றாய் உள்ளன, அவை ஒரே சக்தியின் அங்கம். நீங்கள் நீண்ட நேரம் சிரித்தால் கண்ணீர் வரும். நீங்கள் அழுது கொண்டேயிருந்தால், திடீரென ஒரு மாற்றத்தைக் காண்பீர்கள். ஒரே

கணத்தில் அந்த மாற்றம், சிரிப்பு உங்களுக்குள் நுழைந்து இருக்கும். இந்த எதிரெதிர் நிலையைக் கவனியுங்கள். எவ்வளவு ஆழமாக முடியுமோ அந்த அளவு கண்ணீருக்குள் ஆழ்ந்திருங்கள். அது சிரிப் பாக மாறிவிடும் வரை ஆழ்ந்திடுங்கள் அப்படியா னால் நீங்கள் இறுதி எல்லையை அடைந்து விட் டீர்கள். அந்த முனையிலிருந்து சக்கரம் நகரத் தொடங்குகிறது. சிரிக்கும்போது ஆழமாகச் சிரியுங் கள், அந்தளவு கட்டுக்கடங்காமல் சிரிக்கும்போது சிரிப்பு கண்ணீராய் மாறி உங்கள் கண்கள் மழை பொழியத் தொடங்கும். முரண்பாடுகள் எல்லாம் மேல்மட்டத்தில் உள்ளன, ஆழத்தில் அவை ஒன் றுதான் என்பதைப் புரிந்து கொள்வீர்கள். சிரிப்பும் கண்ணீரும் ஒன்றுதான். மேலும் உங்கள் பிரார்த் தனை சிரிப்பும் கண்ணீருமாய் இருக்கும்போது அது உண்மையான பிரார்த்தனையாகும்.

அது என்ன என்பதைப் பற்றிக் கவலைப்படாதீர் கள். அது ஒரு மர்மம். அது அறியப்பட வேண்டியது, வாழ்ந்து பார்க்கப்பட வேண்டியது. அதை அறிந்து கொள்வதில், பார்ப்பதில் அதை வாழ்ந்து பார்ப்ப தில், நீங்கள் புரிந்து கொள்வீர்கள். புரிந்து கொள்ள வேறு வழியில்லை.

## ஆறாவது கேள்வி:

*ஒரு சூரிய அஸ்தமனத்தில், ஒரு மரத்தில், அல்லது ஒரு பறக்கும் பறவையில் என்னால் புனிதத்தன்மையை, தெய்வீக சுவாசத்தை உணரமுடிகிறது. ஆனால் மனிதர்களிடம், என்னைச் சுற்றி இருக்கும் மெய்யான மனி தர்களிடம் வெளிப்படையாக இருப்பதற்கு*

*எனக்கு நம்பமுடியாத அளவு அச்சமாக உள்ளது. மனித ஜீவ நிலையைத் தாண்டி இருந்தால் மட்டுமே என்னால் தெய்வீகத்தை ஏற்றுக்கொள்ள முடிகிறது. சில சமயங்களில் இதை நான் ஒரு பிரச்சினையாக உணர்கிறேன். இதை எதிர்கொள்ளத் தயவுசெய்து எனக்கு உதவி செய்யுங்கள்.*

போதிதேவா, அருவமான பொருட்களை நேசிப்பது எப்போதும் எளிதான ஒன்று. மனிதர்களை நேசிப்பதைவிட மனித இனத்தை நேசிப்பது எளிது. ஏனென்றால் மனித இனத்தை நேசிப்பதால் நீங்கள் எந்த இடர் நேர்வையும் எதிர்கொள்ளப் போவதில்லை. முழு மனித இனத்தைவிட ஒரு தனிமனிதன் ஆபத்தானவன். மனித இனம் என்பது ஒரு வார்த்தை, அதையொத்த மெய்மை இல்லை. ஆனால் தனி மனிதன் ஒரு மெய்மை, ஒரு மெய்மையை எதிர்கொள்ளும் போது. நல்ல காலம், கெட்ட காலம், இன்பம், துன்பம் ஏற்றத் தாழ்வுகள், வலிகள் மற்றும் பேரின்பம் என்று பலவும் இருக்கும். மனித இனத்தை நேசிக்கும்போது பேரின்பமோ, துன்பமோ இரண்டுமே இருக்காது. உண்மையைச் சொல்வதானால் மனித இனத்தை நேசிப்பது என்பது மனிதர்களைத் தவிர்ப்பதற்கான ஒரு வழியாகும். உங்களால் மனிதர்களை நேசிக்க முடியாததால், உங்களையே ஏமாற்றிக் கொள்வதற்காக நீங்கள் மனித இனத்தை நேசிக்கத் தொடங்குகிறீர்கள்.

அருவமானவற்றைத் தவிர்த்திடுங்கள். இரண்டாவது விஷயம்; நிச்சயமாக ஒரு மரத்தை நேசிப்பது அதிக எளிதானது. ஏனென்றால் அந்த

மரத்தை நேசிக்கும்போது மரம் எதிர் வினை யாற்றுவதில்லை, சும்மாவே இருக்கிறது. மரத்தை நேசிப்பதெல்லாம் உங்கள் தரப்பின் வெறும் கற்பனை விளையாட்டு. காற்றில் மரம் ஊசலாடிக் கொண்டிருந்தால், மரம் உங்களை அழைப்பதாக நீங்கள் நினைத்துக் கொள்ளலாம். கைகளை நீட்டி உங்களை வரவேற்பதாகவும், நினைத்துக் கொள் ளலாம். மரம் வெறுமனே ஆழமாய் உங்களைப் பற்றிய உணர்வில்லாமல் இருக்கிறது. நீங்கள் மரத்திடம் போகும்போது உங்கள் கற்பனையை எப்போதும் அதன்மீது புற உருவப்படுத்திக் காட்ட முடியும். மரத்தின் உயிருரு ஜீவன் பற்றி உங்களுக்கு அறிதல் கிடையாது. ஏனென்றால் உங்கள் சொந்த ஜீவன் பற்றியே உங்களுக்குத் தெரியாது. ஒரு மரத்தைப் புரிந்து கொள்வது அதிகக் கடினமானது, காரணம் அதன் பரிணாம வளர்ச்சி குறைவானது. உங்களுக்கும் மரத்திற்கும் இடையே ஒரு பெரிய இடைவெளியிருக்கிறது. அந்த இடைவெளியை எப்படி நிரப்புவீர்கள்? உங்களுக்கும் உங்கள் அண்டை வீட்டுக்காரருக்கும் இடையே அவ்வளவு பெரிய இடைவெளி இல்லை. நீங்கள் இருவரும் சரிசமமானவர்கள், சமகாலத்தவர்கள். ஒரே தளத்தில் அல்லது கிட்டத்தட்ட ஒரே தளத்தில் இருப்பவர்கள், ஆகவே புரிதல் எளிது. ஆனால் நீங்கள் இயல்பாக உணரவில்லை என்று சொல்கிறீர்கள்.

புரிதல் எளிதாய் இருக்கும் பட்சத்தில் பிரச்சினை எங்கேயிருந்து வருகிறது? நீங்கள் அதை உருவப் படுத்த முடியாது. புரிந்து கொள்ளும் சாத்தியக் கூறு இல்லையென்றால் நீங்கள் தாராளமாக புற

உருவப்படுத்தலாம். நீங்கள் ஒரு பாறையைக்கூட நேசிக்கலாம்.

அமெரிக்காவில் பாறைகளை அழகான பெட்டியிலிட்டு விற்பனை செய்கிறார்கள். யாரோ ஒருவர் எனக்கு ஒரு பாறையை அனுப்பியிருக்கிறார்கள். அது சாதாரணமானதுதான். அதன் விலை பத்து டாலர்கள். அதன் பெட்டி, பேக்கேஜிங் அழகாக இருக்கிறது. அதோடு அந்த பாறையை எப்படி நேசிப்பது, அதை எப்படிச் செல்லமாக வைத்துக் கொள்வது, அதை எப்படிக் கவனித்துக் கொள்வது என்று அச்சடித்த அறிவுரைப் பட்டியலும் வந்திருக்கிறது. பாறையோடு வந்த சிறு நூலேடு அந்த பாறை எளிதில் உணர்ச்சிவயப்படக் கூடியது என்றும், அதை அக்கறையோடு பார்த்துக் கொள்ள வேண்டும் என்றும் எனக்கு அறிவுறுத்துகிறது. இந்த விளையாட்டை நீங்கள் ஆடலாம். புற உருவப்படுத்தினீர்கள் என்றால், பாறை எதிர் வினையாற்றுவதுபோல் தோன்றும். பாறையைக் கையில் பிடித்துக் கொள்ளலாம், உங்களின் கற்பனை வளம் அதிகமென்றால், நீங்கள் கவிநயம் வாய்ந்தவர் என்றால், அந்தப் பாறை அதிர்வுகளை அனுப்புவதாக உணர்வீர்கள். "எப்படி இருக்கிறாய்? நான் உன்னை நேசிக்கிறேன், உன் கைகளில் இருப்பதில் அளப்பரிய நன்மை உணர்கிறேன்" என்றெல்லாம் பாறை சொல்லும். ஆனால் இது நீங்கள் சொல்லுவதுதான்! இது உரையாடல் அல்ல, தனி உரை, ஓரங்க நாடகம். பாறைக்கு நீங்கள் இருக்கும் உணர்வே கிடையாது, ஆனால் நீங்கள் ஆட்டத்தைத் தொடரலாம்.

ஆனால் மெய்யான மனிதர்களுடன் இந்த விளையாட்டு கடினமாகிறது. அதற்கு விலை தர வேண்டியுள்ளது. இதனால்தான் மனிதர்கள் நாய், பூனை, மரம், பாறை ஆகியவற்றை நேசிக்கத் தொடங்குகின்றனர். அவர்களுக்கு நேசிக்க வேண்டும், ஆனால் நேசிப்பில் ஆபத்து இருக்கக் கூடாது. ஒரு நாயை நேசிப்பதில் ஆபத்தில்லை, ஆனால் ஒரு பெண்ணை நேசிப்பதில் ஆபத்துள்ளது. உங்களுக்கு வேண்டியவற்றை எல்லாம் அவள் மேல் தோற்றுவித்துக் கொண்டிருக்க முடியாது. எதை வேண்டுமானாலும் உருவப்படுத்திக் காட்ட அவள் ஒன்றும் வெள்ளித் திரையல்ல, உங்கள் தாளத்திற்கேற்ப ஆட வேண்டும், நீங்கள் வீட்டிற்கு வந்தவுடன் வாலாட்ட வேண்டும். அவள் செய்யவேண்டிய அவசியமில்லை.

* ஒருவன் மனோதத்துவ நிபுணரிடம் சென்று கூறியது: "எனக்கு என்ன நடக்கின்றது? நான் பிரச்சினையில் இருக்கிறேன். ஒரு வருடத்திற்கு முன்பு எனக்குத் திருமணமான புதிதில், என் மனைவி என் செருப்பைக் கொண்டு தருவாள், என் நாய் குரைக்கும். இப்போது தலைகீழாகிவிட்டது. என் நாய் செருப்பைக் கொண்டு தருகிறது, என் மனைவி குரைக்கிறாள்."

நிபுணர் சொன்னார்: "எனக்குப் புரியவில்லை, அதே சேவைகள்தான் உனக்கு இப்பவும் கிடைக்கிறதே, இதில் பிரச்சினை எங்கே இருக்கிறது?"

மனிதர்களைப் பொறுத்த மட்டிலும், சில சமயங்களில் குரைப்பு இருக்கும். சில சமயங்களில் வாலாட்டுதல் இருக்கும், சில சமயங்க

ளில் மனைவி கோபமாக இருப்பாள். ஒரு பெண் கோபப்பட்டால், அவளின் கோபம் மெய்யானது. எந்த ஆணும் அந்தளவு கோபப்பட முடியாது, ஏனென்றால் ஆண் எப்போதுமே அரை மன துடையவன். அவன் நேசத்திலும் கோபத்திலும் கூட முழுமையாக இருப்பதில்லை. திட்டமிடுபவன், ஆண். எப்போதும் அடுத்து என்ன செய்ய வேண் டும், என்ன செய்யக் கூடாது என்று சிந்தித்துக் கொண்டிருப்பான். அவன் அறிவாற்றல் உடைய வன், மூளை சார்ந்தவன். பெண் மூளை பற்றி எண்ணமில்லாமல் வாழ்பவள், அதுதான் அவள் அழகும்கூட, அதேதான் அவளுடன் வாழும் துன் பமும் ஆகும். நயம் மிகுந்தவள், முழுமையான வள், பெண்மையானவள், இவையெல்லாம் சாத்தி யப்படுவதற்குக் காரணம் அவள் மூளை கணக்கு போடுவதில்லை என்பதால்தான். அவள் இத யத்தைக் கொண்டு வாழ்கிறாள், இயல்புணர்ச்சி கொண்டவள், அதிகமாக விலங்கு போன்றவள். பெண் உங்களை நேசிக்கும்போது, முற்றிலுமாக நேசிக்கின்றாள், தன்னைத் தியாகம் செய்யத் தயா ராக இருக்கிறாள். உங்களுக்காகச் சாகவும் தயார், ஒரு கணம்கூட தயக்கம் இருக்காது. ஆனால் கோபமாக இருக்கும் போது, அவள் உங்களைக் கொல்ல முடியும்! அதற்கும் ஒரு கணம் கூட தயங்க மாட்டாள்.

பெண் இன்னமும் முழுமையாக இருக்கிறாள், இன்னும் முதிராப் பண்புடன் இருக்கிறாள். அது நல்லதுதான், மனித இனத்திற்கான ஒரே நம் பிக்கை அதுதான். அவளுக்கு கல்வி கொடுத்து, செயற்கைப் பண்பாடு கற்றுக் கொடுத்து ஆணைப்

போல தந்திரமுடையவளாக்கினால், ஆணைப் போல சூதுவாது அறியச் செய்தால், உலகம் முழுவதும் உள்ள பெண் விடுதலை இயக்கங்கள் செய்வதுபோலச் செய்தால், உலகம் தன் இறுதி நம்பிக்கையை இழக்கும். பெண்தான் ஒரே நம்பிக்கை. காரணம் அவள் இன்னும் இயற்கையின் ஓர் அங்கம், இன்றும் எப்படியோ இயற்கையோடு வேரூன்றி இருக்கிறாள். உலகு சார்ந்து இருக்கிறாள், இன்னும் அருவமாகவில்லை. அருவமானவற்றைப் பற்றிக் கவலைப்படுவதில்லை. அவள் பிரச்சினைகள் மெய்யானவை. அவள் புறவாய்மையுடையவள்.

* ஒரு சீனப் பேரரசரைப் பற்றி கேட்டிருக்கிறேன். தன் படுக்கையறையில் ஒரு ஓவியம் தீட்டப்பட வேண்டும் என்று விரும்பினார். தன் கனவில் ஒரு வெள்ளை நாரை முழு நிலவைத் தாண்டிப் பறப்பதைக் கண்டார். அதை ஓவியமாக்க விரும்பினார். மிகப்பெரிய ஓவியரைத் தேடினார். மிகப் பெரிய ஓவியர் என்று அறியப்பட்ட ஒருவர் கிடைத்தார். அவர் ஒரு பெண். "நான் கனவில் கண்டதை ஓவியமாக்க வேண்டும், என்ன சன்மானம் வேண்டுமானாலும் தருகிறேன்" என்றார் அரசர்.

"நீங்கள் காத்திருக்க வேண்டும்" என்றாள் அந்தப் பெண்.

ஒரு வருடம் போயிற்று, அரசர் விசாரித்தார், காத்திருங்கள் என்றாள். மீண்டும் மீண்டும் அதே பதில் தான். இரண்டு வருடங்கள் கடந்த பிறகு அரசர் கேட்டார்: "எவ்வளவு காலம் ஆகும், முழு நிலவைக் கடந்து போகும் ஒரு நாரை, இந்தச் சின்ன ஓவியம்

தீட்ட எவ்வளவு காலம் ஆகப்போகிறது?" என்றார் அரசர்.

அந்தப் பெண் சொன்னது: நான் ஒவ்வொரு முழு நிலவன்றும் கவனித்துக் கொண்டிருக்கிறேன், ஒரு நாரைகூட இதுவரை கடந்து போகவில்லை. அது போகும்வரை என்னால் ஓவியம் வரைய முடியாது. நான் ஆண் இல்லை. பெண், நான் கனவியளாளர் அல்ல என்றாள்.

இந்தக் கதை எனக்குப் பிடிக்கும். பெண் சொல்கிறாள், நான் ஒரு ஆண் அல்ல, அருவமானவற்றை என்னால் செய்ய முடியாது. வெறுமனே கற்பனை செய்ய முடியாது. நான் அதைப் பார்க்க வேண்டும், நடப்பதைக் கண்டால்தான் என்னால் செய்ய முடியும்.

அரசர் கருத்தைப் புரிந்துகொண்டார். "தேவையில்லை, நீ சொல்வது எனக்குப் புரிகிறது. கவலைப்படாதே உனக்குரிய சன்மானம் வழங்கப்படும்." பெண் இன்னமும் புறவாய்மை உள்ளவளாக இருக்கிறாள்.

அருவமான நிலையில் மனிதர்களை விரும்புவது எளிது, மெய் நிலை என்று வரும்போதுதான் பிரச்சினை எழுகின்றது. ஆக நினைவில் வைத்துக் கொள்ளுங்கள், மெய்யான மனிதர்களை உங்களால் நேசிக்க முடியவில்லை என்றால், மரங்களை, பறவைகளை எல்லாம் நீங்கள் நேசிப்பது போலியானது.

உங்களால் மனிதர்களை நேசிக்க முடியுமென்றால், உங்கள் உணர்வு நிலையின் ஒரு குறிப்

பிட்ட கட்டத்தில் உங்களால் மரங்களையும், பறவைகளையும், மலைகளைக்கூட நேசிக்க முடியும். ஆனால் இவையெல்லாம் பின்னர்தான். உங்களால் அருகில் உள்ள மெய்மையை ஊடுருவ முடியவில்லையென்றால், எப்படி தொலைவில் உள்ள மெய்மையை ஊடுருவ முடியும்? எப்படி ஒரு பாறையோடு தொடர்பு கொள்ள முடியும்? பொதுவான மொழி இல்லையே. ஒன்று நீங்கள் பாறையாக வேண்டும் அல்லது பாறை மனிதனாக மாற வேண்டும். இல்லையென்றால் இடைவெளி மிகப் பெரியது. பாலமிட முடியாதது. முதலில் மனிதர்களோடு பாலம் அமையுங்கள்.

ஒரு மரத்தை நேசிக்க முடியும் என்று எனக்கு தெரியும். ஆனால் அது நீங்கள் மனிதர்களை முழுமையாய் நேசித்து இருந்தால்தான் முடியும். மனித ஜீவன்களில் நீங்கள் மரங்களைக் காண வேண்டும், அப்படியானால் முடியும். மனிதர்களுக்குள் காண வேண்டும், அப்படியென்றால் சாத்தியப்படும். மனித ஜீவன் இப்பொருட்களாய் இருந்ததால், தன் ஆழ்மனதில் அல்லது முழு மொத்த ஆழ்மனதில் இந்தச் சுவடுகளை இன்னும் சுமந்து கொண்டிருப்பதால் அது முடியும். நீங்கள் முன்பு ஒரு மரமாக, பறவையாக, ஒரு விலங்காக, பாறையாக இருந்து உள்ளீர்கள். நீங்கள் எல்லாப் பொருட்களாகவும் இருந்திருக்கிறீர்கள், கோடிக்கணக்கான பொருட்களாய் இருந்திருக்கிறீர்கள். அந்த அனுபவங்கள் எல்லாம் உங்களுக்குள் இருக்கிறது. வெளியில் இருக்கும் மரத்தோடு தொடர்பு கொள்வதற்கான ஒரே வழி முதலில் மனித ஜீவனுக்குள் இருக்கும் மரத்தோடு தொடர்பு ஏற்படுத்திக் கொள்வதுதான்.

மனிதர்கள்மீது நேசம் கொள்ளுங்கள். அந்த இடர்நேர்வைத் துணிந்து எதிர்கொள்ளுங்கள். நேசம் மற்றும் பேரின்பத்தின் வலிகளை அனுபவியுங்கள். மனிதர்களுக்குள் ஆழமாகச் செல்லுங்கள், அப்படிச் செய்தால், எந்த மனித ஜீவனும் வெறும் ஒரு மனித ஜீவன் மட்டுமல்ல என்பதை கண்டறிவீர்கள். ஒரு மனிதன் என்பவன் மனித ஜீவனோடு சேர்ந்து முழு இயல் உலகாக இருக்கிறான். ஏனென்றால் மனித ஜீவன்தான் பரிணாம வளர்ச்சியின் இறுதிப் படிவம். கடந்த காலத்தில் மனிதன் இருந்த வகை எல்லாம், ஒவ்வொரு படிநிலையாய் அப்படியே இன்னமும் இருக்கிறது.

சில சமயங்களில் ஒரு பெண், பூனைபோல் உங்களுக்கு தோன்றவில்லையா? ஒரு பெண்ணின் கண்களுக்குள் ஆழமாகப் பார்க்கும்போது திடீரென ஒரு பூனை உள்ளிருப்பதை நீங்கள் உணரவில்லையா?

ஒரு பூனையாய் இல்லாமல் எந்தப் பெண்ணும் ஒரு பெண்ணாய் இருக்க முடியாது. மேலும் நம்பிக்கையற்ற பெண்ணையும் அங்கே காணமுடியும். அதேபோல்தான் ஆணும் - நீங்கள் ஓநாயைக் காண்பீர்கள்.

இவை எல்லாம் இருக்கின்றன, மனிதன் இவற்றின் ஊடே பரிணாம வளர்ச்சியடைந்து வந்திருக்கிறான். இது நீங்கள் குழந்தையாய் இருந்தபோதுபோல, பிறகு இளைஞன் ஆகிவிட்டீர்கள். உங்கள் குழந்தைப்பருவம் முற்றிலும் மறைந்து விட்டது என்று நினைக்கின்றீர்களா? அது அங்கேதான் இருக்கிறது. அதன்மேல் ஒரு அடுக்கு இளமை

சேர்ந்து கொண்டுவிட்டது, ஆனால் அதைத் தூண்டிவிட முடியும். ஒரு குறிப்பிட்ட சூழ்நிலையில், சூழலில் நீங்கள் மீண்டும் குழந்தையாகிவிட முடியும். அந்த நாட்களைப் பற்றிச் சிந்திக்கத் தொடங்குகிறீர்கள், பழங்கால நினைவுகள், ஞாபகங்கள், உங்களுக்கு ஏற்பட்ட இனிய நிகழ்வுகள் மற்றும் இன்பங்கள் எல்லாம் நினைவிற்கு வரும். நீங்கள் தான் மறந்து விடுகிறீர்கள்.

உங்களுக்கு வயதாகி இருக்கலாம். உங்களிடமிருந்து இளமை மறைந்துவிட்டதா? அது அங்கே தான் இருக்கிறது. அதற்கு மேல் ஒரு அடுக்கைச் சேர்த்துக் கொண்டு விட்டீர்கள். ஒரு மரத்தை அறுத்துப் பாருங்கள், அடுக்கடுக்காய் இருக்கும். அப்படித்தான் அதன் வயதைக் கணக்கிடுகிறார்கள். அதற்கு அறுபது வயதென்றால் அறுபது அடுக்குகள் இருக்கும். ஒவ்வொரு வருடமும் மரம் அதன் மேற்பட்டையை உரித்துவிடும். பிறகு ஒரு புதிய அடுக்கு வளரும். ஒரு பாறையை வெட்டினாலும் பல அடுக்குகள் இருக்கும். மனிதர்களுக்குள் நீங்கள் ஆழமாகச் சென்றாலும், பாறைகள், மற்றும் மரங்களைப் போல பல அடுக்குகளைக் காணலாம். மேலும் ஆழமாகப் போனால் விசித்திரமான விஷயங்கள் நடப்பதைப் பார்க்கலாம். ஒரு பெண்ணோடு உடலுறவு கொள்ளும்போது, உங்களை முற்றிலும் இழக்க முடியுமானால், நீங்கள் விலங்குகளோடு, பறவைகளோடு, மரங்களோடு பாறைகளோடு, இயல் உலகோடு உறவு கொள்வீர்கள்.

ஒவ்வொரு தனி மனிதனும் ஒரு சிறு உலகம். அண்டத்தின் நுண்மாதிரிப் படிவத்தில் எல்லாம் அடங்கியிருக்கிறது. அது முழுவதையும் கொண்

டிருக்கிறது. அண்டத்தையே உள்ளடக்கியிருக்கி றது. ஆனால் நீங்கள் மனிதர்களைத் தவிர்க்க முடியாது. "மரங்களை நேசிப்பேன், மனிதர்களை அல்ல" என்று சொல்ல முடியாது. அப்படியென்றால் உங்கள் மரங்கள் பொய்யாகிவிடும். நீங்கள் அவற் றைச் சரியான முறையில் அணுகவில்லை. முதலில் அவை 'மனிதர்களுள்' நேசிக்கப்பட வேண்டும். பிறகுதான் அவற்றின் மொழியைப் புரிந்து கொள் வீர்கள்.

## இறுதிக் கேள்வி:

*ஒரு உண்மையான சிங்கம் ஒரு உண்மை யான குருவைச் சந்திக்கும்போது, அவன் குருவை அடையாளம் கண்டு கொள்கிறான். அவன் தோற்றுப்போக முடிவு செய்கிறான், அகங்காரம் உடைபட முடிவெடுக்கிறான். ஏனென்றால், அவனை இந்த பாதை இயல் அமைதிக்கு இட்டுச் செல்லும் என்று அவன் அறிவான்.*

*இப்போது, என் அகங்காரம்தான் இன்னமும் எனக்காக முடிவு செய்கிறது என்பதுதான் என் பயம். தயவுசெய்து விளக்கம் தாருங்கள்.*

கார்லோ, சன்னியாசம் எடுத்துக் கொள்ளும் முடிவு அகங்காரத்தினுடையதுதான். ஆனால் அது தற்கொலை செய்துகொள்ளும் முடிவு. இந்த இரண்டு விஷயங்களையும் சரியாகப் புரிந்து கொள்ளவேண்டும்.

ஒரு மனிதன் தற்கொலை செய்துகொள்ள முடி வெடுக்கும் போது, வாழ்க்கை மரணத்திற்காக முடி

வெடுக்கிறது. மரணத்திற்கு ஆதரவாய் இருக்கி றது. ஒரு மனிதன் தற்கொலை செய்து கொண் டால் என்ன நடக்கிறது? அவன் வாழ்ந்து பார்த்து, வாழ்க்கையில் ஏதோ ஒன்று இல்லை என்பதைக் கண்டறிகிறான், வாழ்வதில் அர்த்தமில்லை என்று உணர்கிறான். அவன் எதிர்திசையில் நகர்கிறான், அது மரணம். மரணத்தைத் தேடுகிறான்.

இதேதான் சன்னியாசத்திலும் நடக்கின்றது. அகங்காரம்தான் சன்னியாசம் பெற முடிவு செய் கிறது. சன்னியாசம் என்றால் அகங்காரத்தின் தற் கொலையாகும்.

அகங்காரம் வாழ்ந்து, துன்பங்களை மட்டுமே கண்டுள்ளது. அகங்காரம் தேடியிருக்கிறது, இருட் டில் துழாவியிருக்கிறது. ஆனால் ஏதும் நடக்க வில்லை. கவலைகள், துன்பம் மட்டுமே மிஞ்சியுள் ளது. அகங்காரம் நரகத்தின் ஊடே வாழ்ந்துள்ளது, அகங்காரமே நரகம்தான்!

ஜான் பால் சார்த்ரே சொல்வது, "மற்றது நரகம்" - அது முற்றிலும் தவறு. அகங்காரம்தான் நரகம். 'மற்றது' நரகம் இல்லை 'தான்' என்ற எண்ணம் தான் நரகம். உங்கள் ஜீவனுக்குள், உங்கள் எலும் புகள், குருதியினுள் இதை நீங்கள் உணரும்போது, உங்கள் அகங்காரம் முற்றிலும் தோற்றுப் போகும் போது, அகங்காரம் தற்கொலை செய்ய முடிவெ டுக்கிறது. அதுதான் சன்னியாசம்.

ஆனால் நீங்கள் சன்னியாசம் பெற்ற பிறகு, ஒரு முற்றிலும் புதிய உலகம், ஒரு முற்றிலும் வேறு பட்ட பார்வை உங்கள் ஜீவனுக்குள் தொடங்குகி றது. நீங்கள் நான் என்ற எண்ணமின்றி அகங்கா

ரமற்றவராய் வாழத் தொடங்குகிறீர்கள். வாழ்க்கை தவறாக இல்லை, அகங்காரம்தான் தவறாக இருந்தது. வாழ்க்கை பெரிதும் நிறைவுடையதாய் இருந்தது. அது வெறும் மகிழ்ச்சி, அது ஆனந்தம் என்ற வஸ்துவால் உருவாக்கப்பட்டது. அகங்காரம்தான் அதற்குத் தடையாய் இருந்து உங்களை வாழவிடாமல் செய்து கொண்டிருந்தது. நீங்கள் சரணடைந்தால், அந்தச் சரணாகதியில் ஒரே ஒரு கணமாவது ஜன்னல் திறக்குமானால், அதுவே சன்னியாசம். தீட்சை என்பது குருவின் கண்களுக்குள் பார்ப்பது, ஒரு கணத்தில் நீங்கள் மறைந்துபோய் விடுவீர்கள். ஒரு கணம் நீங்கள் தனித்து இருப்பதில்லை, குருவின் அதிர்வுகளோடு ஒத்திசைவு ஏற்படும். அவர் நிறத்தை, அவர் அதிர்வை உள்வாங்கிக் கொள்வீர்கள், அவரோடு சுவாசிப்பீர்கள். ஒரே ஒரு கணத்தில் இடைவெளியைக் கடந்து விடுவீர்கள். அங்கே கதவு திறக்கும், முற்றிலும் புதிய வேறுபட்ட உலகைக் காண்பீர்கள். அதே உலகம்தான், ஆயினும் முற்றிலும் வேறுபட்ட பார்வை.

இதுதான் தீட்சை, குருவின் கண்கள் மூலமாகப் பார்ப்பது. உங்கள் கண்களைக் கொண்டு பார்த்ததில் உங்களுக்கு எதுவும் கிடைக்கவில்லை. இப்போது கண்களை மூடிக் கொண்டு குருவின் கண்கள் மூலமாகப் பாருங்கள். இதுதான் கீழ்ப்படிவது, இதுதான் சரணாகதி. இதுதான் உங்கள் பழைய பழக்க வழக்கங்களைப் புறந்தள்ளிவிட்டு புதியவற்றைக் கற்றுக்கொள்வதாகும். இது கற்றதை மறக்கும் வழிமுறையாகும். அகங்காரம் மற்றும் அதன் வழிமுறைகள் பொறுத்தவரை கற்றதை மறத்தலாகும்.

அகங்காரமின்மையைப் பொறுத்தவரையில் இது ஒரு கற்கும் வழிமுறையாகும். அகங்காரமற்றவர் தான் குரு. அகங்காரமும் அதன் வழிகளும் பொய் யானவை. அவை மொட்டைச் சந்திற்குள் இட் டுச் செல்லும் என்பதைப் புரிந்து கொண்டவர்தான் சீடர். அகங்காரத்தை கைவிடத் தயாராகி, எவ்வாறு அகங்காரத்தை விடுவது என்று அறிய முற்படுபவர் தான் சீடர். அதன் காரணமாக நெடுங்காலம் அவ திப்பட்டவர் சீடர். இப்போது அது சோர்வைத் தரு கிறது. அந்தச் சுமையை இறக்கி வைக்க விரும்புகி றார். அதைத் தூக்கி எறிவது எப்படி என்று அவருக் குத் தெரியவில்லை. அதை நெடுங்காலம் பிடித் துக் கொண்டிருந்ததினால் அதை விடுவது எப்படி என்றும் தெரியவில்லை. அகங்காரத்தை விட்டொ ழித்த ஒரு மனிதரிடம் வந்து, அவர் கண்களுக்குள் நோக்குகிறான், ஒரு புதிய வகையான நடுக்கத்தை உணர்கின்றான். ஒரு புதிய வகையான சக்தியின் பாய்ச்சலை உணர்கிறான், திடீரென உங்களுக்கும் அகங்காரத்திற்கும் இடையே ஆன தொடர்பு அறு படுகிறது.

இதைத்தான் தீட்சை, சீடனின் அறிமுகம் என் பார்கள். நிச்சயமாக இது ஒரு தொடக்கம்தான், பின்னர் செய்ய வேண்டியது அதிகம் உள்ளது. ஆனால் நீங்கள் முதல் அடியை எடுத்து வைத் துவிட்டால் பாதிப் பயணம் முடிந்துவிட்டது. ஆம், பாதிப் பயணம் முடிந்துவிட்டது என்று சொல்கி றேன். ஏனென்றால் முதல் அடிதான் மிகவும் கடின மான ஒன்று. மற்ற அடிகள் எல்லாம் அதே போல் தான் இருக்கப் போகின்றன. முதலில் அடியெடுத்து

வைத்தது போலவே திரும்பத் திரும்ப வைக்க வேண்டும்.

> *கார்லோவின் கேள்வி முக்கியமானது. அவர் சொல்கிறார்: "ஒரு உண்மையான சிங்கம் ஒரு உண்மையான குருவைச் சந்திக்கும் போது சிங்கம் குருவை அடையாளம் கண்டு கொள்கிறது."*

அது உண்மைதான். ஒட்டகங்களால் குருவை அடையாளம் காண முடியாது. ஒட்டகங்களை நிர்ப் பந்திக்க வேண்டும். சில சமயங்களில் என்னிடம் ஒரு ஒட்டகம் வரும், நான் அதை இணங்க வைக் கக் கடினமாக முயற்சிக்க வேண்டும்.

சில நாட்களுக்கு முன் ஒரு பெண்ணுக்கு பெரும் முயற்சி செய்து அறிவுரை கூறிக் கொண்டிருந் தேன். அவளால் ஒரு சிங்கமாக முடியும் என்பது எனக்குத் தெரிந்தது. ஆனால் தான் ஒரு ஒட்டகமா கவே இருப்பதில் பிடிவாதமாய் இருக்கிறாள். சாதா ரணமாக நான் அதிகமாக நிர்ப்பந்திப்பதில்லை, ஏனென்றால் சன்னியாசம் ஏற்றுக் கொள்ள அதி கமாக நிர்ப்பந்தித்தால் அதுவே ஒரு தடையாகி விடும். அந்த நபர் தான் மிகவும் முக்கியமானவர், அதனால்தான் நான் இவ்வளவு தூரம் நிர்ப்பந்திக் கிறேன் என்று நினைக்கத் தொடங்கி விடுவார். தான் முக்கியமானவர் என்ற எண்ணமே அகங் காரத்தை அதிகப்படுத்திவிடும். ஆனால் யாரோ ஒருவர் விளிம்பில் இருப்பாரானால் ஒரு உந்து தல் மட்டுமே போதுமானது. நான் சற்று அதிகமா கவே முயன்று ஒரு உந்துதலைக் கொடுப்பேன். ஆனால் அது எப்போதுமே அறியாத பிரதேசத்திற்

குள் நுழைவதாகும். ஒருவர் எப்படி எதிர்வினை யாற்றுவார் என்று நமக்குத் தெரியாது.

என் உந்துதலால் அவள் சன்னியாசம் ஏற்றுக் கொண்டாள். ஆனால் கருத்தைப் புரிந்து கொள் ளவில்லை. என் கண்களைப் பார்க்கும்போது, அவள் உண்மையில் பார்க்கவில்லை. அவள் பயத் திலிருந்தாள், ஒட்டகத்தைப் பிடித்துக் கொண் டிருந்தாள். ஒரு பெரிய சந்தர்ப்பம் அவளுக்கு வழங்கப்பட்டது, அதைத் தவற விட்டாள். சன்னி யாசத்தை விட்டுவிடலாம் என்ற தகவலை அவ ளுக்குத் தந்துவிட்டேன். ஏனென்றால் உண்மை யில் அது நடக்கவில்லை. அவளுக்கு ஒட்டகமாக இருக்கவே விருப்பம், அதனால் ஒட்டகமாகவே மகிழ்ச்சியாய் இருக்கட்டும். ஒட்டகத்தால் அடை யாளம் காண முடியாது. ஒட்டகம் குருடு. ஒட்டகம் ஒரு முட்டைப்புழு, ஒரு தேங்கிய குட்டை.

ஆனால் ஒரு சிங்கத்தால் அடையாளம் காண முடியும். அதனால்தான் எப்போதுமே துணிவுள் ளவர்கள் உடனேயே சன்னியாசத்திற்குள் குதிக் கின்றனர். அவர்கள் உலகை எதிர்நோக்க மாட் டார்கள் என்றில்லை, பிரச்சினைகள் இருக்காது என்று அர்த்தமல்ல. அவர்களுக்கும் பிரச்சினை கள் வரும். ஆனால் அது இரண்டாம் பட்சம். அவற்றை எதிர்கொள்ள முடியும், உலகை எதிர் நோக்க முடியும். ஆனால் சரியான தருணம் வரும் போது துணிய வேண்டும். சிங்கம் துணிகின்றது. சிங்கம் குருவை அடையாளம் காண்கிறது.

ஒட்டகத்தால் அடையாளம் கண்டுகொள்ள முடி யாது. சன்னியாசம் ஏற்க அதை நிர்ப்பந்திக்க

வேண்டும். சிங்கம் அடையாளம் கண்டு சன்னியாசத்தை ஏற்றுக்கொள்ளும், அதைக் கேட்டு வாங்கும், தானாகவே சன்னியாசத்திற்குள் தாவும். அந்தத் தாவலில் சிங்கம் மூன்றாவது கட்டத்திற்குள் போகத் தொடங்கும் - அது குழந்தை.

சரணடைவதால் நீங்கள் ஒரு குழந்தையாகி விடுவீர்கள், நீங்கள் மெய்யாகவே பெண் தன்மை பெறுவீர்கள். உங்களை ஊடுருவக் குருவிற்கு அனுமதி தருவீர்கள். குரு உங்களைத் தெய்வீகத்தால் கருவுறச் செய்வார். குழந்தை நிலை என்பது உண்மையில் கருவுற்ற நிலையாகும். நீங்கள் இறந்து போய் ஒரு குழந்தையாய், உங்கள் சொந்தக் கருவறையிலிருந்தே ஒரு குழந்தையாய் பிறக்கின்றீர்கள்.

தன் சொந்தக் கருவிலிருந்தே மனிதன் பிறப்பது என்பது உலகின் மிகப் பெரிய மாயா ஜாலமாகும்.

ஆனால் இந்த முடிவு அகங்காரத்தினுடையது தான். தற்கொலை எவ்வாறு வாழ்க்கையின் முடிவாகிறதோ சன்னியாசமும் அகங்காரத்தின் முடிவாகும். ஆனால் நீங்கள் முடிவெடுத்து விட்டீர்கள் என்றால், அகங்காரம் மறையத் தொடங்கிவிடும். அகங்காரம் தற்கொலை செய்து கொண்டுவிட்டது. உண்மையில் சன்னியாசமும் தற்கொலையும் ஒன்றுதான். தற்கொலை பொய்யான சன்னியாசம், சன்னியாசம் உண்மையான தற்கொலை - ஏனென்றால் தற்கொலையில் உடல் மட்டுமே இறக்கிறது, நீங்கள் மறுபடியும் பிறப்பீர்கள். சன்னியாசத்தில் உங்கள் அகங்காரம் இறக்கிறது, நீங்கள் சரியாகச் செயல்பட்டீர்கள் என்றால், ஒரு வேளை நீங்கள் மறுபடியும் பிறக்க மாட்டீர்கள்.

இன்று இது போதும்.

ஒரு காலத்தில் வன்முறையுடைய அறிவிலியான, உருவ வழிபாடு செய்யும் ஒரு அரசன் இருந்தான்.

ஒரு நாள் அவன், "வாழ்க்கையில் சில அனுகூ லங்கள்

தன் சொந்த வழிபாட்டுச் சிலையின்

மூலமாகத் தனக்குக்

கிடைத்தால், தன் அரண்மனையைக் கடந்து செல்லும் முதல் மூன்று பேரைப் பிடித்து

அவர்களைத் தன் உருவச் சிலை வழிபாட்டிற்கு உடன்பட வைப்பேன் என்று சூளுரைத்தான்.

அப்படியே அரசனின் அவா நிறைவேறியது. உட னேயே தன் வீரர்களை அனுப்பி,

முதலில் தென்படும் மூன்று நபர்களைக் கொண் டுவரச் சொன்னான்.

உள்ளபடியே அந்த மூவரில் ஒருவர் பண்டிதர், அடுத்தவர் ஒரு சயிது (இறைதூதர் முகமதின் வழிவந்தவர்) மூன்றாமவர் ஒரு வேசி.

மூவரையும் சிலைக்கு முன் வீசிய மனநிலை தடு மாறிய அரசன் தன் சபதத்தைப் பற்றிச் சொல்லி, அவர்கள் மூவரையும் சிலைக்குத் தலை வணங் கச் சொன்னான்.

பண்டிதர் சொன்னார்:

"இந்தச் சூழ்நிலை தடுப்பதற்கல்லாத இடையூறு என்ற கோட்பாட்டின் கீழ் வருகிறது. இந்தப் பழக் கத்திற்கு நிர்ப்பந்தத்தால் அடிபணிந்தவர்களின் முன் உதாரணம் ஏராளமாய் உள்ளது.

இவர்கள் மெய்யான அல்லது ஒழுக்க நெறி சார்ந்த குற்ற நிலைக்கு ஆளாக்கப்பட மாட்டார் கள். ஆக, பண்டிதர் சிலையை வணங்கினார்.

சயீதின் முறை வந்தபோது, அவர், "நான் பிரத்யே கமாகப் பாதுகாக்கப்பட்டவன்.

என் உடலில் புனிதர் முகமது நபியின் இரத்தம் ஓடுகிறது,

எதைச் செய்தாலும் என் செய்கையே அதை சுத் தம் செய்துவிடும்,

ஆகவே இந்த அரசனின் கோரிக்கைகளுக்கு ஏற்ப நடப்பதில் எந்தத் தடையும் இல்லை."

சயீதும் சிலையை வணங்கினார்.

இறுதியாக வேசி சொன்னாள்.

"அய்யகோ, எனக்கு இந்த அறிவார்ந்த பயிற்சியோ அல்லது சிறப்புச் சலுகைகளோ கிடையாது.

ஆகையால் நீங்கள் என்னை என்ன செய்தாலும் நான் இச்சிலையை வணங்கமாட்டேன்."

அந்தப் பைத்தியக்கார அரசனின் நோய்

இந்தச் சொல்லைக் கேட்ட கணத்திலேயே தொலைந்து போயிற்று.

அற்புதம் நடப்பதுபோல்

சிலையை வணங்கும் இருவரின் போலித்தனம் அவனுக்குப் புரிந்தது.

உடனேயே பண்டிதர் மற்றும் சயீதின் தலைகளை வெட்டச் சொன்னான்,

வேசியை விடுதலை செய்து அனுப்பினான்.

★ ★ ★

இறைவனை உருவமாகக் குறைத்துவிட முடி யாது; இதுதான் சூஃபி அனுபவத்தின் அடிப்படை களில் ஒன்று. நான் இதை சூஃபித் தத்துவம் என்று கூடச் சொல்லமாட்டேன், ஏனென்றால் சூஃபித் தத் துவம் என்று ஒன்றுமில்லை. அது ஒரு அனுபவம், அனுமானம் இல்லை அது ஒரு பார்வை, தரிசனம்.

சூஃபி அனுபவம் சொல்வது: இறைவனை ஒரு உருவமாகக் குறைத்துவிட முடியாது. ஒரு உரு வகமாக, ஒரு குறியீடு அல்லது அடையாளமா கத் தாழ்த்திவிட முடியாது. ஆயினும் மனித மனம் காலம் காலமாய் இறைவனை மனிதன் வணங்கத் தக்க, கையாள்வதற்கு உகந்த, ஈடு செய்வதற்கேற்ற வகையில் எளிதாக்க முயற்சி செய்துகொண்டிருந் தது. அதுதான் மனித மனதின் மிகவும் பழமையான ஆசைகளில் ஒன்று. அதாவது இறைவனை மனித வகையிலிட்டுவிட்டால், இறைவனைச் சமாளிக்க லாம், கையாளலாம், இறைவன் உங்கள் கைக்குள் இருக்கலாம்.

சூஃபி அனுபவம் என்னவென்றால் இது அவச் செயல், பாவம். இறைவனை உருவமாகக் குறைக் கும் முயற்சியே மெய் நிலையைப் பொய்யாக்குவதா கும்.

முதலில், இறைவனை நாம் ஏன் ஒரு உருவச் சிலை வடிவத்திற்குக் குறைக்க விரும்புகிறோம்? இயல் உலகின் பிரம்மாண்டமே நம்மை நிலைகு லைய வைக்கிறது. அந்த முடிவற்ற தன்மையைக் கண்டு நாம் படுபாதாளத்தில் வீழ்ந்து கொண்டி

ருக்கிறோம் என்ற உணர்வைத் தருகிறது. பயத்தின் காரணமாக மனிதன் கடவுளை உருவாக்குகிறான், ஒரு சிறிய கடவுள், மனிதனைப் போன்று சிறியதாய் ஒன்று. பயத்தின் காரணமாக மனிதன் தன்னுருவிலேயே கடவுளைப் படைக்கின்றான், அதன் பிறகு அவன் அமைதி கொள்கிறான். இயல் உலகு, அதன் மெய்மை நிலையின் பிரம்மாண்டத்தில் அமைதி உணர நீங்கள் மறைந்து போக வேண்டும். ஒன்று இயல் உலகின் முடிவற்ற தன்மையில் மறைய வேண்டும் அல்லது சமாளிக்கக் கூடிய அளவில் ஒரு கடவுளைப் படைக்க வேண்டும். உங்கள் வீட்டில் ஒரு கோயிலை உருவாக்குவது, இறைவனை உருவமாகக் குறைப்பது, அதன் பிறகு பிரம்மாண்டத்தை, அதன் பேரளவை அளக்க இயலாத் தன்மையை மறந்துவிடலாம்.

இயல் உலகின் முடிவில்லா மௌனத்தின் காரணமாக மனிதன் தான் பாடுவதற்கு ஒரு பாட்டை உருவாக்க விரும்புகிறான். அந்தப் பாட்டு வேதங்களாக இருக்கலாம் அல்லது குரானாகவும் இருக்கலாம், அது ஒரு பொருட்டல்ல. அந்தச் சப்தம் ஆறுதலாய் இருக்கிறது, மௌனம் அச்சமூட்டுகிறது. உருவம் மனிதத்தன்மையை உணர்த்துகிறது. நம் உலகினைச் சேர்ந்ததுபோல் தோன்றுகிறது. உருவமற்ற கடவுள் மனிதனைத் தாண்டியுள்ளது, நமக்கு எட்டவில்லை. நம்மையே கடந்து போனால் ஒழிய நம்மால் உண்மையான கடவுளைச் சந்திக்க முடியாது. அந்தச் சந்திப்பைத் தவிர்ப்பதற்காக நமக்கேயான சிறிய கடவுளைப் படைத்துக் கொள்கிறோம். மனிதனால் படைக்கப்பட்ட, மனித மனதினால் உருவாக்கப்பட்ட கடவுளோடு நாம்

உரையாடல்களைத் தொடங்குகிறோம். நாம் வழி படுகிறோம், பிரார்த்தனை செய்கிறோம், சடங்குக ளாற்றுகிறோம். நாம் மகிழ்ச்சியாய் இருக்கிறோம். இது ஒரு வகையான கனவு, மெய்மைக்கான நுழைவாயில் இல்லை. உங்கள் கோயில்கள் எல் லாம் கடவுளை அடைவதற்குத் தடைகளே தவிர கதவுகள் அல்ல. அவை கதவுகள் எனப் பாசாங்கு செய்கின்றன, ஆனால் அப்படியில்லை. உங்கள் கோட்பாடுகள், உங்கள் உருவங்கள், தத்துவங் கள், இயல் உலகின் வெறுமையை வார்த்தைகள், வேதாந்தங்கள் அமைப்புகள் மூலமாக நிரப்புவதற் கான உங்கள் தொடர் முயற்சிகள் எல்லாமே உங் களைச் சுற்றி ஒரு பொய்யான பாதுகாப்பை உரு வாக்குவதேயன்றி வேறு ஒன்றுமில்லை.

கடவுள் என்பதே பாதுகாப்பின்மைதான். கட வுளோடு இருப்பதென்பதே தொடர்ந்து ஆபத் திலிருப்பதுதான். கடவுளுக்குள் நுழைவதென்பது அறியாதது மற்றும் அறிய முடியாததற்குள் நுழை வதாகும். அது பயம் தருகிறது, அச்சமூட்டுகிறது. ஒருவர் தன்னையே இழக்கத் தொடங்குகிறார், தன்னையே கட்டுப்படுத்திக்கொள்ள விரும்புகி றார். அந்தப் பிரம்மாண்டத்திற்குள் பார்க்க விருப் பமில்லை. அதனால் உங்களால், அல்லது உங்கள் பூசாரிகளால், உங்கள் சாமர்த்தியத்தால், திறமை யால், தந்திரத்தால் உருவாக்கப்பட்ட அந்தச் சிறிய கடவுள்கள் பெரும் பயனுள்ளதாய் இருக்கின்றன. அவை பொய்யானவை. ஏனென்றால் அவற்றை உருவாக்கியவர் நீங்கள்தாம்.

உண்மையான கடவுள் என்பவர் உங்களைப் படைத்தவர். பொய்யான கடவுள் என்பவர் நீங்கள்

உருவாக்கியவர். இதுதான் சூஃபிசத்தின் அடிப் படை உள்நோக்குகளில் ஒன்று. கோயில் வெறு மையாக இருக்கவேண்டும், மனிதனால் உருவாக் கப்பட்ட எதுவுமின்றி இருக்கவேண்டும். பிரார்த் தனை அமைதியாக இருக்க வேண்டும், மனி தனால் புனைந்துருவாக்கப்பட்ட வார்த்தைகளற்ற மோனமாக இருக்க வேண்டும். பிரார்த்தனை என் பது எல்லையற்றதோடு ஒரு வார்த்தையற்ற, அமை தியான உரையாடலாய்தான் இருக்க முடியும். உங் கள் பங்கிற்கு ஒரு மறைதலாய் இருக்க வேண் டும். நீங்கள் ஒன்றாய் கரைந்து போக மட்டுமே முடியும். அதன் பிறகு நீங்கள் மறுநடவு செய்யப்படு கின்றீர்கள். வேரிடம் எடுத்துச் செல்லப்படுகின்றீர் கள். காற்று உங்களைப் பாலைவனத்தைத் தாண்டி எடுத்துச் செல்கிறது, மனம் எனும் பாழ் நிலத்தைக் கடந்து எடுத்துச் செல்கிறது.

ஆனால் அதற்குத் தயாராக இருப்பதற்கு அதிக துணிச்சல் தேவை. மனிதன் எப்போதும் பொம் மைகளை வைத்தே மகிழ்ச்சி அடைகிறான். உங் கள் உருவச் சிலைகள் எல்லாம் பொம்மைகள் தான். இந்த உண்மையை அறிந்து எச்சரிக்கை யாக இருங்கள். மேலும் மனிதன் மிகவும் தந் திரமானவன்: தன் பொய்மைகளைச் சுற்றி அவ னால் பெரும் தத்துவங்களைப் புனைய முடியும். அவனால் வாதாட முடியும், தற்காத்துக் கொள்ள முடியும். பகுத்தறிவுவாதம் செய்ய முடியும். மனி தனால் நீங்கள் தொலைந்து போகும் அளவிற்கு தருக்கவாத மேகமூட்டங்களை உருவாக்க முடி யும். சிலர் கிறிஸ்தவ மேகங்களில் தொலைந்து போகின்றனர். யாரோ ஒருவர் முகமதிய மேகங்க

ளில் காணாமல் போகிறார், வேறு யாரோ இந்து சமய மேகங்களில் தொலைந்து போகிறார். நீங்கள் அவர்களுள் ஆழமாய் சென்று பார்த்தீர்களானால், அவர்கள் அனைவருமே ஊக ஆய்வு செய்பவர் கள், தருக்கம் நடத்துபவர்கள், வேதாந்தம் பேசுப வர்கள் என்பதை அறிவீர்கள். ஆனால் உண்மை அவர்களுக்குள் பிரதிபலிப்பதில்லை.

உண்மை தியானத்தில் இருக்கும் உணர்வுநிலை யில்தான் பிரதிபலிக்குமே தவிர ஊக ஆய்வு செய் யும் உணர்வு நிலையில் அல்ல - எப்போதும் இது நடக்காது. நீங்கள் சிந்திக்கத் தொடங்கிய கணமே நீங்கள் திசை மாறிப் போய்விடுகிறீர்கள். நீங்கள் சிந்தனையற்ற நிலையில் இருக்கும்போது மட்டும்தான் உண்மை வெளிப்படும், உங்களுக் குள் எதுவும் அசைந்து கொண்டிருக்காத போது தான் உண்மை பிரதிபலிக்கும். 'அறிவு நிலை-ஏரி யில்' ஒரு அதிர்வுகூட இல்லாதபோது உங்களுக் குள் உண்மை பிரதிபலிக்கும். இந்த உண்மைக்கு எந்த உருவும் கிடையாது. இந்த உண்மை வடி வற்றது, பெயரற்றது. எல்லாப் பெயர்களும் முடிவற்ற மௌனத்துடன் தொடர்பு கொள்ளும் நம் முயற் சிகள்தாம், ஆனால் அவை எல்லாமே தோற்றுப் போகின்றன.

சூஃபிக்கள் கடவுளுக்கு நூறு பெயர்கள் வைத்தி ருக்கின்றனர், சரியாகச் சொல்வதானால் தொண் ணூற்றி ஒன்பது. நான் அவற்றை சூன்யத்திற் கான தொண்ணூற்றி ஒன்பது பெயர்கள் என்று சொல்வேன். உண்மையானது, நூறாவது பெயர் வெறுமை, சூனியம். சொல்லப்படாதது. அது தூண் டப்படாதது. அது விடப்பட்டது. தொண்ணூற்றி

ஒன்பது பெயர்கள் கொடுக்கப்பட்டு விட்டன, நூறா வது எங்கே? அதுதான் உண்மையான பெயர் - அது உச்சரிக்க முடியாதது, சொல்ல முடியாதது. அதைச் சொல்வது பழிப்பதுபோல் ஆகிவிடும். இறுதியா னதை எப்படிச் சொல்ல முடியும்? ஒருமுறை கூறி விட்டால் அது எப்படி இறுதியானதாக இருக்க முடி யும்?

லாவோட் சூ சொல்வது: "அவர் பெயர் எனக்குத் தெரியாது - யாரும் அறியார் - ஆகையால் நான் அவரை தாவோ என்று அழைக்கிறேன்." ஏதோ ஒன்று சொல்லி அழைக்க வேண்டும், ஆனால் எந்தப் பெயரும் உண்மையான பெயரில்லை. எல் லாப் பெயர்களும் உங்கள் மனதைவிட்டு மறை யும்போது, நீங்கள் வெறுமனே பார்த்துக் கொண் டிருக்கையில், ஏதும் செய்யாமல், உளதாய் இருக் கையில், எல்லையுடையதை எல்லையில்லாதது முதல் முறையாக ஊடுருவும் முதல் க்ஷண நேரத் தோற்றம் கிடைக்கும். நீங்கள் கருவுறுவீர்கள். பூமிக்குள் முதல் முறையாக வானம் ஊடுருவுகி றது, உங்கள் விதை உடைபடுகிறது, நீங்கள் வளரத் தொடங்குகிறீர்கள். இந்த வளர்ச்சி ஒருவகையான நிகழ்வு - நீங்கள் எதுவும் செய்வதில்லை. நீங்கள் வெறுமனே அதை அனுமதிக்கிறீர்கள். நினைவிற் கொள்ளவேண்டிய முதல் விஷயம் இதுதான்.

ஆனால் எல்லாவிதமான உருவ வழிபாட்டிற்கும் எதிரான முகமதியர்களும் தங்கள் சொந்த உரு வச்சிலைகளை உருவாக்கிக் கொண்டுவிட்டார் கள். மனித மனதால் சபலத்தைத் தவிர்க்க முடி யாதுபோல. இப்போது காபாவும் அதன் கருப்புக் கல்லும் உருவச்சிலையாகிவிட்டது. இப்போது மக்

கள் காபாவிற்கு ஹஜ் யாத்திரை மேற்கொள்கின் றனர். ஒருமுறை அங்கே சென்று அந்தக் கருப்புக் கல்லை முத்தமிட்டு வருவதற்காக ஏழை மக்கள் தங்கள் வாழ்நாள் முழுவதும் பணம் சேர்க்கின்ற னர். எல்லாம் அதே போலத்தான்.

நான் கேள்விப்பட்டது...

* பின்னாளில் மாபெரும் குருவாகிய பாயா சித் என்ற சூஃபி ஆர்வலர் ஹஜ் யாத்திரை போய் கொண்டிருந்தார். எதேச்சையாக அவர் ஒரு குருவை எதிர்கொண்டார் - இவரைப் பொறுத்த வரை எதேச்சை என்று சொல்லலாம், ஆனால் குருவிற்கு அப்படியில்லை. குரு பாயாசித்திற் காக காத்துக் கொண்டிருந்தார், ஆனால் பாயாசித் இதை அறிந்திருக்கவில்லை. இரவு நேரம் குரு வின் அருகில் ஒதுங்கியிருக்கிறார். குரு ஒரு மரத்த டியில் உட்கார்ந்து கொண்டிருந்தார்.

காலையில், சூரியன் உதயமாகிக் கொண்டிருந் தது, பறவைகள் பாடிக்கொண்டிருந்தன, குளு மையாக அழகான காலைப்பொழுது, யாத்திரிகர் கள் புறப்பட்டுக் கொண்டிருந்தனர், பாயாசித்தும் தயாராகி கொண்டிருந்தார். குரு அவரை அரு கில் அழைத்து, "என் கண்களுக்குள் பார்" என்று சொன்னார். பாயாசித்தும் அந்தக் கண்களுக்குள் பார்த்தார். பிரம்மாண்டமாய் ஏதோ ஒன்று அவருக் குள் திறந்தது. அவர் வேறு ஒரு பரிமாணத்திற்குள் எடுத்துச் செல்லப்பட்டார். அவர் திரும்பியதும் குரு சிரித்துக் கொண்டிருந்தார்.

குரு அவரிடம், "நீ என்னைச் சுற்றி யாத்திரை செய்துவிட்டு வீட்டிற்குப் போகலாம், நீ காபாவிற்கு

வந்துவிட்டாய். வேறு எந்தக் காபாவும் இல்லை. அந்தக் கருப்புக் கல்லைப் பற்றியதெல்லாம் மறந்துவிடு." பாயாசித் புரிந்து கொண்டார். மக்கள் எப்படி காபா கல்லை சுற்றி வருவார்களோ அதே போல் குருவை சுற்றி வந்து, குருவின் காலை முத்தமிட்டு வீடு திரும்பினார்.

கிராமவாசிகள் அவரிடம் "காபா சென்று வந்தீர்களா?" என்று கேட்டனர். "ஆம், உண்மையான காபாவிற்கு போய் வந்தேன். பிரம்மாண்டத்தைக் கண்டேன், விவரிக்க இயலாததைக் கண்டேன்" என்றார் பாயாசித்.

ஒருமுறை கண்டால் மறக்க இயலாது. அது உங்கள் உயிருருவுக்குள் நுழைந்துவிடுகிறது. அது உங்கள் தலையில் வெறும் ஞாபகம் இல்லை. உங்கள் உடலில் உள்ள ஒவ்வொரு உயிரணுவும் அதை எதிரொலிக்கும், உங்கள் உயிருருவின் ஒவ்வொரு பகுதியும் அதன் இசைக்கேற்ப நடனமாடும்.

சூஃபிக்களை முகமதியர்கள் அவ்வளவாக விரும்ப மாட்டார்கள்; அவர்கள் விரும்ப முடியாது. உண்மையான சமயப் பற்றுடையவர்களைத் தங்களுக்காக ஒரு பொய்யான சமயத்தை உருவாக்கிக் கொண்டவர்களால் விரும்ப முடியாது. உங்கள் பொம்மையை ஒரு பொம்மை என்று அழைக்கும் ஒருவரை உங்களால் எப்படி விரும்ப முடியும்? உங்கள் மகிழ்ச்சியை அவர் அழிக்கின்றார். மண்வெட்டியை மண்வெட்டி என்று அழைப்பவரை உங்களால் மன்னிக்க முடியாது. அது நடக்காத காரியம். ஏனென்றால் நீங்கள் இதுவரை கற்பனை செய்து

கொண்டிருந்தீர்கள், உங்களுக்காகவே மாயக் காட்சிகளை உருவாக்கிக் கொண்டிருந்தீர்கள். இப்போது ஒரு மனிதர் வந்து நீங்கள் ஒரு முட்டாள், நீங்கள் வணங்குவது வெறும் கல், நீங்கள் படிக்கும் சமய நூல்கள் யாவும் குப்பை என்று சொல்கிறார். "இவற்றை எல்லாம் எரித்துவிட்டு உங்கள் உருவச் சிலையைத் தூக்கிப்போடுங்கள். இந்த தேவை யற்ற சுமையைத் தொலைத்துவிட்டு மௌனத்திற் குள் நுழையுங்கள்." மௌனத்தின் மூலமாகத்தான் 'உள்ளதை' நீங்கள் அறிவீர்கள். மனமற்ற நிலை யில்தான் நீங்கள் உண்மையான கோயிலுக்குள் நுழைவீர்கள்.

உண்மையான கோயில் வெளியில் இல்லை, உண்மையான கோயில் நீங்கள்தான். உங்களு டைய ஜீவனுக்குள் உங்களால் நுழைய முடியு மென்றால், நீங்கள் இயல் உலகிற்குள், மெய்மை நிலைக்குள் நுழைவீர்கள். வேறு எங்கும் செல்ல வேண்டாம், ஒரு அடிகூட எடுத்துவைக்கத் தேவையில்லை. நீங்கள் ஒரு கடவுளை உருவாக்க வேண்டாம், ஏனென்றால் நீங்கள் உருவாக்குவ தெல்லாம் பொய்யாக இருக்கும்.

நான் கேள்விப்பட்டது...

* ஒரு குழந்தை படுத்துக் கொண்டே ஏதோ காகி தத்தில் கிறுக்கிக் கொண்டிருந்தது. அதன் அரு கில் வந்த அப்பா, "என்ன வரைந்து கொண்டிருக் கிறாய் மகளே?" என்று கேட்டார்

'கடவுள்' என்றது குழந்தை.

அப்பா தன் அதிகமான அறிவின் காரணமாக குழந்தையிடம் "ஆனால் யாருமே கடவுளைப் பார்த்ததில்லையே, இந்த உலகத்தில் யாருக்குமே அவர் எப்படி இருப்பார் என்று தெரியாதே" என்றார் அப்பா.

குழந்தை சொன்னது:

"நான் இன்னும் முடிக்கவில்லை."

இது குழந்தைகள் என்றில்லை, பெரும் தத்துவ ஞானிகளும் இப்படித்தான். தாங்கள் வரைந்து, வர்ணம் தீட்டி, விவரித்த பிறகு முழு உலகமே அறிந்து கொள்ளும் என்று நினைக்கின்றனர்.

கோடிக்கணக்கான தத்துவங்கள் இருந்துள்ளன, பின்பு மறைந்து விட்டன, கடவுளைப் பற்றிய அறியாமை மட்டும் தொடர்கிறது. உண்மையைச் சொல்வதானால் கடவுளை அறிவதற்கு வழியே இல்லை. ஆகையால் அறியாமை என்று சொல்வதும் சரியில்லை.

நான் உங்களுக்கு விளக்குகிறேன்: நீங்கள் ஏதோ ஒன்றை அறிவு என்று சொல்கின்றீர்கள். அறிவு சாத்தியம் என்றால், அறிவு அடைவதற்கு முந்தைய நிலை அறியாமை. ஆனால் அறிவு என்பதே சாத்தியப்படாத ஒன்று என்றால் அதற்கு முந்தைய நிலையை அறியாமை என்று சொல்ல முடியாது. அறிவு நிலையோடு ஒப்பிட்டுப் பார்த்தால் மட்டுமே அறியாமை என்பதை அறியாமை என்று அழைக்கலாம்.

மனிதனின் நிலையை சூஃபிக்கள் அறியாமை என்று அழைப்பதில்லை. அதை மாசற்ற நிலை

என்கிறார்கள். அறிவின் காரணமாக அந்த மாசற்ற நிலை அழிக்கப்படுகிறது. நீங்கள் அறிபவர் ஆவ தில்லை, வெறுமனே உங்கள் மாசற்றதன்மை அழிக்கப்படுகிறது. இது ஒரு இழப்பு, லாபம் அல்ல. ஏனென்றால் கடவுள் மாசறு நிலையில் அறியப்பட லாமே தவிர அறிவின் மூலமாக அல்ல.

நீங்கள் அறியாமையில் இருக்கிறீர்கள் என்று நினைக்காதீர்கள். நீங்கள் மாசற்று இருக்கிறீர்கள். கடவுளை அறிவு என்ற அளவிற்குச் சுருக்க முடி யாது. கடவுள் வெறுமனே அறியாதவர் அல்லர். கட வுள் உண்மையில் அறியமுடியாதவர்.

அறியாதது கூடிய விரைவில் அறியப்படும்; அதற்கு கால அவகாசம்தான் தேவை. நேற்று அறியப்ப டாததாய் இருந்தது. இன்று அறியப்பட்டது. அதே போல் இன்று அறியப்படாதது நாளை அறியப்ப டும். எவ்வளவு நேரம் என்பதுதான் கேள்வி. அறிந் ததற்கும் அறியாததற்கும் இடையே உள்ள கால இடைவெளி. ஆனால் கடவுள் அறியப்படாதவர் அல்ல. கடவுள் அறிய முடியாதவர், உள்ளார்ந்த வகையில் அறிய முடியாதவர். கடவுள் ஒரு மர்மம். இயல் உலகை, உளதாம் தன்மையின் மர்மத்தை உங்களால் விளக்க முடியாது. உண்மையில் நீங்கள் மேலும் அதிகமாகத் தெரிந்து கொண்டால் அறி வது சாத்தியமே இல்லை என்றும் மேலும் அதிக மாக உணர்வீர்கள். அதிகம் அறிய அறிய மேலும் குறைவாக அறிகின்றீர்கள். நீங்கள் உண்மையி லேயே அறியும்போது, எல்லா அறிவும் மறைந்து போகிறது. நீங்கள் மறுபடியும் அறியாதவராகின்றீர் கள், ஒரு குழந்தைபோல மாசற்றவர் ஆகின்றீர்கள்.

ஒட்டகம் அறிவால் நிரம்பி இருக்கிறது, அதனால் தான் ஒட்டகம் என்று பெயர் கிடைத்தது. ஏனென் றால் ஒட்டகம் உள்வாங்கிக் கொள்கிறது, சேர்த்துக் கொண்டேயிருக்கிறது. சிங்கம் அறிவைத் தூக்கி எறிகிறது, அறிவிற்கு எதிராகிறது. எதிர்மாறானதில் சிக்கிக் கொள்கிறது. இந்த இரண்டு துருவங்களிலி ருந்தும் குழந்தை விலகி நிற்கின்றது. அறிவு, அறி வுக்கு எதிரானது, தத்துவம், தத்துவத்திற்கு எதிரா னது. குழந்தை இருமைகளைத் தாண்டிச் சுதந்திர மாய் இருக்கிறது. குழந்தை மாசற்றது. குழந்தைக்கு அறிவைப் பற்றியும் தெரியாது. அறியாமை பற்றியும் தெரியாது. குழந்தை வெறுமனே உளதாயிருக்கி றது.

* குழந்தையின் நிலைதான் சூஃபிக்களின் உணர் வுநிலையாகும். அறிவு என்பது கிட்டத்தட்ட ஏமாற் றுதல், மற்றவர்களுக்கு மட்டுமல்ல உங்களுக்கும் பொருந்தும். ஏனென்றால் நீங்கள் கடன் பெற் றதை, போலியானதைத் திரும்பத் திரும்பச் சொல் லிக் கொண்டிருக்கிறீர்கள்.

வெகுநாள் கழித்து வீடு திரும்பிக் கொண்டி ருந்த மாலுமி ஒருவன், ரயிலுக்காக ஒரு அறையில் காத்திருந்தான். அவனிடம் ஒரு கிளி இருந்தது. அந்த அறையில் ஒருவர் 'மேஜிக் ஷோ' காட்டிக் கொண்டிருந்தார். கதவோரம் அமர்ந்து இருந்த மாலுமி ஒவ்வொரு வித்தை முடிந்த பின்பும், "ஆஹா பிரமாதம், அடுத்து என்ன வித்தை காட் டுவார்?" என்று சொல்லிக் கொண்டிருந்தான். சிக ரெட் பிடித்துக் கொண்டிருந்த மாலுமி, அடிக்கட் டையை அறைக்கு வெளியே இருந்த ஒரு வாயுக் கிடங்கில் தன்னையறியாமல் தூக்கிப்போட்டான்.

அங்கே கொஞ்சம் வாயு கசிவு இருந்ததினால் பெரும் வெடிப்பு ஏற்பட்டு எல்லாம் நாசமாயிற்று. அரை மைல் தள்ளி ஒரு கூரை மேல் ஆடிப்போய் உட்கார்ந்து இருந்த கிளி, சொல்லிற்று "ஆஹா பிர மாதம், அடுத்து என்ன வித்தை காட்டுவார்?"

அறிவார்ந்த மனிதன் ஒரு கிளியைப் போன்றவர், தனக்குப் புரியாததைத் திரும்பத் திரும்பச் சொல் லிக் கொண்டிருப்பார். திரும்பத் திரும்ப ஏதோ ஒன்றைச் சொல்வதற்குக் காரணம் அதையே கேட்டுக் கொண்டிருந்ததினால்தான். அதைத் திரும்பத் திரும்ப அர்த்தமில்லாமல் சொல்லிக் கொண்டிருக்கிறார்.

ஒரு புத்தர் பேசும்போது அதில் பொருள் இருக் கிறது. ஒரு பௌத்த பண்டிதர் அதே வார்த்தை களைத் திரும்பச் சொல்லும்போது கிளிப்பிள்ளை போல் தோன்றுகிறது. முகமது குரானைச் சொல் லும்போது அதில் பெரும் அர்த்தம் இருந்தது. அது வார்த்தைகளினால் அல்ல, அது முகமதி னால்தான். முகமதின் ஜீவன் அந்த வார்த்தைக ளில் தெரிந்தது. அந்த வார்த்தைகள் சாதாரணமா னவை, எவரும் கற்றுக் கொள்ளமுடியும், எல்லோ ருக்கும் தெரியும். முகமத் அதிகமாகப் படித்தவர் அல்ல, உண்மையில் படித்தவரே அல்ல, கல்விய றிவு அற்றவர், ஒரு மாசற்ற மனிதர். அறிவு பற்றி எந்தக் கருத்தும் அவருக்கு கிடையாது. அவர் தன் மாசற்ற நிலையில் மிகவும் பணிவோடு இருந் தார். அவர் மலைமீது அமர்ந்து தியானம் செய்து கொண்டிருந்தபோது, மனமற்ற நிலையை அடைந் தார், ஞானம் கிடைக்கப்பெற்றார். மெய்யறிவு பூத் தது. கண்ணைத் திறந்து பார்த்தபோது இந்த

உலகம் மறைந்துபோய், வேறொன்று அவரின் ஜீவனுக்குள் மெய்யாகிக் கொண்டிருந்தது. அவர் மிகவும் பயந்து போனார். அவர் ஜீவனின் ஆழத்திற்குள் எங்கோ "சொல், சொல், அல்லாவின் பேரைச் சொல்" என்ற அசரீரி கேட்டது.

குரான் என்றால் சொல்லுதல் என்று பொருளாகும். தன் அந்தராத்மாவிலிருந்து முகமது தான் முதலில் கேட்டது சொல், சொல், இறைவனின் புகழைப் பாடு! என்பதையே. அவர் ஒரு புகழ் மிக்க பிரபஞ்சத்திற்குள் நுழைந்து கொண்டிருந்தார். வாழ்க்கை மற்றும் ஜீவனின் பெரும் சிறப்பிற்குள் நுழைந்து கொண்டிருந்தார். அவர் இதயமே நடனமாடிக் கொண்டிருந்தது. ஆனால் தான் படிக்காதவர் என்பதை அவர் அறிவார். அதனால், அவர் நான் படிக்காதவன், எனக்கு மொழி தெரியாது, நான் எப்படிச் சொல்வது, எப்படிப் படிப்பது, தொடர்புடைய விஷயங்களைப் பற்றி எப்படிப் பேசுவது? நான் அறியாதவன். உள்ளிருக்கும் குரல் தொடர்ந்தது. "சொல்". அவர் பயந்து போனார், அவருக்கு பெரும் காய்ச்சல் கண்டது.

வீட்டிற்குச் சென்றவர், தன் மனைவியிடம், தனக்குக் காய்ச்சல் இருப்பதாகச் சொன்னார். அவர் மனைவி: "போவதற்கு முன்னால் நன்றாகத்தானே இருந்தீர்கள்? என்ன நடந்தது? உங்களைச் சுற்றி ஏதோ புதிராய் இருக்கிறது. நீங்கள் பழைய மாதிரி இல்லை. நான் இதுவரை கண்டிராத ஆழம் உங்கள் கண்களில் தெரிகிறது. முகத்தில் ஒரு ஜோதி இருக்கிறது. ஏதோ ஒன்றினால் நீங்கள் கொளுந்துவிட்டு எரிகின்றீர்கள். என்ன நடந்தது? என்னிடம் சொல்லுங்கள். இது சாதாரணக் காய்ச்சல்

இல்லை! ஏதோ உண்மையைக் கண்டு பிடித்துள் ளீர்கள்" என்றார்.

முகமது ஒத்துக் கொண்டார், "ஆம் என்னவோ நடந்தது" உண்மையில் அவர் சொன்னது அழகா னது. "ஒன்று எனக்குப் பைத்தியம் பிடித்திருக்க வேண்டும் அல்லது நான் ஒரு கவிஞனாகியி ருக்க வேண்டும்" ஒன்று பைத்தியம் பிடித்திருக்க வேண்டும் அல்லது கவிஞன் ஆகியிருக்க வேண் டும்... உண்மையில் இரண்டுமே. ஒரே பொருளு டையவை. பைத்தியமானால் ஒழிய உங்களால் ஒரு கவிஞனாக முடியாது. மேலும் கவிஞன் ஆகக் கூடிய திறன் இல்லை என்றால் உங்களால் பைத்தி யக்காரனாக முடியாது.

"ஆனால் மேலும் விவரங்கள் கேட்காதே - நடந்ததின் காரணமாக ஞாபகப்படுத்திக் கொள்ள எனக்கு அவகாசம் தேவை. 'பிரம்மாண்டம்' நிகழ்ந் தது! அது அடக்கி வைக்க முடியாதது. அதை என் னால் புரிந்து கொள்ள முடியவில்லை. நான் பண் டிதன் இல்லை, துறவி இல்லை. எந்த வகையி லும் அறிவு சார்ந்தவனல்ல. எப்போதும் படித்தது இல்லை, பள்ளி, கல்லூரிக்குச் சென்றது இல்லை. நான் எளிமையான மனிதன், என்னை அறிவிலி என்பார்கள். இது ஏன் எனக்கு நடக்க வேண்டும்?"

ஆனால் எப்போதுமே மாசற்றவர்களுக்குத்தான் இது நடக்கும். எப்போதுமே பணிவார்ந்தவர்க ளுக்கு மட்டுமே இது நடந்திருக்கிறது. அறிவார்ந் தவர்களுக்கு நடந்ததேயில்லை. நான் மறுபடியும் சொல்கிறேன், பாவப்பட்டவர்கள் கடவுளை அறிந் ததாகத் தெரிகிறது, பண்டிதர்கள், அறிவாளிகள்

மற்றும் இறைமை நூலார்கள் அறிந்து கொண்ட தாய் தெரியவில்லை.

அப்படியென்றால் மிகப்பெரிய பாவம் என்பது அறிவின் பாவமாகும். மேலும், அறிவு என்று அழைக்கப்படும் பாவம் எதை உள்ளடக்கியுள் ளது? அது கடவுளை ஒரு உருவகமாகக் குறைத்து விட்டது, கடவுளை ஒரு குறியீடாக மாற்றிவிட்டது, ஒரு அடையாளமாக ஒரு உருவச்சிலையெனக் குறைத்துவிட்டது. சிலை கல்லாக, மரமாக அல் லது வார்த்தைகளாகக்கூட இருக்கலாம், அது ஒரு பொருட்டல்ல, ஆனால் கடவுளை எப்படி வேண் டுமானாலும் அடையாளப்படுத்தலாம் என்று நீங் கள் நினைத்தீர்களானால் நீங்கள் ஒரு உருவச் சிலையை உருவாக்குகிறீர்கள். கடவுள் அனைத் துமாவார். அனைத்தையும் குறிப்பதற்கு ஒரு வழி யுமில்லை, காரணம் அதைத் தவிர வேறு எதுவு மில்லை. நான் கடவுள், நீங்கள் கடவுள், மரங்க ளும் பாறைகளும் கடவுளே. கடவுள் மட்டுமே உள தாய் இருக்கிறார். உளதாய் இருக்கும் தன்மையும், இறைத்தன்மையும் வேறல்ல. ஒரே விஷயத்தை வெவ்வேறு விதமாய் கூறுவது. உண்மையில் கட வுள் உள்ளார் என்று சொல்வதே கூறியது கூறலா கும். ஏனென்றால் கடவுள் என்பதற்குப் பொருள் 'உள்ளது' என்றாகும். மேஜை உள்ளது, மரம் உள் ளது, வீடு உள்ளது. மனிதன் இருக்கிறான் என்று சொல்லலாம், கடவுள் உள்ளார் என்பது சரியல்ல. காரணம் இன்று மரம் இருக்கும், நாளை இருக் காது, அந்த 'இருப்பு' தற்காலிகமானது. மலைகள் கூட ஒரு நாள் மறைந்துவிடும். ஆனால் கடவுள் எப்போதும் உளதாய் இருப்பார். கடவுள் உளதாய்

இல்லை என்பதே முடியாத ஒன்று. ஆக கடவுள் பரிசுத்தமான உளதாம் தன்மையாவார்.

இந்த 'முழுநிறைவை' வேறு எந்த வகையிலும் குறிப்பிட முடியாது 'முழுமையைத் தவிர. முழுமைக்கான ஒரே உருவகம் முழுமை மட்டும்தான், அதற்கான ஒரே குறியீடு முழுமைதான். முழுமை நிறைவை உருவ முழு நிறைவு மட்டுமே, வேறெந்த உருவமும் உருவாக்க வழியே இல்லை. எல்லா உருவங்களும் சிறியதாய் இருக்கும், பொய்யாய் இருக்கும், அவை போதாது. அவை ஏதோ ஒன்றைச் சொல்லும், ஆனால் முழுவதையும் சொல்லாது. மேலும் எப்போதெல்லாம் உண்மை பகுதியளவில் இருக்கிறதோ அது பொய்யைவிட ஆபத்தானது.

மெய்யுணர்ந்தவர் எவருமே கடவுளை வர்ணிப்பதில் மௌனமாக இருந்திருக்கின்றனர். அவர்கள் பத்தாயிரம் வேறு விஷயங்கள் கூறுவர், உங்களை அந்தப் பயணம் மேற்கொள்ள வசீகரிப்பர், தூண்டிவிடுவர். உங்களுக்குள் உண்மையை நாடுவதற்கு பெரும் வேட்கையை, தாகத்தை ஏற்படுத்துவர், ஆனால் உண்மை என்னவென்று விவரிக்க மாட்டார். அது ருசிக்கப்பட வேண்டும், பார்க்கப்பட வேண்டும், வாழ்ந்து பார்க்கப்பட வேண்டும்.

சமயம் என்பது வாழ்க்கையிலிருந்து தனித்து இருக்க முடியாது. வாழ்க்கை சமயப்பற்றுடனோ, சமயச் சார்பில்லாமலோ இருக்க முடியும், ஆனால் சமயம் வாழ்க்கையிலிருந்து வேறுபட்டு இருக்க முடியாது. "நான் தினமும் ஒரு மணி நேரம் சமயப் பற்றோடு இருப்பேன், நான் கோவிலுக்கு அல்லது

மசூதிக்குப்போய் பிரார்த்தனை செய்வேன் அல்லது ஒவ்வொரு ஞாயிற்றுக் கிழமையும் சர்ச்சிற்கு சென்று பிரார்த்தனை செய்வேன்" என்றெல்லாம் நீங்கள் சொல்ல முடியாது. சமயம் என்பது 'ஞாயிறு சமயமாக' இருக்க முடியாது. உங்கள் முழு வாழ்க்கையுமே ஒரு வகையான சமயத்தன்மையினால் ஊடுருவப்பட்டு இருக்க வேண்டும். அந்த நறுமணம் எப்போதும் உங்களைச் சூழ்ந்திருக்க வேண்டும், தூங்கிக் கொண்டிருக்கும்போதுகூட ஒரு சமயப்பற்றாளரின் பண்பு சமயப்பற்று இல்லாதவரிடம் இருந்து வேறுபடுகிறது. ஒரு சமயப்பற்றுடையவர் தூங்கிக் கொண்டிருக்கும் அறைக்குள் நீங்கள் நுழைந்தால் ஒரு முற்றிலும் வேறுபட்ட அதிர்வுகளை உணர்வீர்கள். உண்மையில் அவர் தூக்கத்தில் நெகிழ்வதில்லை, அவர் கடவுளுக்குள் நெகிழ்ந்து போகிறார். அவர் நகரும்போது கடவுளுக்குள் போகிறார், உட்காரும்போது கடவுளுக்குள் உட்காருகிறார், தூங்கும்போது கடவுளுக்குள் தூங்குகிறார். அவர் கடவுளை உண்கிறார், கடவுளைக் குடிக்கின்றார். எல்லாமே கடவுளென்றால், எல்லாமே கடவுட்தன்மையோடு இருக்க வேண்டும்.

கடவுள் எதன் மூலமாகவும் குறிப்பிடப்படக் கூடாது என்று சூஃபிக்கள் வலியுறுத்துகின்றனர். உருவச்சிலை இருக்கக்கூடாது. சித்திரங்கள் இருக்கக் கூடாது. இவையெல்லாம் உலகில் பொய்யான சமயங்களை உருவாக்கிவிட்டன.

இந்தக் கதை

*ஒரு காலத்தில் வன்முறையுடைய அறிவிலி யான, உருவ வழிபாடு செய்யும் ஒரு அரசன் இருந்தான்.*

*ஒரு நாள் அவன், தன் சொந்த வழிபாட் டுச் சிலையின் மூலமாக தனக்கு வாழ்க்கை யில் சில அனுகூலங்கள் கிடைத்தால், தன் அரண்மனையை கடந்து செல்லும் முதல் மூன்று பேரை பிடித்து*

*அவர்களை தன் உருவச் சிலை வழிபாட் டிற்கு உடன்பட வைப்பேன் என்று சூளுரைத் தான்.*

வன்முறையற்ற, அறிவிலியல்லாத, உருவ வழி பாடு செய்யாத அரசனைக் காண்பது அரிது. வன் முறையற்று ஒரு மனிதன் இருந்தான் என்றால், அவனால் அரசனாக முடியாது. எதேச்சையாக அப் படிப்பட்டவன் ஒரு அரசனுக்குப் பிறந்திருந்தால் கூட, அவன் அதைத் துறந்துவிடுவான். புத்தர், மஹாவீரர் போன்றோர் துறந்து விட்டனர். வன்மு றையாளன் மட்டுமே அரசனாக முடியும். அதிகாரம் அனைத்துமே வன்முறைதான். நினைவிற்கொள் ளுங்கள், நீங்கள் ஆன்மீக சக்திக்கு ஆசைப்பட்டா லும் அதுவும் வன்முறைதான். அதிகாரத்திற்கான எந்த விதமான விருப்பமும் வன்முறைதான். அதி காரம் என்றாலே மற்றவர்மீது ஏதோ ஒரு வகையில் அதிகாரம் செலுத்துவதாகும். அது அரசியலாக இருக்கலாம், பணம் அல்லது சமயம் சார்ந்ததாக இருக்கலாம் அல்லது ஆன்மீகமாகக் கூட இருக்க லாம்.

பல மனிதர்கள் சமயம் என்ற பெயரில் தங்களுக்குள் இருக்கும் அரசியல் அல்லது அதிகார ஆசைகளை மறைக்கின்றனர். அவர்கள் குண்டலினி சக்தியைத் தேடுகின்றனர், அல்லது எப்படிக் காற்றில் மிதப்பது போன்ற சிறு பிள்ளைத்தனமான, முட்டாள்தனமான ஆசைகளைக் கொண்டுள்ளனர். இவை எல்லாம் உங்கள் வாழ்க்கையை மாற்றியமைக்காது. உங்களால் வானில் பறக்க முடியுமானால்கூட எதுவும் மாறாது. எத்தனையோ பறவைகள் வானில் பறக்கின்றன, அவை ஒன்றும் துறவிகள் அல்ல, ஆன்மீகம் உடையவை அல்ல. ஆழ்கடலில் ஒரு மீனைப்போல் வாழ்ந்தால் நீங்கள் ஆன்மீகம் பெறப்போவதில்லை. மீன்கள் ஒன்றும் ஆன்மீகவாதிகள் அல்ல. உங்கள் முதுகெலும்பு பெரும் சக்தியை அதிர்வுகளாய் வெளிப்படுத்தினாலும் கூட நீங்கள் ஆன்மீக வாதியாகப் போவதில்லை. சக்திக்கும் ஆன்மீகத்திற்கும் எந்தத் தொடர்புமில்லை. உங்களுக்கு, மந்திர சக்திகள் கிடைத்து மந்திர வாதியாய் நடந்து கொண்டாலும்கூட அது உங்களை ஆன்மீகவாதியாக்காது. வெறும் முட்டாள்தனம். ஒரு மூட மனம் இதற்குப் பின் உள்ளது என்பதற்கான தெளிவான குறிப்பு இது.

எப்போதெல்லாம் ஒரு மனிதன் மாயமந்திரங்கள் செய்ய முயற்சிக்கின்றானோ அவன் ஒரு அரசியல் வாதி என்று நன்றாகப் புரிந்துகொள்ளுங்கள், சமயவாதியாக இருக்க முடியாது. ஒரு ஆன்மீகவாதி இருந்த இடத்தில் அற்புதங்கள் நடக்காது என்று நான் சொல்லவில்லை, அவை தானாகவே நடக்கும், செய்யப்பட மாட்டாது. உண்மையான சமயவாதிக்கு இதில் ஆர்வம் இல்லை, ஒரு ஆன்மீகவாதி

வித்தை காட்டுபவன் அல்ல. ஆன்மீகவாதி மற்றவர்களைத் தன்பால் ஈர்க்க விரும்புபவர் அல்ல: "பார், என்னால் காற்றிலிருந்து விபூதி கொண்டுவர முடியும், மந்திரத்தால் சுவிஸ் கைகடிகாரம் வரவழைக்க முடியும்" இந்த மனிதர் ஒரு அகங்காரப் பயணத்தை, ஒரு அரசியல் பயணத்தை மேற்கொண்டுள்ளார். இவர்மேல் ஆர்வமுள்ளவர்களும் ஏதோ ஒரு வகையில் அரசியல் ஆர்வம் உள்ளவர்கள் தாம். இவர்களுக்கும் அதிகாரம் தேவைப்படுகிறது, ஆகையால் இப்பேர்ப்பட்ட மனிதரைச் சுற்றி நிற்பார்கள். ஆயிரமாயிரம் பேர் இதுபோன்ற மனிதர்களைச் சுற்றி இருப்பார்கள். என்றாவது ஒரு நாள் நாமும் இந்த மந்திர தந்திரங்களைக் கற்றுக்கொள்ள மாட்டோமா, அற்புதங்களை நிகழ்த்த மாட்டோமா என்ற நம்பிக்கைதான்.

ஆன்மீகவாதிகளைச் சுற்றி அற்புதங்கள் நடக்கத்தான் செய்கின்றன. அந்த அற்புதங்கள் எல்லாம் கண்ணுக்கு தெரிவது இல்லை, அவை சக்திகளின் உருமாற்றம் பற்றியவை. ஆனால் அவை எப்போதுமே நிகழ்த்தப்படுவதில்லை. எப்போதெல்லாம் ஒரு மனிதர் ஏதோ செய்கின்றார் என்றால், அவர் ஒரு மந்திரவாதி, ஒரு அரசியல்வாதி. ஆனால் எப்போதெல்லாம் ஒரு மனிதரைச் சுற்றி ஏதோ ஒன்று தானாகவே நடக்கின்றதோ, அவரை சுற்றி உருவாக்கப்பட்ட வெட்டவெளியில், அந்த வெறுமையில் அற்புதங்கள் நடக்கின்றன, மனிதர்கள் உருமாற்றப்படுகின்றனர். மனிதர்கள் உயிருருவின் புதிய எல்லைகளுக்கு எடுத்துச் செல்லப்படுகின்றனர். இது வேறு விஷயம், ஆனால் எல்லா அர

சியல் தேடல்களும், அதிகாரத் தேடல்களும் அசிங்கமானது. வன்முறையுடையது.

*உருவ வழிபாடு செய்யும் ஒரு அறிவிலியான, வன்முறையுடைய அரசன் ஒருவன் இருந்தான், ஒருநாள் அவன் தன் சொந்த உருவச் சிலையின் மூலமாக தன் வாழ்க்கையில் சில அனுகூலங்கள் கிடைக்கப் பெற்றால்....*

நினைவிற் கொள்ளுங்கள் எப்போதெல்லாம் நீங்கள் ஒரு உருவச்சிலையை வழிபடச் செல்லும் போதும் நீங்கள் கடவுளைப் பற்றி அக்கறை கொள்வதில்லை, உங்கள் கவலை எல்லாம் உங்கள் வாழ்க்கையில் சில அனுகூலங்கள் கிடைக்கவேண்டும் என்பதே. உங்கள் பிரார்த்தனைகள் எல்லாம் உலகாயதமானவை, நீங்கள் எதையோ வேண்டுகிறீர்கள். உண்மையான பிரார்த்தனை எதையும் வேண்டுவதில்லை. மாறாக உண்மையான பிரார்த்தனை இறைவனிடம் எல்லாவற்றையும் கொட்டித் தீர்க்கின்றது, எதையும் கேட்பதில்லை. உண்மையான வழிபாட்டாளர் கடவுளிடம் தன் நெஞ்சின் ஆழத்திலிருந்து அழுகின்றார். "என்னை ஏற்றுக் கொள்ளுங்கள், நான் தகுதியானவன் அல்ல, ஆனாலும் என்னை ஏற்றுக் கொள்ளுங்கள். என்னிடமிருந்து என்னை எடுத்துக் கொள்ளுங்கள், என்னை அழித்துவிடுங்கள், என்னை நிர்மூலமாக்கி விடுங்கள். அப்படிப் பட்டவர் இறைவனிடம், "எனக்குப் பதவி கொடு, பணம் கொடு, அதைக்கொடு, இதைக் கொடு என்று கேட்பதில்லை" உண்மையான சமயப்பற்றாளர் கொடுக்கத்தான் போகிறார், கேட்பதற்கல்ல. உங்கள் பிரார்த்தனையின் பண்பை இது

தான் முடிவு செய்யும், உங்கள் பிரார்த்தனையில் எங்கோ வெளிப்படையாகவோ, மறைவாகவோ ஏதோ ஒன்றிற்கான ஆசை இருக்குமானால் அது சமய சார்புடைய, அல்லது ஆன்மீகமான பிரார்த் தனை இல்லை.

மேலும், இந்த வகையான பிரார்த்தனைகளி னால் தான் மனிதன் பொய்யான கடவுள்களை உருவாக்க வேண்டியிருந்தது. பொய்யான மனம் பொய்யான கடவுள்களை உருவாக்குகிறது. பொய் யான மனதிற்கு பொய்யான கடவுள்கள் தேவை.

இப்போது, ... "தன் வாழ்க்கையில் தன் சொந்த உருவச்சிலையின் மூலமாக சில அனுகூலங்கள் கிடைக்குமானால்... கடவுள் என்பது தனி ஆளைச் சுட்டாதது, அது பண்பு குறித்தது. உருவச்சிலை கள் தனிப்பட்டது. ஹிந்துக்கள் அவர்களுக்கென வைத்திருக்கிறார்கள், கிறிஸ்துவர்களும், பௌத் தர்களும் தங்களுக்கென தனியாக வைத்திருக் கின்றனர். அதுமட்டுமல்ல, உலகாயத மனிதன் ஒவ்வொருவனும் தான் முற்றிலுமாக உடைமை யாக்கிக் கொள்ளும் விதமாக கடவுளைப் பற்றிய ஒரு கருத்து, ஒரு உருவம் வைத்துள்ளான். உல காயத மனம் உடைமை சார்ந்தது.

* "ஒரு பௌத்த பெண் பிட்சு தனக்கென ஒரு தங்கத்தால் ஆன புத்தர் சிலையை வைத்திருந் தார். அவருக்கு பொதுவில் உள்ள புத்தர் சிலை களை வழிபடுவதில் வெறுப்பு இருந்தது. ஒரு கோயிலில் புத்தர் பொதுவானவர். ஆயிரக்கணக் கானோர் அவரை வழிபடுவர். இந்தப் பெண்ணிற்கு தனக்கென ஒரு புத்தரை உடைமையாக வைத்துக்

கொள்ள விருப்பம். அது ஒரு சிறிய புத்தர் சிலை, அவர் அதை மட்டுமே வழிபடுவார்.

ஒருமுறை அவர் ஒரு கோயிலில் தங்கியிருந்தார். அதில் ஆயிரக்கணக்கான புத்தர் சிலைகள் இருந்தன. மேலும் அங்கே பேருருவம் படைத்த புத்தர் சிலைகளும் இருந்தன! அந்த மலையே புத்தர் சிலையாகச் செதுக்கப்பட்டிருந்தது. ஆனால் அவர் தன் சிறிய புத்தரை மட்டுமே வணங்கினார்.

அவர் மனதில் ஒரு யோசனை வந்தது. அவர் ஊதுவத்தி ஏற்றி வைத்தார். நறுமணப் புகையை உங்களால் சொந்தம் கொண்டாட முடியாது அல்லவா? அதை ஏற்றி வைத்தால் நறுமணம் பரவி எல்லா புத்தர் சிலைகளுக்கும் போகும். ஆகையால் இவர் ஒரு மூங்கில் குச்சியால் குழாய்போல் அமைத்து தன் சொந்த புத்தர் சிலையின் மூக்கில் வைத்தார், இதனால் புகை இவர் புத்தருக்கு மட்டுமே போகும் என்ற எண்ணம் பிட்சுவிற்கு.

சிரிக்காதீர்கள், இதுதான் உலகம் முழுவதும் நடந்து கொண்டிருக்கிறது. இது மனிதனின் அடி முட்டாள்தனம். இது மிகவும் சாதாரணமானது, உலகமயமானது.

"ஒரு வழி கண்டுபிடித்துவிட்டபடியால் பிட்சு மகிழ்ச்சியாக இருந்தார். இப்போது வேறு எந்த புத்தரும் தன் வழிபாட்டைப் பகிர்ந்து கொள்ள முடியாதல்லவா? காலை எழுந்தவுடன் தன் புத்தருக்குப் பிரார்த்தனை செய்யத் தொடங்கினார், அந்த மூங்கில் குழாயை எடுத்தவுடன் அழத் தொடங்கி விட்டார், ஏனென்றால் புத்தரின் முகம் கருப்பாகி விட்டது. இந்த மூடத்தனத்தையெல்லாம் பார்த்துக்

கொண்டிருந்த அந்த கோயிலின் தலைமை ஜென் குரு ஆரவாரமாகச் சிரித்தார். அவர் அந்த பிட்சுவிடம், "பார், இப்போது நீ மட்டுமல்லாமல் உன் புத்தரையும் மூழ்கடித்து விட்டாய். உன்னோடு சேர்ந்து உன் புத்தரும் மூழ்கிவிட்டார். உன் புத்தரை நீ அழித்துவிட்டாய்" என்றார்.

நீங்கள் உடைமையாக்கிக் கொண்ட கணமே நீங்கள் அழிந்துவிடுகிறீர்கள். உடைமையாக்கிக் கொள்ளும் தன்மையே அழிவுண்டாக்கக் கூடியது. கடவுள் தனிமனிதருக்கு உரியவராக இருக்க முடியாது. உண்மையில் கடவுளை அறிய நீங்கள் ஒரு தனி மனிதராக இல்லாமல் மறைந்துபோக வேண்டும். நீங்கள் நேர் எதிரானதைச் செய்கின்றீர்கள். தனிமனிதரைச் சுட்டாத பண்புகளுக்குக் கடவுளைத் தனி மனிதருக்கு உரியவராக்கி, கடவுளைச் சுருக்கி விடுகின்றீர்கள். நீங்கள் கரைந்துபோய் தனிமனிதத் தன்மையை விடுவதற்குப் பதிலாக கடவுளை உங்கள் நிலைக்கு இறக்கி விடுகின்றீர்கள். இரண்டு வழிகள் உள்ளன. ஒன்று கடவுளைப் போல் தனிமனிதத் தன்மையற்று ஆகிவிட வேண்டும். அப்போது ஒரு சந்திப்பு ஏற்படும். வேறு வழி என்னவென்றால், கடவுளை ஒரு தனிமனித அளவிற்கு குறைப்பது, அவரைப் போன்ற ஒரு உருவச் சிலை செய்வது, அவருக்கு நாம ரூபம் கொடுப்பது. அப்படியானால் அவர் உங்களைப் போன்று இருப்பார், அவரோடு ஒரு உரையாடல் சாத்தியமாகிறது.

உங்கள் தனித்தன்மை என்பது பொய்யானது. உண்மையில் நீங்கள் ஒரு 'தனி மனிதர்' அல்ல. நீங்கள் ஒரு தனிமனிதர் என்பது ஒரு பொய்த் தோற்றம்தான். மேலும் மேலும் உங்களுக்குள்

ஆழமாகச் சென்றீர்கள் என்றால், மேலும் அதி கமாக பிரபஞ்சத்தைக் காண்பீர்கள். ஒவ்வொரு அலையும் சமுத்திரம்தான் என்பதைப் போல நீங் கள்தான் முழுப் பிரபஞ்சமும். கடல் அலையை ஆழமாகத் தோண்டினால் சமுத்திரத்தைக் காண் பீர்கள், அலையை அல்ல. துல்லியமாக இதே போன்றுதான் ஒவ்வொரு மனிதனும், ஒரு மனிதன் ஒரு அலை மட்டுமே. கடவுள் உங்களுக்குள் ஒரு குறிப்பிட்ட வடிவில் அசைந்து கொண்டிருக்கிறார், எனக்குள் வேறு ஒரு வகையில், மற்றொரு வகை யில் மற்ற வடிவங்களில் அசைந்து கொண்டிருக் கிறார். எல்லா வடிவங்களும் அவருடையதே. வடி வைத் தாண்டிச் செல்லுங்கள், ஆழமாகச் செல் லுங்கள், திரையை விலக்குங்கள், அங்கே தனி மனிதருக்கல்லாத இயல் உலகைக் காண்பீர்கள். உளதாம் தன்மையைக் காண்பீர்கள்.

இறைவனுடன் சரியான வகையில் உரையாடு வதற்கு உங்கள் தனித்தன்மையை, ஆளுமையை விட்டுவிடுங்கள். தவறான வழி என்னவென்றால், உங்கள் தனித்தன்மையை விட்டுக் கொடுக்கா தது மட்டுமல்லாமல், கடவுளைச் சுற்றி ஒரு தனித் தன்மையை உருவாக்குவதாகும். இதுதான் உருவ வழிபாடு. கடவுளை ராமராக, கிருஷ்ணராக, புத் தராக அல்லது ஏசு கிறிஸ்துவாக சித்தரிப்பது, அதன்பின் ராமரோடு, கிருஷ்ணரோடு ஏசுவோடு தொடர்புபடுத்திக் கொள்வது. இப்போது நீங்கள் ஒரு கனவை உருவாக்குகிறீர்கள். இது உங் கள் வேலைதான், இதற்கும் கடவுளுக்கும் எந்தத் தொடர்பும் இல்லை. கடவுளின் பெயரால் நடப் பதற்கும் கடவுளுக்கும் எந்தத் தொடர்புமில்லை.

அதேபோல் சமயத்தின் பெயரால் நடப்பதற்கும் சமயத்திற்கும் எந்தத் தொடர்பும் இல்லை. ஒரே ஒரு சமயம்தான் இருக்கிறது, அந்த சமயமானது, நீங்கள் ஒரு தனிமனிதனாய் மறைந்துபோய், அதன் விளைவால் அந்தத் தனிமனிதத் தன்மையற்ற, சக்தி, ஆற்றல், தனிமனிதப் பண்பற்ற உளதாம் தன்மையுடன் தொடர்பு ஏற்படுத்திக் கொண்டு அதனுள் ஒன்றென கலந்திடும் கலைதான் உண்மையான சமயமாகும்.

*ஒரு நாள் அவன், வாழ்க்கையில் சில அனுகூலங்கள்*

*தன் சொந்த வழிபாட்டுச் சிலையின்*

*மூலமாகத் தனக்குக் கிடைத்தால், தன் அரண்மனையை கடந்து செல்லும் முதல் மூன்று பேரை பிடித்து*

*அவர்களைத் தன் உருவச்சிலை வழிபாட்டிற்கு உடன்பட வைப்பேன் என்று சூளுரைத்தான்.*

இதுவும் புரிந்துகொள்ள வேண்டிய ஒன்று. அவன் ஏதோ ஒரு அனுகூலத்தை நாடுகிறான், அது நிறைவேறும் பட்சத்தில், அவன் மூன்று அப்பாவிகளை இந்த ஏற்பாட்டிற்குச் சிறிதும் தொடர்பில்லாதவர்களை பிடித்து, அவர்களைத் தன் உருவச் சிலைக்கு வழிபாடு செய்ய நிர்ப்பந்திக்கப் போகிறான். எப்போதும் இது நடந்திருக்கிறது, பல வகைகளில் நடந்திருக்கின்றது.

இந்தச் சூஃபிக் கதைகள் பல விஷயங்களைச் சுட்டிக் காட்டும் விதமாய் உள்ளன.

உதாரணமாக, இந்தியாவிலும் வேறு பல நாடுகளிலும் லட்சக்கணக்கான விலங்குகள் கடவுளுக்காக பலியிடப்படுகின்றன. இப்போது, இந்த மிருகங்களுக்கும் உங்கள் கடவுளுக்கும் என்ன தொடர்பு இருக்கிறது? உங்கள் ஆசை நிறைவேறி விட்டதால், ஒரு மிருகத்தை பலி கொடுக்கின் றீர்கள். அந்த மிருகம் ஆசைப்படவில்லை, அது பிரார்த்தனை செய்யவில்லை, எதையும் சொல்லவும் இல்லை. அந்த மிருகத்திற்கும் இதற்கும் சம்பந்தமே இல்லை. உங்களுக்கு பலி கொடுக்க விருப்பம் என்றால், உங்களையே பலி கொடுங்கள். ஒரு சடங்கு நடந்து கொண்டிருக்கும் இடத்தில் பெரும் கூட்டம் கூடியிருந்தது. அவ்வழியே வந்த புத்தர் "என்ன நடக்கிறது?" என்று கேட்டார். ஏதோ ஒன்று வேண்டிப் பிரார்த்தனை செய்த மனிதன் ஒருவன், அது நிறைவேறி விட்டதால் ஒரு காளை மாட்டை பலியிடப்போகிறான் என்று சொன்னார்கள். அம் மனிதன் ஒரு காளையைக் கொல்லப் போகிறான், அது ஒரு மதச்சடங்கு.

உடனே புத்தர், "அந்த மாட்டிற்கு இதில் என்ன இருக்கிறது? கடவுள் தனக்கு சாதகமாய் ஏதோ கொடுத்திருக்கிறார் என்று அந்த மனிதன் நினைத்தால், அவர் தன்னையல்லவா பலியிட்டுக் கொள்ள வேண்டும்?" என்றார்.

புத்தர் கூட்டத்திற்குள் நுழைந்து அந்த மனிதனிடம், "என்ன செய்கிறாய்? ஏன் இந்த அப்பாவிக் காளையிடம் வன்முறையுடன் நடந்து கொள்கிறாய்? அது ஏதும் செய்யவில்லையே?" என்றார்.

அந்த மனிதர் ஒரு பிராமணப் பண்டிதர், சாஸ் திரங்கள் அறிந்தவர். அவர் சாஸ்திரங்களை மேற் கோள் காட்டி "உங்களுக்குத் தெரியாது, நான் வன் முறையுடன் நடக்கவில்லை, சாஸ்திரங்கள் கூறு கின்றன, வேதங்கள் சொல்கின்றன, ஒரு மதச் சடங்கில் ஒரு விலங்கை உயிர்பலி கொடுத்தால், அதன் ஆன்மா சொர்க்கத்திற்குப் போகும். நான் அதனிடம் வன்முறை காட்டவில்லை, அது சொர்க் கத்திற்குப் போகும்" என்று விளக்கம் தந்தார் பண் டிதர்.

புத்தர் சொன்னார், "நீ ஏன் உன் அப்பா அல்லது அம்மா அல்லது உன்னையே பலியிடக் கூடாது? ஏன் சொர்க்கத்திற்குப் போகும் வாய்ப்பை தவற விடுகிறாய். ஒருவேளை காளை மாட்டிற்கு சொர்க் கத்திற்கு போகும் விருப்பம் இல்லாமல் கூட இருக் கலாம். சொர்க்கம் நிச்சயம் என்றால் உன் அப் பாவை அல்லது அம்மாவைக் கொல், உன்னையே கொல்வது மிகச் சிறந்ததாக இருக்கும்" என்றார் புத்தர்.

அந்தப் பிராமணர் புத்தர் சொல்வதை கூர்ந்து கேட்டார். புத்தரின் சமீபம் அவருக்கு தெளிவு ஏற் படுத்தியது. தன் ஆயுதத்தை கீழே போட்டு அந் தச் சடங்கை விட்டொழித்தார். அவர் புத்தரிடம், "நான் வாழ்நாள் எல்லாம் இதைப் போன்ற விஷ யங்களை செய்து கொண்டிருந்தேன், இப்போது நீங்கள் சொல்லுங்கள் நான் எப்படி சமயப் பற்றோடு இருப்பது? எனக்கு அதிர்ச்சி வைத்தியம் அளித்து விட்டீர்கள், ஆனால் என்னை விழிக்கவும் வைத்து விட்டீர்கள்" என்றார்.

நீங்கள் உலகம் முழுவதும் தேடினால் இது போன்ற முட்டாள்தனமான கருத்துக்களோடு ஆயிரக்கணக்கான சமயங்கள் இருந்திருக்கின் றன. கடவுள் உங்களுக்கு சகாயம் வழங்கி விட்டார், அதற்குப் பிரதிபலனாக நீங்கள் மூன்று அப்பாவி களை உருவ வழிபாட்டிற்கு நிர்ப்பந்தம் செய்கின் றீர்கள்.

*நிச்சயமாக அரசனின் வேண்டுகோள் நிறை வேறியது...*

நிறைவேறும் ஆசைகள் எல்லாமே தற்செயலா னதுதான். நீங்கள் கடவுளிடம் வேண்டுகோள் விடுத்துக் கொண்டே இருந்தீர்கள் என்றால், சில நிறைவேறும். அது நிறைவேறியதில் கடவுளுக்குத் தொடர்பு இல்லை. அதேபோல் சில நிறைவேறாது. நிறைவேறாவிட்டால் வழிபடுபவர் நினைப்பது என் னவென்றால், "நான் சரியாக பிரார்த்தனை செய்ய வில்லை, சடங்குகள் சரியாக நடத்தப்படவில்லை. சாஸ்திரங்கள் சரியான முறையில் பின்பற்றப்ப டவில்லை. மந்திரங்கள் சரியாக உச்சரிக்கப்பட வில்லை. கோரிக்கை நிறைவேறவில்லையென் றால், ஏதோ தவறு இருக்கிறது. கடவுள் எப்போதும் எனக்கு அனுகூலமாய் இருந்துள்ளார். என் நன்றி யைக் கூற நான் ஏதாவது கொடுக்க வேண்டும்".

உங்கள் விருப்பங்களுக்கும் கடவுளுக்கும் ஒரு தொடர்பும் இல்லை. உண்மையில் நீங்கள் விருப் பமற்ற நிலை அடைந்தால் தான் இறைவனை அனுபவிக்க முடியும். கடவுள் என்பதை ஒரு விருப் பங்கள் அற்ற உணர்வு நிலையில்தான் அறிய முடி யும். அப்படிப்பட்ட உணர்வுநிலைதான் தெய்வீகத்

தன்மை அடையும். நிறைவேறிய, நிறைவேறாத
விருப்பங்கள் எல்லாமே உலகாயதமானவை. இது
உங்கள் விளையாட்டு. இப்படித்தான் உலகம் முழு
வதும் நடந்து கொண்டிருக்கிறது.

நீங்கள் ஒரு துறவியிடம் போகிறீர்கள், உங்
கள் விருப்பம் நிறைவேறுகிறது. நீங்கள் மறுபடியும்
போகிறீர்கள், நிறைவேறவில்லை என்றால் வேறு
ஒருவரிடம் செல்கிறீர்கள். என்றோ ஒரு நாள்,
எங்காவது அந்தத் தற்செயல் இணைவு ஏற்படு
கிறது, உங்கள் விருப்பம் நடந்தேறுகிறது. அதன்
பிறகு அந்தத் துறவி உங்களுக்குக் கடவுளாகிறார்,
ஏனென்றால் உங்கள் விருப்பம் அங்கே நிறைவேறி
விட்டது. முயன்று பாருங்கள். இது வெறும் சூதாட்
டம்தான். ஒரு நாணயத்தைச் சுண்டிவிடும்போது
பூவோ அல்லது தலையோ விழுவதற்கான சாத்தி
யம் ஐம்பது சதவீதம் என்று சொல்லலாம். லட்சம்
முறை சுண்டி விட்டால் இலக்கிற்கு அருகில் வரு
வது மேலும் சாத்தியமாகிறது. ஆனால் அது வெறும்
தற்செயல் நிகழ்வுதான். ஆனால் மக்கள் பெரிதும்
தவறாகப் பயன்படுத்தப்படுகின்றனர். இதைப்பற்றி
எச்சரிக்கையாக இருங்கள்.

*அப்படியே அரசனின் அவா நிறைவேறியது,
உடனேயே தன் வீரர்களை அனுப்பி,*

*முதலில் தென்படும் மூன்று நபர்களைக்
கொண்டுவரச் சொன்னான்.*

*உள்ளபடியே அந்த மூவரில் ஒருவர் பண்டி
தர், அடுத்தவர் ஒரு சயிது (இறைதூதர் முக
மதின் வழிவந்தவர்) மூன்றாமவர் ஒரு வேசி.*

இந்த மூன்று பேர், இந்த மூன்று வகையான வர்கள் பற்றி சூஃபிக்கள் நிறையச் சொல்கிறார் கள். முதலாமவர் படிப்பாளி வகை, பண்டிதர். அறிவு சார்ந்தவர், இரண்டாமவர் நன்நெறி சார்ந் தவர். பக்தியுடையவர். மூன்றாவது பாபம் செய்த வர் - வேசி. இந்தக் கதையை ஆழமாகப் புரிந்து கொள்ள முயற்சி செய்யுங்கள். இதில் ஆழமான செய்தி உள்ளது.

*மூவரையும் சிலைக்கு முன் வீசிய மனநிலை தடுமாறிய அரசன் தன் சபதத்தைப் பற்றி சொல்லி, அவர்கள் மூவரையும் சிலைக்குத் தலை வணங்கச் சொன்னான்.*

*பண்டிதர் சொன்னார்:*

*இந்தச் சூழ்நிலை தடுப்பதற்கல்லாத இடை யூறு என்ற கோட்பாட்டின் கீழ் வருகிறது. "இந்த பழக்கத்திற்கு நிர்ப்பந்தத்தால் அடி பணிந்தவர்களின் முன் உதாரணம் ஏராள மாய் உள்ளது.*

*இவர்கள் மெய்யான அல்லது ஒழுக்க நெறி சார்ந்த குற்ற நிலைக்கு ஆளாக்கப்பட மாட் டார்கள்." ஆக, பண்டிதர் சிலையை வணங் கினார்.*

இப்படித்தான் ஒரு படித்த மனிதன் மெய்மைக்கு எதிர் வினையாற்றுவான். தான் விரும்பியதைச் செய்ய எப்போதும் வழிகளைக் கண்டுபிடிக்க முடி யும். அவன் தந்திரசாலி, இடைவெளி கண்டுபி டிக்க முடியும். சரியான மொழிநடையை அவன் பிரயோகிப்பான். ஒரு சட்ட நிபுணருடைய வழி

அவனுடையது. தவறாக ஏதேனும் செய்யவேண்டுமென்றால், அதற்கான வழியைக் கண்டுபிடிப்பான். சரியானதைச் செய்ய விருப்பமில்லையென்றால் அதற்கும் வழி காண்பான். அவன் எப்போதும் தவறாக இருக்கமாட்டான். தனக்குத்தானே ஆதரவு அளிப்பான். அவனுக்கு ஆதரவளிக்க ஒரு பெரும் அறிவுக் களஞ்சியமே இருக்கிறது. அவன் எப்போதும் விவாதம் செய்வான். விவாதம் என்பது வெறும் வார்த்தை விளையாட்டு. நீங்கள் எதற்கு வேண்டுமானாலும் ஆதரவாகவும் எதிர்த்தும் பேச முடியும். விவாதங்கள் எதன் மேலும் ஈடுபாடு வைப்பதில்லை. விவாதங்கள் உண்மைக்குக் கட்டுப்பட்டதல்ல. விவாதம் வெறும் போலிவாத நுணுக்கமாகும்.

பண்டைய கிரேக்கத்தில் இதுபோன்ற போலிவாத நுணுக்கத்திற்குப் பெயர்பெற்ற பெரிய பள்ளி இருந்தது. அவர்களின் முழுக் கல்வியுமே உண்மையும் இல்லை பொய்யும் இல்லை என்பதே. நீங்கள் அறிவாளியாக இருந்தால் எதையும் உண்மை என்றோ, பொய் என்றோ நிரூபிக்க முடியும். எல்லாம் உங்கள் திறமை, நயம் சார்ந்தது. உண்மையும் இல்லை, பொய்யும் இல்லை. அந்தப் பள்ளியில் இந்தப் போலிவாதம் கற்றுத் தந்தனர். வாதம் புரியக் கற்றுக் கொடுத்தனர். வாதம்தான் எல்லாம்.

இதுபோன்ற போலிவாதங்கள் உலகின் எல்லா நாடுகளிலும் இருந்திருக்கிறது; இன்னமும் தொடர்கிறது. இந்த விளையாட்டில் நீங்கள் தொலைந்துபோய் எதைத் தேடிக் கொண்டிருக்கிறீர்கள் என்பதையே மறந்து விடுவீர்கள். இது உங்

கள் அகங்காரத்தைக் காப்பாற்றிக் கொள்வதற் கான வழி.

இப்பொழுது, இந்த மனிதனுக்கு ஒரு பிரச்சினை. அவன் ஒரு முகமதியனாக இருக்க வேண்டும் - கதை ஒரு முகமதிய நாட்டிலிருந்து வருகிறது. அவனது சமயம் உருவ வழிபாட்டை அனுமதிப்ப தில்லை. இந்தப் பைத்தியக்கார அரசன் நிர்ப்பந் திக்கிறான். கேட்காவிட்டால் கொல்லப்படுவோம் என்பதை அறிவான். அவன் ஒரு வழியைக் கண்டு பிடித்தாக வேண்டும்.

*"இந்தச் சூழ்நிலை தடுப்பதற்கல்லாத இடை யூறு என்ற கோட்பாட்டின் கீழ் வருகிறது."*

அவன் ஒரு சித்தாந்தத்தை, விளக்கத்தைக் கண்டுபிடிக்கிறான். சமய நூலில் இருந்து ஆதரவு தேடுகிறான்.

*"இந்தச் சூழ்நிலை தடுப்பதற்கல்லாத இடை யூறு என்ற கோட்பாட்டின் கீழ் வருகிறது. இந்த பழக்கத்திற்கு நிர்ப்பந்தத்தால் அடிப ணிந்தவர்களின் முன் உதாரணம் ஏராள மாய் உள்ளது.*

*இவர்கள் மெய்யான அல்லது ஒழுக்க நெறி சார்ந்த குற்ற நிலைக்கு ஆளாக்கப்பட மாட் டார்கள்."*

"இந்தப் பைத்தியக்கார அரசன் இந்த உருவச்சி லையை வணங்கச் சொன்னால், என்னால் உண் மையிலேயே வணங்காமல் வணங்க முடியும். என் னால் அப்படிப் பாசாங்கு செய்ய முடியும். என்

னால் ஏமாற்ற முடியும். என் உயிரைக் காப்பாற்றிக் கொள்ள வேண்டும்."

ஆனால் உண்மையைக் காண்பதைவிட உயிரின் மேல் என் ஆர்வம் பெரிது. சமயத்தைவிட உயிர்மீது எனக்கு ஆர்வம் அதிகம். கடவுளைத் தேடுவதை விட என்னைக் காப்பாற்றிக் கொள்ளவே விருப்பம். இறைவனைத் தேடுவதைவிட பயத்தின் காரண மாக என்னைக் காப்பாற்றுவதில் ஆர்வம் அதிகம். அவன் தன்னைச் சுற்றி வார்த்தை ஜாலங்களைப் புனைகின்றான். நீங்கள் எப்போதும் வழிகளைக் கண்டுபிடிக்க முடியும். லட்சக்கணக்கான ஜென் மங்களுக்கும் வார்த்தை விளையாட்டு ஆடிக் கொண்டே இருக்கலாம். அதற்கு முடிவே கிடை யாது.

இதுதான் நடைமுறை வாழ்க்கையிலும் நடந்து கொண்டிருக்கிறது. மெய்யைக் காண்பதே இல்லை, அதை மறைத்து விடுகின்றீர்கள். பயங் கொண்டு வேறு எதையாவது சொல்கின்றீர்கள்.

அன்றொரு இரவு யாரோ ஒருவர் இங்கு வந்திருந் தார். சன்னியாசம் பயத்தை உண்டு பண்ணுகிறது, ஆழமான பயம் தருகிறது, ஆனால் யாரும் அதை ஒத்துக் கொள்வதில்லை. "எனக்குப் பயமாக உள் ளது, அதனால் சன்னியாசம் எடுத்துக் கொள்ள முடியவில்லை" என்று சொல்லமாட்டார்கள். வேறு ஏதாவது சொல்வார்கள்.

"மஞ்சள் காவி போடுவதால் என்ன ஆகப் போகிறது? பெயர் மாற்றத்தால் என்ன பெரிய பயன்? உலகிற்கு அறிவிக்காமல் சன்னியாசிக ளாக இருக்க முடியாதா? உண்மையானது அகத்

தில் தானே இருக்கிறது? ஏன் வெளிவேஷம்?" இவர்கள் சொல்வது எல்லாம் அழகாக இருக்கும், ஆனால் அது உண்மையல்ல. மனதின் ஆழத்தில் அவர்களுக்கு மற்றவர்கள் என்ன சொல்வார்கள் என்ற பயம். நீங்கள் ஒரு முட்டாள் அல்லது பைத்தியம் என்று நினைப்பார்கள். பலர் என்னிடம் வந்து, "இங்கே இதைச் செய்யலாம், ஆனால் நான் மேற்கு நாட்டிற்குச் சென்றால், பிரச்சினை இருக்கும்." வெகு அரிதாக யாராவது உள்ளதை உள்ளபடியே சொல்வார்கள். அவர்கள் வழிவகை கண்டுபிடிப்பார்கள்.

சன்னியாசம் வாங்கிக் கொண்டவர் சிலர் உள்ளனர் - மிகவும் தந்திரமானவர்கள். அவர்கள் நாட்டிற்குப்போய் தாங்கள் சன்னியாசிகள் என்று யாரிடமும் சொல்வதில்லை. தங்கள் காவி உடை, மாலை எல்லாவற்றையும் மறைத்து வைத்து எப்போதும் போல் தொடர்வார்கள். எப்போதெல்லாம் ஒரு சன்னியாசியை எதிர்கொள்கிறபோது, அவர் "என்னவாயிற்று, சன்னியாசத்தை விட்டுவிட்டீர்களா?" என்று கேட்டால், "இல்லை உள்ளிருந்து ஒரு குரல் கேட்டது. நான் உங்களுக்கு விடுதலை தருகிறேன் என் பகவான் சொல்லிவிட்டார்" என்று ஏதாவது ஒரு பதில் கூறுவார்கள். உண்மையாக இருப்பதற்கு பதிலாக அவர்கள் விளையாட்டில் என்னையும் இழுப்பார்கள்."

அவர்கள் இந்தியாவிற்குத் திரும்பும்போது மறுபடியும் மஞ்சள் காவியில் இருப்பார்கள். ஒருக்கால் நான் அவர்களுக்குச் சொல்லி இருக்க வேண்டும் "இந்தியாவில் இருக்கும்போது சுதந்திரமாக இருக்

காதீர்கள்" அவர்களில் தங்கள் அந்தராத்மா பேசியதைக் கேட்டிருப்பார்கள்.

நினைவில்கொள்ளுங்கள், உண்மையாக இருப்பது நல்லது. வேடதாரியாக இல்லாமல் இருப்பது நல்லது. நீங்கள் தொடர்ந்து காப்பாற்றி வரும் பொய்மைகள் எல்லாம் நஞ்சாகும் - அவை உங்களின் அகத்தை, உயிருருவை அழித்து விடும். வாதங்கள் எல்லாம் நம்பவைக்கும்படியாக இருக்கும், தர்க்க ரீதியாக இருக்கும். ஆனால் அவையெல்லாம் வெறும் குப்பை. விஷயம் என்னவென்றால் வாதம் செல்லுபடியாகிறதா என்பதில்லை, ஆனால் அதில் உண்மை உள்ளதா என்பதுதான்.

இந்தப் பண்டிதர் எளிமையான உண்மையை நேருக்கு நேர் சந்தித்து இருக்கலாம். "எனக்குச் சாவதற்குப் பயமாக உள்ளது, அதனால் இதைச் செய்கிறேன்." அது மிகப்பெரிய சமயம் சார்ந்த செயலாக இருந்திருக்கும். உண்மையை எதிர் கொண்டிருந்தால் அவருக்கு உதவியாக இருந்திருக்கும். அல்லது தான் ஒரு கோழை என்ற உண்மையை உணர்ந்திருக்கலாம். "சரி என்னைக் கொன்றுவிடு, ஆனால் சிலையை வணங்க மாட்டேன்" என்று சொல்லியிருக்கலாம். பயத்தில் வணங்கியிருந்தால் தான் ஒரு கோழை என்று அறிந்து கொண்டதால் பணிவு ஏற்பட்டு இருக்கும். அல்லது தனக்கேற்பட்ட அச்சத்தைக் கண்ட பிறகு, "சரி நான் கோழையாக இருக்கப் போவதில்லை, நீ என்னைக் கொன்றுவிடு, ஆனால் நான் விரும்பாததைச் செய்யமாட்டேன்" என்றாவது சொல்லியிருக்கலாம். ஆனால் சுற்றி வளைத்துப் பேசித் தன்னைக் காப்பாற்றி கொண்டார், ஆனால் எதி

லிருந்து தன்னைக் காப்பாற்றிக் கொள்ள முடிந்தது? இறைவனிடமிருந்தும், உண்மையிடமிருந்தும் காப்பாற்றிக் கொண்டார். அவன் தந்திரமானவன். ஒரு தந்திரம் மிக்க மனம் தற்கொலைத் தன்மையுடைய மனமாகும்.

*சயீதின் முறை வந்தபோது, அவர், "நான் பிரத்யேகமாக பாதுகாக்கப்பட்டவன்.*

*என் உடலில் புனிதர் முகமது நபியின் இரத்தம் ஓடுகிறது,*

*எதைச் செய்தாலும் என் செய்கையே அதைச் சுத்தம் செய்துவிடும்,*

*ஆகவே இந்த அரசனின் கோரிக்கைகளுக்கு ஏற்ப நடப்பதில் எந்தத் தடையும் இல்லை."*

*சயீதும் சிலையை வணங்கினார்.*

இச்சமயத்தில், நல்லொழுக்கமுடையவர் என்று அழைக்கப்பட்டவர்: தான் பாதுகாக்கப்பட்டவன், தான் மட்டும் பிரத்தியேகமானவன், தேர்ந்தெடுக்கப்பட்ட சிலரில் ஒருவன் என்றெல்லாம் தன்னைப் பற்றி நினைக்கும் மனிதர். இதில் முகமத்தின் ரத்தத்திற்கு என்ன தொடர்பு உள்ளது? ரத்தம் ரத்தம்தான். நீங்கள் அதே வம்சாவளியில் பிறந்ததினால் எந்த வித்தியாசமும் ஏற்படப் போவதில்லை. உங்கள் உடலில் புத்தரின் ரத்தம் இருக்கலாம். ஆனாலும் பூமியின் அடி முட்டாளாகவும் நீங்கள் இருக்கலாம். பலருக்கு புத்தரின் ரத்தம் தெரிந்தோ தெரியாமலோ உடலில் ஓடலாம். கிருஷ்ணரின், மோசஸின் ரத்தம் இருக்கலாம், அதனால் என்ன?

உங்கள் ரத்தம் எந்த வித்தியாசத்தையும் ஏற்படுத்தாது, உங்கள் வம்சாவளியோ அல்லது பாரம்பரியமோ எந்த வேறுபாட்டையும் தராது. உங்களுக்கு விழிப்புணர்வு வந்தாலொழிய எந்த வேறுபாடும் ஏற்படாது.

இப்போது இந்த சயீத் மனிதர், "தான் பிரத்யேகமானவன், நான் பாதுகாக்கப்பட்டவன், முகமது நபியின் வழிவந்தவன்" போன்ற கருத்துக்களைக் கொண்டு தன்னைப் பாதுகாத்துக் கொள்கிறார். இறைவன் என்னைப் பாதுகாத்துக் கொண்டிருந்தார், ஆகையால் நான் செய்வதெல்லாம் சுத்தமாகிறது, ஏனென்றால் அது என்னால் செய்யப்படுகிறது" இந்த மனிதரின் தந்திரம் பண்டிதருடையதைவிட ஆழமானது. பண்டிதருக்காவது ஏதேனும் சந்தேகம் இருக்கலாம், ஆனால் இவருக்கு எந்த சந்தேகமும் இல்லை. இவரின் ஏமாற்று முறை முற்றிலுமானது.

நினைவிற் கொள்ளுங்கள், யாரும் உங்களைக் காப்பாற்றிக் கொண்டிருக்கவில்லை - அது கிறிஸ்துவோ, கிருஷ்ணரோ அல்லது முகமதோ இல்லை. உங்களையன்றி வேறு எவரும் உங்களைக் காப்பாற்ற முடியாது. மற்றவர்மீது பொறுப்பைத் திணிக்காதீர்கள். எப்போதும் இதை மனிதர்கள் செய்து கொண்டிருக்கின்றனர்.

ஒரு கிறிஸ்துவ சமயப் பரப்பாளர் என்னிடம், "நம் எல்லோரையும் பாவத்திலிருந்து விடுவிக்கத்தான் ஏசு பிறந்தார்" என்று சொன்னார். நான் அவரிடம், "ஏசு வந்ததினால் நீங்கள் விடுவிக்கப்பட்டு விட்டீரா? எவ்வளவு மனிதர்கள் விடுதலை பெற்றுள்

ளார்கள்? நீங்கள் தொடர்ந்து "ஏசுதான் நமக்கெல் லாம் பாப விமோசனம் தந்தார்" என்று சொல்லிக் கொண்டிருக்கிறீர்கள். இது ஏதோ பாவ விமோசனம் கிடைத்தாற் போலவும், எல்லோரும் வீடு பேறு அடைந்தாற் போலவும் சொல்கிறீர்கள். யார் வீடு பேறு அடைந்துள்ளார்? ஏசு எப்படி உங்களை விடுவிக்க முடியும்? இது தர்க்க முரணாக உள்ளது. நீங்கள் தளைகளை உருவாக்கிக் கொள்வீர்கள், ஏசு வந்து உங்களை விடுவிப்பார். அவர் ஏன் செய்ய வேண்டும்? அவருக்கு எந்தப் பொறுப்பும் கிடையாது. நீங்கள் கட்டுண்டுதான் இருப்பேன் என்று பிடிவாதமாக இருந்தால், அவர் எப்படி உங்களை விடுவிக்க முடியும்? என்றேன்.

நடந்த விஷயம் ஒன்று: ஒரு மனிதர் அரவிந்தரிடம், "நடக்கின்ற விஷயங்களைக் கண்டு நீங்கள் அமைதியாக கருத்தற்று இருக்கிறீர்கள், இதனால் சில சமயங்களில் என் மனதில் ஒரு பிரச்சினை எழுகின்றது. நீங்கள் ஒரு நதிக்கரையில் நின்றுகொண்டிருக்கிறீர்கள். யாரோ ஒருவர் ஆற்றில் மூழ்கிக் கொண்டிருக்கிறார், நீங்கள் அவரைக் காப்பாற்ற மாட்டீர்களா?"

அரவிந்தரின் பதில்: "இல்லை, காப்பாற்றப்பட வேண்டும் என்று கேட்டால் ஒழிய நான் காப்பாற்ற மாட்டேன்" அதற்கு அம்மனிதர் "இது ரொம்ப கடினமாக, இரக்கமற்று தோன்றுகிறதே?" அரவிந்தர் சொன்னார்: "என்னால் அவரைக் காப்பாற்ற முடியும், ஆனால் அவர் மறுபடியும் தன்னை மூழ்கடித்துக் கொள்வார். மூழ்க வேண்டும் என்பதில் அவர் உறுதியாக இருந்தால், அவர் வேறு ஒரு நதி, மற்றொரு சமயம் தன்னை மூழ்கடித்துக் கொள்வார்.

நான் அவரை வெளியே எடுத்தாலும் அவர் மறு படியும் உள்ளே போய்விடுவார், இதனால் என்ன பயன்? அவர் கேட்டால் ஒழிய அவரைக் காப்பாற்ற இயலாது."

ஆன்மீக வளர்ச்சியில் கேட்பதுதான் காப்பாற்றப் படுவது. நீங்கள் கேட்டீர்கள் என்றால் நீங்கள் காப் பாற்றப்பட்டீர்கள், ஏசு உங்களை காப்பாற்றுவார் என்றில்லை. ஏசுவின் அழகான வார்த்தைகளை நினைவுபடுத்துங்கள் "கேளுங்கள் கொடுக்கப்ப டும், தட்டுங்கள் உங்களுக்காகத் திறக்கப்படும்."

அந்தக் கதவுகள் உண்மையில் திறந்துதான் இருக்கின்றன, நீங்கள் தட்டுவதற்காகக் காத் துக் கொண்டிருக்கின்றன. கடவுள் ஏற்கனவே கொடுத்துள்ளார், நீங்கள் கேட்காததினால் உங் களால் 'இன்னமும்' அந்தப் பரிசை அடையாளம் காண முடியவில்லை. அதை அடையாளம் கண்டு கொள்ள முடியும்.

யாரும் யாரையும் காப்பாற்ற முடியாது. யாரும் எவ ரையும் காப்பாற்ற முடியாது என்பதும் நல்லதுதான். இல்லை என்றால் உங்கள் விடுதலைகூட ஒரு வகையான வலியுறுத்தலாகிவிடும். நீங்கள் சொர்க் கத்திற்குள் நுழைய நிர்ப்பந்தப்படுத்தப்பட்டாற் போல் ஆகிவிடும். இரண்டு பேர் உருவிய வாட் களோடு உங்களைப் பின் இருந்து சொர்க்கத்திற் குள் நுழையக் கட்டாயப்படுத்துவது போலாகும். அது எந்த மாதிரியான சொர்க்கமாக இருக்கும்? - அது வெறும் நரகமாக இருக்கும். உங்கள் மீது வலுக்கட்டாயமாகத் திணிக்கப்படுவதுதான் நரகம். எது, என்ன என்பது ஒரு பொருட்டல்ல. நீங்களா

கவே கேட்டு அதில் வளர்வதுதான் சொர்க்கம். அது என்னவாயிருந்தாலும் அதுதான் வீடு பேறு தல், அதுதான் விமோசனம்.

முகமதின் வழிவந்ததினால் எந்த மாற்றமும் இல்லை, எந்த வேறுபாடும் இல்லை. வெறுமனே கிறிஸ்தவனாகப் பிறந்தால் நீங்கள் காப்பாற்றப் பட மாட்டீர்கள். இந்தியாவில் பிறப்பதால் மட்டும், விமோசனம் கிடைக்காது. இந்திய நாடு புண்ணிய பூமி, ஆதலால் இங்கே பிறந்தாலே வீடு பேறு கிட்டும் என்ற கருத்தை இந்தியர்கள் கொண் டுள்ளனர். வாரணாசியில் இறந்துபோனால் நேராக சொர்க்கம் போகலாம் என்று நினைக்கின்றனர் - வெறுமனே வாரணாசியில் உயிர் துறந்தால் மோட் சம்!

* கபீர் தன் வாழ்நாள் முழுவதும் வாரணாசி யில் வாழ்ந்தார். அவர் மரணப்படுக்கையில் இருந் தபோது திடீரெனக் குதித்தெழுந்து தன் சீடர்களி டம், "நாம் வாரணாசியைவிட்டு வெளியேற வேண் டும்" என்றார். அவர்கள் சீடர்களோ, "ஏன், நீங்கள் மிகவும் நோய்வாய்ப்பட்டு இருக்கின்றீர்கள், மர ணப்படுக்கையில் இருக்கின்றீர்கள், நீங்கள் இன் னும் சில மணி நேரங்களே உயிர்வாழ முடி யும் என்று மருத்துவர்கள் சொல்கின்றனர், மேலும் ஒரு நாள்கூடத் தாண்ட முடியாது என்கிறார்களே" என்று சொன்னார்கள். கபீர் அதற்கு, "அந்த ஒரு நாளைப் பயன்படுத்தியாக வேண்டும். வாரணா சியை விட்டு விரைவாக எவ்வளவு தூரம் போக முடியுமோ போய்விடுவோம்!" என்றார். ஆனால், "எங்கே போவது. ஏன் மனிதர்கள் வாரணா சிக்கு இறந்துபோக வருகின்றனர்?" என்று சீடர்கள்

அவரை கேட்டனர். தங்கள் வயதான காலத்தில் பலர் வாரணாசிக்கு சென்று இறக்க விரும்புகிறார் கள். காரணம் பூமியின் மிகப் புண்ணியமான ஸ்த லம் வாரணாசி, சிவனின் நகரம் அது. மிகப் பண் டைய புண்ணிய ஸ்தலம், அங்கே இறந்துபோனால் போதும். உங்கள் பாபங்கள் கணக்கில் வராது. வாரணாசியில் உங்கள் மரணமே பரிசுத்தமடைவ தைப் போன்றது. நீங்கள் காப்பாற்றப்பட்டு, நேராக சொர்க்கத்திற்கு போகின்றீர்கள்.

"நான் மஹர் கிராமத்திற்கு செல்கிறேன்" என் றார் கபீர். மஹர் காசிக்கு அருகே உள்ள சிறிய கிராமம். "எல்லா இடத்தையும் விட்டு விட்டு, மஹ ருக்கா?" என்று கேட்டனர் அவர் சீடர்கள். மஹ ரில் இறந்து போனால் அடுத்து நீங்கள் ஒரு கழு தையாகப் பிறப்பீர்கள் என்ற வழக்கு நிலவி வந் தது. ஆகவே சீடர்கள் அனைவரும், "மஹருக்கா? உங்களுக்குப் பைத்தியம் பிடித்துவிட்டதா? நீங் கள் இறந்து கொண்டிருப்பதால், அறிவிழந்து விட் டீர்கள்" என்று சொல்லி காசியிலேயே கபீரைப் பிடித்து வைத்துக்கொள்ள முயன்றனர். ஆனால் கபீர் கேட்பதாய் இல்லை. அவர் காசியை விட்டு மஹருக்குச் சென்று அங்கு மரணமடைந்தார். ஏன் மஹருக்குப் போகவேண்டும் என்ற கேள்விக்கு கபீர் சொன்ன பதில்: "நான் மஹரில் இறந்து, சொர்க்கத்திற்குப் போனால் அதில் விஷயமிருக் கிறது. வாரணாசியில் இறந்து சொர்க்கத்திற்குப் போவதில் அர்த்தமில்லை. அந்த சொர்க்கத்திற்கு மதிப்பு இல்லை. மஹரில் இறப்பவர்கள் கழுதை களாக பிறப்பார்கள் என்று சொல்லப்படுவதால், நான் சொர்க்கத்திற்குப் போனால் அது என்னைச்

சார்ந்ததாக இருக்கும். என் சொந்த முயற்சியாக இருக்கும். நான் என்னை மட்டுமே நம்பி இருக்கி றேன்."

இறந்து போகையில் அவர் தன் சீடர்களுக்குச் சொன்னது: "உங்களை மட்டுமே நம்பி இருங்கள். நீங்கள் கபீரைப் பின்பற்றுவதால் மட்டுமே சொர்க் கத்திற்கு போவீர்கள் என்று நினைக்க வேண்டாம். சொர்க்கம் அவ்வளவு மலிவானதல்ல."

*சயீதின் முறை வந்தபோது, அவர், "நான் பிரத்யேகமாக பாதுகாக்கப்பட்டவன்.*

*என் உடலில் புனிதர் முகமது நபியின் இரத் தம் ஓடுகிறது,*

*எதைச் செய்தாலும் என் செய்கையே அதைச் சுத்தம் செய்துவிடும்,*

*ஆகவே இந்த அரசனின் கோரிக்கைக ளுக்கு ஏற்ப நடப்பதில் எந்தத் தடையும் இல்லை."*

*சயீதும் சிலையை வணங்கினார்.*

வேசிக்கு எங்கும் மறைவிடம் கிடையாது. அதுவே அவள் மெய்யாதாரம், அவள் அழகு. வேசிக்கு அறிவார்ந்த மொழிநடை கிடையாது. சாத்திரங்க ளுக்குப் பின்னால் மறைந்து கொள்ள முடியாது என்பதை அவள் அறிவாள். சமயநூல் ஒன்றும் அறி யாதவள். தான் நன்நெறி சார்ந்தவள் அல்ல என் பதை அவள் அறிவாள். முகமதின் வழி வந்தவள் இல்லை, புனித ரத்தம் தன் உடலில் ஓடவில்லை என்று அவளுக்குத் தெரியும். தான் பாவி என் பதை அறிவாள். தான் பாவம் செய்தவள், பிரத்தி

யேகப் பாதுகாப்பாற்றவள், அறிவார்ந்த வேதாந்த வாதங்களின் பாதுகாப்பு இல்லாதவள். பாதிப்பு ஏற் படத்தக்கவள் என்பதை எல்லாம் அவள் அறிந்தி ருந்தாள். அவள் பொய்மையாக இருக்க முடியாது. அவளால் எந்த வாதமும் செய்ய முடியாது, பொய் பாதுகாப்பு தேட இயலாது, தன்னைத் தற்காத் துக் கொள்ளவும் முடியாது. ஆக உருவச்சிலைக்கு தலைவணங்கினால் அவளால் எப்போதும் மகிழ்ச் சியாய் இருக்க முடியாது. என்றும் தன்னையே மன் னித்துக் கொள்ள முடியாது.

பண்டிதருக்குக் குற்ற உணர்வு இருக்காது, சமய நூல்கள் அனுமதிக்கின்றன, முன் உதாரணங்கள் இருக்கின்றன என்பதை அவர் அறிவார். சயீத் இதை எல்லாம் மறந்துவிடுவார். ஆனால் வேசி பொய்யாக ஏதாவது செய்தால் தன்னை மன்னித் துக் கொள்ளவே மாட்டாள். இது ஒரு விசித்திர மான கதை. அதாவது பாவம் செய்தவர் உண்மை யாக இருப்பது.

இது என்னுடைய சொந்த அனுபவமும்கூட. இது நான் பார்த்து உணர்ந்தது. நன்நெறியாளர்களை விடப் பாவம் செய்தவர்கள் அதிகமாக உண் மையாக இருக்கிறார்கள். நாகரீகமான, கல்விந யம் மிகுந்தோரைவிட அறிவிலிகளும், அப்பாவிக ளும் உண்மையாக இருக்கின்றனர். நாகரீகம் மனி தர்களைத் தந்திரசாலிகளாகத்தான் ஆக்குகிறது. அவர்கள் தங்கள் மாசற்ற தன்மையை இழக்கின் றனர், மாசறு நிலையிலிருந்து வரும் நறுமணத்தை இழக்கின்றனர்.

மேரி மேக்டலினை நினைவிருக்கிறதா? அவர் மட்டும்தான் ஏசுவின் உண்மையான சீடர் என்று எனக்குத் தோன்றுகிறது. மேரியின் உண்மை, துணிவு எல்லாம் அளப்பரியது. ஏசு மேரியின் வீட்டிற்கு வந்தபோது, அவர் கால்களில் கிடைப்பதற்கரிய வாசனைத் திரவியத்தை ஊற்றி, கால்களைக் கழுவி, தன் தலைமுடியைக் கொண்டு அவர் கால்களைத் துடைத்தாள். அவள் அங்கே உட்கார்ந்து அழுது கொண்டேயிருந்தாள், இயற்கையாகவே நன்நெறியாளர்களுக்கு வருத்தமுண்டாயிற்று. யாரோ ஒருவர் ஏசுவிடம் சொன்னார்கள்: "இது சரியல்ல, அவள் பாவி, உங்களைத் தொட அனுமதிக்கக் கூடாது." இப்படித்தான் அகங்காரமுடையவர், நன்நெறியாளர், அறிவார்ந்தோர் எல்லோரும் எப்போதும் நடந்து கொள்வர்.

ஜூடாசிற்கும் இதில் உடன்பாடில்லை. ஜூடாஸ் ஒரு கம்யூனிஸ்ட் அல்லது சோசியலிஸ்ட்போல் தெரிகிறது. "இது வீணடிப்பு, இந்த வாசனைத் திரவியம் அதிக விலையானது, ஏன் வீண் செய்கிறாய். மக்கள் பட்டினியில் இருக்கின்றார்கள், இந்தத் திரவியத்தை நல்ல விலைக்கு விற்றிருந்தால் சிலருக்கு உணவாவது அளித்திருக்கலாம்" என்றார் ஜூடாஸ். இது தர்க்க ரீதியாகத் தெரிகிறது. நீங்கள் ஏசுவை விட ஜூடாசுடன் ஒத்துப் போவீர்கள். ஏசு சொன்னது தர்க்க முரணானது: "இந்த ஏழைகள் எப்போதும் இங்கேதான் இருப்பார்கள், நான் சென்ற பிறகு அவர்களைப் பார்த்துக் கொள்ளவும். இந்தப் பெண்ணின் மனதை உங்களால் புரிந்து கொள்ள முடியவில்லை. என்னால் அவளுக்கு மறுப்பு சொல்ல முடியாது. அவள் விரும்பியதைச்

செய்யட்டும், தன் சுமையை இறக்கிவைக்கட்டும், அவள் அழட்டும், என்னைத் தொடட்டும். வாச னைத் திரவியத்தை ஊற்றட்டும், விலையுள்ளதோ இல்லையோ அது ஒரு பொருட்டல்ல. அவளுக்கு இல்லை என்று என்னால் சொல்ல முடியாது. அவள் இதயத்தில் பெரும் உணர்ச்சிகள் எழுவதை என்னால் காண முடிகிறது. இதுதான் பிரார்த் தனை. அவள் பிரார்த்தனை செய்யும் மனோ நிலையில் இருக்கிறாள். அவள் பிரார்த்தனையை என்னால் கலைக்க முடியாது."

மேரி மேக்டலின் இதய அழகு கொண்டவள் என்பதை ஏசு புரிந்து கொண்டார். ஏசு மீண்டெ ழுந்து வந்தபோது முதலில் அடையாளம் தெரிந்து கொண்டது மேரிதான். சிலுவையிலிருந்து ஏசு கீழே இறக்கப்பட்டபோது மூன்று பெண்கள் மட் டுமே இருந்தனர், அதில் மேரி மேக்டலின் ஒரு வர். அந்த பெரும் திருத்தூதர்கள் எல்லோரும் காணாமல் போய் விட்டனர். ஏசுவின் தொண்டர் களில் ஜூடாஸ் மட்டுமே கற்றவர். அவர் மட்டுமே அறிவார்ந்தவர். ஜூடாஸ்தான் ஏசுவைக் காட்டிக் கொடுத்தார். இது அடையாளக் குறியீடு போன்றது. அறிவு காட்டிக் கொடுக்கும், வஞ்சனை செய்யும்.

மனம் தந்திரமானது, மனம் எப்போதும் உண் மைக்கு எதிராகச் சதி செய்து கொண்டேயிருக்கும். ஜூடாஸ் மனதின் அடையாளமாக இருக்கட்டும். இருப்பதிலேயே ஜூடாஸ்தான் அதிகமாக பேச்சுத் திறன் கொண்டவர், அறிவார்ந்தவர். அவர் காட்டிக் கொடுக்காமல் இருந்திருந்தால், அவர் சர்ச்சின் ஸ்தாபகர் ஆகியிருப்பார். ஏன் காட்டிக் கொடுத் தார்? மனம் வஞ்சனை செய்யும், தர்க்கம் வஞ்

சனை செய்யும். உங்கள் மனம் உங்கள் உயிருரு விற்கு எதிரானது.

வேசிக்கு மனம் என்று ஒன்றுமில்லை. அவள் தன் உடலை விற்று ஒரு எளிய வாழ்க்கை வாழ்ந்து வந்தாள். அவளுக்குச் சமய நூல்கள் பற்றி எது வும் தெரியாது, அதைப் படிக்கவும் நேரம் போதாது. ஒரு ஒழுக்க நெறியாளருடைய அகங்காரம் அவ ளுக்கு இருக்க முடியாது. அவள் எளிமையானவள், பணிவுடையவள். அவளுக்கு எந்த அகங்காரமும் இல்லை, இதுவே தெய்வீகத்திற்கான வாயிற்கதவு.

*இறுதியாக வேசி சொன்னாள்.*

*"அய்யகோ, எனக்கு இந்த அறிவார்ந்த பயிற் சியோ அல்லது சிறப்பு சலுகைகளோ கிடை யாது,*

*ஆகையால் நீங்கள் என்னை என்ன செய் தாலும் நான் இச்சிலையை வணங்கமாட் டேன்."*

நான் துறவிகளோடும் இருந்திருக்கிறேன், பாவி களோடும் இருந்திருக்கிறேன். நானாகப் பார்த்து அறிந்ததில் பாவிகள் என்று அழைக்கப்படுவோர் உலகிலேயே அதிகமான மெய் உணர்வு கொண் டவர்கள், துறவிகள் என்று அழைக்கப்படுவோர் அதிகமாக, உண்மைக்குப் புறம்பாக இருப்பவர் கள். துறவிகள் எல்லோரும் போலிகள். பாவிகளி டம் உண்மை உள்ளது. இந்த மெய்மை நிலையி லிருந்து ஒரு பெரும் தாவல் செய்யும் சாத்தியக் கூறு உள்ளது. உண்மையானவர்தான் உண்மைக்

குள் போக முடியும். பொய் பொய்யாகவே இருக்கும், உண்மையோடு எந்தச் சந்திப்பும் இருக்க முடியாது.

ஆக நினைவிற் கொள்ளுங்கள். உங்களுக்கும் கடவுளுக்கும் இடையே உள்ள பெரிய தடையே உங்கள் அகங்காரம்தான். அகங்காரம் அறிவை உணவாக்கிக் கொள்கிறது. நன்நெறியை தன் உணவாக்கிக் கொள்கிறது, மரியாதை, பேர், புகழ் அதிகாரம் எல்லாவற்றையும் தன் உண வாக்கி வளர்க்கிறது. இதை ஞாபகத்தில் வைத்துக் கொண்டு அகங்காரத்திற்கு உணவளிக்காதீர்கள்.

மேலும் பணிவாகிடுங்கள். உங்கள் வரையறைகளைத் தெரிந்து கொள்ளுங்கள், தவறுகளை உணர்ந்திடுங்கள், பணிவு கொள்ளுங்கள். அந்த நோக்குதலே உங்களைப் பணிவுகொள்ள வைத்திடும். அந்தப் பணிவினில் பிரார்த்தனை தன்னிச்சையாய் எழும். அந்தப் பணிவிலிருந்து பெரும் துணிவு எழும். பணிவு உறுதியானது, அகங்காரம் பலவீனமானது. நான் சொல்வது உங்களுக்கு முரணுரையாகத் தோன்றலாம், அது வெறும் தோற்றம் தான். அகங்காரம் பலவீனமானதுதான். உண்மையைச் சொல்வதானால் அகங்காரம் என்பது ஒரு பலவீனமானவன் தன்னைக் காப்பாற்றிக் கொள்ளச் செய்யும் முயற்சியாகும். அகங்காரம் ஒரு கவசம். ஆழ் மனதில் தான் பலவீனமானவன் என்பதை அவன் அறிவான், அகங்காரம் அந்தப் பலவீனத்தைக் காப்பாற்றுவதற்காகத்தான். மிகவும் பலவீனமானவன் மிகப் பெரிய அகங்காரம் கொண்டிருப்பான். இரண்டும் பரஸ்பரம் ஒத்துப்போகக்கூடியவை. உண்மையிலேயே வலிமையான மனிதனுக்கு தன்னைக் காப்பாற்றிக் கொள்ள அகங்

காரம் தேவையில்லை, பாதுகாப்பில்லாமல் அவனால் வாழ முடியும்.

பண்டிதர் ஒரு பலவீனமான மனிதர், அதேபோல் தான் அந்த சயீதும். வேசிக்கு பலம் இருந்தது. ஒரு ரோஜா மலரின் பலம், மென்மையானது, பாதுகாப்பற்றது. ஆயினும் மிக்க பலமுடையது. அதிகாலையில் காற்றோடு விளையாடிக் கொண்டிருக்கும் ரோஜா மலரை நீங்கள் பார்த்ததில்லையா? மென்மை இருந்தும் வலிமையுடையது, சூரியனுடன் ஒரு காதல், அவ்வளவு மிருதுவானது. ஆயினும் தலையை உயரத் தாங்கிப் பிடித்துக் கொண்டிருக்கிறது. லாவோட் சூ இதைத் தண்ணீரின் பலம் என்பார்,

அகங்காரத்திற்கு பாறையின் பலம் உள்ளது. பணிவுள்ளவருக்கு தண்ணீரின் பலம் உள்ளது. லாவோட் சூ சொல்கிறார், "தண்ணீரைப் போல் ஆகிவிடுங்கள்" - 'நீர்ப்போக்கின் வழி'. தண்ணீரைப் போல் மென்மையாகி விடுங்கள், இறுதியில் வெல்வீர்கள். நினைவிற் கொள்ளுங்கள், கடினம் தோல்வியைப் பெற்றுத்தருகிறது. வாழ்க்கைக்கான உங்கள் எதிர்ப்பே முன்னரோ, பின்னரோ உங்களையே அழித்துவிடும். உங்கள் கடினம், உங்கள் அகங்காரம் உங்களுக்கே நஞ்சாக மாறும்.

ஒரு பெரும் பாறையின்மீது விழும் நீர்வீழ்ச்சியைப் பாருங்கள். இந்த அடக்கமான, மென்மையான பெண்மையுடைய தண்ணீர் தன்னை அழிக்கப் போகின்றது என்பதை பாறையால் நினைத்துக்கூடப் பார்க்க முடியாது. ஆனால் என்றோ ஒரு நாள் வரும்போது பாறை இருக்காது, அது

மணலாக மாறிக் காணக் கிடைக்காது, தண்ணீர் தன் போக்கில் அதேபோல் ஓடிக் கொண்டிருக்கும். பாறைகள் தங்கள் சொந்த கடினத்தன்மையின் காரணமாகவே இல்லாமல் போகின்றன. அகங்கா ரம் பாறையைப் போன்றது, பணிவு ரோஜா மல ரைப் போன்றது. அகங்காரம் பலம் வாய்ந்ததாகத் தோன்றுகிறது - அப்படியில்லை - பணிவுடைமை பலவீனமாகத் தோன்றுகிறது, ஆனால் அப்படி யில்லை. உருவு கண்டு ஏமாறாதீர்கள்.

அந்த வேசி சொன்னாள்: "உங்களால் என்ன செய்ய முடியுமோ செய்யுங்கள், நான் பொய்யாக இருக்கப் போவதில்லை - தோற்றத்தில்கூட பொய் யாக இருக்கப் போவதில்லை." இந்தப் பணிவின் பலம், பாவத்தின் பரிசுத்தம், ரோஜா மலரின் இந்த ஆற்றல், அரசனிடம் ஒரு மாயாஜால மாற்றத்தை ஏற்படுத்தியது.

*அந்தப் பைத்தியக்கார அரசனின் நோய்*

*இந்தச் சொல்லைக் கேட்ட கணத்திலேயே தொலைந்து போயிற்று.*

என்ன நடந்தது - தன் கண்களையே அவ னால் நம்ப முடியவில்லை, அப்படி ஒரு அதிர்ச்சி. ஒரு பெரிய பண்டிதரை வற்புறுத்தியதால், அவர் நெடுஞ்சாண் கிடையாக வணங்கிப் படுத்துக் கிடக்கிறார், நபி முகமதின் வழிவந்த சயீத்தை நிர்ப்பந்தப்படுத்தியாகிவிட்டது. பிறகு ஒரு வேசி? ஒரு வேசி இவ்வளவு உறுதியாக தன் நிலையில் நிற்பாள் என்று அரசனால் கற்பனைகூட செய்து பார்க்க முடியவில்லை. இவ்வளவு மென்மையான பெண், அவ்வளவு பாவி, எங்கிருந்து இவளுக்குள்

இப்படி ஒரு சக்தி எழுகின்றது? மாசற்ற தன்மையி லிருந்து அவளிடம் பாசாங்குகள் இல்லை, அவள் பாதுகாப்பற்று இருக்கிறாள்.

*அந்தப் பைத்தியக்கார அரசனின் நோய்*

*இந்தச் சொல்லைக் கேட்ட கணத்திலேயே தொலைந்து போயிற்று.*

அரசனுக்கு சடோரி, அதாவது ஞானம் கிடைத்த துபோல. அவனால் நம்ப முடியவில்லை, அவ்வளவு அதிர்ச்சியாக இருந்தது. அவன் கண்கள் திறந்தன.

*அற்புதம் நடப்பதுபோல்*

*சிலையை வணங்கும் இருவரின் போலித்த னம் அவனுக்குப் புரிந்தது.*

*உடனேயே பண்டிதர் மற்றும் சயீதின் தலை களை வெட்டச் சொன்னான்,*

*வேசியை விடுதலை செய்து அனுப்பினான்.*

இது ஒரு உருவக வடிவான கதை. இக்கதைகள் எல்லாம் நீதிக்கதைகள், சரித்திர சான்றுடையவை அல்ல. இந்த நீதிக்கதை சொல்வது என்னவென் றால், இறைவனின் முன் நீங்கள் பொய்களைச் சுமந்து சென்றீர்களானால், நீங்கள் வெறுமையாக் கப்படுவீர்கள். நுனி தறிக்கப்பட்டு வெவ்வேறாயிடு வீர்கள், மண்ணோடு மண்ணாக்கப்பட்டு விடுவீர் கள். நீங்கள் இறைவனின் முன்னால் நிற்க முடி யாது. உங்கள் பொய்மையே உங்களைக் கொன்று விடும். பிறகு வேசியை விடுதலை செய்தான். உண் மையின் முன்னால், பணிவின் காரணமாக வரும் சக்தி மட்டுமே விடுதலை பெறும், மாசற்ற தன்மை

யினால் வெளிவரும் அறிதல் மட்டுமே விடுவிக்கப் படும்.

அகங்காரத்திலிருந்து விடுபட்டவர்க்கு மட்டுமே விடுதலை கிட்டும். விடுதலை என்றால் அகங்கா ரத்திலிருந்து விடுதலை. இதுவே மோட்சம், நிர் வாணம், வீடுபேறடைதல். ஒரு வேசிகூட அந்த விடுதலையைப் பெறக் கூடிய நிலையில் ஒரு பண்டிதர் அதைத் தவற விடலாம். முகமது நபி யின் வம்சாவளியினர்கூட அதைத் தவறவிட முடி யும். ஒன்றே ஒன்று முடிவானது: நீங்கள் உங்கள் அகங்காரத்தைத் தற்காத்துக் கொண்டிருந்தீர்கள் என்றால் நீங்கள் இறைவனைத் தவற விடுவீர்கள். அகங்காரத்தை விடத் தயாரானால் நீங்கள் இறை வனைக் காணலாம். அந்த விடுதலில்தான் காணு தல் இருக்கிறது.

அறிந்தோரெல்லாம் சொல்வது: "மனிதனும் இறைவனும் வெவ்வேறல்ல." ஆனால் ஏன் அவர் கள் பிரிந்து இருக்கின்றனர்? இறைவனின் தரப்பி லிருந்து நீங்கள் தனியாக இல்லை, உங்கள் தரப் பிலிருந்துதான் இறைவனிடத்திலிருந்து தனித்து நிற்கின்றீர்கள். உங்கள் சிந்தனைதான் உங்களைத் தனியாக்குகிறது. உண்மையில் நீங்கள் தனித்து இல்லை; அது நம்பவைக்கப்பட்ட ஒன்று, அது தானாகவே இயங்கும் அறிதுயில். நீங்கள் தனித்து இருப்பதாக நீங்களாகவே தொடர்ந்து சிந்தித்து, சிந்தித்து இறுதியில் இந்தக் கருத்தே உங்களுக் குள் நிலைபெற்று விட்டது.

இதுதான் அகங்காரம். இயல் உலகிலிருந்து நாம் தனித்து இருக்கிறோம் என்று நீங்களே சிந்தித்

துக் கொண்டிருப்பதுதான் அகங்காரம். இயல் உலகோடு ஒன்றாய் இருக்கிறோம் என்று நீங்கள் சிந்திப்பது பற்று உறுதி, நம்பிக்கை.

உங்களையே காப்பாற்றிக் கொள்ளாதீர்கள். காப்பாற்றுதல் என்றால், நீங்கள் தனித்து இருக்கின்றீர்கள் என்ற பொய்யான கருத்தை நம்புகிறீர்கள். ஆற்றை தள்ள முயற்சிக்காதீர்கள். இயல் உலகோடு, உளதாம் தன்மையின் போக்கோடு பாய்ந்தோடுங்கள். உயிரோடு இருக்கும்போது உயிரோடு இருங்கள். இறக்கும்போது உண்மையிலேயே மரணமடையுங்கள். இறந்துவிட்டால் - இறந்தவராய் இருங்கள். விழித்திருக்கும்போது, விழித்திருங்கள். உறங்கும்போது உறக்கம் கொள்ளுங்கள். உங்களுக்கும் உங்களைச் சுற்றி இருக்கும் வாழ்க்கைக்கும் இடையே எந்தப் பிரிவும் இருக்க வேண்டாம்.

மேலும் 'அறிவு' என்று அழைக்கப்படும் நிலையிலிருந்து செயல்படாதீர்கள்; அதுதான் பிரிவை ஏற்படுத்துகிறது. எப்போதும் 'அறிவு இன்மை' என்ற நிலையிலிருந்து செயல்படுங்கள், மனமற்ற நிலையிலிருந்து செயல்படுங்கள். கடந்தகாலமற்ற நிலையிலிருந்து செயல்படுங்கள். நிகழ்காலத்தில், செயல்படுங்கள். மெய் ஆதாரத்தோடு செயல்படுங்கள். நீங்கள் யாராய் இருந்தாலும், நீங்கள் ஒரு வேசியாய் இருக்கலாம் - நீங்கள் நிகழ்காலத்திலிருந்து செயல்பட்டால், மெய் நிலைக்கு உண்மையான வகையில் எதிர்வினையாற்ற முடிந்தால், மெய் ஆதாரத்தோடு, நேர்மையாக செயலாற்ற முடிந்தால் உங்களுக்கும் இறைவனுக்கும் இடையே எந்தத் தடையும் இல்லை.

தெய்வீகத்தோடு நீங்கள் சந்தித்து ஒன்றெனக் கலந்திட உதவும் ஒரே விஷயம் என்னவென்றால் அது நிகழ்காலத்தில் மெய்யான எதிர்வினையாற்றல் மட்டுமே. வாழ்க்கை ஒரு உண்மையான பதிலாற்றுதல். அதை நான் பிரார்த்தனை என்று அழைப்பேன்.

இன்று இது போதும்.

## முதல் கேள்வி:

*தினமும் நீங்கள் 'பூமியைப்' பற்றியும் 'வானத்தைப்' பற்றியும் பேசுகிறீர்கள் - அதாவது உள்ளார்ந்த ஆற்றல் மற்றும் முழு நிறைவு பற்றி பேசுகிறீர்கள். ஆனால் இடையில் இருக்கும் 'ஏணி' எது? இடையில் நடக்கும் வழிமுறை என்ன? ஏன் அந்த 'ஏணியைப்' பற்றி நீங்கள் பேசுவதில்லை?*

ஏணி என்று ஏதுமில்லை. இடையில் எதுவுமில்லை. இடைவெளியே இல்லை, அனைத்துமே ஒன்றுதான். பூமியும் வானும் தொடர்பற்று இல்லை. அவை இரண்டும் ஏற்கனவே சேர்ந்துதான் உள்ளன. அவை இரண்டும் ஆழமாக, ஒன்றிணைந்த நிலையில் உள்ளன. ஆழமான தொடர்பில் உள்ளன. இவ்வுலகிற்கும் மற்றொன்றிற்கும் இடையே வெற்றிடம் உள்ளது என்று நமக்கு கற்றுக் கொடுக்கப்படாததினால்தான் ஏணி என்ற கருத்து இடம் பெறுகிறது. இடைவெளி என்று ஏதுமில்லை, அதைப் பாலமிட வேண்டியதில்லை. அக்கரை இக்கரையில்தான் உள்ளது. நீங்கள் எங்கேயும் செல்லப் போவதில்லை. எதையும் செய்யப் போவதில்லை. உள்ளார்ந்த ஆற்றல் உண்மையானது, நடைமுறையில் இருக்கிறது, மேலும் முதல் அடிதான் இறுதி அடியும் கூட. ஆனால் மனதால் இதைக் கருத்தாக்கம் செய்ய முடியவில்லை. மனம்

எப்போதும் படிகளைக் கேட்கிறது, ஏணிகளைக் கேட்கிறது.

மனதால் ஒரு ஏணியைச் சமாளிக்க முடியும். 'குவாண்டம் லீப்' என்று அழைக்கப்படும் பெரும் தாவலை மனதால் சமாளிக்க முடியாது. மனதால் ஒரு புரட்சியை ஏற்றுக்கொள்ள முடியாது. அதனால்தான் மனம் என்றுமே புரட்சிகரமாய் இருப்பதில்லை, அது மரபு வழியைப் பின்பற்றுகிறது, எப்போதும் மரபொழுங்கு சார்ந்தது. தன் இயல்பிலேயே மனம் புரட்சிகரமாக இருக்க முடியாது.

உடலும் ஆன்மாவும் வெவ்வேறு. கடவுளும் உலகமும் இரண்டு என்று திரும்பத் திரும்ப உங்களுக்கு கற்றுக் கொடுக்கப்பட்டுள்ளது. மேலும் உலகத்தை எதிர்த்துக் கடவுளைக் கண்டுபிடிக்க வேண்டும், உலகத்தைத் தாண்டிச் சென்றுதான் இறைவனைத் தேட வேண்டும் என்று உங்களுக்குக் கற்றுக் கொடுக்கப்பட்டுள்ளது. நான் உங்களுக்கு முற்றிலும் புதிதாய் ஒரு செய்தியைத் தருகிறேன். நீங்கள் வெளியே போகவேண்டாம், நீங்கள் உள்ளே செல்லவேண்டும். வெளியே அப்பாலில் உள்ளது அகத்தில் இருக்கிறது, அகம் புறத்தில் இருக்கிறது. அனைத்துமே இங்கே இப்பொழுது இருக்கிறது. இந்தக் கணத்தில் முழு உலகமே அதன் அனைத்து சாத்தியக்கூறுகளுடன் இங்கே பிரசன்னமாய் இருக்கிறது. தேவை உணர்வு நிலையில் ஒரு மாற்றமே தவிர, ஒரு ஏணி அல்ல. அது ஒரு முழு உருமாற்றமேயன்றி ஏணியில்லை. எல்லாம் அதேபோல் இருக்கிறது, அந்தப் பெரும் தாவல் உங்களுக்குள்ளே நடக்கிறது. ஏற்கனவே இருந்தவற்றை, நீங்கள் பார்க்கத் தவறியதைத் திடீரெனப்

பார்க்கத் தொடங்குவீர்கள் ஆனால் அவை எப்போதுமே இருந்தன.

நீங்கள் சில ஜெஸ்டால்ட் வகை உளவியல் நூல்களைப் பார்த்திருக்கிறீர்களா? அதில் ஒரு வகையான சித்திரங்கள் தீட்டப்பட்டு இருக்கும். பிரபலமான ஒரு படத்தில் ஒரு வயதான பெண் இருப்பாள், அதே படத்தின் வரைகோடுகளில் ஒரு இளம் பெண்ணும் மறைந்திருப்பாள். நீங்கள் வயதான பெண்ணைப் பார்க்க முடியும். நீங்கள் தொடர்ந்து கூர்ந்து கவனித்துக் கொண்டே இருக்கையில் சட்டென ஒரு கணத்தில் உங்கள் உணர்வுநிலை வேறு ஒரு ஜெஸ்டால்ட் படத்தை நோக்கி நகரும். நீங்கள் இளம் பெண்ணின் படத்தை பார்த்துக் கொண்டிருப்பீர்கள். நீங்கள் தொடர்ந்து இளம் பெண்ணைப் பார்த்துக் கொண்டேயிருக்கையில் திடீரென ஒரு மாற்றம் ஏற்படும். வயதான பெண்ணின் உருவம் உங்கள் கண்களுக்குப் புலப்படும். நீங்கள் இரண்டு உருவங்களையும் பார்த்த பிறகு, இரண்டும் இருக்கின்றன என்று உங்களுக்கு நிச்சயமாகத் தெரிந்த போதிலும், உங்களால் இரண்டு உருவங்களையும் ஒரே சமயத்தில் பார்க்க முடியாது. காரணம் வயதான பெண்ணும் அதே கோடுகளைக் கொண்டுள்ளார், இளம் பெண்ணிற்கும் அதே கோடுகள்தாம். நீங்கள் ஏதாவது ஒரு உருவத்தைத்தான் பார்க்க முடியும், வேறு ஒரு சமயத்தில் மற்றொன்றைப் பார்க்க முடியும். ஆனால் இரண்டையும் ஒரே நேரத்தில் பார்க்க முடியாது.

நீங்கள் உலகைக் கண்டால் கடவுளைக் காண முடியாது, அது உண்மைதான் - ஆனால் கடவுள் உலகிற்கு நேர் எதிரானவர் அல்ல. அவர்

வேறு ஒரு ஜெஸ்டால்ட் அவ்வளவே. நீங்கள் கடவுளைக் கண்டால், உலகம் மறைகிறது. இதனால் நீங்கள் உலகைக் கடந்துபோய் விட்டீர்கள் என்று அர்த்தமல்ல. அதே உலகம்தான், உங்கள் பார்வை ஒரு புதிய ஜெஸ்டால்டை இனம் கண்டு கொண்டது அவ்வளவே. இதனால்தான் நீங்கள் காலங் காலமாய் காண்பீர்கள், சாராவக்கிரர், எபிக்யூரஸ், கார்ல் மார்க்ஸ் என்று உலகின் பொருளியல்வாதிகள் எல்லோரும் சொல்வது திடப்பொருள் மட்டுமே உள்ளது, உணர்வுநிலை என்பது ஒரு உப-பொருள், ஒரு தோற்றம். உணர்வுநிலை கற்பனையானது, திடப்பொருள் மட்டுமே உண்மையானது. இது ஒரு ஜெஸ்டால்ட் பார்வை. அவர்கள் சொல்வதும் தவறில்லை.

வேறு ஒரு பாரம்பரியம் இருக்கிறது. ஆதிசங்கரர், வேதாந்திகள், பெர்க்லே போன்றோர், இவர்கள் உலகம் என்பது இல்லை, கடவுள் மட்டுமே இருக்கிறார், உணர்வுநிலை மட்டுமே உள்ளது. திடப்பொருள் எல்லாம் மாயை. இவர்களும் தவறாகச் சொல்லவில்லை. இது மற்றொரு ஜெஸ்டால்ட் பார்வை. ஆனால் இருவருமே முற்றிலுமாக உண்மை சொல்லவில்லை.

புரிதல் உடைய மனிதன், 'கடவுளை உலகமாகப் பார்க்கலாம், உலகைக் கடவுளாகப் பார்க்கலாம்' என்று சொல்வான்.

வில்லியம் ஜேம்ஸ் சொன்னதாகத் தெரிவது என்னவென்றால், "பொருட்களை ஒன்றுசேர்த்து உலகை உருவாக்குவதில் ஒரு வகைதான் மனம், மற்றொரு வகை திடப்பொருளாகும்" அதாவது

விஷயங்களை ஒன்றுசேர்த்து அமைக்கும் வெவ் வேறு வழிகள் என்று புரிந்து கொள்ளலாம். மனம் பொருளுக்கு எதிரானதும் அல்ல, பொருளும் மன திற்கு எதிரானதல்ல. நீங்கள் ஒரு உடல் - இது ஒரு ஜெஸ்டால்ட்; நீங்கள் ஒரு ஆன்மா - இது வேறு ஒரு ஜெஸ்டால்ட். இரண்டிற்கும் இடையே ஏணி எதுவும் இல்லை. ஏனென்றால் இவை இரண்டும் - ஜெஸ்டால்ட்ஸ் - தோற்றங்கள்.

படத்தை மறுபடியும் நினைவு கூர்ந்து பாருங் கள். வயதான பெண்ணிற்கும் இளம் பெண்ணிற் கும் இடையே ஏணி இருக்கிறதா? ஏணி இல்லை, ஏனென்றால் இரண்டுமே ஒரே வரைகோடுக ளைக் கொண்டவை. எதுவும் மாறவில்லை, சித் திரமும் அதேதான். நீங்களும் எங்கேயும் போக வில்லை... ஆனால் ஒரு மாற்றம், உணர்வுநிலை யில் ஒரு சுண்டி இழுத்தல் போதும். நீங்கள் ஒரு வகையில் விஷயங்களைப் பார்க்கின்றீர்கள். விஷயங்களை ஒரு வகையில் அடுக்குகிறீர்கள். மற்றொன்றில் வேறு வகையில் பார்க்கின்றீர்கள். பொருளியல்வாதிகள் கூறுவது முற்றிலும் சரி யில்லை, அதில் உண்மை பகுதியளவானது. அதே போல் வேதாந்திகள் சொல்வது சரி என்றில்லை, அவர்கள் சொல்வதிலும் உண்மை பகுதியளவான துதான். இருவர் சொல்வதும் முழுமையற்றது. இத னால்தான் இவர்களின் வாதம் தொடர்ந்து இருந் துகொண்டே இருக்கும், முடிவுறாது.

இரண்டு நபர்கள் வாதம் செய்வதை எண்ணிப் பாருங்கள். ஒருவர் சொல்கிறார், இந்தப் படத் தில் உள்ளது இளம் பெண். மற்றவர் சொல்கி றார், இல்லை, அதில் இருப்பது வயதான பெண்.

அவர்கள் தொடர்ந்து விவாதம் செய்து கொண்டே இருக்கலாம், அவர்களிடம் உள்ளது பகுதியள வான உண்மை, அதனால் ஒரு தீர்க்கமான முடி விற்கு வரமுடியாது. இருவருக்கும் இடையே ஒருங் கிணைவு சாத்தியமில்லை. ஒருவர் சொல்வதை மற்றவர் புரிந்து கொள்ளவே முடியாது. ஏனென் றால் இளம் பெண்ணைப் படத்தில் கண்டவர் எவ் வாறு அதே படத்தில் வயதான பெண்மணியும் இருக்கிறார் என்பதை நம்புவார்? மற்றவரும் இதே போல்தான். ஆனால் தலைகீழாக. பொருளியல் வாதியும், வேதாந்தியும் தொடர்ந்து வாதம் செய்து கொண்டேயிருப்பார்கள்.

நான் இரண்டும் இல்லை. நான் வெறுமனே உங்களுக்குச் சொல்வது, உண்மையில் இருப் பதை. அதாவது இரண்டுமே உளதாயிருக்கின் றன, ஆனால் இரண்டும் வெவ்வேறாக இல்லை. நாம் அவற்றை இரண்டென அழைப்பதற்கு கார ணம் நாம் அவற்றை இரண்டு வழிகளில் பார்க்கின் றோம்.

நீங்கள் ஏணியைப் பற்றிக் கேட்டீர்கள். ஏணி என்று ஏதுமில்லை. நான் உங்களுக்கு ஒரு படிப்ப டியான மெதுவாய் செல்லும் வழிமுறையை இங்கே தருவதாய் இல்லை. அப்படித்தான் பல ஜென் மங்கள் வாழ்ந்து வந்தீர்கள். மெதுவாகப் படிப்படி யாக நீங்கள் அடைந்து விடலாம் என்று நினைத் துக் கொண்டிருந்தீர்கள். என் கருத்தைப் புரிந்து கொண்டால் இங்கேயே இத்தருணத்தில் நீங்கள் வீடுபேறு அடைய முடியும். ஆனால் நீங்கள் ஏணி யைத் தேடிக் கொண்டிருக்கிறீர்கள்.

வேறு எவரோ கேட்டார்கள்: "பகவான், இந்தச் சொற்பொழிவுகள் சூஃபிசம் பற்றி அல்லவா இருக்கும் என்று நினைத்தோம், நீங்கள் சூஃபிசம் பற்றி எதுவும் சொல்லவில்லையே, நீங்கள் பல அழகான விஷயங்கள் சொல்கிறீர்கள். ஆனால் அவை சூஃபிசம் இல்லையே."

உண்மைதான், நான் சூஃபிசம் பற்றிப் பேசவில்லை, நான் சூஃபிசம் பேசுகிறேன், சூஃபிசம் பற்றியல்ல. நான் ஒரு சூஃபி, அதனால் நான் சொல்வதெல்லாம் சூஃபிசம்தான். அப்பால் கடந்து செல்ல நான் உங்களுக்குப் படிகள் அமைத்துத் தரவில்லை. நான் எளிமையாக என் அனுபவங்களை உங்களுக்கு அளிக்கிறேன். நான் வெறுமனே என் ஜீவனை உங்களுடன் பகிர்ந்து கொள்கிறேன். இது ஒரு செய்தி அல்ல, இது பகிர்தல். இது கற்றுக் கொடுத்தல் அல்ல, ஒரு பகிர்ந்தளிப்பு. என்னுடன் இருப்பதால் அடைய வேண்டியது ஒன்றும் இல்லை, இலக்குகள் யாவையும் பொய், அனைத்துமே அடையப் பெற்றன என்பது உங்களுக்கு புலப்படட்டும். நீங்கள் 'ஞானம்' அடைய வேண்டும் என்பது என் விருப்பம் அல்ல. நீங்கள் ஏற்கனவே 'ஞானம்' உடையவர் என்று நான் பிரகடனம் செய்கிறேன்! ஆனால் நீங்கள் தேவையான அளவு துணிவு காட்டுவதில்லை; நீங்கள் சொல்வது: "நான் எப்படி ஞானம் அடைந்தவனாக இருக்க முடியும்? நான் காத்திருக்க வேண்டும். என்றோ ஒரு நாள் நான் ஞானம் பெறுவேன்" நீங்கள் அவ்வளவு கோழையானவர் - அதனால்தான் உங்கள் இறைத்தன்மையை அடையாளம் காணக்கூட

உங்களுக்கு அவகாசம் தேவைப் படுகிறது. உங்களையே நீங்கள் அந்தளவு பழித்துக் கொண்டதால், நீங்களே கடவுளாக இருக்க முடியும் என்பதை உங்களால் கருத முடியவில்லை, உங்களால் எப்படிப் புத்தர் கடவுளாக இருக்க முடியும், ஏசு கடவுளாக இருக்க முடியும் என்று கருத்தாக்கம் செய்ய முடியவில்லை.

ஏசு கிறிஸ்து, "நான் கடவுள்" என்று பிரகடனம் செய்யும்போது, அவர் உங்களுக்குச் சொல்வது என்னவென்றால், "நீங்கள் கடவுள், இதைச் சொல்வதற்கு என்னிடம் துணிவு இருக்கிறது. நீங்களும் பங்கெடுத்துக் கொள்ளுங்கள். கருத்தை கவனியுங்கள். உங்களைப் போன்றே எலும்பும் சதையுமாய் நானும் இருக்கிறேன், உங்களை போன்ற உடல் உடையவன்தான் நான்" கிறிஸ்துவைப் பற்றி சிறப்பாக ஏதுவும் இல்லை. சிறப்பானது ஒன்று மட்டும்தான், அது அவருடைய துணிவு. மற்றபடி அவர் உங்களைப் போன்றவர்தான். நான் உங்களைப் போன்றவன்தான். ஒரே ஒரு விஷயம், நான் என்னை மதிக்கிறேன். நீங்கள் உங்களையே மதிப்பதில்லை, நான் என்னையே நேசிக்கிறேன். நீங்கள் உங்களையே நேசிப்பதில்லை.

நீங்கள் சந்தேகத்திற்கு உரியவர்கூட. அதனால் தான் நான் என்னை பகவான் என்று அழைத்துக் கொள்கிறேன். இங்கே கேள்விகள் உள்ளன: "ஏன்". ஏனென்றால் நான் அஃதே - நான் பகவான், அதுமட்டுமல்ல நீங்களும்தான், ஆனால் உங்களிடம் துணிவு இல்லை. இந்தப் புத்த களம் உருவாக்கப்படுவதே நீங்கள் துணிவு கொள்ளத்தான், நீங்கள் தைரியசாலி ஆகத்தான், நீங்கள் உள்ளதை

உள்ளபடி சொல்வதற்காகத்தான், உள்ளதை உள்ளபடியே பார்ப்பதற்காகத்தான்.

நான் உங்களுக்கு எந்த ஏணியும் தரப்போவதில்லை. நீங்கள் அதை மிகவும் விரும்புவீர்கள், ஏனென்றால் நீங்கள் தள்ளிப்போடலாம். நான் உங்களுக்கு தெளிவாக கூறுவது, குதியுங்கள்... உளதாய் இருங்கள். ஒரு 'குவாண்டம்', பெரும் தாவல் எடுங்கள்!

உங்களுக்கும் கடவுளுக்கும் இடையே நிலையங்கள் கிடையாது. உங்கள் துணிவில் உங்களை ஒரு முகப்படுத்திக் கொள்ளும் கணமே நீங்கள் கடவுளாகிறீர்கள். திடீரெனப் பார்வைக் கோணம் மாறுகிறது. கடவுள் கோடிக்கணக்கான வடிவங்களில் வெளிப்படுத்திக் கொள்கிறார். இந்த முழு இயல் உலகமே கடவுளாகின்றது. யாராவது "நான் கடவுள், நீங்கள் கடவுள் இல்லை" என்று சொல்வார்களானால், அவர் ஒரு ஏமாற்றுப் பேர்வழி. அவர் ஒரு பகடி, அவர் விளையாடுகிறார், அகங்காரப் பயணம் செய்து கொண்டிருக்கிறார் என்று பொருள்.

## இரண்டாவது கேள்வி:

*இரண்டு வாரங்களுக்கு முன்பு புனேவிற்கு திரும்பியதிலிருந்து நான் உங்கள்மீது பற்றுக் கொண்டுள்ளதாக உணர்கிறேன். முன்னர் நீங்கள் எவ்வளவு நாட்கள் இந்த உடலில் இருப்பீர்கள் என்பதைப் பற்றி நான் அதிகம் சிந்தித்தது இல்லை. ஆனால் இப்போது நீங்கள் நீண்ட காலம் இருக்க வேண்டும் என்று விரும்புகிறேன். என்னுடைய பல பற்றுதல்க*

ளைப் போலவே, என் வருங்காலத்தில் உங்களையும் என் பற்றுதலாகக் கருதுகிறேன். மேற்கில் இருந்ததைவிட உங்கள் தேக அருகாமையை ஆழமாக விரும்புகிறேன். இது ஒரு சீடர் குருவிற்கு அருகில் வருவதற்கான அடியெடுப்பா, அல்லது நான் உணர்ந்து கொள்ள வேண்டிய தவறு ஏதாவது இருக்கிறதா?

சம்போதி என்மீது பற்று கொள்வதுதான் சீடராகி இருப்பதற் கான தொடக்கம். இது நீங்கள் முன்னர் அறிந்த வகையான பற்றுதல் இல்லை. அந்தப் பற்றுதல் எல்லாம் ஒரு வகையான அடிமைத்தனம். நீங்கள் உங்களுடைய சங்கிலிகளோடு கட்டுண்டு இருந்தீர்கள், இப்போது நீங்கள் சுதந்திரத்தோடு பற்றுக் கொண்டு இருக்கிறீர்கள். குரு மீது பற்று என்பது நேசத்தில் இருப்பதாகும், சுதந்திரத்தின் மீது நேசம் கொள்வதாகும்.

சுதந்திரத்தை உங்களுக்கு கிடைக்கச் செய்பவர் தான் குரு. பற்றுக் கொண்டு இருங்கள், கவலை வேண்டாம். இந்த வார்த்தையால் ஏமாற வேண்டாம். இந்தப் பற்றை நீங்கள் முன்னர் அறிந்ததாக நினைக்க வேண்டாம். அந்தப் பற்றுதல்கள் அனைத்தும் பாதையில் வந்தவை. அவை வரும், போகும், அவை க்ஷண நேரத்திற்கானவை. இந்தப் பற்று உங்களை விட்டுப் போகாது. பற்று விட்டுப் போவதற்குள் நீங்கள் போய்விடுவீர்கள், நீங்கள் மறைந்துவிடுவீர்கள். இந்தப் பற்று உங்களைக் கொல்லப் போகிறது, அழிக்கப் போகிறது. மற்ற எல்லாப் பற்றுகளும் உங்களை அழிப்பதற்கானதல்ல, அவை உங்களைப் பலப்படுத்தும். நீங்கள் ஒரு

ஆண் அல்லது பெண்ணுடன் நேசம் கொள்கிறீர் கள், பற்று ஏற்படுகிறது. மிகவும் அதிகமாகப் பற் றுடன் இருக்கிறீர்கள். ஏனென்றால் அது உங்கள் அகங்காரத்தை அதிகமாக்குகிறது. உங்களுக்கு ஒரு முக்கியத்துவம் தருகிறது. குறிப்பிட்ட ஒரு வர் என்ற எண்ணத்தைத் தருகிறது. பணத்தின்மீது பற்று இருப்பதற்குக் காரணம் அது உங்கள் அகங் காரத்தை அதிகமாக்குகிறது. நீங்கள் அதிகாரம், மரியாதை, மதிப்பு, அறிவு எல்லாவற்றின்மீதும் பற் றுக் கொண்டுள்ளீர்கள், ஏனென்றால் அவையெல் லாமே உங்களுக்கு 'நீங்கள் இருக்கிறீர்கள்' என்ற உணர்வைத் தருகிறது.

குருவிடம் பற்றுக் கொண்டு இருப்பது தற்கொ லைக்கு ஒப்பானது. இதுதான் சரியான தொடக் கம், சம்போதி. இப்போது நீங்கள் உண்மையிலேயே சீடராகிக் கொண்டு வருகிறீர்கள். சம்போதி இங்கே வந்தது தற்செயலானது. அமிதாப்பினால் சம்போதி இங்கே வந்தார். அவர் அமிதாப்மீது ஆழ்ந்த பற்று கொண்டுள்ளார். அமிதாப் இங்கே வந்தவுடன், அவருடன் வந்துவிட்டார். அமிதாப் சன்னியாசம் வாங்கிவிட்டதால், இவரும் சன்னியாசியாகி விட் டார். ஆனால் அமிதாப்பின் மூலமாக என்னுடன் சேர்ந்து கொண்டார். இப்போது முதன் முறையாக என்னை நேரடியாக சம்போதி அணுகுவதை அவர் கண்களில் என்னால் பார்க்க முடிகிறது. அதனால் தான் இந்தப் பற்றுதல் பிரச்சினை எழுகின்றது. ஆனால் இந்தப் பற்றுதல் மிகவும் விஸ்தாரமானது, பிரம்மாண்டமானது, நீங்கள் அதில் தொலைந்து போவீர்கள்.

இது முற்றிலும் புதியது, அச்சம் எழும், மனம் இது ஒரு வகைப் பற்றுதல் எனப் பகுத்தறியும். ஆனால் மனம் வேறு எந்தப் பற்றுதல்களுக்கும் எதிராய் இருந்ததில்லை. அஞ்சியதில்லை. உண்மையில் மனம் எப்போதும் பற்றுதல்களைச் 'சார்ந்து'தான் இருந்திருக்கிறது. இப்பொழுது முதன்முறையாக மனம் சொல்லும், "நீ என்ன செய்து கொண்டிருக் கிறாய், நீ பற்றுக் கொண்டிருக்கிறாய்." இப்போது மனம் துறவியாக மாறிப் பிரசங்கம் செய்யத் தொடங் கும். "இது பற்றுதல், இதில் சிக்கிக் கொள்ளாதே, எச்சரிக்கை, நீ பொறியில் விழுந்து கொண்டிருக்கி றாய்." இதே மனம் உங்களிடம் இந்த விஷயத்தை முன்னர் சொன்னதேயில்லை. உண்மையில் அது உங்களை மென்மேலும் ஆழமான பற்றுதல்க ளுக்கு இட்டுச் சென்றுள்ளது. பற்றுதல்கள் மூலமா கத்தான் மனம் உளதாயிருக்கிறது.

இப்போது இது முற்றிலும் வேறு வகையான பற்று தலாகும் - மனம் அச்சம் கொள்கிறது. மனம் சொல் லும்: "இந்த அடியை எடுத்து வைத்தாயானால் அது தற்கொலை போன்றது." மனம் புதிய பகுத்தறிவு வாதங்களை உருவாக்கும், தத்துவார்த்தம் செய் யும்.

சம்போதி நீங்கள் சொல்வது, "இரண்டு வாரங் களுக்கு முன்பு பூனேவிற்கு திரும்பியதிலிருந்து..." நீங்கள் விழிப்புணர்வு அடைந்தது மட்டுமல்ல, இரண்டு வாரங்களுக்கு முன்பு நீங்கள் இங்கே வந்தபோது, நான் உங்களை முதல் முறையாகப் பார்த்தேன், நான் உங்கள் கண்களைக் கவனித் தேன். இப்போது இடையில் அமிதாப் இல்லா மல் அவை என்னை நோக்கித் திரும்புகின்றன.

இது நல்ல அறிகுறி. இப்போது நீங்கள் உண்மை யிலேயே சன்னியாசி ஆகிவிட்டீர்கள். இப்போது தீட்சை பெறுவது நடக்கின்றது. முதல் முறை அது ஏனோதானோ என்று இருந்தது. நான் உங்களுக்கு தீட்சை கொடுத்ததற்கு காரணம், உங்களின் உள் ளார்ந்த ஆற்றல் தெரிந்ததினால், அதைக் கண் டேன், வெகு சீக்கிரத்தில் என்மேல் நேசம் கொள் வீர்கள், இப்போதைக்கு இங்கேயே சுற்றிக் கொண் டிருங்கள், எந்தச் சாக்கும் போதுமானது, அமி தாபை இதற்கான அழகான சாக்காக்கிக் கொள் ளுங்கள்.

இது அமிதாப்பிற்கும் உதவியாக இருக்கும். அமி தாப்பின் பளு இறக்கிவிட்டாற்போல் இருக்கும். சம் போதி நேரடியாக என்னுடன் தொடர்பு கொள்ள வேண்டும், தன் மூலமாக அல்ல என்பதை அமி தாப் விரும்புகிறார். இது அமிதாப்பிற்கு சற்றே சங்க டமாயிருந்தது. இப்போது இந்த விஷயம் நடந்ததில் அமிதாப்பிற்கு மகிழ்ச்சிதான்.

இனித் தயக்கம் கொள்ளாதீர்கள்.

*இரண்டு வாரங்களுக்கு முன்பு புனேவிற்கு திரும்பியதிலிருந்து நான் உங்கள்மீது பற்று கொண்டுள்ளதாக உணர்கிறேன். முன்னர் நீங்கள் எவ்வளவு நாட்கள் இந்த உடலில் இருப்பீர்கள் என்பதைப் பற்றி நான் அதிகம் சிந்தித்தது இல்லை. ஆனால் இப்போது நீங் கள் நீண்ட காலம் இருக்க வேண்டும் என்று விரும்புகிறேன்.*

சீடர் என்ற நிலை பிறக்கிறது.

மேலும் குரு அவரது ஆன்மா மட்டுமல்ல, உடலும்கூட. நீங்கள் குருவிற்கு வெகு அருகில் வரும்போது முதலில் உங்களை மாற்றுவது குரு வின் உடல்தான். இதைக் கேட்டதில் ஆச்சரி யம் அடைவீர்கள், நான் இதை முன்னர் சொன் னதில்லை. அவரின் உடற்பொருள் உங்களுடை யதை மாற்றத் தொடங்கும். அவரின் உடற்பொருள் தொற்றிக் கொள்ளும் தன்மையடையும். உங்கள் ஆன்மா பின்னர் மாற்றப்படும், அதைத் தொடக் கத்தில் செய்ய முடியாது. விஷயங்கள் வெளியி லிருந்துதான் உள்ளே செல்ல முடியும். முதலில் கோயில் மாற்றப்பட வேண்டும். பிறகுதான் தெய் வம் மாற்றப்பட வேண்டும். ஆகையினால் குருவின் உடலின் மீது இயற்கையாகவே ஒரு ஆழ்ந்த பற்று தல் ஏற்படுகிறது. காலங்காலமாய் பல குருக்களின் உடல்கள் பாதுகாக்கப்படுவது வெறும் தற்செயலா னது அல்ல. திபெத்தில் இத்தனை வருடங்களாக தொண்ணூற்றி ஒன்பது உடல்களைக் காப்பாற்றி வந்திருக்கின்றனர். எந்த பருப்பொருளில், எந்த உடலில் ஞானம் கிடைக்கப் பெற்றதோ அந்த உட லின் தன்மை உருமாறுகிறது. அது புதிய தாளத் துடன் அதிர்வுறுகிறது. அதன் அருகில் இருந் தால், அதன் அதிர்வலைகளால் ஊடுருவப்படுவீர் கள். குருவின் உடலைத் தொடுவது என்பது அவர் உடலை உண்பது போன்ற ஒன்று. அதனால்தான் ஏசு சொல்கிறார்: "என்னைப் பருகுங்கள், என்னை உண்பீர்கள்."

ஒரு குரு உண்ணப்பட வேண்டும், பருகப்பட வேண்டும். குரு மென்று செரிக்கப்பட வேண்டும், இதனால் அவர் உங்கள் உயிருருவின் ஆழமான

பகுதிகளுக்குள் நுழைய முடியும். உடல்தான் தொடக்கம், அதனால் தொடக்கத்தை உருமாற்ற வேண்டும். உருமாற்றப்பட்ட உடலுக்குத்தான் ஒரு உருவமாற்றம் அடைந்த ஜீவனை அடையாளம் காணமுடியும். உடலின் வேறு வகையான தாளத்தில்தான் நீங்கள் கடவுளை அறிந்து கொள்ளமுடியும், ஏனென்றால் அப்போதுதான் ஜெஸ்டால்ட் (பார்க்கும் கோணம்) மாறும்.

ஆக சீடருக்குக் குருவின் உடலின்மீது பற்றுதல் ஏற்படுவது இயற்கைதான். குரு மறைந்த பிறகும்கூட அவர் உடல் வழிபடப்படும். முகமதின் முடி ஸ்ரீநகரில் ஒரு மசூதியில் வைக்கப்பட்டுள்ளது போல - ஒரே ஒரு ஒற்றை முடி முகமதின் அதே அதிர்வைத் தருகின்றது. அதே வகையில் அது அதிர்வு உண்டாக்குகிறது. அது மிக நுணுக்கமான செய்தியைத் தருகிறது. உண்மையான குரான் தலைமுடியில் அடங்கியுள்ளது.

எந்த மரத்தடியில் அமர்ந்து புத்தர் ஞானம் பெற்றாரோ அந்த போதிமரம் இருபத்தைந்து நூற்றாண்டுகளாகப் பேணிக் காக்கப்பட்டு வருகிறது. ஏனென்றால், அந்த மரத்திற்கு வேறு வகையான அதிர்வலைகள் இருக்கின்றன. உலகில் வேறு எந்த மரத்திற்கும் அந்த அதிர்வலை கிடையாது. அது பிரத்தியேகமானது. ஏதோ ஒன்று நடப்பதை அம்மரம் பார்த்திருக்கிறது. புத்தர் உருமாறியவுடன், இயற்கையாகவே அந்த மரம் அதிர்வலைகளை உள்வாங்கிக் கொண்டது. அவற்றைப் பருகியது. மரத்தின் ஒவ்வொரு நாரிலும் அந்த அதிர்வுகள் ஊடுருவின. அதே வகையில் அந்த போதிமரம் அதிர்வலைகளை வீசுகிறது. இன்னும்

அந்த போதிமரத்தின் கீழ் அமர்வது ஒரு அளப் பரிய அனுபவம்தான். ஆனால், நீங்கள் அறிந்து இருக்க வேண்டும். நீங்கள் விழிப்புணர்வோடு, புத் தர்மீது நேசம் கொண்டு இருந்தால், அந்த மரத் தின் ரகசியங்கள் உங்களுக்கு வெளிப்படுத்தப்ப டும். குரு உயிரோடு இருக்கும்போதுகூட புலன் உணர்வோடு இருப்பவர்கள் மட்டுமே உணர முடி யும். ஆனால் உண்மையிலேயே புலன் உணர்வு கொண்டிருப்பவர்களால், குரு மறைந்த பிறகும்கூ டத் தொடர்ந்து அந்த உணர்வுடன் இருக்கமுடியும். குருவின் உடலில் இருந்து எந்த ஒரு சிறிய விஷய மும், அவர் வசித்த அறை, ஞானம் பெற்ற மரத்தடி எல்லாம் ஒரு விதமான குணம் பெறுகிறது - அப்பா வில் இருந்து ஏதோ ஒன்று.

வியாதியைப் போல் ஞானம் அடைதலும் தொற் றிக் கொள்ளும் தன்மை கொண்டது. ஒரு மாபெ ரும் குரு இருக்கையில் அந்த வியாதி பெருவா ரியாகப் பரவும் அளவுகளை அடைகிறது. நீங்கள் வெறுமனே நான் சொல்வதைக் கேட்பதற்காக மட் டும் இங்கே இல்லை. ஏனென்றால் புத்தகங்கள் மூலமாகவும், ஒலி நாடாக்கள் கேட்டும் தெரிந்து கொள்ள முடியும். என் ஜீவனை, உண்பதற்காக, என்னுள் உருமாற்றம் கண்ட பொருளை உண் பதற்காக இங்கே வந்திருக்கின்றீர்கள். ஆகவே இது ஒரு இயற்கையான ஆசைதான் தவறொன்று மில்லை.

"முன்னர் எவ்வளவு காலம் இருப்பீர்கள் என் பது பற்றி நான் அவ்வளவாகச் சிந்திக்க வில்லை."

அப்போது நீங்கள் என்னைப் பற்றி அக்கறை காட்டவில்லை. இப்பொழுது அக்கறை காட்டுகிறீர்கள். அப்போது ஈடுபாடு இல்லை, இப்போது ஈடுபாடு இருக்கிறது. என்னிடம் பற்று உறுதியில்லை. இப்போது இருக்கிறது. இப்போது எந்த வகையிலோ என் விதி உங்களுடையதாகவும் இருக்கப் போகிறது.

*"நீங்கள் நீண்டகாலம் இருக்க வேண்டும் என்று இப்போது விரும்புகிறேன்."*

உங்களுக்கு நான் தேவை என்றால், ஒரே ஒரு மனிதருக்குகூட நான் தேவைப்பட்டால், நான் நீண்ட காலம் இருப்பேன். அது உங்கள் தேவையைப் பொறுத்தது. உங்கள் தேவை எவ்வளவோ அவ்வளவு என்னால் இருக்க முடியும். என் சொந்தத் தேவைகள் நிறைவேறிவிட்டன எந்தக் கணமும் நான் போகலாம். மீதம் ஏதுமில்லை. செய்ய வேண்டியவை அனைத்தும் செய்தாகிவிட்டது. அனுபவிக்க வேண்டியதெல்லாம் அனுபவித்தாகி விட்டது. நான் நிறைவடைந்து விட்டேன். இந்தக் கணம் நான் போகத் தயாராக உள்ளேன். அடுத்த கணமே, எந்தக் கணமும் எனக்கு போவதற்குச் சரியான தருணமே.

ஆனால் உங்களுக்கு நான் தேவை என்றால், உங்களின் அந்தத் தேவையே என்னை இந்த உடலில் தக்க வைக்கும். என்னையும் என் பிரசன்னத்தையும் நீங்கள் விரும்புவீர்கள் என்றால், உங்கள் தாகம் ஆற்றல்மிக்கது என்றால், அதுவே என்னை இந்த உடலில் வைத்திருக்கும். அது மட்டுமே என்னை வைத்திருக்கும். என் சொந்த வேர்கள்

இவ்வுடலில் இனிமேலும் இல்லை. ஆனால் உங்கள் தேவைகள், உங்கள் ஆசைகள், உண்மைக்கான உங்கள் தேடல், உங்களின் அவாவுறுதல் உறுதியாக இருந்தால், பெரியதாக இருந்தால், என்னால் நீண்டகாலம் தங்கி இருக்க முடியும். எல்லாம் உங்களைச் சார்ந்து இருக்கிறது.

ஆக ஏதோ தவறான ஆசையில் விழுகின்றோம் என்ற கவலை வேண்டாம். அது முற்றிலும் இயற்கையானதுதான்.

"மேற்கில் இருந்தபோது உணர்ந்ததைவிட உங்கள் தேக அருகாமையை ஆழமாக விரும்புகிறேன்."

இதில் பிரச்சினை ஒன்றுமில்லை, அப்படியானால், சம்போதி இங்கேயே இருங்கள். நான் இந்த புத்தர் களத்தை உருவாக்குவதே என்னோடு இருக்க வேண்டும் என்று விரும்புபவர்களுக்காகத் தான், என்னோடு ஆன்மீக ரீதியாகத் தொடர்பு கொள்வோருக்கு மட்டுமல்லாமல், உடல் ரீதியாக தொடர்பு இருக்க வேண்டும் என்பவர்களுக்கு இந்த பௌத்த களம் உருவாக்கினேன். நான் ஒரு உலகாயத ஆன்மீகவாதி அல்லது ஆன்மீக இன்ப நலவாதி. எந்த முரணுரையும் என்னை விவரிக்கப் போதுமானது.

## மூன்றாவது கேள்வி:

*இன்று நீங்கள் நேசம் மற்றும் மரணம் பற்றியும், அறிவு நிலையிலேயே மரணத்திற்குள் சம்பவிப்பதற்கு நேசத்தை உணர்வதின் முக்கியத்துவத்தைப் பற்றியும் பேசினீர்கள்.*

*நான் ஆழமான நேசத்தை அனுபவித்ததே யில்லை, மேலெழுந்தவாரியான பிடிப்புகள் மட்டுமே என் அனுபவம். என்னையே நான் நேசிப்பதில்லை, பிறகு வேறு ஒருவரை எப் படி நேசிப்பது? நடக்க வேண்டிய எல்லாவற் றிற்கும் ஒரு காலம் வரும் என்பதால், இந்த தப்பிக்க இயலாத நிலையில் நான் செய்வ தற்கு ஒன்றுமில்லை என்பதை நான் அறி வேன். காத்திருப்பதைத் தவிர நான் செய்வ தற்கு ஏதாவது உள்ளதா?*

முதலில், உங்களுக்கே ஆறுதல் சொல்லிக் கொள்ளாதீர்கள். உண்மையான புரிதலுக்கு ஆறு தல் ஒரு வழியல்ல. நீங்கள் செய்வதற்கு ஒன் றுமில்லை என்பது உண்மைதான். ஆனால் இது வெறும் ஆறுதலாய் மட்டுமே இருக்க முடியும், ஒரு வகையான தோல்வி மனப்பான்மை. அப்படியா னால் அது பொய்யானது. ஒரு உண்மையைக்கூ டப் பொய்யாகப் பயன்படுத்தலாம். அது உங்களைப் பொறுத்தது. இது உங்கள் மனதில் உள்ளதுதான். "நான் என்ன செய்ய முடியும், காத்திருக்க வேண் டியதுதான்." ஆனால் உங்கள் காத்திருக்கை வீரிய மற்றது, ஏனென்றால் அது தோல்வி மனப்பான்மை யிலிருந்து வந்தது, அது நம்பிக்கையற்ற நிலையிலி ருந்து எழுந்தது.

வேறு வகையான காத்திருக்கை இருக்கிறது, அது வீரியம் கொண்டது, ஜோதியாய் எரியும் ஒரு காத்திருக்கை, அது பேருணர்ச்சி கொண்டது, பிரார்த்தனை கொண்ட ஒரு காத்திருக்கை, இது ஆறுதலாய் வராது. ஆனால் ஒரு புரிதலாய் வரும்.

புரிதல் என்பது என்ன? புரிதல் என்பது "என்னால் தனியாகச் செய்ய முடியாது, ஆனால் இறைவன் என் மூலமாகச் செய்ய முடியும்." மேலும் எந்த நேரமும் சரியான நேரம்தான், எந்தக் காலமும் சரியான காலம்தான். வசந்த காலத்தில் மலர்கள் பூத்துக் குலுங்குவதுபோல ஞானம் பெறுதலுக்கெனப் பருவகாலங்கள் எல்லாம் இல்லை. ஞானம் அடையும்போது அதற்கெனப் பருவகாலம் இருந்ததென்றால், புத்தர் ஞானமடைந்தபோது பலர் ஞானம் பெற்றிருக்க வேண்டும், நான் ஞானமடைந்தபோது பல மனிதர்களும் ஞானம் அடைந்திருக்க வேண்டும். பருவகாலங்கள் எல்லாம் கிடையாது. ஞானம் பெறுவதைப் பொறுத்தவரையிலும் எப்போதும் வசந்தகாலம்தான், எப்போதும் சரியான நேரம்தான். ஆனால் ஏன் உங்களுக்கு இது நடக்கவில்லை?

நான் சொல்வது காத்திருப்பது மட்டுமே செய்யக்கூடிய ஒன்றாகும் - ஆனால் நினைவிற் கொள்ளுங்கள், அந்த காத்திருக்கை பிரார்த்தனை நிறைந்ததாக இருக்கவேண்டும், வேட்கை நிறைந்ததாக இருக்க வேண்டும், பெரும் தீவிரம் அதில் இருக்க வேண்டும், வீரியமின்றிச் சோம்பேறித்தனமாக இருக்கக்கூடாது. மிகமிக அதிகமான செயலாற்றலுடைய சக்தியுடன் காத்திருக்க வேண்டும். வெறும் செயலின்மை கூடாது. இவை இரண்டும் வெவ்வேறான காத்திருக்கைகள்.

உங்கள் அபிமானத்திற்கு உரியவருக்காகக் காத்திருக்கும்போது செயலற்ற தன்மை இல்லை, கொளுந்துவிட்டு எரிகின்றீர்கள், முழுச் சக்தியுடன் காத்திருக்கிறீர்கள். இதுபோன்ற சக்தியை

வேறெப்போதும் கண்டதில்லை. விழிப்புணர்வா கவே இருக்கிறீர்கள். ஒரு காய்ந்த சருகு காற் றினால் சாலையில் அசைகிறது. ஓடிப்போய் கத வைத் திறக்கின்றீர்கள். 'அவள் வந்திருப்பாளா?' தபால்காரர் கடந்து போயிருப்பார், அந்தக் கால டிச் சப்தம் கேட்டு ஓடுவீர்கள். எல்லாமே, ஒவ் வொரு சப்தமும் அவள் சப்தமாக இருக்கும். காற்று வந்து கதவைத் தட்டினால் ஓடிப்போய் திறப்பீர்கள். "அவள் வந்துவிட்டாள்" இது சோம்பேறித்தனம் அல்ல; நீங்கள் படுக்கையில் கிடக்கவில்லை, நீங் கள் மிக மிகச் சுறுசுறுப்பாகக் காத்திருக்கிறீர்கள்.

என் எண்ணம் என்னவென்றால், கேள்வி கேட் டவர் ஒரு வகையான தோல்வி மனப்பான்மையில் உள்ளார். இது சோம்பேறித்தனம், மற்றும் நம்பிக் கையற்ற நிலை. சோம்பலில் காத்திருந்தீர்களா னால் அது நடக்காது. அப்படியானால் எந்தக் கால மும் வசந்த காலமாகாது.

அங்கே சக்தி முழுவதுமாய் இருக்கவேண்டும், துடித்துக் கொண்டிருக்க வேண்டும், பாய்ந்தோடிக் கொண்டிருக்க வேண்டும். ஆயினும் நீங்கள் காத் திருக்கிறீர்கள், நீங்கள் எதுவும் செய்யவில்லை. நீங்கள் என்ன செய்ய முடியும்? செய்வதற்கு என்ன இருக்கிறது? உள்ளபடியே மனிதன் மிகச் சிறிய வன், ஆனால் மனிதனால் பிரார்த்தனை செய்ய முடியும், அழுது புலம்ப முடியும்.

உங்கள் காத்திருக்கை அழுகையால் நிரம்பியி ருக்கட்டும், பிரார்த்தனையால் நிரம்பி இருக்கட் டும். தங்கள் காத்திருக்கை செயலற்று இருக்க வேண்டாம், தீவிரமான செயலாற்றலோடு இருக்

கட்டும். இந்தச் செய்கை தேவையானது. இந்த வேறுபாட்டை நீங்கள் தெளிவாக்கிக் கொள்ள வேண்டும்.

உண்மையான எதிர்ப்பு என்பது காத்திருப்பதற்கும் செய்வதற்கும் இடையே கிடையாது. உண்மையான எதிர்ப்பு செயலாற்றலுடைய காத்திருக்கைக்கும், செயலற்ற காத்திருக்கைக்கும் இடையே உள்ளதுதான். இவை இரண்டும்தான் எதிரிகள். செயல் மற்றும் செயலின்மையும் எதிரிகள் அல்ல.

> *நீங்கள் சொல்கிறீர்கள், "நான் ஆழமான நேசத்தை அனுபவித்ததேயில்லை மேலெழுந்தவாரியான பிடிப்புகள் மட்டுமே என் அனுபவம்."*

ஒருக்கால் இதற்குக் காரணம் நீங்கள் உங்கள் பற்றுதல்களை மேலெழுந்தவாரியானது என்று அழைத்ததால் இருக்கலாம். இதனால்தான் உங்களால் ஆழமான நேசத்தை அனுபவிக்க முடியவில்லை. நீங்கள் அதைப் பழிக்கின்றீர்கள். எதையும் மேலோட்டமாக என்று அழைப்பதினால் உங்களையே அதில் ஆழமாகப் போகமுடியாமல் தடுத்துக் கொள்வதாகும். எவரும் எதற்குள்ளும் மேலெழுந்தவாரியாகச் செல்ல விரும்புவதில்லை. ஆனால் அந்த வார்த்தை அர்த்தமுள்ளது. மேலெழுந்தவாரியாக என்றால் என்ன பொருள்? நீங்களே வெறும் மேல்மட்டத்தை மட்டுமே தொட்டு வருகிறீர்கள் என்று பொருளாகும். நீங்கள் அதற்குள் ஆழமாகச் சென்றால், அதுவும் ஆழமாகும். மேலெழுந்தவாரியாக இருக்கும் ஒவ்வொன்றிற்குள்ளும் ஆழம் உள்ளது, இல்லையென்றால் அது

மேலெழுந்தவாரியாக இருக்க முடியாது. சமுத்தி ரத்திற்கு மேல் மட்டம் இருப்பதற்கான காரணம் அதில் ஆழம் உள்ளது என்பதால்தான். மேல்மட் டம் ஆழத்தை உள்ளடக்கியிருக்கிறது. மேல்மட் டம் இல்லாமல் ஆழம் இருக்க முடியாது. கருத் தைத் தெளிவாகப் பாருங்கள்.

மேலோட்டமான எதுவும் ஆழமாக மாற முடியும், அது உங்களைப் பொறுத்தது. ஆழமான எதுவும் மேலோட்டமாகவே தொடர்ந்து இருக்க முடியும். அதுவும் உங்களைப் பொறுத்தே. மேலெழுந்தவா ரியானவற்றை எல்லாம் பழிக்க மக்களுக்குக் கற் றுக் கொடுக்கப்பட்டுள்ளது. இதனால்தான் அவர் கள் வாழ்க்கையின் ஆழத்தை அனுபவிப்பதிலி ருந்து தடை செய்யப்பட்டுள்ளார்கள். எல்லாமே மேலெழுந்தவாரியாக இருக்கிறது. ஒரு பெண் ணின்மீது காதல் கொள்கிறீர்கள். அது மேலோட் டமானது, உங்களுக்கு ஒரு நட்பு இருக்கிறது அதுவும் மேலோட்டமானது, மலர்களை விரும் புகிறீர்கள், அதுவும் மேலோட்டமானது. ஏனென் றால் அது நேரத்திற்கானது. உங்கள் சமயமோ தொடர்ந்து சொல்வதென்னவென்றால், "எல்லை யற்றதைத் தேடு, கணநேர விஷயங்கள்மீது நேசம் பாராட்டாதே" ஆனால் அந்த கணநேர விஷயம் தான் எல்லையற்றதை உள்ளடக்கி வைத்திருக்கி றது. இக்கணமே முடிவற்றது. சாசுவதமானது. கடல் அலை சமுத்திரத்தை உள்ளடக்கி வைத்திருக்கி றது. நீங்கள் கடல் அலையைப் பழித்தால் சமுத்தி ரம் என்ன என்பதை எப்போதும் தெரிந்துகொள்ள மாட்டீர்கள்.

பழித்துக் கூறலை விட்டுவிடுங்கள். மேலெழுந்த வாரியான, கணநேரத் தற்காலிகமான, உலகாயத போன்ற வார்த்தைகளை மறந்து விடுங்கள், இவையெல்லாம் அபாயகரமான வார்த்தைகள். ஒருமுறை இந்த வார்த்தைகளைப் பயன்படுத்தத் தொடங்கி விட்டீர்கள் என்றால், இதற்குப் பழக்கப்படுத்திக் கொண்டு விட்டீர்களானால் நீங்கள் ஒவ்வொரு ஆழத்திலிருந்தும் தடைசெய்யப்படுவீர்கள். இது கதவைப் பழித்துக் கூறுவது போலாகும். நீங்கள் சொல்வது: "ஒரு கதவு, கதவுதான், நான் கோயிலைத் தேடிக் கொண்டிருக்கிறேன்." ஆனால் நீங்கள் எங்கு சென்றாலும் முதலில் கதவைத்தான் காண்பீர்கள். பிறகுதான் கோயில் வரும். நீங்கள் கதவிற்கு எதிரானவராக இருந்தால் நீங்கள் போய்க்கொண்டே இருப்பீர்கள். எந்தக் கோயிலையும் சென்றடைய மாட்டீர்கள். கதவு கோயிலைச் சேர்ந்ததுதான். கோயிலுக்குள் இருக்கும் கடவுளைப்போல கதவும் தெய்வீகமானதுதான்.

நிலையற்றதை மதிக்கக் கற்றுக் கொள்ளுங்கள். விரைவிலேயே எல்லையற்றது உங்கள் கதவைத் தட்டும். மேலோட்டமானதை நேசியுங்கள், தேகார்த்தமானதையும் நேசியுங்கள். பால் ஈடுபாட்டுடன் இருங்கள், புலன் கவர்ச்சி கொண்டு இருங்கள். இவற்றைப் பழிக்காதீர்கள். ஏனென்றால் இவையெல்லாம் கதவுகள். இந்தக் கதவுகள் வழியாகத்தான் நீங்கள் புலன் கவர்ச்சியற்றதை, புலன் ஈடுபாடில்லாததை அணுக முடியும். இதுதான் வாழ்க்கையின் மர்மமாகும். புலன் கவர்ச்சிதான் புலன் கவர்ச்சியின்மைக்கு இட்டுச் செல்லும்.

உடல் ஆன்மாவிற்கு இட்டுச் செல்லும், உலகம் தான் தெய்வீகத்திற்குக் கதவாகச் செயல்படும், கட வுளிடம் இட்டுச் செல்லும்.

*"நான் ஆழமான நேசத்தை அனுபவித்தது இல்லை"*

நீங்கள் எவ்வாறு ஆழமான நேசத்தை அனுப விக்க முடியும்? முதலில் நீங்கள் அனுபவித்தது எல் லாம் மேலோட்டமானது, என்று சொல்கிறீர்கள், இரண்டாவது நீங்கள் ஆழமான நேசத்தை அனு பவித்ததில்லை. ஆனால் ஆழமான நேசம் எப்படி இருக்கும் என்பதைப் பற்றி ஏதோ கருத்து கொண் டிருப்பீர்கள். ஆழமான நேசம் இப்படித்தான் இருக் கவேண்டும் என்று ஒரு முழு நிறைவுவாதியின் கருத்தை வைத்திருப்பீர்கள். நீங்கள் அதை என் றும் கண்டுபிடிக்க முடியாது. ஏனென்றால் வாழ்க் கையில் எல்லாமே கலந்துள்ளது. வானமும் பூமி யில் கலந்து உள்ளது. உங்களால் தெளிவான வானத்தைக் கண்டுபிடிக்க முடியாது. சுத்தமான பூமியையும் கண்டுபிடிக்க முடியாது. உலகில் பரவிய மாபெரும் மதங்கள் எல்லாமே, பெருவாரியாக பர வும் தொற்று நோய்கள் சென்ற அதே பாதையைப் பின்பற்றித்தான் பரவின. பிளேக் நோய் சென்ற அதே பாதையில் சென்றுதான் கிறிஸ்தவமும் பரவி யது. அதனால் நீங்கள் பழித்துக்கூற முடியாது.

வாழ்க்கையில் எல்லாமே கலந்துதான் இருக்கி றது. வாழ்க்கை பல்வகைப்பாடு உடையது என் பதை நீங்கள் கற்றுக்கொள்ள வேண்டும். மேலும் வாழ்க்கையில் அமைந்துள்ள பல்வேறு விஷயங் களை நீங்கள் புதிர் அவிழ்க்கத் தொடங்க வேண்

டும். மேல்மட்டத்தின் புரிதலைப் புரிந்து கொண்டால் நீங்கள் அதி ஆழத்தை எட்ட முடியும். உடலுக்குள் நுழைந்தபின் எவ்வளவு காலம்தான் ஆன்மாவைத் தவிர்க்க முடியும். மனிதர்கள் நேசத்தைப் பற்றி பெரிய கருத்துக்களைக் கொண்டுள்ளார்கள், நேசத்தைப் பற்றிச் சாத்தியப்படாத கருத்துக்களைக் கொண்டுள்ளனர். அவர்கள் கோட்பாட்டை நிறைவேற்ற முடியாததால் பழிக்கப்பட்டதாய் உணர்கின்றனர்.

நேசத்தைப் பற்றிய கருத்துக்கள் அனைத்தையும் விட்டு விடுங்கள். உங்களுக்கு நேசம் என்றால் என்ன என்று தெரியாது. மேலோட்டமானது என்று நீங்கள் அழைப்பதை மட்டுமே அறிவீர்கள். உங்களுக்குத் தெரியாததை எல்லாம் கவிஞர்கள் மற்றும் வேதாந்திகளிடமிருந்தும் சேகரித்துக் கொள்வீர்கள். இவர்களே மற்ற கவிஞர்கள், வேதாந்திகளிடமிருந்து கற்றுக் கொண்டிருக்கலாம். இது இப்படியே போய்கொண்டிருக்கும். உங்களுக்கு ஆழமான நேசம் தெரியாது, மேலோட்டமானது தெரியும். இந்தச் சமயத்திற்கு இது போதும், சரியானதுதான். இந்த மேலோட்டமானதிற்குள் செல்லுங்கள், அதில் முழுமையாக இறங்குங்கள். முற்றிலுமாகப் போவதால், ஆழமானதை எதிர்கொள்வீர்கள். இதற்கும் மனிதர்கள் கொண்டிருக்கும் கருத்திற்கும் தொடர்பு இல்லை என்பதை கண்டு ஆச்சரியப்படுவீர்கள். இது விவரிக்க இயலாத ஒன்று, இதுவரை எந்தவிதமான விவரிப்பும் நியாயமனதாக இருந்ததில்லை. அது அவ்வளவு மர்மமானதாகையால் எந்த விளக்கமும் சாத்தியமில்லை. இதை எந்தக் கோட்பாடாகவும் சுருக்க முடியாது.

சாதாரணத்தை ஏற்றுக் கொள்ளுங்கள், அசாதார ணம் அதில் மறைந்து கிடக்கிறது.

உங்கள் காத்திருக்கை மந்தமான, செயலற்ற, உயிரற்ற காத்திருத்தல்போல் இருக்கிறது. கடவுள் அறிதல் நிகழாது, இது கடவுளுக்காகக் காத்திருப் பது அல்ல, மரணம்தான் நிகழும். இது போன்று காத்திருந்தால் மரணம்தான் வருமே தவிர வேறு ஒன்றுமில்லை. மேலும் தள்ளிப் போடாதீர்கள், விளையாடாதீர்கள். இவை எல்லாம் மனம் சார்ந்த விளையாட்டுகள்.

*நீங்கள் சொல்வது: "நான் செய்வதற்கு ஒன் றுமில்லை என்பதை நான் அறிவேன்."*

உங்களுக்கு எப்படித் தெரியும்? எதுவும் செய்வ தற்கில்லை என்று உங்களுக்கு எப்படித் தெரியும்? செய்ய வேண்டியதெல்லாம் செய்துவிட்டீர்களா? எதுவுமே செய்வதற்கில்லை என்ற கட்டத்திற்கு உங்கள் சொந்த அனுபவத்தின் மூலம் வந்து விட் டீர்களா? அப்படியானால், "காத்திருப்பதைத் தவிர நான் வேறு ஏதாவது செய்வதற்கு இருக்கிறதா?" என்று கேட்க மாட்டீர்கள். இது உங்கள் அனுப வம் அல்ல; செய்வதற்கு இன்னும் ஆசை உள்ளது. இருட்டில் இன்னும் துழாவிக் கொண்டிருக்கிறீர் கள், ஆனால், "நடக்க வேண்டிய எல்லாவற்றிற்கும் ஒரு காலம் வரும்"

இது வெறுஞ்சொல் துணுக்கு, விட்டுவிடுங்கள். இந்த அடிப்படைச் சொற்தொடர் உங்கள் மன தில் பதிந்துவிட்டது. உங்களுக்கே ஆறுதல் அளித் துக் கொள்வதாகும். இந்த ஆறுதல் நஞ்சாகிவிடும். தள்ளிப்போடுவதற்கு மனதின் வழிமுறை இது. எதி

லும் இறங்குவதற்கு மனம் தயாராக இல்லை, அது ஆசை மட்டுமே படுகிறது. ஆசைப்படுவதிலேயே வாழ்கின்றது. உண்மையில் ஆசைப்பட்டது நடந்துவிட்டால் உடனே மனம் அதன் மேல் எரிச்சல் கொள்கிறது.

ரவீந்திரநாத் தாகூரின் அழகான கவிதை ஒன்று இருக்கிறது. "நான் பல ஜென்மங்களாக கடவுளைத் தேடிக் கொண்டிருக்கிறேன், நான் பார்க்கும் போதெல்லாம் எங்கோ தூரத்தில் ஒரு நட்சத்திரத்திற்கு அருகில் போய் கொண்டிருப்பார். என் விழைதல் மேன்மேலும் அதிகமாக, நான் தேடித் தேடி அலைந்தேன். என் தேடலில் நான் பெருமகிழ்ச்சியுற்றேன். பிறகு ஒரு நாள் அது நடந்தது. நான் கடவுள் வாழும் வீட்டைச் சென்றடைந்தேன். பெயர்பலகையைப் படித்தேன், புளகாங்கிதம் கொண்டேன், நானே மகிழ்ச்சியானேன். ஆக, "நான் வந்து சேர்ந்துவிட்டேன்!" கதவைத் தட்டப்போகையில் மனம் சொன்னது, "ஒரு நிமிடம், இன்னொரு முறை யோசித்துக் கொள். நீ உண்மையிலேயே அவரை அங்கே கண்டுபிடிக்கலாம். அதன் பிறகு என்ன? அவர் அங்கு இருந்தால் அதன்பிறகு என்ன செய்வாய்? எப்படி வாழ்வாய்? அவருக்கான ஆசையிலேயே வாழ்ந்து கொண்டிருக்கிறாய், ஆசையினாலேயே வாழ்கிறாய். நீ நாடுபவன், தேடிக் கொண்டிருப்பவன், இருப்பதற்கு இந்த ஒரே வழி மட்டுமே. உனக்குத் தெரியும், நீ அவரைக் கண்டுபிடித்தால் மாட்டிக் கொள்வாய். பிறகென்ன? தாகூர் சொல்கிறார்: "நான் உண்மையிலேயே பயந்துவிட்டேன், எல்லா மகிழ்ச்சியும் காணாமல் போய்விட்டது" ஆம், இது மிக மிக

முக்கியமாகக் கருதவேண்டிய ஒரு விஷயம். "நான் கதவை தட்டி, அவர் கதவை திறந்து என்னை அணைத்துக் கொண்டால், அதன் பிறகு என்னவா கும்? அங்கிருந்து நான் எங்கே செல்வது? அவர் அரவணைப்பில் நான் சிக்கிக் கொள்வேனே. அவர் அழகாக இருக்கலாம், ஆனால் எனக்கும், என் உலகிற்கும், நான் இதுவரை அறிந்த வழிக ளுக்கும் இது முடிவாகி விடுமே. மேலும் நாடுத லும் தேடுதலும் எவ்வளவு அழகாக இருந்தது. சப் தம் கேட்கக் கூடாது என்று நான் என் காலணிக ளைக் கழற்றிக் கையில் எடுத்துக்கொண்டு மாடிப் படி வழியே இறங்கினேன். ஏதோ அரவம் கேட்டு, "யாரங்கே?" என்று நான் தட்டாமலேயே அவர் கத வைத் திறக்கலாம். நான் தப்பித்து, வேகமாய் ஓடி னேன். இது நாள்வரை அப்படி ஓடியதே இல்லை. அப்போதிலிருந்து அவரிடமிருந்து ஓடிக்கொண்டி ருக்கிறேன், திரும்பிக் கூடப் பார்ப்பதில்லை. நான் மீண்டும் தேடத் துவங்கி விட்டேன், பார்க்கும் மக்க ளிடம் 'கடவுள் எங்கே இருக்கிறார்?' என்று கேட்கத் தொடங்கிவிட்டேன். மறுபடியும் எங்கோ தூரத்தில் வானில் அவரைக் காண்கிறேன். நான் அவரைத் தேடித் தேடி அலைகிறேன். அவர் வாழும் வீட்டை நான் அறிவேன், அதனால் அதைத் தவிர்த்துவிட்டு வேறு எங்கெல்லாமோ தேடிப் போகிறேன்."

ஆசைப்படுவதில்தான் மனம் உயிர் வாழ்கிறது. ஆசையைத் தொடர்வதற்கான சிறந்த வழி என் னவென்றால் ஆழ்ந்த மந்த நிலையில் படுத்துக் கிடந்து சரியான பருவகாலத்திற்கு காத்திருப்பதா கும். அது வரவே வராது. ஏனென்றால் சரியான பருவம் எப்போதும் இருக்கிறது. நீங்கள் கொளுந்

துவிட்டு எரியும்போது, நீர் ஊற்றாய் ஆகும்போது, எப்போதும் முடிவில்லாமல் பிரசன்னமாய் இருக்கும் நீரூற்றோடு உடனே தொடர்பு கொண்டு விடுவீர்கள். ஆக மந்தமாய் இருக்காதீர்கள்.

நான் கேள்விப்பட்டது:

* எக்கச்சக்கமாய் குடித்துவிட்டு இரண்டு தவளைகள் அடுத்த நாள் குடியின் பின் விளைவுகளால் அவதிப்பட்டுக் கொண்டிருந்தன. "ஆஸ்பிரின் மாத்திரை கிடைத்தால் நன்றாக இருக்கும்" என்றது ஒரு தவளை. அச்சமயத்தில் அங்கு கெச்சை நடை போட்டு வந்த ஆமை இதைக் கேட்க நேர்ந்தது. "உங்களுக்கு உதவ முடியுமானால், கிராமத்திற்குப் போய் நான் வாங்கி வருகிறேன்" என்று முன்வந்தது ஆமை.

"நிஜமாகவா, உன் உதவிக்கு நன்றி" என்றது தவளை.

மருந்து வாங்கப் புறப்பட்டது ஆமை.

இரண்டு வாரம் போனது, மருந்தையும் காணோம் ஆமையும் தென்படவில்லை.

ஒரு தவளை மற்றொன்றைப் பார்த்துச் சொன்னது: "நான் சொல்கிறேன், இந்த ஆமையை நம்பலாமா? இது மாத்திரை வாங்கப் போய் மாமாங்கமாகிவிட்டதே."

ஒரு பாறைக்குப்பின் பின்னால் அமைதியாய் ஓய்வெடுத்துக் கொண்டிருந்த ஆமையார் இதை கேட்ட உடனே, "என் முதுகிற்கு பின் இப்படியெல்லாம் பேசினால், நான் மாத்திரை வாங்கப் போக மாட்டேன், அவ்வளவுதான்!" என்றது.

நீங்கள் என்றென்றும் ஒருவகை மந்தகதியில் வாழ்ந்து கொண்டு இருக்கலாம். உங்களுக்கு எதுவும் நடக்காது. காத்திருப்போருக்கு இறை அனுபவம் ஏற்படாது என்று நான் சொல்லவரவில்லை. காத்திருப்போருக்கு மட்டுமே அவர் சம்பவிப்பார்! ஆனால் இந்த காத்திருக்கை வேறு விதமான குணம் உடையது. கொளுந்துவிட்டு எரிதல் வேண்டும், அப்படியானால்தான் இறைவன் கிடைக்கப் பெறுவார். உங்கள் ஜீவனின் ஒவ்வொரு திசுவும், விழிப்புணர்வுடன் இருக்க வேண்டும், எந்தக் கணத்திலும் இது நடக்கலாம், நீங்கள் எப்படித் தூங்கலாம்?

ஏசு தன் சீடர்களிடம் பலமுறை சொன்னது: "விழித்திருங்கள், தூங்கிப் போகாதீர்கள்." தன் வேலையாட்களிடம் எஜமானர் சொல்லும் நீதிக் கதையை ஏசு விவரிக்கிறார். "நான் புனித யாத்திரை போகிறேன், ஆனால் என்று வேண்டுமானாலும் திரும்புவேன். எந்த நாளும், இரவு, பகல் என்று எந்த நேரமும் திரும்பி வருவேன். நீங்கள் இருபத்தி நான்கு மணி நேரமும் விழிப்புடன் இருக்க வேண்டும், ஏனென்றால் எந்நேரமும் உங்களுக்குச் சொல்லாமல் வருவேன்."

இதுதான் சூழ்நிலை. வேலையாட்கள் இரவும் பகலும் காவல் இருக்க வேண்டும். விழிப்புணர்வுடன் இருக்க வேண்டும், எக்கணமும் எஜமானர் திரும்பலாம்.

கடவுள் எந்தக் கணத்திலும் பிரசன்னமாகலாம். நீங்கள்தான் விழித்து இருக்க வேண்டும், கவனித்துக் கொண்டு இருக்க வேண்டும். உங்கள் காத்தி

ருக்கை கவனிப்போடு இருக்க வேண்டும், விழிப்புடன் தீவிரமாக இருக்க வேண்டும். இதைத்தான் நீங்கள் செய்ய வேண்டியது. காத்திருப்பது செயலுக்கு எதிரானது அல்ல. காத்திருப்பது என்பது மிக உயர்ந்த வகையான செய்கையாகும். மிக நுட்பமான செய்கை இது. காத்திருக்கை என்பது மகத்தான செய்தல் கலையாகும்.

## நான்காவது கேள்வி:

*புனைவைவிட வாழ்க்கை விசித்திரமானது என்று ஏன் சொல்லப்படுகிறது?*

ஏனென்றால் வாழ்க்கை அப்படித்தான். புனைவுகள் வெறும் வாழ்க்கையின் பிரதிபலிப்பு மட்டுமே. அவை எப்படி வாழ்க்கையைவிட அதிக விசித்திரமாக இருக்க முடியும்? புனைவுகள் வாழ்க்கையின் பகுதிகள் மட்டுமே. வாழ்க்கை என்பது ஒரு சிக்கலான முழுமை: அது தொடங்குவதும் இல்லை, முடிவதும் இல்லை. உங்கள் புனைவு தொடங்கி முடிகிறது.

எப்போதும் நாவல்களை நடுவிலிருந்து படிக்கத் தொடங்கும் ஒரு மனிதரை நான் அறிவேன். "இதில் அர்த்தம் என்ன இருக்கிறது?" என்று நான் அவரைக் கேட்டேன். "இந்த வகையில் எப்போதுமே ஒரு பரபரப்பு, எதிர்பார்ப்பு நிலையில் இருப்பீர்கள், முடிவும் புரியாது, ஆரம்பமும் தெரியாது. முதல் பக்கத்திலிருந்து தொடங்கினால் முடிவைப் பற்றிய ஆர்வம் மட்டுமே இருக்கும். இவ்வகையில் எனக்கு இரட்டை ஆர்வம். நான் முழுவதுமாக ரசிக்கின்றேன்" என்றார் அவர்.

வாழ்க்கையும் அப்படித்தான். அது எப்போதும் நடுவில் இருக்கிறது. நீங்கள் எப்போதும் நடு வில் இருக்கிறீர்கள், தொடக்கம் என்பது அறியாத ஒன்று. சமயங்கள் தொடக்கத்தைத் தருவதற்கு முயற்சி செய்துள்ளன. உலகம் எப்படித் தொடங்கி யது என்ற தத்துவங்கள் எல்லாம் சுத்த அபத்தம். காரணம் உலகம் ஒருபோதும் தொடங்கவில்லை. அது எப்போதும் நடுவில்தான் இருந்திருக்கிறது. அதுதான் மர்மம், ஆனால் மனம்தான் தொடக்கத் தைத் தேடி அலைகிறது.

இதற்குப் பதில் தரும் மனிதர்களும் இருக்கி றார்கள். "ஒரு குறிப்பிட்ட நாளில் கடவுள் உல கைப் படைத்தார்" என்பார்கள். அதற்கு முன் அவர் என்ன செய்து கொண்டிருந்தார்? மக்கு போல் சும்மா உட்கார்ந்து கொண்டிருந்தாரா? எவ் வளவு காலம் அவர் உட்கார்ந்து கொண்டிருந் தார்? "துல்லியமாக ஏசுவிற்கு, நாலாயிரத்து நான்கு வருடங்களுக்கு முன் ஒரு குறிப்பிட்ட திங்கட்கிழ மையன்று அவர் (கடவுள்) தொடங்கினார், சனிக் கிழமை மாலை அதை முடித்துவிட்டு ஞாயிறு ஓய் வெடுத்துக் கொண்டார். அப்படியானால் அதற்கு முன் என்ன செய்து கொண்டிருந்தார்? அளப் பரிய தொடக்க - முடிவற்ற காலமாய் என்ன செய்து கொண்டிருந்தார்? அவருக்குச் சலித்துப் போயிருக்கும். உண்மையில் தற்கொலை செய்து கொண்டிருப்பார் அல்லது பைத்தியமாய் போயி ருப்பார்.

உலகம் என்றும் தொடங்கவில்லை. முழுமைக்கு எப்படி ஒரு ஆரம்பம் இருக்க முடியும்? ஏனென்றால் தொடக்கத்தை கருத்தாக்கம் செய்தாலும்கூட,

தொடக்கத்திற்கு முன்பு சில பொருட்கள் தேவைப் படும், அப்படியென்றால் அது தொடக்கமாகாது. வெட்டவெளி தேவை. கடவுள் சொல்கிறார், "ஒளி உண்டாகட்டும்" ஆனால் எங்கே? 'அங்கே' என்பது தேவைப்படுகிறது, காலம் என்பது தேவைப்படுகி றது. காலம் என்று ஒன்றில்லாமல் திடீரென எப்படி, திங்கட்கிழமை எப்படித் திடீரெனத் தொடங்க முடி யும்? அதற்கு முன் ஒரு ஞாயிறு வேண்டும், இல் லையென்றால் அதைத் திங்கள் என்று எப்படிச் சொல்வீர்கள்? அது அபத்தமாய் இருக்கும்.

இல்லை, உலகிற்கு ஆதியும் இல்லை அந்தமும் இல்லை. அதன் போக்கில் போய்க் கொண்டே யிருக்கும். எல்லாமே மிகவும் சிக்கலானது, எல் லாமே மற்ற எல்லாவற்றுடன் பின்னிப் பிணைந்து இருக்கின்றபடியால் எதுவுமே தனியாக இல்லை. நான் உங்களுக்குள் இருக்கிறேன், நீங்கள் என் னுள் இருக்கிறீர்கள். மரங்களில் நீங்கள் இருக் கிறீர்கள். உங்களுக்குள் மரங்கள் இருக்கின்றன. தொலைதூரத்தில் இருக்கும் மூலை - அப் படி ஒன்று இருக்குமென்றால் அது உங்களோடு தொடர்பு கொண்டுள்ளது. ஒரு சிறிய கூழாங்கல் லைத் தொட்டீர்கள் என்றால் முழு இயல் உல கையே தொட்டு இருக்கிறீர்கள். நீங்கள் ஒரு பெண்ணை முத்தமிட்டால், அவள் தாயையும் முத்தமிடுகிறீர்கள், பாட்டியையும்கூட. உங்களுக்கு இது பிடிக்காமல் போகலாம், ஆனால் செய்வதற்கு ஒன்றுமில்லை. தொடக்கத்திலிருந்து கோடிக்க ணக்கான மாமியார்கள் இந்தப் பெண்ணிற்கு பின் வரிசையாக நிற்கின்றனர். மேலும் இந்தப் பெண்க ளுக்குப் பிறக்கப்போகும் குழந்தையைக்கூட முத்

தமிட்டு இருக்கிறீர்கள், வருங்காலத்தில் வரக் கூடிய இந்த குழந்தையின் வம்சாவளிகளையும் முத்தமிட்டுள்ளீர்கள். ஏனென்றால் இந்தப் பெண் தொடர்ந்து எதிரொலித்துக் கொண்டே இருக் கப் போகிறாள், தன் மகளுக்குள் இருப்பாள், மகளுடைய மகளுக்குள்ளும் இருப்பாள், இப்ப டியே கோடிக்கணக்கான வழிகளில் தொடர்ந்து வாழ்ந்து கொண்டிருப்பாள்.

ஆக, ஒரு பெண்ணை நீங்கள் முத்தமிடும்போது, நீங்கள் முழுக் கடந்தகாலத்தையும் முத்தமிட்டுள் ளீர்கள், இனி வரும் வருங்காலத்தையும் முத்தமி டுகிறீர்கள். மெய்மையை எங்கு தொட்டாலும் முழு மையைத் தொடுகின்றீர்கள். அந்த முழுமை பிரம் மாண்டமானது, அளக்க முடியாதது.

வாழ்க்கை மிகவும் விசித்திரமானது. காரணம் அது பெரும் புதிரானது.

ஒரு அதிபுத்திசாலி மருத்துவரைப் பற்றிக் கேட்டி ருக்கிறேன்:

* முன்பு ஒரு காலத்தில் இரண்டு இளைஞர் கள் இருந்தார்கள், அவர்கள் இருவரும் நெருங்கிய நண்பர்களாயினர். ஒரு நாள் ஒன்றாகச் சாப்பிடும் போது இருவரும் அதே மனநல நிபுணரிடம் சிகிச் சைக்காகப் போவது அறிந்து ஆச்சரியப்பட்டனர். தகவல்களை ஒப்பிட்டுப் பார்த்ததில் அவர் திற மையானவர் மற்றும் உதவி மனப்பான்மை உடைய வர் என்பதில் ஒத்துப்போயினர். ஆனால் மருத்து வர் தன் திறமையைப் பற்றிப் பகட்டாரவாரத்தோடு இருந்தார் என்றும் உறுதிப்படுத்திக் கொண்டனர். தங்களை நிலைகுலைய வைப்பதுபோல் அவ

ரையும் சற்று ஆட்டம்காண வைக்க விரும்பினர். அவரை மேலிருந்து கீழிறக்க ஒரு திட்டம் தீட்டினர். இருவருமாக சேர்ந்து ஒரு விலாவாரியான கனவைப் புனைந்தனர். அதை பலமுறை சொல்லி ஒத்திகை பார்த்துக் கொண்டனர். இருவரும் மருத்துவரிடம் ஒரே கனவை தங்களுடையது என்பது போல் சொல்வது என்று ஏற்பாடு செய்து கொண்டனர்.

திங்கட்கிழமை காலை முதல் நண்பர் நன்கு பயிற்சிபெற்ற 'கனவை' ஒப்பித்தார். மருத்துவர் கனவிற்கான பொருள் விளக்கம் செய்வதை ரகசியமான சந்தோஷத்தில் கேட்டுக் கொண்டான். அன்று மதியம் அவன் நண்பனும் அதே 'கனவை' தன்னுடையதைப் போல் புத்திசாலித்தனமாக விவரித்தான். ஒவ்வொரு நுணுக்கமும் முதல் நண்பனுடையதைப் போன்றே இருந்தது. வழக்கத்திற்கு மாறாக நிபுணரின் முகத்தில் தெரிந்த மனக்குழப்பத்தைக் கண்டு உள்ளூர பெருமகிழ்ச்சி அவனுக்கு. "கடவுளே, மகா விசித்திரமாக இருக்கிறதே" என்றார் மனநல நிபுணர். "இன்று மட்டும் இதே கனவை மூன்றாம் முறையாகக் கேட்கிறேன்" என்றார்.

வாழ்க்கை விசித்திரமானது. விஷயங்கள் உண்மையிலேயே இங்கே நடக்கின்றன. வாழ்க்கை விளக்க முடியாதது. விளக்கத்திற்கு அப்பாற்பட்டது. எல்லா விளக்கங்களும் முட்டாள்தனமானது, அசட்டுத்தனமானது. வாழ்க்கையின் மறைபொருளைப் புரிந்து கொண்டு உண்மையான மனிதர்கள் எவரும் அதற்கு விளக்கம் கொடுக்க முற்படுவதில்லை. அவர்கள் புதிரை அனுபவிக்க உதவி புரிவார்களே அன்றி, புதிர் அவிழ்க்க மாட்

டார்கள். இங்கேதான் அறிவியலும் ஆன்மீகமும் பிரிந்து போகின்றன. அறிவியலின் முழு முயற்சியுமே வாழ்க்கையின் மறைபொருளை விளக்குவதில் இருக்கிறது, எல்லாவற்றையும் விளக்க வேண்டும். எப்போதெல்லாம் ஒன்றைப் பற்றி விளக்கம் தரப்பட்டதோ, ஆச்சரியம் தொலைந்து போகிறது. நேசம் ஹார்மோன்களாக மட்டுமே தெரியும், காதலில் வீழ்வது வெறும் வேதியியல் நிகழ்வாகிறது. நீங்கள் செய்வதெல்லாம் மன உலகு சார்ந்த, வெகு சாதாரணமான மேம்போக்கான விஷயமாகிறது, உண்மையில் அதைச் செய்வதில் பெரிதாக ஒன்றுமில்லை.

யோசித்துப் பாருங்கள்... வேதியியல் காரணமாக ஒரு பெண்ணின்மீது காதல் கொள்கிறீர்கள். சில வேதியியல் பொருட்கள் உங்கள் உடலில் வெளியிடப்படுவதினால், குறிப்பிட்ட ஹார்மோன்கள் சுரப்பதினால் பாலுணர்வு கொள்கிறீர்கள், கவர்ச்சி ஏற்படுகிறது. அந்த ஹார்மோன்கள் உடலிலிருந்து அகற்றப்பட்டால், வேதியியல் மாற்றங்கள் செய்யப்பட்டால் உங்களுக்குக் கவர்ச்சி தோன்றாது. நேசம், காதல் எல்லாம் போய்விடும். காதலின் வேதியியல் பற்றி நினைத்த கணத்திலேயே காதல் காணாமல் போய்விடும். அதன்பிறகு இரண்டு வேதியியல்களே மிஞ்சி இருக்கும். இரண்டு வேதியியல்களும் ஒன்றை ஒன்று ஈர்த்துக் கொள்ளும். கிட்டத்தட்ட வேதியியலுக்குப் பலியானாற்போல ஆகிவிடும். மகிழ்ச்சி, சந்தோஷம், பெருமை, ஆரவாரம் எல்லாம் போய்விடும்.

விஞ்ஞானிகள் பதில்களை அளித்துக் கொண்டிருக்கிறார்கள், விஞ்ஞானிகள் தோற்றுவிட்டாலும்

கூட மக்களுக்கு இது பற்றித் தெரியாது. இந்த நூற்றாண்டு மிகப் பெரிய இயல் நிகழ்வைச் சந்தித் தது, விஞ்ஞானிகளின் தோல்வி! அவர்கள் உண் மைக்கு மிக அருகில் வரவர மேலும் குழப்பமடை கின்றனர். உண்மைக்கு வெகு அருகில் வந்தவு டன் உண்மை மேலும் மர்மமாக, மறைபொருளாக அறியாத்தன்மை அடைகிறது.

ஆல்பர்ட் ஐன்ஸ்டின் தான் இறப்பதற்கு முன் சொன்னது: "நான் என் பணியைத் தொடங்குவ தற்கு முன்னர் இருந்ததை விட உலகம் இப்போது அதிகமாக அறிந்து கொள்ள முடியாத ஒன்றாக இருக்கிறது. நான் சில விளக்கங்களைக் கண் டுபிடிக்கலாம், சில விஷயங்களை மேலும் நன் றாக விளக்கிச் சொல்லலாம். சிறிதே ஆனாலும் சில புதிய விளக்கங்களை உருவாக்கலாம் என்ற கருத்தோடுதான் என் பணியைத் தொடங்கினேன். ஆனால் நான் இளமையாக இருந்தபோது வழக் கில் இருந்த விளக்கங்கள் எல்லாம் இப்போது இல்லை. நான் மனம் தடுமாறிக் குழம்பி இருக்கி றேன். நான் ஒரு விஞ்ஞானியாக இறக்கவில்லை. ஒரு மறைஞானியாக இறக்கிறேன். அடுத்த முறை, நான் திரும்பி வந்தால் நான் ஒரு பிளம்பராகப் பிறக்க விரும்புகிறேன். ஒரு ஃபிசிசிஸ்ட்டாக, இயற் பியல் ஆய்வாளராக அல்ல."

மகத்தான சொல், ஏனென்றால், ஒரு பிளம்ப ருக்கு வாழ்க்கையின் மறைபொருள் பற்றி அதிக மாகத் தெரியும், அவர் அதை வாழ்ந்து பார்த்து அனுபவிக்கிறார். பிளம்பர் என்று அவர் சொல்லும் போது ஒரு சாதாரண மனிதனைக் குறிப்பிடுகிறார் - அதாவது ஒரு விவசாயி, தோட்டக்காரர், பிளம்

பர் என்பது போல. நான் இயல் உலகின் மறை பொருளை விளக்குவதைப் பற்றிக் கவலைப்படப் போவதில்லை, பதிலாக நான் அதை வாழ்ந்து பார்க்கிறேன், அனுபவித்துப் பார்க்கிறேன். ஆடிப் பாடி அனுபவிப்பேன்.

வாழ்க்கை விசித்திரமானது, இதுதான் உலகத் திற்கு மதங்களின் அடிப்படையான பங்களிப்பு. சமயம் உங்களை இந்த முறைபொருளுக்குள், அதன் புதிர் விடுவிக்காமல் போக உதவுகி றது. இங்கேதான் இறைமை இயல் தவறாகிறது. இறைமை ஆய்வு சமயம் அல்ல. இறைமை ஆய் வும் அறிவியலைப் போன்ற அதே முயற்சிதான் - விளக்கங்களைக் காண முயற்சிக்கிறது. உங்கள் கேள்விகளைக் கேட்டு ஜென் குருக்கள் சிரிப் பது சரிதான். உங்கள் கேள்விகளுக்கு சூஃபிக்கள் அபத்தமான பதில்களைத் தருவதும் சரியானதே. பதில்கள் கேள்விகளுக்குத் தொடர்புடையதல்ல. நீங்கள் குழம்பிப்போய் விட்டால் அதுவே பெரிய தொடக்கம். உங்கள் அறிவை மறந்துவிட்டால், உங்கள் விளக்கங்களை நினைவிலிருந்து நீங்கள் அகற்றிவிட்டால் அது இறைவனை நோக்கி ஒரு பெரிய அடியெடுப்பு.

விளக்கங்கள் இல்லாமல் வாழுங்கள், நீங்கள் சமயம் சார்ந்த வாழ்க்கை வாழமுடியும்.

## ஐந்தாவது கேள்வி:

*உங்கள் எழுத்துக்களோடு ஒரு ஒத்தி சைவை உணர்கிறேன், கிட்டத்தட்ட உடன் வாழும் சமகாலத்தவர்போல. நிச்சயமாக*

*நான் சன்னியாசியானால் இந்த உணர்வு மாறும். இந்த மாற்றம் பலன் தருமா?*

என் எழுத்துக்களோடு ஒத்திசைந்துபோவது ஒன்று, முற்றிலுமாக ஒத்திசைந்துபோவது வேறு ஒன்று. என் எழுத்துக்களை நம்புவது உங்களை மாற்றாது. அது வெறுமனே உங்கள் அறிவைக் கூடுதலாக்கும். என்னுடன் ஒத்திசைவு ஏற்பட்டால், அது உங்களை அழித்துவிடும், உங்களை உருமாற்றி விடும். படிக்கும்போது நீங்கள்தான் எஜமான், புத்தகம் உங்களுக்குச் சொந்தமானது, உங்களைத் தற்காத்துக் கொள்வதற்கு புத்தகத்திற்கு எதிராக வழிவகைகளைக் கண்டுபிடித்துக் கொண்டே போக முடியும். புத்தகத்தால் அதிகமாக ஒன்றும் செய்ய முடியாது. அதை உங்களுக்கு ஏற்ற வகையில் விளக்கிக் கொள்வதில் எந்தத் தடையும் இருக்கப் போவதில்லை.

இதைத்தான் நீங்கள் செய்து கொண்டிருக்க வேண்டும். அதனால்தான், "உங்கள் எழுத்துக்களோடு ஒரு ஒத்திசைவை உணர்கிறேன் - கிட்டத்தட்ட உடன் வாழுநர்போல" என்று சொல்கிறீர்கள், இதனால் உங்கள் அகங்காரம் நிறைவு பெறுகிறது.

உண்மையில் நடப்பது என்னவென்றால், நான் சொல்வதில் உங்களுக்கு நம்பிக்கையில்லை. நீங்கள் முன்னர் நினைத்துக் கொண்டிருந்தது சரியானது என்பதில் நீங்கள் உறுதியாக நம்புகிறீர்கள், பகவானும் நான் நினைப்பதை ஒத்துக் கொள்கிறார். இதைத்தான் ஒத்திசைவு என்று நீங்கள் நினைக்கிறீர்கள். இது நீங்கள் என்னுடன் ஒரு உடன்பாடு ஏற்படுத்திக் கொள்வது அல்ல, இது

நான் உங்களுடன் ஒரு உடன்பாடு ஏற்படுத்திக் கொள்வது. இதை நீங்கள் ஒரு புத்தகத்தை வைத்துக் கொண்டு எளிதாகச் செய்யலாம். உங்களுக்கு ஏற்புடையதல்லாத பகுதிகளை மறக்கலாம். அல்லது உங்களுக்கு ஏற்றாற்போல நீங்களே பொருள் விளக்கம் தரலாம். புத்தகம் உயிரற்றது. புத்தகத்தை வைத்து நீங்கள் எதையும் செய்ய முடியும்.

நான் உயிருடன் இருக்கிறேன். மேலும் நான் மிகவும் முரண்பாடானவன். முரண்பாடுகளை ரசிப்பவன் நான். அதுவே எனக்கு ஊட்டச்சத்து - இன்று என்னுடன் நீங்கள் ஒத்துப் போனால், நாளை உங்களுக்குப் பிரச்சினை உண்டாக்குவேன். மறுபடியும் ஒத்துப்போனால், மறுபடியும் பிரச்சினையை உருவாக்குவேன். போகப்போக நீங்கள் நெகிழ்ந்து போய், என்னுடன் உடன்படுவதையே மறந்து விடுவீர்கள். "இதில் என்ன அர்த்தம் இருக்கிறது? இந்த மனிதர் தினமும் தான் சொன்னதையே மாற்றிச் சொல்கிறார்."

இது ஒரு கருவி, இதனால் நீங்கள் மனதின் மூலமாக என்னுடன் உடன்படுவதை நிறுத்துவீர்கள். அதன்பிறகு வேறு வகையான ஒரு உடன்படுதல் எழும் - ஒரு உரையாடல். என் ஜீவனுடன் ஒத்துப் போகத் தொடங்குவீர். அதுதான் உண்மையான ஒத்திசைவு.

சன்னியாசம் என்பது என்னுடன் ஒரு இருண்ட அறியாப் பிரதேசத்திற்குள் நீங்கள் போவதற்குத் தயார் என்றும், என்னை நம்புகிறீர்கள் என்றும், என் எண்ணங்கள் மட்டுமின்றி என் மௌனத்தையும் கேட்கத் தயாராக உள்ளீர்கள் என்றும் உங்

கள் தரப்பிலிருந்து தரப்படும் ஒரு செயற்குறிப்பைத் தவிர வேறு ஒன்றுமில்லை. புத்தகம் உங்களுக்குச் சிந்தனைகளை மட்டுமே தர முடியும், வார்த்தைகளுக்கு நடுவே இருக்கும் இடைநிறுத்தங்களைத் தரமுடியாது. அவைதான் உண்மையிலேயே மதிப்பு வாய்ந்தவை, முக்கியமானவை, எழுதப்பட்ட வார்த்தைகள் அல்ல.

என் புத்தகங்களைப் படிப்பதைவிட என் கண்களைப் பார்ப்பது அதிக உட்குறிப்பு வாய்ந்தது. என் அருகில் உட்கார்ந்து, என் அருகாமையை உணர்ந்து, என்னால் ஆட்கொள்ளப்படுவது என்னை நோக்கி உங்கள் இதயத்தைத் திறப்பது - இவையெல்லாம் மெய்யான விஷயங்கள். புத்தகத்தால் ஒரே ஒரு வேலையைத்தான் செய்ய முடியும். உங்களை என்னிடம் அழைத்துவர முடியும், அவ்வளவுதான். அத்தோடு அதன் வேலை முடிந்தது. புத்தகம் முடிவு அல்ல. தொடக்கம்தான். அங்கேயே சிக்கிக் கொள்ளாதீர்கள். நீங்கள் நல்ல மனநிலையில் இருக்கின்றீர்கள் எனத் தோன்றுகிறது. அதனால்தான் "கிட்டத்தட்ட சமகாலத்தவர்போல உணர்கிறேன்" என்று சொல்கிறீர்கள். நீங்கள் அப்படியில்லை, ஏனென்றால் என் சமகாலத்தவர் போல் இருக்க வேண்டுமானால் நீங்கள் காலமற்ற நிலையில் இருக்க வேண்டும். ஏனென்றால் நான் காலமற்ற நிலையில் இருக்கிறேன். நான் இருபதாம் நூற்றாண்டில் இருக்கவில்லை. நான் ஒரு சிந்தனாவாதியில்லை. நீங்கள் பெர்ட்ராண்ட் ரசுலின் சமகாலத்தவராய் இருக்க முடியும். ரசுல் போன்ற சிந்தனை, அதே தர்க்க வாதம், அதே முடிவுகள், எல்லாம் கொண்டிருந்தால் நீங்கள் பெர்ட்

ராண்ட் ரசுலின் சமகாலத்தவராக இருக்க முடியும். ஆனால் புத்தரோடு ஒரு சமகாலத்தவராக இருப்பது முற்றிலும் வேறுபட்ட இயல் நிகழ்வு. நீங்கள் ஆழ்ந்த மௌனத்திற்குள் செல்ல வேண்டும். ஏனென்றால் புத்தர் ஆழ் மௌனத்தில் இருக்கிறார். புத்தர் தொடக்க முடிவற்ற காலத்தில் உளதாயிருக்கிறார். அதனால்தான் இன்றும்கூட நீங்கள் புத்தரின் சமகாலத்தவராக இருக்கும் சாத்தியம் இருக்கிறது. அதேபோல் லாவோட் சூ, கிறிஸ்து ஆகியோரின் சமகாலத்தவராகவும் இருக்க முடியும். எப்போதெல்லாம் நீங்கள் காலத்தைக் கடந்து இருக்கின்றீர்களோ, நீங்கள் ஞானம் அடைந்த மனிதர்களின் சம காலத்தவராவீர்கள்.

என் சிந்தனைகளோடு உடன்படுவதால் மட்டும் நீங்கள் என் சமகாலத்தவர் ஆக முடியாது, என் எண்ணங்களோடு ஆகலாம். என்னுடன் ஆக முடியாது. மேலும் நான் ஒரு எண்ணம் அல்ல, நான் ஒரு அனுபவம்.

*மேலும், "நிச்சயமாக நான் சன்னியாசியானால் இந்த உணர்வு மாறும்."*

நிச்சயமாக அது மாறப்போகிறது, அது மாறித்தான் ஆக வேண்டும். நீங்கள் முற்றிலும் வேறு விதமாய் உணர்வீர்கள். அகங்காரம் மறையத் தொடங்கும், அது காயப்படுத்தும்.

சன்னியாசி ஆவதென்றால், சீடராகி விட்டீர்கள் என்று அர்த்தம். இப்போது உங்கள் மனதைத் தள்ளிவைத்து விடுவீர்கள். மேலும் மேலும் என் அதிர்வுகளோடு உங்களுக்கு ஒத்திசைவு ஏற்படும். இங்கே கிழக்கில் நாங்கள் இதை 'சத்சங்

கம்' என்று அழைப்போம். குருவின் அருகாமை யில் இருப்பது. குருவைக் காண்பது, தொடுவது, குருவினால் தொடப்படுவது போன்றவை. இது வார்த்தைகளால் ஆன தகவல் தொடர்பு அல்ல. வார்த்தைகள் கொண்ட தகவல் தொடர்பிற்கு ஒரு காரணம் உள்ளது. ஏனென்றால் பேசாமல் ஒரு தொடக்கம் இருக்க முடியாது, அதனால்தான் நான் தொடர்ந்து பேசிக் கொண்டிருக்கிறேன். நான் முற் றிலும் அமைதியாகவே இருந்தால், நீங்கள் இங்கே இருக்க மாட்டீர்கள். நான் பேசியதால்தான் நீங்கள் இங்கே இருக்கிறீர்கள்.

ஆனால் பேசுவதைக் கேட்க மட்டுமே இங்கே இருக்கிறீர்கள் என்றால், கருத்தை தவற விடுகிறீர் கள். வெறும் வார்த்தைகளை மட்டுமே சேகரிப்பீர் கள், அந்த வார்த்தைகள் உங்கள் வசம் உயிரற் றதாய் மாறிவிடும். நான் எவ்வளவு உயிரோட்டத் துடன் வார்த்தைகளை வெளிப்படுத்தினாலும்கூட உங்களிடம் வந்து சேரும்போது அவை இறுகிய செத்த கற்களாகிவிடும். என் ஜீவனின் சமகாலத் தவர் ஆக முடிந்தால் ஒழிய, இது சாத்தியமாகாது. ஆனால் இது தியானத்தில் மட்டுமே நடக்கும். தியா னம்தான் குருவிற்கும் சீடனுக்கும் இடையே உள்ள பாலம்.

நீங்கள் மாறுவீர்கள், நிச்சயமாக மாறுவீர்கள், ஆனால், நீங்கள் மாறித்தான் ஆகவேண்டும். உங் கள் மேலேயே உங்களுக்குச் சலிப்பு ஏற்படவில் லையா? ஒரு மந்தமான மனிதனால் மட்டுமே சாதாரண வழியில் மகிழ்ச்சியாய் இருக்க முடியும். உணர்வுள்ள ஒரு மனிதன் முன்னரோ பின்னரோ "நான் செல்தடப் படுகுழியிலேயே நகர்ந்து கொண்

டிருக்கிறேன், ஒரு நச்சுச் சூழலில் சிக்கிக் கொண்டிருக்கிறேன்" என்று உணரத் தொடங்குவான். அதிக உணர்வு உள்ளவர் என்றால் உருமாற வேண்டிய அவசியத்தை அடையாளம் காண்பீர்கள். தீவிரமான மாற்றம், ஒரு புரட்சியை மேற்கொள்ள வேண்டிய அவசியத்தை உணர்வீர்கள்.

## ஆறாவது கேள்வி:

*உங்கள் அம்மாவிற்குச் சன்னியாசம் வழங்கும்போது நீங்கள் உங்கள் நாற்காலியிலிருந்து இறங்கி உங்கள் தாயின் பாதங்களைத் தொட்டு வணங்கியதாகக் கேள்விப் பட்டு இருக்கிறேன். இந்த மிகச் சிறப்பான சூழ்நிலை என்னைக் கிளர்ச்சியடைய வைத்தது. மேலும் தெரிந்து கொள்ளும் என் ஆவலைத் தணியுங்கள். யார் பெரியவர் - அம்மாவா அல்லது குருவா?*

அவர்கள் ஒருவருக்கொருவர் பெரியவர்தான். இந்தக் கேள்வியை கேட்பதே தவறு. அதன் அமைப்பே தவறு. "எது பெரிது, கோழியா அல்லது முட்டையா?" என்று கேட்பது போல் உள்ளது. நீங்கள் புரிந்து கொள்ளவில்லை. நீங்கள் கோழியையும் முட்டையையும் பகுத்துப் பார்க்கின்றீர்கள்; அவை பிரிக்க இயலாதவை. கோழி முட்டையின் ஒரு நிலை, முட்டை கோழியின் ஒரு நிலை. யார் பெரியவர் குருவா அல்லது தாயாரா என்று கேட்பது, நீங்கள் தாயார் என்றால் என்ன? குரு என்றால் என்ன என்பதை புரிந்து கொள்ளாததினால்தான். பொதுவான ஒரு விஷயத்திற்காக இருவருமே

மதிக்கப்பட வேண்டும். இருவரும் ஈன்றெடுக்கின் றனர். பிறப்பிற்கு காரணமானவர்கள்.

அதனால்தான் அவர்கள் மதிக்கப்படுகின்றனர். தேகரீதியான ஜீவனை தாய் ஈன்றெடுக்கிறாள். முதல் பிறப்பு தாயின் மூலமாகத்தான். இரண்டா வது பிறப்பு குருவின் மூலமாக, குருவும் தாய் தான்! சீடராவதென்றால் குருவின் கருவறைக்குள் நுழைவதாகும். பௌத்த களம் ஒரு கருவறை தான். குருவின் கருப்பையில் நுழைவது, குருவின் சூழலுக்குள் நுழைவது, அவர் சக்தியின் ஒரு பகு தியாவது - இரண்டாவது பிறப்பு ஏற்படுகிறது. நீங் கள் இருமுறை பிறந்தவராகின்றீர்கள், ஒரு 'துவை ஜன்'. இதைத்தான் ஏசு, "நீங்கள் மறுபடியும் பிறந்தா லன்றி" என்ற அர்த்தத்தில் கூறுகிறார்.

இரண்டாவது பிறப்பு என்பது அவசியம், இல்லை யென்றால் நீங்கள் வெறும் உடல் சார்ந்த ஜீவ னாக மட்டுமே வாழ்வீர்கள். தாய் உங்களுக்குத் தேக ஜீவனை மட்டுமே கொடுத்திருக்கிறார். தாய் கோயிலை உருவாக்கியுள்ளார், தெய்வம் குருவின் மூலமாகத்தான் பிறக்க வேண்டும்.

ஆங்கில வார்த்தைகளான 'மதர்' (தாய்) 'மேட்டர்' (சடப்பொருள்) இரண்டுமே சமஸ்கிருத வேர் சொல் 'மாத்தர' என்பதிலிருந்து வருகிறது. தாய் மற்றும் சடப்பொருள் இரண்டும் ஒரே வேர்ச் சொல்லிலிருந்து வருவது அழகான ஒன்று. அதன் அர்த்தம் என்ன?

தாய் உங்களுக்குச் சடப்பொருளைத் தருகிறாள். தாய்தான் உங்கள் சடப்பொருள், அவர்தான் உங் கள் உடல். தாய்தான் பூமி, குருதான் வானம்.

நினைவிற் கொள்ளவும், பூமி இல்லாமல் வானம் இருக்க முடியாது. கோயில் இல்லாமல் தெய்வம் இல்லை. ஆக, தாய் உங்களுக்கு ஒரு வாய்ப்பை அளித்திருக்கிறார், ஆனால் அது வெறும் வாய்ப்பு மட்டுமே. அந்த வாய்ப்பை மெய்ப்படுத்த நீங்கள் ஒரு குருவைக் கண்டுபிடிக்க வேண்டும்.

இப்போது இது ஒரு பிரச்சினை. யார் அதிகம் மதிப்புடையவர், யார் பெரியவர்? தாயில்லாமல் நீங்கள் இங்கே இல்லை, குரு வேலை செய்ய முடியாது. குரு இல்லாமல் நீங்கள் இருப்பீர்கள். ஆனால் உங்கள் இருப்பு அர்த்தமற்றதாகும். உண்மையில் ஒரே காரணத்திற்காகத்தான் குரு மற்றும் தாயை மதிக்கின்றோம் - காரணம் அவர்கள் இருவரும் ஈன்றெடுக்கின்றனர். இயல்பில் உயர்வகையான பிறப்பு குருவால் தரப்படுகிறது, ஆகவே குரு பெரியவர். ஆனால் அடித்தளம் தாயால் இடப்படுகிறது. ஆகவே தாய்தான் பெரியவர். அதனால் தான் நான் சொல்கிறேன் அவர்கள் இருவரும் ஒருவருக்கொருவர் பெரியவர்தாம்.

*நீங்கள் கேட்டது: உங்கள் அம்மாவிற்குச் சன்னியாசம் வழங்கும்போது நீங்கள் உங்கள் நாற்காலியிலிருந்து இறங்கி உங்கள் தாயின் பாதங்களைத் தொட்டு வணங்கியதாகக் கேள்விப்பட்டு இருக்கிறேன். இந்த மிகச் சிறப்பான சூழ்நிலை என்னை கிளர்ச்சியடைய வைத்தது. மேலும் தெரிந்து கொள்ளும் என் ஆவலைத் தணியுங்கள். யார் பெரியவர் - அம்மாவா அல்லது குருவா?*

இது ஒரு விசித்திரமான இயல் நிகழ்ச்சி. தன் மகனிடமே ஒரு தாய் சீடராவது வெகு அரிதாக நடக்கும். மேரி கிறிஸ்துவின் சீடராகவே இல்லை. கிறிஸ்துவிற்கு அதனால் கோபம். அதை அவர் விரும்பினார், தனக்குக் கிடைத்தவற்றை எல்லாம் தன் தாயுடன் பகிர்ந்து கொள்ள விரும்பினார் ஏசு. ஆனால் அவர் தாய் சீடராகவே இல்லை. இந்தக் காரணத்தினால் ஒரு விசித்திரமான அறி விப்பு நடந்தது. ஏசுவைச் சுற்றி ஒரு பெருங்கூட் டம் இருந்தபோது மேரி வந்தார், அவரால் உள்ளே புக முடியவில்லை, அவருக்கு ஏசுவிடம் பேச வேண்டும். "உங்கள் தாய் உங்களுக்காக வெளியே காத்துக்கொண்டிருக்கிறார், உங்களைப் பார்க்க வேண்டும் என்கிறார்" என்று யாரோ ஏசுவிடம் சொன்னார்கள். ஏசு சொன்னார்: "அந்தப் பெண் ணோடு எனக்கு எந்த தொடர்பும் இல்லை." இது மிகவும் வெறுக்கத்தக்கதாக தெரிகிறது. இது ஏசு விற்கு பொருந்தாத வார்த்தைகள். ஆனால் ஏன் அப்படிச் சொன்னார்? அவர் தாய் வெறும் பெண் ணாக மட்டுமே இருந்தார். ஏசுவிற்கு கோபம், அவர் கோபம் புரிந்து கொள்ளத்தக்கது. பாசத்தினால் தான் கோபம். தன் தாய் உருமாறவேண்டும் என்று விரும்பினார். தன் ஒளியை வேற்று மனிதர்களுடன் பகிர்ந்து கொள்கிறார், ஆனால் தன் சொந்தத் தாய், தகப்பனோ இருட்டில் இருக்கின்றனர். அதனால் அவருக்கு வருத்தம், அந்த வருத்தம் கோபமாய் வெளிப்பட்டது.

என் அம்மா என்னிடம் தீட்சை பெற வந்த போது நான் அவர் பாதம் தொட்டு வணங்கினேன், ஏனென்றால் தான் ஒரு அரிதான தாய் என்பதை

அவர் நிரூபித்தார். உங்கள் மகன் முன்பு மண்டியிட்டு வணங்குவது உண்மையிலேயே கடினமான விஷயம். உங்கள் சொந்த மகனின் காலைத் தொட்டு வணங்குவது கிட்டத்தட்ட முடியாத காரியம் - பெரும் துணிவு தேவை. உங்கள் அகங்காரத்தையெல்லாம் விட்டுவிடப் பெரும் துணிவு தேவை. நான் அவர் காலைத் தொட்டது அவர் என் தாய் என்பதால் அல்ல, அவர் துணிந்ததால்தான். ஏசு கோபப்பட்ட அதே காரணத்திற்காகத் தான் நான் அவர் பாதங்களைத் தொட்டேன். அதே காரணம்தான். நான் மட்டற்ற மகிழ்ச்சி அடைந்தேன். இது மிகவும் அரிதான ஒன்று. எப்போதோ ஒரு சமயம்தான் நடக்கும். நான் அவர் பாதம் தொட்டதற்கு வேறு ஒரு காரணம் இருக்கிறது; ஏனென்றால் இதற்குப் பிறகு அவர் என் தாயாக இருக்கமாட்டார், நான் அவருக்கு மகனில்லை. இந்த கணக்கை முடிந்த அளவு அழகாக முடிக்க வேண்டும்.

இது ஒரு தீவிரமான அடியெடுப்பாகும். அவர் எப்போதும் என்னை மகனாகவே கருதி உள்ளார். இனி அப்படியில்லை. இனி அவர் என் சீடர், நான் குரு. இதுவரை எனக்கு அறிவுரை கூறிக் கொண்டு இருந்தார். "இதைச் செய், அதைச் செய்யாதே" இனி அது சாத்தியமில்லை. இப்போது நான் அவரை வழிநடத்துவேன், அவருக்கு அறிவுரை வழங்குவேன். இதைச் செய், அதைச் செய் என்று அவருக்குக் கட்டளையிடுவேன். முழுச் சூழலுமே முற்றிலுமாக மாறிவிடப் போகிறது.

அவர் துணிந்தார்.

நான் அவர் துணிவைப் பாராட்டுகிறேன். அவரின் அகங்காரமற்ற நிலையை மதித்தேன். ஆக கணக்கு அழகாகத் தீர்க்கப்பட வேண்டும். இதுவே நான் அவருக்குக் கடைசி முறையாக மகனாக இருக்க முடியும். அது அவர் பிரக்ஞையில் என்றென்றும் நிலைத்து இருக்கும். அந்த க்ஷணத்திலிருந்து எல்லா பந்தங்களும் அறுபட்டு போய்விட்டன. இது ஒரு புதிய உறவுமுறையின் தொடக்கம். ஆகவே என் தாய் என்பதற்காக மட்டும் நான் அவர் பாதம் பணியவில்லை, அவர் அதிகமாகவே துணிவு கொண்டார், அவர் தன் அகங்காரத்தை விட்டுக் கொடுத்தார்.

## இறுதிக் கேள்வி.

*மிக நெருக்கமான உறவுமுறையில் ஒருவர் நல்லவராக, புரிந்து கொள்ளும், அமைதியான மற்றும் நெகிழ்வானவராக 'நடந்து' கொள்கையில், மற்றவர் இறுக்கத்தோடு, அச்சத்தோடு, கோபமாய் நடந்து கொள்ள வேண்டும் என்பதில் உண்மை இருக்கிறதா? தயவுசெய்து விளக்கம் தரவும்.*

ஆம், உறவுமுறையில் ஒருவகையான சரியீடு எப்போதும் நடக்கிறது. ஒருவர் அமைதியாக, அடக்கமாக நடந்து கொள்ளும்போது, மற்றவர் கோபப்படுவது, நச்சரிப்பது, துயருற்று இருப்பது, சண்டையிடுவது என்று இந்த விளையாட்டைத் தொடர வேண்டும்.

சில நாட்களுக்கு முன்பு சைத்தன்ய ஹரி ஒரு கேள்வி கேட்டார்: "தன் நச்சரிக்கும், சண்டையி

டும் மனைவி சான் தபியோடு சாக்ரடீஸ் ஏன் தொடர்ந்து வாழ்ந்தார்?"

கேள்வி பொருத்தமானது. ஏனென்றால் அவரும் ஒரு நச்சரிக்கும், சண்டை குணமுடைய பெண் கிருஷ்ணாவுடன் வாழ்ந்து கொண்டிருக்கிறார். ஆனால் நினைவில் இருக்கட்டும், இதற்கு சாக்ர டீஸ்தான் பொறுப்பு. அவர் இயல் அமைதியோடு, ரொம்பவும் தத்துவார்த்தமாக நடந்து கொண்டார். ஆனால் வெளிப்படையாகத் தோன்றும் அளவிற்கு சான்தபி அவ்வளவு மோசமில்லை. இந்த உள வியலுக்குள் நுழைந்து பார்த்தீர்களானால், ஒரு வேதாந்தியின் காரணமாக பாதிக்கப்பட்டவர் சான் தபி என்பதை புரிந்து கொள்ளலாம். அந்த பாவப் பட்ட பெண் எல்லா வேலைகளையும் செய்ய வேண்டியிருந்தது.

கிருஷ்ணாவைப் பொறுத்தவரையிலும் இதே கதைதான்! கிருஷ்ணா என்னிடம் சொல்லிக் கொண்டிருந்தார்: "பகவான், சைதன்ய ஹரி ஒரு துறவி என்று நீங்கள் நினைக்கிறீர்களா? அவர் அப் படி இல்லை! அவர் வெறுமனே பாசாங்கு செய்கி றார்! கிருஷ்ணா ஒரு சான்தபி ஆவதற்கு சைதன் யாவும் ஒரு காரணம். கிருஷ்ணா மட்டுமே பொறுப் பாக மாட்டார்."

ஒரு வகையான சரியீடு இருக்கிறது. எப்போ தெல்லாம் இரண்டு மனிதர்கள் இருக்கின்றார் களோ ஒரு சரியீடு நடக்கிறது. ரொம்பவும் அமை தியாக நடந்துகொள்ளாதீர்கள். இல்லையானால் மற்றவர் தேவைக்கு அதிகமாகவே சூடாக வேண் டிவரும். சொர்க்கம்போல் இருக்காதீர்கள், மற்றவர்

நரகமாகி விடுவார். இயல்பாக இருங்கள், சாதாரணமாக இருங்கள். சில சமயங்களில் கோபப்படுவது நல்லதுதான், சில சமயங்களில் வருத்தமாக இருப்பது நல்லதுதான். மேலும் சில சமயங்களில் நரகமாகவும், மற்ற சில சமயங்களில் சொர்க்கம் போல் நடந்து கொள்வதும் நல்லதே."

அப்படியானால் இருவரும் இயல்பாக சாதாரணமாக இருப்பார்கள். ஒரு இயல்பான உறவுமுறை என்பது சொர்க்க-நரக உறவுமுறைதான். எப்போது ஒருவர் சொர்க்கம் போன்றோ, நரகம் போன்றோ பாசாங்கு செய்கின்றாரோ மற்றவர் வேறு வழியின்றிப் போகிறார். அவர் ஆற்றவேண்டிய பங்கு நேர் எதிரானது. இது புரிந்து கொள்ளப்பட வேண்டும். உலகின் பெரிய பிரச்சினைகளில் இது ஒன்று.

நான் கேட்டது:

ஒருமுறை மருத்துவர் மற்றும் தத்துவ ஞானியான அவிசீனா என்பவர் ஏபல் ஹசன் கர்கானியின் ஆன்மீகப் புகழ் பற்றிக் கேட்டறிந்து அந்த குருவைப் பார்ப்பதற்கு அவர் வீட்டிற்குச் சென்றார். ஏபல் வீட்டில் இல்லை. ஏபல், தன் மனைவி கேட்டுக்கொண்டதன் பேரில் அருகில் இருக்கும் காட்டிற்கு விறகு வெட்டிவரச் சென்றிருந்தார். குரு பற்றி விசாரித்ததில் அவர் மனைவி மிகவும் சூடாக, "அந்த பைத்தியக்கார மோசடிப் பேர்வழியை ஏன் பார்க்க விரும்புகிறீர்கள்? அவரால் உங்களுக்கு என்ன ஆகவேண்டும்?" என்று தொடங்கி, குருவைச் சிறுமைப்படுத்தி, அவருடைய ஆன்மீகத் தன்மையைப் பற்றி இழித்துரைத்தார்.

அவிசீனா திகைத்துப் போனார். அவர் கேள்விப்பட்டதற்கும் குருவின் மனைவி சொன்னதும் முரணாக இருந்தது. குருவைத் தேடும் ஆர்வமே குறைந்து போயிற்று. ஆயினும் இவ்வளவு தூரம் குருவைத் தேடி வந்துவிட்டபடியால் அவரைப் பார்த்து விட்டு போகலாம் என்று அவிசீனா முடிவு செய்தார்.

அவிசீனா காட்டை நோக்கி போய் கொண்டிருந்தபோது, ஏபல் ஒரு புலியின் மேல் விறகுக் கட்டைகளை ஏற்றி வருவதைக் கண்டு அதிர்ச்சியடைந்தார்.

அவிசினா குருவிற்கு மரியாதை செலுத்திவிட்டு, குருவின் மனைவி சொன்னதிற்கும் தான் நேரில் கண்டதிற்கும் உள்ள வித்தியாசத்தை விளக்குமாறு குருவைக் கேட்டுக் கொண்டார்.

குரு சொன்னார்: "இதில் ஆச்சரியப்படுவதற்கு ஒன்றுமில்லை. இது வெறும் உழைப்பு பற்றிய விஷயம்தான். நான் என் வீட்டில் அந்த ஓநாயின் (மனைவி என்று படிக்கவும்) சுமைகளை எல்லாம் தாங்கி, அனுபவிப்பதால், தானாகவே காட்டிலிருக்கும் இந்தப் புலி எனக்காக சுமைதாங்கி வருகிறது."

சூஃபி குரு சொல்வது: "இயல் உலகில் கூட ஒரு வகையான சரியீடு நிலவுகிறது." சான்தபி மற்றும் சாக்ரடீஸ் இடையே மட்டுமல்ல, இந்த தம்பதியினர் மற்றும் இயல் உலகிற்கும் இடையே கூட ஒரு சரியீடு நிலவுகிறது. சாக்ரடீஸ் மக்களால் பெரிதும் மதிக்கப்பட்டார், ஆனால் மனைவியினால் அவமதிக்கப்பட்டார். மனைவி அவரைத் துன்புறுத்தினார், மக்கள் அவருக்கு மரியாதை செலுத்தினர்.

இந்தக் கதை அழகானது. கர்கானி சொல்வது: 'இதில் ஆச்சரியப்படுவதற்கு ஒன்றுமில்லை. இது வெறும் உழைப்பு பற்றிய விஷயம்தான், நான் என் வீட்டில் அந்த ஓநாயின் சுமைகளை எல்லாம் தாங்கி, அனுபவிப்பதால், தானாகவே காட்டிலிருக் கும் இந்தப் புலி எனக்காக சுமைதாங்கி வருகிறது."

எப்போதும் ஞாபகம் இருக்கட்டும், சமச்சீரில் மட் டுமே வாழ்க்கை நிலவ முடியும். எப்போதும் அப்ப டித்தான் இருந்தது. நல்ல பெண்களுக்கு எப்போ தும் மோசமான கணவன்மார்கள் கிடைப்பார்கள். அதேபோல் நல்ல கணவன்மார்களுக்கு மோச மான மனைவிகள் அமைவர். இதில் விதிவிலக்கே இல்லை, அப்படியாகப்பட்டது.

ஒரு மனிதன் சாக்ரடீசிடம் சென்று, "நான் இளை ஞன், திருமணம் செய்து கொள்ள விரும்புகிறேன். உங்கள் ஆலோசனை என்ன? ஏனென்றால் உங் கள் மணவாழ்க்கைப் பற்றிய கதைகள் பல கேட் டிருக்கிறேன். திருமணம் பற்றி நீங்கள்தான் அதிக அனுபவம் உள்ளவர். ஆகவே உங்கள் அறிவுரைக் காக வந்திருக்கிறேன். திருமணம் செய்துகொள் ளவா, அல்லது பிரம்மச்சாரியாகவே இருப்பது நல் லதா? எது அதிக ஆனந்தம் தரும்?" என்றான்.

சாக்ரடீஸ் சொன்னார்: "நீ திருமணம் செய்து கொள்வது நல்லது."

இளைஞன்: "நீங்கள் என்னைக் குழப்புகிறீர்கள்."

அதற்கு சாக்ரடீஸ், இதில் குழப்புவதற்கு ஒன் றுமில்லை, ரொம்ப எளிது. எனக்குக் கிடைத் தாற்போல ஒரு பெண் உனக்கு கிடைத்தால் நீ

பெரிய தத்துவ ஞானியாகி விடுவாய். நான் அப்படி ஆக வேண்டியதாயிற்று. இது வெறும் அத்தியாவசியத் தேவை! வெறுமனே பிழைத்திருப்பதற்காகத்தான். நான் அமைதியாக இருக்கிறேன், தியான நிலையில் மௌனமாகி விட்டேன். இது எனக்குப் பெரிதும் உதவியது. உனக்கு ஒரு நல்ல மனைவி கிடைத்தால் நீ மகிழ்ச்சியாய் இருப்பாய், மோசமான மனைவி கிடைத்தால் வேதாந்தியாகி விடுவாய். எவ்வழியானாலும் உனக்கு லாபம்தான். கல்யாணம் கட்டிக்கொள்!" என்றார்.

ஆனால் சான்தபியின் நடத்தைக்கு சாக்ரடீஸ் பொறுப்பு இல்லை என்று என்னால் சொல்லமுடியாது. சூஃபி குரு ஏபல் ஹசன் தன் மனைவியின் நடத்தைக்கு காரணமாக மாட்டார் என்று சொல்ல முடியாது.

இதனால்தான் கிழக்கத்திய நாடுகளில் மெய் நாடுபவர்கள் பலர் பிரம்மச்சாரிகளாகவே இருந்து விடுகின்றனர். அதற்கு ஒரு காரணம் இருக்கிறது. அடிப்படைக் காரணம் என்னவென்றால், மனைவி இருக்கும்போது மெய் உணர மாட்டீர்கள் என்றில்லை. பரிவன்பு காரணமாக, மனைவியோடு வாழும்போது, நீங்கள் அதிகமாக தியானத்தில் மூழ்கி விட்டால், மனைவியின் இருப்பை, ஜீவனை அழித்து விடுவீர்கள். அதன் பிறகு அவள் சூழ்நிலையைச் சரியீடு செய்யத் தொடங்குவாள், அவள் வெறுப்பை உண்டாக்குவாள், எதிர்மறைக் குணம் கொள்வாள், நீங்கள் முழுவதும் நேர்மறையாக இருக்க, அவள் எதிர்மறையாகி விடுவாள். அதன்பிறகு நீங்கள் அவளுக்கு எதிராகக் குற்றம் புரிவீர்கள், நீங்களே அதற்கும் பொறுப்பாவீர்கள்.

காலங்காலமாய் கிழக்கில் உண்மை நாடுபவர்கள் பிரம்மச்சாரிகளாகவே இருந்துவிடுகின்றனர். இது வெறும் பரிவன்பின் காரணமாகத்தான். ஏன் மற்றொரு மனித ஜீவனை அழிக்க வேண்டும்?

சாக்ரடீஸ் மிகவும் அமைதியாக, தியானமயமாக, மெய்தேடலில் தன்னை முழுவதுமாக ஈடுபடுத்திக் கொண்டதினால், அவர் மனைவிதான் உதாசீனப் படுத்தப்பட்டதாக, புறக்கணிக்கப்பட்டதாகக் கருதினார். தன் மேல் கவனம் தேவைப்பட்டது. நடப்பதைக் கண்கூடாக என்னால் பார்க்க முடிகிறது. சாக்ரடீஸ்மீது சுடுநீரை அவள் ஊற்றுவதை, அவள் வெறுமனே தன் பக்கம் கவனம் கோருகிறாள், ஒருவேளை சாக்ரடீஸ் அதிக குளிரை உணர்ந்து இருக்கலாம், சான்தபி அவரை சற்றே சூடுபடுத்தியிருக்கலாம் போல. ஒருவேளை அவர் உணர்ச்சிகளற்ற நிலையில் இருந்திருக்கலாம், சான்தபி சற்றே உணர்ச்சியூட்ட முயற்சி செய்திருக்கலாம். அவரால் கோபப்பட முடியுமென்றால், அவரால் பாசமாகவும் இருக்க முடியும்.

ஆனால் சாக்ரடிஸ் கோபப்படவில்லை. இதை ஒரு கருவியாகப் பயன்படுத்தினார். அவர் மேலும் சாந்தமாகவும், அமைதியாகவும் ஆகிவிட்டார். சுடு தண்ணீர் அவர் உடலைக் காயப்படுத்த அனுமதித்தார், அவர் சாட்சியாக பார்த்துக் கொண்டு இருந்தார். இது அவர் மனைவி சான்தபியை மேலும் பைத்தியமாக்கியிருக்கும். துள்ளிக் குதித்து ஒரு அறை திருப்பிக் கொடுக்காத ஒரு கணவனை எப்படி உங்களால் மன்னிக்க முடியும்? ஒருக்கால் அவர் திருப்பி அடித்திருந்தால்கூட அவர் மனைவி சற்றே சாந்தமாகியிருக்கலாம்.

உங்களுக்கு திருமணமாகியிருந்தால் இயல்பாக இருப்பதே நல்லது. உண்மைக்கான உங்கள் தேடல், உட்புறமாக இருக்கட்டும். உங்கள் மனைவி அல்லது கணவனோடு உள்ள உறவுமுறையில் ஒரு சாதாரண மனிதனாகவே இருங்கள். இல்லையென்றால் குற்றம் செய்வது போல் ஆகிவிடும். அது பாவம் செய்வது போலாகும். ஒரு ஆணையோ அல்லது பெண்ணையோ அழிக்கின்றீர்கள். தனியாக இருக்கும்போது தியானம் செய்யுங்கள். சில சமயங்களில் தேவைப்பட்டால் கோபப்படுங்கள். விளையாடிடுங்கள், தேவையில்லை என்றாலும் அப்படி நடந்து கொள்ளுங்கள். ஏனென்றால் ஒரு ஆண் அல்லது பெண்ணோடு வாழ்வது என்று முடிவு செய்துவிட்டால், உங்களுக்கென்று சில பொறுப்புகள் உள்ளன.

சைதன்ய ஹரி இதைப் புரிந்து கொள்ளவில்லை என்றால் கிருஷ்ணா, நச்சரித்துப் பிடுங்கும் பெண்ணாகி விடுவாள். அதில் பாதி பொறுப்பு சைதன்யாவுடையதாகும். சைதன்யா அமைதியாக உட்கார்ந்து இசையைப் பயிற்சி செய்து கொண்டிருக்கிறார், அதுவும் நடு ராத்திரியில்! கிருஷ்ணா எழுந்து அவரை அடிக்கிறாள். இதை எந்த மனைவியாலும், எந்தப் பெண்ணாலும் பொறுத்துக் கொள்ள முடியாது. தான் உயிரோட்டத்துடன் கதகதப்பாக, அன்பொழுகக் காத்திருக்கையில், அரவணைப்பு வேண்டி, அக்கறை வேண்டி காத்துக் கொண்டிருக்கையில், நீங்கள் அங்கே உட்கார்ந்து கொண்டு இசையைப் பற்றித் தியானம் செய்து கொண்டிருக்கிறீர்கள், இது ரொம்ப அதிகம், அனுமதிக்க இயலாது. அனுதாபம் எல்லாம் கிருஷ்ணாவிற்

குத்தான். அவளுக்கு வேண்டியதெல்லாம், "வந்து படுத்துக்கொள், என்னை அரவணைத்துக் கொள், சும்மா என்னுடன் இரு. அதுபோதும். நாள் முழுவதும் இசை, தியானம் என்று இருந்துவிட்டாய். இது நெகிழ்வதற்கான நேரம்."

ஒருவர் உறவுமுறை ஏற்படுத்திக் கொள்வது என்று தீர்மானித்தால், மற்றவரை அழிக்காதவாறு பார்த்துக் கொள்ள வேண்டும். மற்றொருவரை எதிர்த்துருவத்திற்கு அதிகமாகத் தூக்கி எறியாத வகையில் நடந்துகொள்ள வேண்டும். வாழ்க்கை தன்னையே சமச்சீர் படுத்திக் கொள்கிறது. நீங்கள் முழுவதும் நேர்மறையாக இருந்தால் மற்றது முழுவதும் எதிர்மறையாகிவிடும். ஆக பாதி பாதி என்று இருங்கள், நேர்மறை எதிர்மறை இரண்டும் இருக்கட்டும். இருவருமே இரண்டு வகையாக இருந்தால், ஓர் அழகான உறவுமுறை உண்டாகும், அதில் ஓர் அழகு எழும். மகத்தான இசை உருவாகும். ஒத்திசைவு ஏற்படும். இசைக்குழு போல் இயங்குவர்.

இது நடக்கவில்லையென்றால், ஒரு பிரம்மச்சாரியாகத் தொடர்வதே சிறந்தது. தனியாக இருப்பதே நல்லது. குறைந்தபட்சம் வேறு எந்த மனித ஜீவனையும் தொந்தரவு செய்து கொண்டிருக்க மாட்டீர்கள்.

கிழக்கு செய்வது சரி. நீங்கள் மெய் நாடுபவர் எனில் தனியாக இருங்கள். நீங்கள் ஏற்கனவே உறவுமுறையில் உள்ளீர்கள் என்றால், உண்மைக்கான தேடல் துவங்கிவிட்டது, செயல்புரியத் தொடங்கலாம். உண்மையில் கோபப்படத் தேவை

யில்லை, நடிக்கவாவது செய்யலாம், அதுபோதும். இந்த அளவிற்காவது மற்றவர்க்கு நீங்கள் கடன்பட் டுள்ளீர்கள்.

கிருஷ்ணாவும் சைதன்யாவும் தியானம் செய்ய வேண்டிய கதை இது.

இன்று இது போதும்.

## முதல் கேள்வி:

*இந்தியா அவ்வளவு ஆன்மீகமற்ற நாடு என்றால், ஏன் ஞானம் அடைந்தவர் பலர் இந்த நாட்டில் பிறக்கின்றனர்?*

ஆன்மீகம் தனிப்பட்டது. சமூகத்திற்கும், கூட்டத்திற்கும் அது தொடர்புடையதல்ல. எந்தச் சமுதாயமும் ஆன்மீகமானது அல்ல, எந்த நாடும் ஆன்மீகமானதல்ல. ஆன்மீக ஜீவன்கள் உள்ளன, சமுதாயத்தின் ஆன்மா என்று ஏதுமில்லை, ஆன்மா தனிமனிதனின் மூலமாகத்தான் தன்னை வெளிப்படுத்திக் கொள்கிறது.

*நீங்கள் கேட்கிறீர்கள், "ஏன் ஞானம் அடைந்தவர்கள் பலர் இந்தியாவில் பிறக்கின்றார்கள்?"*

இதுவும் ஒரு பிரசாரம்தான்; உண்மையில்லை. அவர்கள் எல்லா இடத்திலும் மலர்கின்றனர். இந்தியாவில் எவ்வளவோ அந்தளவு சீனாவில், ஜப்பானில், இஸ்ரேலில் மலர்கிறார்கள். எல்லா இடத்திலும் ஞானிகள் தோன்றுகின்றனர். நீங்கள் சரியான கோணத்தில் உலக சரித்திரத்தைப் பார்ப்பதில்லை. தங்கள் விருப்பு வெறுப்பிற்கேற்ப மனிதர்களால் சரித்திரம் உருவாக்கப்படுகிறது.

ஒன்று மட்டும் உறுதியானது. இந்தியா தன் கருத்துக்களைத் தெளிவாக எடுத்துரைத்துள்ளது. விஷயங்களை எப்படிச் சொல்ல வேண்டும் என்று

தெரியும். மிகப் பழமை வாய்ந்த கலாச்சாரங்களில் ஒன்று. எழுத்து ஏற்பட்ட முதல் நாடு இந்தியா, அதன் மக்களும் எடுத்துரைப்பதில் திறமை பயின்றார்கள். சிந்திப்பதில், தத்துவப்படுத்தலில் இந்தியர்கள் முன்னோடிகள். விஷயங்களை எப்படிச் சொல்ல வேண்டுமோ அப்படிச் சொல்வார்கள். சீனர்களிடம் பேச்சு அவ்வளவாகக் கிடையாது, அவர்கள் மௌனத்தில் அதிகம் நம்பிக்கையுள்ளவர்கள். அவர்கள் நம்பிக்கை, வார்த்தைகளில் அல்ல மௌனத்தில். அதனால் உங்களுக்கு சீனாவின் ஞானிகள் பற்றி அவ்வளவாகத் தெரிவதற்கு வாய்ப்பில்லை. மேலும் உலகத்தின் பிற பகுதிகளிலிருந்து சீனா வேறுபட்ட உலகமாக இருந்து வந்தது. சீனாவின் பெரும் சுவர் மட்டுமல்ல, ஒரு குறிப்பிட்ட சூட்சுமமான சுவர் சீனாவை மற்ற நாடுகளிலிருந்து தள்ளி வைத்துள்ளது.

திபெத்தில் எத்தனையோ ஞானம் அடைந்த மனிதர்கள் இருந்திருக்கின்றனர். ஆனால் அவர்களைப் பற்றி நமக்குப் பெரிதாக ஒன்றும் தெரியாது. திபெத் ஒரு தூரத்து கண்ணுக்கெட்டாத, எங்கோ மேகங்களில் இருக்கும் நாடாகத்தான் இருந்திருக்கிறது. அந்தப் பெயரே மறைபொருளின் குறியீடாக அமைந்துவிட்டது.

இந்தியா பேசும் திறன் கொண்ட நாடு, கிழக்கத்திய நாடுகளிலேயே இந்தியா அதிகமாக பேச்சுத் திறன் உடைய நாடு. ஆன்மீகம் பற்றிக் குறைந்தது ஐந்தாயிரம் ஆண்டுகளாகப் பேசி வந்திருக்கிறது. இதனால் இந்தியா ஒரு ஆன்மீக நாடு என்ற கருத்து உருவாகி உலகம் முழுவதும் நிலவி வருகிறது. எந்த நாடும் ஆன்மீகத்தில் தனிச் சிறப்படை

யவில்லை. ஆன்மீகம் எல்லா விதமான மனிதர்க ளுக்கும் எல்லா இனங்களுக்கும் இருக்கிறது.

இருண்ட கண்டமான ஆப்பிரிக்காவைப் பற்றி உங்களுக்கு என்ன தெரியும்? அங்கே வீடுபேறு அடைந்தவர்கள் எத்தனைபேர் இருந்தனர்? பழங் குடியினர் பற்றி உங்களுக்கு என்ன தெரியும்? அங்கே எத்தனை புத்தர்கள் இருந்தார்கள் என்று எப்படி தெரிந்துகொள்வது? அவர்களிடம் எந்த விதமான ஆவணங்களும் கிடையாது, எதையும் எழுதி வைத்துக் கொள்வதில்லை. எழுத்து மொழி என்று ஏதுமில்லை. ஆக தெரிந்து கொள்வது மிகக் கடினமானது.

இந்தியாவில் நிறையச் சான்றுகள் உள்ளன. இந் தியா வேதாந்தத்தில் ஆர்வம் கொண்ட நாடு. இந் தியா வரலாறு எழுதுவது இல்லை, வேதாந்தம் எழு துகிறது. அது வாழ்க்கையின் சாதாரண விஷயங்க ளைப் பற்றி எழுதவில்லை. அது புராணம் எழுதுகி றது. வரலாற்று இலக்கியத்தின்மீது இந்தியாவிற்கு ஆர்வமே இல்லை. அதன் முழு ஆர்வமும் புராண இலக்கியத்தில்தான். இயல்பாகவே ஐந்தாயிரம் வருடங்கள் என்பது ஒரு நெடிய காலம்தான். நீங் கள் தொடர்ந்து ஒரு விஷயத்தைச் செய்து கொண் டேயிருந்தால் அதில் தேர்ச்சி பெற்றுவிடுவீர்கள்.

ஆனால் புரிந்து கொள்ள வேண்டியது ஒன்று உள்ளது. மேற்கத்திய மற்றும் கிழக்கத்திய அணுகு முறைகளில் வித்தியாசம் உள்ளது. இந்தியா கிழக் கின் பிரதிநிதியாகிவிட்டது.

மெய்மை நிலையை அணுகும்போது இரண்டு சாத்தியக்கூறுகள் இருக்கின்றன. ஒன்று தர்க்கரீ

தியாக, ஆண்மைத் தன்மையோடு, 'யாங்' வழியாக, வலிமையாக அணுகலாம். அதைத்தான் மேற்கு செய்து கொண்டிருக்கிறது. மேற்கின் தேர்வு இது. கிழக்கின் தேர்வு நேர் எதிரானது. பெண்மையோடு, உள்ளுணர்வு சார்ந்த அணுகுமுறை. 'யின்' வழியாக. சிந்தனையைவிட உணர்வுகளுக்கு அதிக முக்கியத்துவம் தரப்படுகிறது. புறத்தைவிட அகத்திற்கு முதன்மை அளிக்கப்படுகிறது. மெய்மை நிலையை இந்த இரண்டு நோக்குகளாகக் குறைக்க முடியும். நீங்கள் வெளியே பார்த்தால், அது பருப்பொருளாகிறது. அது வெறும் பொருளாக மட்டும் தோற்றம் தருகிறது. உள்ளே நோக்கினால், அது உணர்வு நிலையாகத் தோற்றம் தருகிறது. பிரக்ஞையாகக் காட்சி தருகிறது. இரண்டுமே அதே மெய்மை நிலைதான். கிழக்கு அதிகமாக உள்ளே தேடிக் கொண்டிருந்தது, மேற்கு அதிகமாக வெளியே தேடிக் கொண்டிருந்தது. இயற்கையாகவே விஞ்ஞானம் மேற்கில் பிரம்மாண்டமாய் வளர்ந்துள்ளது, தொழிலில் பெரும் வளர்ச்சி கண்டுள்ளது. நீங்கள் பொருளுக்குள் பார்வை செலுத்தினால் அறிவியல் வளரும், தொழில் நுட்பம் வளரும். நீங்கள் உள்நோக்கினால் அறிவியல் வளராது, ஆனால் தத்துவம், கவிதை, சமயம் ஆகியவை வளர்ச்சி பெறும். ஆனால் இரண்டுமே பாதிகள்தான். பாதிகள் என்பதாலேயே அவை தவறு. ஒருசார்புடையவை.

என்னைப் புரிந்துகொள்ளுங்கள்: ஒரு மனிதன், ஆன்மீகவாதி என்று நான் சொல்லும்போது, அவனால் அகம், புறம் இரு வகையிலும் எளிதாகப் போகமுடிகிறது என்ற அர்த்தத்தில் சொல்கிறேன்.

கிழக்கு, மேற்கு இரண்டுமே ஆன்மீகமாக இருந் ததில்லை. மேற்கு உலகாயதமாக இருக்கிறது, கிழக்கு ஆன்மீகம் சார்ந்து இருக்கிறது. ஆனால் ஆன்மீகமாக அல்ல. மேற்கு வெளியில் உள்ள தத் துவத்தை நம்புகிறது, கிழக்கு அகத்தின் தத்து வத்தை நம்புகிறது.

ஆன்மீகவாதி என்பவன் அகம், புறம் இரண்டிற் கான இறுதி. கூட்டிணைப்பிற்கு வந்தவன். பருப் பொருள் மற்றும் உணர்வுநிலை, உடல் மற்றும் ஆன்மாவின் ஒன்றுசேர்க்கையை உணர்ந்தவன். உண்மையான ஆன்மீகவாதியிடம் கிழக்கும் மேற் கும் சந்தித்து மறைந்து போகும். உண்மையான ஆன்மீகவாதி கிழக்கு அல்லது மேற்கு எதையும் சேர்ந்தவன் அல்ல. அவன் உலகைச் சேர்ந்தவன். அவன் எங்கு இருக்கிறான் என்பது முக்கியமல்ல. அவன் அணுகுமுறை உலகமயமானது, காரணம் அவன் அணுகுமுறை முழுமையானது. அவன் முழுமையானவன், கிழக்கோ, மேற்கோ முழுமை யானது அல்ல. இரண்டும் பாதிக்கப்பட்டதுதான்.

முழுமையான மெய்மையை உள்ளபடியே எவ ருமே தேர்ந்தெடுக்கவில்லை. முழுமையான மெய்மை அளப்பரியது. அது முரண்பாடுகளை உள்ளடக்கியது. அதனால்தான் எவரும் அதை விருப்பத்தேர்வு செய்யவில்லை. நீங்கள் அகத் தைத் தேர்வு செய்தால், புறத்தைத் தேர்வுசெய்யப் பயப்படுகிறீர்கள். ஏனென்றால் அவை எதிரான வைபோல் தோன்றுகின்றன. முன்னுக்குப் பின் முர ணாக உணர்கிறீர்கள். புறத்தை தேர்வு செய்தால், இயற்கையாகவே அகத்தை மறுக்கத் தொடங் குவீர்கள், ஏனென்றால் அவை ஒன்றுக்கொன்று

பொருந்துவது இல்லை. ஏதோ ஒரு வகையான மொழியைக் கற்றுக் கொள்கிறீர்கள், வெளி அல்லது உள், பிறகு மற்ற வகை மொழியை மறுக்கிறீர்கள்.

ஆன்மீகவாதி என்பவன் யார்? யாரை நான் ஞானம் அடைந்தவர் என்று அழைக்கின்றேன்? வாழ்க்கையின் முரண்பாடுகளைக் கண்டு அஞ்சாதவர், இதை ஏற்றுக்கொள்பவர், ஏற்றுக்கொள்வதில் கிழக்கு - மேற்கு, மனம்-பொருள் என்று எல்லாவகையான இருமைகளையும் கடந்து நிற்பவரை நான் ஞானம் அடைந்தவர் என்று சொல்கிறேன். ஒரு புத்தர் கிழக்கைச் சேர்ந்தவர் இல்லை, இருக்க முடியாது, ஏசுவும் மேற்கைச் சேர்ந்தவர் இல்லை, இருக்கவும் முடியாது. அவர்கள் உணர்வு நிலையின் உச்சத்தை எட்டிவிட்டனர், அங்கிருந்து முழு பூமியும் ஒன்றுதான்.

உங்களுக்குத் தெரியுமா? மனிதன் நிலவின்மீது நடந்தபோது அவனுடைய மிகப்பெரிய அனுபவம் என்ன? அது நிலவு அல்ல. அவன் மிகப்பெரிய அனுபவமே பூமிதான். அந்த வெட்டவெளியிலிருந்து, தொலைதூரத்திலிருந்து அவர்களால் பூமியை முழுமையாய் பார்க்க முடிந்தது. அதில் எல்லைகள் மறைந்தன, தேசங்கள் மறைந்தன. அங்கே இந்தியா இல்லை, இங்கிலாந்து இல்லை, ஜெர்மனி இல்லை. எல்லாம் ஒரே பூமி. அவர்கள் நிலவின்மீது நின்றபோது அதுதான் அவர்களது மிகப் பெரிய அனுபவமாக இருந்தது. முதல் முறையாக சாதாரண மனிதர்களுக்கு பூமி ஒன்றென உணர முடிந்தது.

நீங்கள் உணர்வுநிலையின் உச்சத்தை அடையும்போது, இதே போல் நடக்கும். இது நிலவிலிருந்து பார்ப்பதைவிட மேலும் தெளிவான பார்வை கிடைக்கும். ஏனென்றால் இதுதான் இருப்பதிலேயே உயரமான உச்சநிலை. அந்தக் கோணத்திலிருந்து வாழ்க்கையை முழுமையாகக் காண்பீர்கள்.

வாழ்க்கையை முழுமையாகப் பார்ப்பவனை நான் ஞானம் அடைந்த மனிதன் என்று அழைப்பேன். அவர்கள் எல்லா இடங்களிலும் மலர்ந்து கொண்டும், பூத்துக்கொண்டும் இருக்கின்றனர். யாரும் போய்க் காணாத இமாலய பள்ளத்தாக்குகளில்கூட பூக்கள் மலர்கின்றன. உங்கள் தோட்டத்தில் மட்டும்தான் மலர்கின்றன என்று நினைக்காதீர்கள். பழங்குடிச் சமூகங்களிலும் மலர்கின்றனர். நிச்சயமாக ஞானம் அடைதல், அல்லது புத்தர் போன்ற விளக்கச் சொற்கள் வைத்திருக்க மாட்டார்கள், அவர்கள் வேறு வார்த்தைகளில் விவரிப்பார்கள்.

நீங்கள் பழைய ஏற்பாட்டைப் படித்தீர்களானால் புத்தர், ஞானமடைதல் போன்ற வார்த்தைகளைக் கண்டுபிடிக்க முடியாது. அது வேறு வகையான மொழி. ஆனால் யார் இந்த இறைத்தூதர்கள்? ஆதிகுடியினரிடையே ஞானம் அடைந்த ஒருவர் மந்திரவாதி என்று அழைக்கப்பட்டு இருக்கலாம். ஒரு புத்தரை மந்திரவாதி என்று அழைப்பது நமக்கு அபத்தமாகப் படலாம். ஆனால் அது அவர்களின் மொழி, அதற்கென்று ஒரு அழகு இருக்கிறது - காரணம் இதுதான் மிகப் பெரிய மாயாஜாலம் - மனிதன் இந்த மிகப்பெரிய மாயாஜாலத்தைச் செய்துவிட்

டான். அவன் தன்னையே உருமாற்றிக் கொண்டு விட்டான்.

மந்திரவாதிக்கு இணையான ஆங்கிலச் சொல் மேஜிசியன். மேஜிசியன் என்ற சொல் மேகஸ் என்ற ஞானம் அடைந்த மிகப்பெரிய மனிதரிடமிருந்து வருகிறது. புத்தரைச் சுற்றி இருந்தோர் உணர்ந் தாற்போல் மேகஸ்ஸை சுற்றி இருந்தோர் உணர்ந் திருக்கக் கூடும். அந்த மனிதரின் அதிர்வுகள் மந்திரசக்தி வாய்ந்ததாய் இருந்தது. அவர் அரு கில் இருந்தாலே உங்களுக்குள் இருக்கும் ஏதோ ஒன்று தூண்டப்பட்டு, நீங்கள் எப்போதும் இருக் கும் சாதாரண இடங்களில் இருந்து வெகுதூரம் சென்று, உங்கள் ஜீவனுக்குள் இருக்கும் ஒரு புதிய இடத்தில் விடப்பட்டீர்கள். இது உங்களுக்கு ஒரு புதிய வெளியின் அனுபவத்தை தந்தது. அந்த மக் கள், இவர் என்ன செய்தார் என்று ஆச்சரியப்பட்டு இருப்பார்கள்.

பழங்குடிச் சமூகங்கள் தங்கள் ஞானிகளை மந் திரவாதிகள் என்று அழைத்தனர். புரிந்து கொண் டவர்கள், மொழி பற்றிப் பெரிதாகக் கவலைப்படக் கூடாது. மொழி, கருத்து என்று எல்லாத் தடைக ளையும் தாண்டி நேராக நோக்க வேண்டும். அதன் பிறகு ஆச்சரியப்படுவீர்கள். பூக்கள் பூமியெங்கும் மலர்ந்திருக்கின்றன. இறைவன் பூமி முழுவதும் வருகை தந்திருக்கிறார். எல்லா இடங்களிலும், எல்லா நேரங்களிலும் அவர் கீழிறங்கி வந்துள் ளார். இறைவன் ஒரு சார்பு கொண்டதேயில்லை. ஆனால் ஒவ்வொரு இனமும் இறைவன் ஒரு சார் புடையவன் என்று சொல்ல விரும்பும்.

தாங்கள்தான் தேர்ந்து எடுக்கப்பட்டவர்கள் என்று யூதர்கள் சொல்கின்றனர். அற்புதமானவை, மகத்தானவை எல்லாம் அவர்களுக்குத் தான் நடக்கின்றன. அருட்போதகர்கள் எல்லோரும் அவர்களைச் சேர்ந்தவர்கள். "வேறு யாருக்கு இவ்வளவு போதகர்கள் உண்டு?" என்று யூதர்கள் சொல்வார்கள். நிச்சயமாக, இந்தியாவிலும் சீனாவிலும் அவர்களை அருட்போதகர்கள் அல்லது இறைத் தூதர்கள் என்று அழைக்க மாட்டார்கள். யூதர்கள் சொல்வதும் சரிதான், ஏனென்றால் அவர்களிடம்தான் வழிவழியாக வரிசையாக இறைத்தூதர்கள் இருக்கின்றனர்.

கிறிஸ்தவர்களைக் கேட்டால், அவர்கள்தாம் 'தேர்ந்து எடுக்கப்பட்ட மக்கள்' என்பார்கள். இறைவன் பெற்றெடுத்த ஒரே பிள்ளையைப் பின்பற்றுகிறார்கள். ஏசு கிறிஸ்து அவர்களிடம்தான் வந்துள்ளார். வேறு யாரிடம் இத்தகைய குறிப்பிடத்தக்க விஷயம் இருக்கிறது? கிறிஸ்து அவர்களின் உடைமை, அவர்களைச் சேர்ந்தவர்.

இந்தியாவில் ஞானம் அடைந்தவரை கிறிஸ்து என்று அழைப்பதில்லை. ஆனால் கிறிஸ்துவின் உணர்வுநிலையும், புத்தரின் உணர்வு நிலையும் ஒன்றுதான். சீனாவில் ஞானம் அடைந்தவரை புத்தர் என்றோ, இறைத்தூதர் என்றோ அழைப்பதில்லை. சீனர்கள் அப்படிப்பட்டவரை 'துறவி' என்று அழைக்கின்றனர். சீனர்கள், "வேறு எங்கும் இல்லாத அளவு இங்கே துறவிகள் பிறக்கின்றனர்" என்று சொல்ல முடியும். ஒவ்வொரு இனமும் தனக்கென அகங்காரம் கொண்டிருக்கிறது. ஆக சீனா,

நாம்தான் பூமியில் மிகப்பெரிய நாடு என்று நினைத்துக் கொண்டிருக்கிறது.

மேற்கிலிருந்து முதலில் சீனாவிற்கு பயணப்பட்டவர்கள், சீனாவின் சக்ரவர்த்தியைப் போய் பார்த்தனர், மிகவும் பழமைவாய்ந்த குடியினரிடம் வந்திருக்கிறோம் என்று நினைத்தனர். அவர்களைப் பற்றி சீனர்கள் என்ன நினைத்தனர் "இந்த மனிதர்கள் குரங்குகள்போல இருக்கிறார்கள்." 'மேற்கிலிருந்து குரங்குகள்' வந்திருக்கின்றன என்று சீன ஆவணங்கள் கூறுகின்றன. மேற்கிலிருந்து வந்த பயணி எழுதுவது என்னவென்றால் 'இந்த மக்கள் எல்லாம் பழமைவாய்ந்த காட்டுமிராண்டிகள்'. ஜெர்மனியர்கள் தாங்கள்தாம் உண்மையான நார்டிக் இனத்தைச் சேர்ந்த ஆரியர்கள், உலகை ஆள்வதற்குத் தகுதியானவர்கள், மிகவும் மேம்பட்ட இனத்தவர் என்று நினைக்கின்றனர். வெள்ளை மனிதன், தானே மிகவும் மேம்பட்டவன் என்று நினைக்கும்போது எவ்வாறு கறுப்பு மனிதன்தான் ஒரு மனித ஜீவன் என்றுகூட கோர முடியும்? எல்லாமே அகங்காரமே தவிர வேறு ஒன்றுமில்லை.

இந்திய 'மகாத்மாக்கள்' என்று அழைக்கப்படுவோர் உலகெங்கும் சுற்றி வந்து இந்தியாதான் ஒரே ஆன்மீக நாடு, சமயம் சார்ந்த ஒரே நாடு என்று பிரச்சாரம் செய்துகொண்டிருக்கின்றனர். அவர்கள் குறுகிய மனப்பான்மை உடையவர்கள், இனப்பற்றாளர்கள் வேறு ஒன்றுமில்லை, அவர்கள் சமயவாதிகளே அல்ல. இறைவன் பூமியின் ஓரிடத்தில் மட்டும் தோன்றுகிறான் என்று எப்படி ஒரு சமயவாதி சொல்ல முடியும்? கடவுள் எல்லா இடங்களிலும் இருக்கின்றார், எல்லா இடங்களிலும்

'நிகழ்கின்றார்'. ஓரிடத்தில் அதிகமாகக் குவிந்து மற்றோர் இடத்தில் குறைவாக இருப்பதில்லை. இயல் உலகம் முழுவதும் சார்பின்றிப் பொழிகிறார். உளதாம் உலகம் அவருடையது, அது அவருடைய உருவாக்கம். ஆக, இந்த எண்ணம் கைவிடப்பட வேண்டிய ஒன்று. எந்த நாடும் தனிச்சிறப்புடைய தல்ல. நாம் இந்தியர்கள், ஜெர்மானியர்கள், ஆங் கிலேயர்கள், சீனர்கள், இந்துக்கள், முகமதியர்கள், கிறிஸ்தவர்கள் போன்ற முட்டாள்தனமான கருத் துக்களையெல்லாம் விட்டொழிக்கும் நாள் உல கில் மிகவும் கொண்டாடப்பட வேண்டிய நாளாக இருக்கும். பூமியைச் சேர்ந்த பரிசுத்தமான மனித ஜீவன், முழு உலகிற்கே உரியவன், முழுமையின் குடிமகன், எழும்போதுதான் ஆன்மீகம் தொடங்கு கிறது. ஆன்மீக மனிதன் முழுமையான மனிதன். பிரிவுகள் அற்ற பார்வை கொண்டவன் அவன். அவன் நோக்கு தரிசனம் பகுக்க முடியாத ஒன்று.

*இந்தியா அவ்வளவு ஆன்மீகமற்ற நாடு என் றால் ஏன் பல ஞானம் அடைந்த மனிதர்கள் இங்கு பிறக்கின்றனர்? என்று கேட்கிறீர்கள்.*

புரிந்து கொள்ளவேண்டிய விஷயங்கள் சில உள்ளன. முதலாவது, பகலில் நட்சத்திரங்கள் மறைகின்றன. என்ன நடக்கின்றது? அவை எல் லாம் எங்கோ போய் ஒளிந்து கொள்கின்றனவா? எங்கே இருந்தனவோ, துல்லியமாக அதே இடத் தில்தான் இருக்கின்றன. ஆனால் அதிக சூரிய ஒளியினால் அதைப் பார்க்க முடிவதில்லை. சூரி யன் மறைந்த பிறகு அவை மறுபடியும் தோன்றும். அவை திரும்பி வருகின்றது என்று அர்த்தமில்லை,

அங்கேதான் இருந்தது, ஆனால் அவை ஒளிவீச பெரும் இருட்டு தேவைப்படுகின்றது.

ஒரு காலத்தில் மனிதர்கள் அவ்வளவு சமயம் சார்ந்து இருந்ததினால், சமயங்களே அப்போது இல்லை என்று லாவோட் சூ சொல்கிறார். ஒரு சமயத்தில் மக்கள் அனைவரும் அவ்வளவு மாசற்று இருந்தனர், அவர்கள் 'மாசற்ற தன்மை' என்ற வார்த்தையைக் கூடக் கேட்டதில்லை. அவர்கள் அவ்வளவு எளிமையாக இருந்ததினால் எளிமை பற்றி ஏதும் அறிந்திருக்கவில்லை. அளப்பரிய நம்பிக்கையுடையவர்களாதலால், நம்பிக்கை, பற்றுறுதி போன்றவற்றை எல்லாம் அறியாதவராக இருந்தார்கள். அப்படி ஒரு காலம் இருந்திருக்குமானால், அதைப் பற்றிச் சிந்தித்துப் பாருங்கள். ஞானம் அடைந்தவர் என்று யாரும் இருந்திருக்க முடியாது, ஏனென்றால் எல்லோருமே அந்த வகையான சமுத்திரத்தில் இருந்தனர், ஞானக் கடல் என்ற இடத்தில் இருந்தனர். இருட்டுச் சூழ்ந்த இடத்தில்தான் ஒரு புத்தரைக் காண முடியும். லட்சக்கணக்கான புத்தர்கள் இருந்தால், புத்தர் மறைந்து விடுவார். அவர் இருக்க மாட்டார். என்றில்லை, அவர் இருப்பார், ஆனால் நீங்கள் எப்படிப் பார்க்க முடியும்? எப்படிக் கண்டுபிடிக்க முடியும்? உண்மையான ஆன்மீக உலகில் ஞானம் அடைந்த மனிதர் எவரும் இருக்க மாட்டார். ஆனால் ஞானம் அடைதல் என்பது அவ்வளவு இயற்கையாக நடப்பதினால், தன் இயல்பாகவே நடப்பதினால் நீங்கள் யார் புத்தர் என்று கண்டுபிடிக்க முடியாது. எல்லோருமே புத்தர்களாக இருப்பார்கள்.

இருட்டிற்கு எதிராகத்தான் ஞானம் பெற்ற மனிதர்களை அடையாளம் காண முடியும்.

இந்தியாவில் இருட்டிற்கு எதிராக ஞானம் பெற்ற மனிதர்கள் இருந்திருக்கின்றனர். சமுதாயம் தெரிவு நிலையற்று இருந்தது. மக்கள் இருண்ட குழியினுள் இருந்தனர். இந்த இருட்டில் எப்போதெல்லாம் ஒரு நட்சத்திரம் பிறக்கின்றதோ அது பிரகாசிக்கிறது. நீங்கள் அதைப் பார்க்க முடியும், நூற்றாண்டுக் கணக்கில் அதை மறக்க முடியாது! அதை வழிபடுவீர்கள். ஏனென்றால் அது அரிதான ஒன்று.

ஞாபகம் வைத்துக் கொள்ளப்பட வேண்டிய விஷயம்: ஒரு ஞானம் அடைந்தவர் அடையாளம் காணப்படுவதற்குப் பெருந்திரளான அறிவு நிலையடையாத மனிதர்கள் தேவை. ஆனால் இதற்கு நிலை எதிர் மாறானது உண்மையல்ல. ஒரு குறிப்பிட்ட சமுதாயத்தில் ஞானம் அடைந்தவர் எவரும் இல்லை என்றால், அந்த முழுச் சமுதாயமே ஞானம் அடைந்த ஒன்று என்று நான் சொல்ல வரவில்லை. ஞானமடையாதவருக்கு எதிராகத்தான் ஒரு ஞானமடைந்தவரை அடையாளம் காணமுடியும் என்பது முற்றிலும் உண்மை. ஏழைகளுக்கு நடுவேதான் ஒரு பணக்காரரை அறிந்து கொள்ள முடியும். அழகற்ற ஒருவருக்கு எதிராகத்தான் அழகானவரைத் தெரிந்து கொள்ள முடியும். பிளாஸ்டிக் சர்ஜன்கள் சொல்வதுபோல விரைவிலேயே எல்லோரும் அழகானவர்களாகி விட்டால், எல்லோருக்கும் அழகு இருக்கும், அழகுப் போட்டிகளே இல்லாமல் போய்விடும். அழகு ராணிகளே இனி இருக்க மாட்டார்கள். பெரும் அழகின்

மைக்கு நடுவேதான் 'பியூட்டி குயின்' 'மிஸ் யூனி வர்ஸ்' இருக்க முடியும். இல்லையென்றால் அது சாத்தியமில்லை. எல்லா மனிதர்களும் தியானம் செய்யத் தொடங்கிவிட்டால், எல்லோரும் அமைதி யாகிவிட்டால். நீங்கள் எப்படி ஒரு புத்தரை உணர முடியும்? புத்தர் மறைந்து விட்டார் என்றில்லை, அவர் அங்கேயே இருக்கிறார். புத்தர் பெரு மகிழ்ச் சியில் இருப்பார், ஏனென்றால் அவருக்கு வேலை யில்லை, அவர் இனி ஓய்வெடுத்துக் கொள்ளலாம். ஆனால் அவர் அடையாளம் காணப்பட மாட்டார்.

ஞானமடைந்த மனிதர்களை நீங்கள் விரல்விட்டு எண்ணி விடலாம். ஒரு கௌதம புத்தர், ஏசு கிறிஸ்து, ஒரு கிருஷ்ணர், ஒரு லாவோட் சூ. ஏன் அப்படி? ஏனென்றால், பெருந்திரளான மக்கள் கடும் இருட்டிலேயே, தீவிரமான முரட்டுத்தனத்து டன் இருந்திருக்கின்றனர்.

இதை நினைவில் கொள்ளுங்கள்: ஒரு புத்தர், அவருடைய இருப்பு ஒரு நாட்டையே ஞானம டையச் செய்யாது. அவருடைய வார்த்தைகளை மனிதர்கள் எளிதாக திருப்பிச் சொல்ல முடியும். அதனால் அவர்கள் ஞானமடைந்தவர்கள் என்று அர்த்தமில்லை. எடிசன் மின்சாரத்தை கண்டுபி டித்தார், இன்று எல்லோரும் அதைப் பயன்படுத் துகிறோம், ஆனால் எல்லோரும் எடிசன் அல்ல. மேலும், நீங்கள் மின்சாரத்தைப் பயன்படுத்தினா லும்கூட உங்களுக்கு அதைப்பற்றி என்ன தெரியும். சும்மா விசையை அழுத்தினால் மட்டும் மின்சா ரம் பற்றி தெரியுமா? உங்களுக்கு அதைப் போட்டு அணைக்கத் தெரியும். இதனால் மின்சாரம் பற்றித் தெரிந்தவராகி விடுவீர்களா? எடிசனே, தனக்கு

இந்த மின்சாரம் என்னவென்று தெரியாது என்று சொல்லியிருக்கிறார். அவர் அதன் பயனை எதேச்சையாகக் கண்டுபிடித்தார், ஆனால் அதற்குள் இருக்கும் மெய்மை மர்மமாகவே இருந்தது.

நீங்கள் உங்கள் காரை ஓட்டலாம், அதன் இயக்கம் அனைத்தும் தெரியும் என்று அர்த்தமில்லை. உங்கள் உடலில் வாழ்கின்றீர்கள், உங்கள் உடல் பற்றி என்ன தெரியும்?

மனிதர்கள் வார்த்தைகளைக் கற்றுக் கொள்கின்றனர், அதை அவர்கள் பயன்படுத்தலாம். புத்தர் பல விஷயங்களைச் சொல்லியிருக்கிறார், இப்போது நீங்கள் அதைத் திருப்பிச் சொல்ல முடியும். நாடு முழுவதும் சொன்னதையே திருப்பிச் சொல்லும் கிளிப்பிள்ளைபோல் ஆக முடியும். அதுதான் இந்தியாவில் நடந்தது. கிளிப்பிள்ளை போன்ற நாடு, எல்லோரும் திருப்பிச் சொல்கிறார்கள். அவர்கள் வேதம் அறிவர், பகவத் கீதை, தம்மபதம் எல்லாம் தெரியும். அவற்றையெல்லாம் நெட்டுரு போட்டு திரும்பத் திரும்பச் சொல்லிக் கொண்டிருக்கிறார்கள். ஒரு கிளி ஒன்றைத் திருப்பிச் சொல்லும்போது எதையாவது குறிக்கின்றது என்று நினைப்பீர்களா? அது எதையும் குறிப்பிடுவதில்லை. அர்த்தமற்ற வகையில் இயந்திரத்தனமாகச் சொன்னதைத் திருப்பிச் சொல்கிறது அவ்வளவே. மனிதன் வெறுமனே வார்த்தைகளைக் கற்றுக் கொள்கிறான்.

ஆம், வேறு எந்த நாட்டையும்விட இந்தியாவிற்கு அதிக சமயம் சார்ந்த வார்த்தைகள் தெரியும், அது உண்மைதான், ஆனால் ரொம்பவும் குறிப்பிடத்

தக்கதல்ல. அது வெறும் அலங்கார மொழிநடை, சலசலப்பு மட்டுமே. அதன் பொருள் உணர்ந்தால் அன்றி அது அர்த்தமற்றதாகி விடுகிறது. உண்மை யில் இந்த அறிவெல்லாம் தடையாகிவிடும். புத்தர் கள் இங்கே இருந்திருக்கின்றனர், வேறு இடங்க ளிலும் இருந்திருக்கின்றனர், மக்கள் அவர்களது வார்த்தைகளைக் கற்றுக் கொண்டுள்ளனர். அந்த வார்த்தைகள் அழகுடையவை. அதில் கவித்து வம் உள்ளது. வெறுமனே திருப்பிச் சொல்வதுகூட அற்புதமான அனுபவம்தான். பொருள் அறியாமல் சொல்வதில் கூட ஒரு விதமான அதிர்வு ஏற்படுத் தும். அதைச் சொல்லி நீங்கள் நலமாய் உணர முடியும், ஆனால் இந்த 'நலம் உணர்தல்' ஆன்மீக மாக இருப்பது என்று அர்த்தமில்லை. புத்தருடைய கண்களைக் கொண்டு பார்த்தாலன்றி, புத்தர் இந்த இயல் உலகை அனுபவித்ததுபோல் அனுபவத்தா லன்றி நீங்கள் ஞானம் அடைந்தவரல்ல.

இதுதான் சூஃபிசம் அழுத்தமாக கூறும் விஷயம். அனுபவம், அனுபவம், அனுபவம். ஆக குறிப்பிடத் தக்கது அனுபவம் மட்டுமே. அனுபவமே மையமா னது. மற்றதெல்லாம் வீண். அறிவை, அறிவுடை மையைத் தவிர்த்திடுங்கள். விஷயங்களை நேரடி யாக உணர்ந்திடுங்கள்.

## இரண்டாவது கேள்வி:

*நீங்கள் முரண்பாடுகளைப் பயன்படுத்துகி றீர்கள் என்பதை நான் அறிவேன். ஆனால் என் மனம் இன்னமும் தர்க்க ரீதியாகச் செயல்படுகிறது, அதனால் புரித்து கொள் வது கடினமாக உள்ளது. "அறிந்தவர் பேசு*

*வதில்லை" என்று தாவோ சொல்கிறது. நீங்கள் சொல்வது, ஒருமுறை நீங்கள் வார்த்தைகளை வெளியிட்டால் அவை உயிரற்றுப் போகிறது. மேலும் தெய்வீகத்தின் உருவை கருத்தாக்கம் செய்ய முடியாது என்றும் சொல்கிறீர்கள். அப்படியானால், உங்களை குறிப்பிடும் அடையாளமான மாலையை ஏன் 'உருவம்' என்று அணிந்து கொண்டிருக்கிறேன். இதனால் நான் தவிர்ப்பதற்கல்லாமல் உங்களைப் பற்றிப் பேசக் கட்டாயப்படுத்தப் படுகிறேன். நான் ஒரு பாரம்பரியத்தை உருவாக்குவதில் பங்குகொள்கிறேன் என்ற அச்சம் எனக்குள்ளது.*

இந்தக் கேள்வி மா பிரேம் தாசனாவிடமிருந்து வந்துள்ளது.

சில விஷயங்களைப் புரிந்து கொள்ள வேண்டும். இது ஒவ்வொருவருக்கும் பயன்படும், ஏனென்றால் பலருக்கும் இந்த கேள்வி எழும்.

*நீங்கள் முரண்பாடுகளைப் பயன்படுத்துகிறீர்கள், ஆனால் என் மனம் தர்க்க ரீதியாகச் செயல்படுகிறது என்று அவர் சொல்கிறார்.*

மனம் வேறு எப்படியும் இருக்க முடியாது. இதைத்தான் முதலில் புரிந்துகொள்ள வேண்டும். மனம், தர்க்கரீதியானது. இவை இணைப்பொருட் சொற்கள். தர்க்கரீதியற்ற மனம் இல்லை, அது சாத்தியமில்லை. அது ஆரோக்கியமான வியாதி இருப்பது போல. மனம் தர்க்க ரீதியானதுதான். மனம் தர்க்கரீதியாகச் செயல்படுகிறது என்று சொல்லாதீர்கள்.

அது தவறான வாதம். தர்க்கம் என்றால் மனம். ஆகவே மனம் தர்க்கரீதியாகத்தான் இருக்கும்.

நீங்கள் மனதைக் கடந்து போகலாம். நீங்கள் அறிவெல்லை கடந்த தத்துவத்திற்குள் நுழையலாம். ஆனால் மனதை பின்னால் விட்டுவர வேண்டும். பொருந்தாவுரைகளையும், முரண்பாடு களையும் பயன்படுத்துவதற்கான காரணம் அதுவே. ஒரு முரண்பாட்டின் வேலை என்ன? அது உங்கள் மனதைக் குழப்பி, அதைத் தகர்த்துவிடும், அதிர்ச்சியளிக்கும், வேர்களைக் களையும், அது தருக்கத்தை அழித்துவிடும். அது அவ்வளவு விரைவில் விட்டு விலகாது, மறுபடியும் வேரூன்ற முயற்சி செய்யும். துகள்களையெல்லாம் ஒன்றுசேர்த்து மறுபடியும் உருவாக முயற்சி செய்யும், மீண்டும் மீண்டும் முயற்சிக்கும்.

அதனால் நான் தொடர்ந்து முரண்பட்டுக் கொண்டேயிருக்க வேண்டும். ஏனென்றால் நான் உங்களுக்குச் சொல்வது பாடம் அல்ல, அது வேலை! அது கற்றுக் கொடுத்தல் அல்ல, செயல். ஞாபகத்தில் வையுங்கள், நான் உங்களுடன் பேசுவது நான் உங்கள்மீது செயல்படுவதாகும் - அது ஒரு அறுவைச் சிகிச்சை. இந்த வேறுபாட்டைக் கவனியுங்கள்.

ஒரு ஆசிரியருக்குக் கற்றுக் கொடுக்க ஏதோ உள்ளது. ஒரு குருவிற்கு ஏதோ வேலை இருக்கிறது, அவர் கற்றுக் கொடுக்க ஒன்றுமில்லை. அதனால்தான் நான் ஜென் அல்லது யோகா, அல்லது தந்திரம் அல்லது சூஃபிசம் என்று எதைப் பற்றிப் பேசுகிறேன் என்பது முக்கியமல்ல. அவை

யெல்லாம் பொருட்டல்ல, ஒரு சாக்குதான். தங் கம், வெள்ளி, இரும்பு என்று எந்த உலோகத்தால் செய்த சுத்தியலை நான் வைத்திருந்தால் என்ன, அது பொருட்டல்ல. உங்கள் தலையில் தட்ட வேண்டும் அவ்வளவே, அதன் நிறமோ, பயன் படுத்தப்பட்ட உலோகமோ ஒரு பொருட்டல்ல. செயல்தான் முக்கியமானது.

நான் சொல்வதை நீங்கள் கேட்கும்போது, ஒரு அறுவைச் சிகிச்சைக்கு உள்ளாகின்றீர்கள். இது பாடம் அல்ல, உங்கள் உயிர் உருவுக்குள் துளை யிடுவதாகும். மனம் தர்க்கரீதியாக இருப்பதால் நான் 'அதர்க்க ரீதியாக' செயல்பட வேண்டியுள் ளது. நானும் தர்க்கரீதியாகப் பேசினால், மனம் என்னோடு முற்றிலும் ஒத்துப்போகும். 'முற்றிலும் சரி, இதைத்தான் நான் யோசித்துக் கொண்டி ருந்தேன். நான் சொல்ல நினைத்ததை நீங்கள் சொல்லிவிட்டீர்கள். என்னைவிட மிக நன்றாகச் சொல்கிறீர்கள், ஆனால் அதே விஷயம்தான்.' இப் படி ஆனதென்றால் நான் சொல்வதைத் தவற விட்டு விடுவீர்கள். என்னுடன் உடன்படுகின்றீர் களா, இல்லையா என்பது கேள்வி இல்லை. இது உங்களுக்கும் எனக்கும் இடையேயான சண்டை. நான் இங்கே உங்களைக் கொல்வதற்காக இருக் கிறேன். அதற்கான ஒரே வழி உங்கள் தலையில் சம்மட்டி கொண்டு அடிக்க வேண்டும். மீண்டும் மீண்டும் அடிக்க வேண்டும், இது போன்ற தர்க்க ரீதி சாராத விஷயங்களைச் சொல்ல வேண்டும், மனம் அதற்கு ஈடு கொடுக்க முடியாது, போகப் போக மனம் சோர்ந்து போகும். அந்தச் சோர் வில், அந்த ஆயாசத்தில் அப்பாலில் உள்ளது உங்

களுக்கு ஒரு க்ஷணநேரத் தோற்றமாகத் தெரியும். மேகங்கள் விலகி சில உச்சக்கட்ட கணங்களை - அனுபவிப்பீர்கள். ஒருமுறை அந்த வெய்யில் பூத்த கணங்களை ருசித்து விட்டீர்களானால், அதன் பிறகு பிரச்சினை அதிகமில்லை. நீங்கள் மனதிற்கும் மேற்பட்டவர் என்பதைத் தெரிந்து கொள்வீர்கள். பயணம் தொடங்கிவிட்டது. அதற்கு முன் போராட்டம்தான். தாசனா ஒரு புது சன்னியாசினி. என் பழைய சன்னியாசிகள் இதுபோன்ற கேள்விகளைக் கேட்கமாட்டார்கள். என்னுடைய அதர்க்கவாதம் அவர்களுக்கு பழகிவிட்டது. அதன் பின்னால் ஏதோ செயல் இருக்கிறது என்று புரிந்து கொள்வார்கள், அவர்கள் கற்றுக்கொண்டார்கள், சில கணங்களைக்கூட அனுபவித்துள்ளார்கள், இந்த சம்மட்டியடி ஒரு வகையில் உதவுகிறது என்பதைக் கண்டுகொண்டார்கள். உண்மையில் வேறு எதுவும் உதவுவதில்லை. ஆனால் புதிய சன்னியாசிகளுக்கு இது எப்போதும் பிரச்சினைதான், நீங்கள் என்னைச் சுற்றி ஒரு அமைப்பை உருவாக்கத் தொடங்குகிறீர்கள். நான் கொள்கை மாறாமல் இருக்க விரும்புகிறீர்கள். நான் மாறாமல் இருந்தால், உங்களுக்கு வசதியாக இருக்கும், அதன் பிறகு உடன்படுவதில் ஒரு பிரச்சினையுமில்லை. ஆனால் எளிதாக உடன்படுவது ரொம்ப மலிவாகப் போய்விடும். உடன்பாடற்ற விஷயங்களை நான் சொல்லிக் கொண்டேயிருப்பேன். உங்களுக்கும் எனக்கும் இடையே சச்சரவு ஏற்படுத்தக்கூடிய விஷயங்களை மீண்டும் மீண்டும் சொல்லிக் கொண்டே இருப்பேன், உங்களால் அதற்கு ஈடு கொடுக்க முடியாத நிலை ஏற்படும். என் முரண்

பாடுகளைப் பெரிதாக்கிக் கொண்டே போவேன், அதன் பளுவை ஏற்றிக் கொண்டே இருப்பேன். இந்த வகையில் உங்கள் மனதைச் சோர்வடைய வைப்பேன், இப்படித்தான் உங்கள் மனம் தன் வீரியமின்மையை உணர்ந்து கொள்ளும்.

ஒரு நாள் சூஃபிசம் பற்றி கேட்கும்போது என்னுடன் ஒத்துப்போவீர்கள். அடுத்த நாள் ஜென் பற்றி கேட்கையில் உடன்பட மாட்டீர்கள். சூஃபிசம் என்ற பெயரில் நான் பேசும்போது உடன்பட்டு, ஜென் என்ற பெயரில் நான் சொல்வதோடு ஒத்துப்போக மாட்டீர்கள். அடுத்து வேறு ஒன்றைப் பற்றிப் பேசுவேன்.

உதாரணமாக தாசனா கவலைப்படக் காரணம் என்னவென்றால், ஒருமுறை நீங்கள் வார்த்தைகளை வெளியிட்டு பிறகு அவை உயிரற்றவை ஆகின்றன என்று சொன்னேன். இயற்கையாகவே இந்தக் கேள்வி எழும். "பிறகு ஏன் நீங்கள் அதைச் சொல்ல வேண்டும்?" நான் தொடர்ந்து பேசிக் கொண்டேயிருக்கிறேன். உண்மையில் நான் பேசிய அளவு யாரும் பேசியதில்லை, ஆனாலும் நான் தொடரப் போகிறேன். வார்த்தைகள் உயிரற்றதானால் பிறகு ஏன்? இது தர்க்கம் சார்ந்தது: வார்த்தைகள் உயிரற்றது என்றால் அமைதியாகி விடுங்கள். அதன் பிறகு நீங்கள் வசதியாக உணர்வீர்கள், மனம் ஈடுகொடுக்கும். வார்த்தைகளால் சொல்ல முடியும் என்றால், மேலும் வார்த்தைகளை நான் பயன்படுத்தும் பட்சத்தில், வார்த்தைகளுக்கு எதிராகப் பேசாதீர்கள், அவற்றைப் பயன்படுத்துங்கள். இதுவும் சரியாக இருக்கும். அப்படியானால் நீங்கள் என்னுடன் ஒத்துப்போவீர்கள், "இந்த

மனிதர் வார்த்தைகளை நம்புகிறார், வார்த்தைகள் எதையோ சொல்லும் என்று நம்புகிறார். அதனால் அவற்றைச் சொல்கிறார். அப்படியானால் எந்தப் பிரச்சினையும் இல்லை."

ஆனால், நான் அவ்வளவு மலிவாக உடன்பட போவதில்லை. என்னுடன் உங்கள் உடன்பாடு அவ்வளவு மலிவாக இருக்கக்கூடாது. உங்களுக்குள் புரிதல் எழுந்த பின்னர்தான் என்னுடன் உடன்பட உங்களை அனுமதிப்பேன். உங்கள் சிந்தனையோடு ஒத்துப்போக எனக்கு விருப்பமில்லை. ஏனென்றால் அந்த உடன்பாடு உங்கள் மனத்துடன் ஆகும். பிறகு நான் உங்களுக்கு உதவியாக இருக்கப் போவதில்லை. உங்கள் மனதைப் பலப்படுத்திக் கொண்டிருப்பேன். நான் அதைப் பலப்படுத்த இங்கு இல்லை, அதை வேரோடு சாய்க்க உள்ளேன். ஆக ஒரு நாள், நான் சொல்வதற்கு ஒன்றுமில்லை என்று சொல்லி, தொடர்ந்து பேசிக் கொண்டே போவேன். இது உங்கள் மனதைக் குழப்பும்.

நீங்கள் லாவோட் சூவை மேற்கோள் காட்டுகிறீர்கள். "அறிந்தவர் பேசுவதில்லை" லாவோட் சூ அமைதியாக இருந்தார் என்று நினைக்கிறீர்களா? அப்படியானால் இதைச் சொன்னது யார்?

'அறிந்தவர் பேசுவதில்லை' என்ற வாக்கியம் மிகவும் முக்கியமானது. லாவோட் சூ எதையும் பேசவில்லை என்றால் லாவோட் சூ பற்றி நீங்கள் கேள்விப்பட்டு இருக்கவே முடியாது. ஆனால் சொல்வதற்கு ஆயிரமாயிரம் வழிகள் உள்ளன. நீங்கள் ஒரு ஜென் குருவிடம் போய் கேள்விமேல் கேள்வி

கேட்க, அவர் அமைதியாய் இருக்கிறார். திடீரென அவர் "ஒரு கோப்பை தேநீர் குடியுங்கள்" என்று சொல்கிறார். அது அவர் வழியில் சொல்வதாகும். ஆனால் ஏதோ ஒன்றைக் குறிப்பிடுகிறார். அவர் என்ன சொல்ல வருகிறார்?

"ஒரு கோப்பை தேநீர் குடியுங்கள்" என்று அவர் சொன்னால், அதன் பொருள்: "இந்த அபத்தப் பேச்சை விடுங்கள்." முக்கியமான ஒன்றைச் சொல் லும் குருவின் வழி இது. "பேசியதெல்லாம் போதும், கொஞ்சம் விழிப்போடு இரு" என்பதைக் குறிப்பா கச் சொல்கிறார். "டீ குடி" என்கிறார். ஜென் தத் துவத்தில் ஒரு கோப்பை தேநீர் குடி என்றால், கொஞ்சம் தியானம் செய். இன்னும் சற்று விழிப்பு ணர்வோடு இரு என்று பொருள்.

தேநீர் போதி தர்மரால் கண்டுபிடிக்கப்பட்டது, அவர்தான் ஜென்னின் ஸ்தாபகர். இந்தக் கதை அழகானது.

* போதிதர்மர் ஒரு சுவரை நோக்கி அமர்ந்து ஒன் பது வருடங்களாகத் தியானம் செய்து கொண்டி ருந்தார். வெறுமனே சுவரை நோக்கித் தொடர்ந்து ஒன்பது வருடங்கள், இயற்கையாகவே சில சம யங்களில் தூங்கிப் போவார். தன் தூக்கத்தோடு போராடினார், தூக்கம் என்பது உணர்வு நிலை யற்ற தூக்கம் என்பதை நினைவில்கொள்ளவும். தூங்கும் போதுகூட விழிப்புடன் இருக்க விரும்பி னார். உணர்வு நிலை தொடர்ந்து இருக்கவேண் டும் என்று விரும்பினார் - இரவு பகல் பாராமல் விளக்கு எரிய வேண்டும் என்று விரும்பினார். அது தான் தியானம் என்பது. அதுதான் விழிப்புணர்வு.

ஒரு நாள் இரவு, விழித்திருக்கவே முடியாதுபோல் தோன்றியது. தூக்கம் கண்களைச் சுழற்றியது. அவர் தன் கண் இமைகளை வெட்டி எறிந்தார்! இப்போது கண்களை மூடுவதற்கு வழியே இல்லை. கதை அழகானது.

அகத்தில் இருக்கும் கண்களை அடையப் புற மிருக்கும் கண்கள் களையப்பட வேண்டும். இந்த விலையைக் கொடுத்தாக வேண்டும்.

பிறகு என்னவாயிற்று? சில நாட்கள் கழித்து நிலத் தில் தூக்கியெறிப்பட்ட இமைகள் துளிர்த்து வளரத் தொடங்கியிருந்தன. அந்தத் துளிர் தேயிலை மர மாயிற்று. அதனால்தான் நீங்கள் தேநீர் அருந்தும் போது போதிதர்மர் ஒரு வகையில் உங்களுக்குள் நுழைகிறார். உங்களால் தூங்க முடியாது. போதிதர் மர் 'தா' என்ற மலைமீது அமர்ந்து தியானம் செய்து கொண்டிருந்தார், அதனால்தான் அது 'டீ' என்று ஆங்கிலத்தில் வழங்கப்படுகிறது. 'தா' அல்லது 'சா' என்றும் சொல்லலாம். அதனால் தான் ஹிந்தி மொழியில் 'சாய்' என்று அழைக்கின்றார்கள். இது ஒரு நீதிக்கதை.

ஜென் குரு "ஒரு கப் டீ குடியுங்கள்" என்று சொன் னால், அதன் பொருள் "போதிதர்மரைக் கொஞ்சம் ருசித்துப் பாருங்கள். கேள்விகள் பற்றிக் கவலைப் படாதீர்கள். கடவுள் இருக்கிறாரா இல்லையா? யார் உலகைப் படைத்தார்கள்? சொர்க்கம் எங்கே, நரகம் எங்கே? கர்மா, மறுபிறவி ஆகியவை என்ன?" ஜென் குரு சொல்வது, "இதையெல்லாம் மறந்துவி டுங்கள், ஒரு கப் டீ சாப்பிடுங்கள் - சற்றே அதிக விழிப்புணர்வுடன் இருங்கள். இந்த அபத்தம் எல்

லாம் வேண்டாம், உங்களுக்கு அது உதவாது" என்கிறார். ஆகையால் அவர் பேசாமல் இருக்கிறார் என்று நினைக்காதீர்கள். அவர் சம்மட்டி கொண்டு பேசுகிறார்!

லாவோட் சூ சொல்கிறார், "அறிந்தவர் பேசுவதில்லை" பிறகு லாவோட் சூ பற்றி என்ன சொல்வது? அவர் பேசிவிட்டார், அவருக்கு தெரியுமா, தெரியாதா?

இது ஒரு பிரச்சினை. உங்களைக் குழப்பத்தில் ஆழ்த்தி விடும்.

உண்மையில் இதன் பொருள்; அறிந்தவர் பேசுகிறார், அதைப் பற்றி பேச முடியாது என்று நன்றாக அறிந்தே இருக்கிறார். ஆயினும் அவர் பேசுகிறார்! அவரிடம் இருப்பதைப் பற்றிப் பேசமுடியாது. ஆனால் உலகில் உள்ள மனிதர்கள் பேச்சைத் தவிர வேறெந்த வழியிலும் அவருடன் தொடர்பு கொள்ள முடியாது, ஏனென்றால் மனிதர்களுக்கு ஒரே பாலம்தான் தெரியும். மற்ற எல்லாப் பாலங்களும் உடைக்கப்பட்டு விட்டன. மக்களுக்கிடையே ஒரே ஒரு பாலம்தான் மிஞ்சியுள்ளது, அது அறிவு சார்ந்தது, அது மொழி சார்ந்தது. மற்றதெல்லாம் அழிக்கப்பட்டு விட்டது, உணர்ச்சிகள் மறைந்து விட்டன, உள்ளுணர்வு இல்லாமல் போய்விட்டது. இயல்புணர்ச்சி செத்துவிட்டது. மனிதன் இயக்க ஆற்றல் இழந்துவிட்டான். வாழ்ந்து கொண்டிருப்பது ஒன்றே ஒன்றுதான், மொழி, மனம், சிந்தனை. வீடுபேறு அடைந்தவருக்கு தான் ஞானம் அடைந்ததைச் சிந்தனையால் மற்றவருக்கு வழங்க முடியாது என்று தெரியும். அவர் வேறு ஒன்றையும்

அறிவார். ஏதோ ஒன்றைச் சிந்தனை மூலமாக வழங்கினால் நீங்கள் கேட்பீர்கள். இல்லையென் றால் கேட்க மாட்டீர்கள். அவர் இப்போது என்ன செய்வது? அவர் பேசி உங்களை விழிப்புணர்வு டன் வைத்திருப்பார். "என் வார்த்தைகளைச் சேக ரித்துக்கொண்டே இருக்காதீர்கள், அவை உயிரற் றவை."

குருவின் வார்த்தைகளுக்கு பிறகு என்ன வேலை? அவை உங்களைத் தூண்டுவதற்காகத் தான். வார்த்தைகளற்ற மௌனத்தின் பயணத் திற்கு உங்களைக் கவர்ந்து இழுப்பதே அதன் வேலையாகும். என் சூழ்நிலையும் அதேதான்.

நான் கார்லைல் போன்றவன். கார்லைல் மௌனத்தின் மதிப்பைப் பற்றி ஐம்பது தொகுதி கள் எழுதியதாகச் சொல்லப்படுகிறது. அதுகூடப் போதாது. ஐநூறு என்ன ஐயாயிரம் கூட ஒன்று மில்லை. மௌனம் அவ்வளவு அளப்பரியது.

உங்களால் வானத்தை ஓவியமாகத் தீட்ட முடி யுமா? முடியும், ஆனால் தீட்டப்பட்டது மிக மிகச் சிறிய அளவில் இருக்கும். வரைந்து கொண்டே இருக்கலாம், ஆனால் வானம் முடிவடையாது, முழுவதுமாக தீட்ட வானம் அளவிற்கு ஒரு திரை வேண்டும். அது நடக்காது, அதை எங்கே வைப்பீர் கள், அதற்கு இன்னொரு வானம் வேண்டும், அப் படி ஏதும் இல்லை.

ஆக, அதேபோல்தான் உண்மையும். எந்த வார்த் தையிலும் அதை அடக்க முடியாது. ஆனால் மனிதனுக்கு மனிதன் தொடர்பு கொள்ள இருக் கும் ஒரே சாதனம் வார்த்தைகள்தாம். ஆகையால்

குரு தொடர்ந்து வார்த்தைகளைப் பயன்படுத்தி னாலும்கூட அவர் தொடர்ந்து உங்களுக்கு நினை வுபடுத்துவது "வார்த்தைகள் அர்த்தமற்றவை.'

*நீங்கள் சொல்வது, "முரண்பாடுகளைப் பயன்படுத்துகிறீர்கள் என்று எனக்கு தெரிகி றது. ஆனால் என் மனம் இன்னமும் தர்க்க ரீதியாகச் செயல்படுகிறது, அதனால் புரிந்து கொள்வது கடினமாக உள்ளது."*

மனம் புரிந்து கொள்ளவே செய்யாது. மனதை வைத்துக் கொண்டு புரிதல் என்பதே இல்லை. புரி தல் என்பது உங்களுக்குள் இருக்கும் முற்றிலுமான வேறு ஒரு இயல் நிகழ்வு. அது மனமற்ற நிலை யில்தான் நடக்கும். மனம் புரிந்து கொண்டதுபோல் பாசாங்கு செய்யுமே தவிர, ஒன்றையும் புரிந்து கொள்ளாது. மனம் ஒரு பகடி, பெரிய பாசாங்குப் பேர்வழி. உங்களால் 'பார்க்க' முடியுமானால், 'உண ரமுடியுமானால்' நீங்கள் புரிந்து கொள்வீர்கள். ஒன் றைப் பற்றி உணர்ந்து கொண்டால்தான் புரிதல் ஏற் படும். மனதைப் புறந்தள்ள வேண்டும். இதுதான் சன்னியாசியாக இருப்பதின் அர்த்தம். மனதைத் தள்ளி வையுங்கள். மெதுவாக, கொஞ்சம் கொஞ் சமாக மனம் என்று இல்லாத ஒன்றை நோக்கி நகரத் தொடங்குவீர்கள்.

மனம் என்பது என்ன? - அது கடந்த காலம், கற்றது, உங்களுக்கு ஊட்டப்பட்ட அறிவு. மனம் ஒரு கம்ப்யூட்டர். சமுதாயம் அதைப் பயன்படுத்திக் கொண்டது, பெற்றோர்கள் பயன்படுத்திக் கொண் டனர். அரசியல்வாதிகள், பூசாரிகள் என யாவ ரும் அதைப் பயன்படுத்திக் கொண்டனர். ஆயிரத்

தொரு விஷயங்கள் மனதிற்குள் இடப்பட்டுள்ளது. ஆனால் அது நீங்கள் அல்ல, இந்த மனதைத் தள்ளிவைக்கலாம், ஏனென்றால் அது நீங்கள் அல்ல! நீங்கள் அதற்குச் சாட்சி மட்டுமே. நீங்கள் எண்ணம் அல்ல, நீங்கள் எண்ணங்கள் கடந்து போவதைக் கவனித்துக் கொண்டிருப்பவர். ஓர் எண்ணம் எழும்போது கவனியுங்கள், அப்படியென்றால் நீங்கள் அந்த 'எண்ணம்' ஆவீர்களா?

நீங்கள் கோபம், நேசம் அல்லது பரிவன்பு ஆகியவற்றை உணர்கின்றீர்கள், உங்களுக்குள் எண்ணங்கள் எழுகின்றன - கோபமான எண்ணங்கள், நேசமான எண்ணங்கள், எண்ணங்கள் கூட்டமாகப் போகின்றன, எண்ணங்களின் போக்குவரத்து. நீங்கள் இந்தப் போக்குவரத்தா? அப்படியானால், பார்ப்பவர் யார்? யார் இந்த போக்குவரத்தைப் பார்த்துக் கொண்டிருக்கிறது? பார்வையாளர் போக்குவரத்தின் ஓர் அங்கமாக இருக்க முடியாது. பார்வையாளர் போக்குவரத்தைக் கடந்தவராகத்தான் இருக்க முடியும். நீங்கள் பார்க்கும் விஷயமாகவே நீங்கள் இருக்க முடியாது. பார்ப்பவரே பார்க்கப்பட்டதாக இருக்க முடியாது. தியானிப்பவரே தியானம் செய்யப்பட்டதாக இருக்க முடியாது. உங்கள் எண்ணங்களை நீங்கள் கவனிக்கத் தொடங்கும்போது ஒரு முற்றிலும் புதிய விழிப்புணர்வு உங்களுக்குள் எழும். நீங்கள் ஒரு சாட்சியாக மாறுவீர்கள், நீங்கள் முகம் பார்க்கும் கண்ணாடியாகி விடுவீர்கள். கண்ணாடி புரிந்து கொள்ளும். புரிதல் கண்ணாடியின் ஒரு பகுதியாகும்.

ஆனால் மனம் பாசாங்கு செய்யும். அது ஒரு போலி, ஏமாற்றுப் பேர்வழி. எதையுமே புரிந்து

கொள்ளாமல் உங்களிடம் தொடர்ந்து சொல்லிக் கொண்டேயிருக்கும். "எனக்குப் புரிகிறது, பார், எனக்குத் தெரியும். அதைப் படித்து இருக்கிறேன். இதைப்பற்றிச் சிந்தித்து இருக்கிறேன்." அதனால் புரிந்து கொள்வது கடினமாக உள்ளது.

மனதை விடவில்லையென்றால் எப்போதும் அப் படித்தான் இருக்கும். மனம் இல்லாமல் போனால் தான் புரிதல் பிறக்கும்.

"அறிந்தவர் பேசுவதில்லை" என்று தாவோ சொல்கிறது. நீங்கள் சொல்வது, ஒருமுறை நீங்கள் வார்த்தைகளை வெளியிட்டால் அவை உயிரற் றுப் போகிறது. மேலும் தெய்வீகத்தின் உருவைக் கருத்தாக்கம் செய்ய முடியாது என்றும் சொல் கிறீர்கள். அப்படியானால், உங்களைக் குறிப்பிடும் அடையாளமான மாலையை ஏன் 'உருவம்' என்று அணிந்து கொண்டிருக்கிறேன். இதனால் நான் தவிர்ப்பதற்கல்லாமல் உங்களைப் பற்றிப் பேசக் கட்டாயப்படுத்தப்படுகிறேன்.

இதுவும் புரிந்து கொள்ளவேண்டிய ஒன்று. ஆம், தெய்வீகத்தின் உருவை ஒருவரால் கருத்தாக் கம் செய்யமுடியாது. உருவம், படிவம் என்றால் என்ன? ஒரு உருவம் எதையோ குறிக்கிறது. அது எதையோ அடையாளப்படுத்துகிறது. உரு வமே அடையாளப்படுத்தப்பட்டது இல்லை என்று நீங்கள் புரிந்து கொண்டால் ஒரு பிரச்சினையும் இல்லை. வெறும் குறியீடு, அடையாளம் என்பதை நீங்கள் மறந்த கணமே பிரச்சினை எழுகின்றது.

உதாரணமாக ஒரு மைல் கல்லைப் பார்க்கிறீர் கள். அதில் தில்லி என்று எழுதியிருக்கிறது, 50

மைல் என்று அம்புக் குறி இருக்கிறது. தில்லி என்று எழுதியிருந்தாலும் அந்த மைல்கல் தில்லி அல்ல. மைல்கல் சொல்வதெல்லாம்,"தில்லி நகர் 50 கல் தூரத்தில் இருக்கிறது, நேராகப் போ" என்பதை மட்டுமே. அதேபோல் கோயிலில் உள்ள உருவச் சிலை ஒரு மைல்கல் போலத்தான். உருவச்சிலை தான் கடவுள் என்று நினைத்தீர்களானால் பிரச் சினை வருகிறது.

உங்கள் கழுத்தில் இருக்கும் மாலை நான் இல்லை. அது என்னை அடையாளப்படுத்துகிறது. அது ஒரு குறியீடு, ஒரு உருவகம் என்பதைப் புரிந் துகொண்டால் ஒரு பிரச்சினையும் இல்லை.

அதை மறந்துவிட்டு மாலையுடன் பேசத் தொடங்கி, மாலை சொல்வதைக் கேட்கத் தொடங்கி என்னை மறந்துவிட்டீர்கள் என்றால் இங்கே வரவேண்டிய தேவையே இல்லை. உங் களிடம் மாலை இருந்தால், நான் உங்களிடம் இருக்கிறேன். அப்படியானால் நீங்கள் பொறியில் சிக்கிக் கொண்டுள்ளீர்கள். நீங்கள் ஒரு உருவ வழிபாட்டாளர் ஆகிவிட்டீர்கள். மிகமிக மனநலக் கேடான நிலையை அடைந்து கொண்டிருக்கிறீர் கள். அடையாளக் குறியே உண்மையாகிவிட்டது.

தீ என்றால் சுட்டுவிடாது. அதை வைத்துச் சமைக்க முடியாது. சமைக்க வேண்டும் என்றால் தீ என்று எழுதி அதன் மேல் சட்டியை வைக்க முடியுமா? அது சரிப்பட்டு வராது. அடையாளங்கள் உண்மைகளாக முயற்சி செய்யும்.

அதேபோல் கடவுள் என்ற வார்த்தை கடவுளாகி விடாது. அப்படி நினைக்கத் தொடங்கினால் பொறி

யில் மாட்டிக் கொள்வீர்கள். அதன்பிறகு வார்த்தை அடையாளமாக இருக்காது. வார்த்தை மெய் மையை அடாவடியாகக் கைப்பற்றிவிட்டது. நேசம் என்ற வார்த்தை நேசமல்ல. உங்களுக்கு அது தெரியும். நேசம் என்ற உணர்வு இல்லாமலேயே, நீங்கள் "உன்னை நேசிக்கிறேன்" என்று கூறிக் கொண்டு மனிதர்களை நேசிப்பதாய் இருந்தால், உண்மையான நேசம் என்பது என்ன என்று நீங் கள் எப்போதும் அறியமாட்டீர்கள். இதுதான் பிரச் சினை.

கடவுளை உள்ளபடி குறிப்பிடும் எந்த விஷய மும் உலகில் இல்லை. அது ஒரு அடையாளக் குறியீடாக இருக்கலாம், உருவகமாக இருக்கலாம், அப்படியானால் பிரச்சினை இல்லை. ஆனால் மனி தன் அவ்வளவு முட்டாளாக இருக்கிறான். ஒன்று அடையாளச் சின்னத்தை உண்மையாக்க விரும் புகிறீர்கள், அல்லது சின்னத்தை முழுவதுமாகத் தூக்கியெறிய வேண்டும் என்கிறீர்கள். இரண்டுமே முட்டாள்தனமான மனப்பான்மைகள்தாம். உரு வச்சிலையை எரிக்கத் தேவையில்லை, கோயி லையும் எரிக்க வேண்டியதில்லை. கோயிலை எரிக்கத் துணிந்தவனும், கோயிலுக்கு சென்று வழிபடுபவனும் முட்டாள்களே. சந்தை, கடைகள், அலுவலகம், தொழிற்சாலை ஆகியவை மட்டுமே போதாது என்று உங்களுக்கு உணர்த்துவதற்குத் தான் கோயில் ஒரு அடையாளமாக இருக்கிறது. நகருக்கு நடுவே கோயில் இருப்பதே நீங்கள் இன் னமும் ஆராயாத விஷயங்கள் உள்ளன என்று உங் களுக்கு நினைவு படுத்துவதற்காகத்தான். அது ஒரு மைல்கல். அதனால்தான் நகருக்கு மத்தியில்

அமையப் பெற்று இருக்கிறது. சர்ச், கோயில், மசூதி எல்லாமே, அவ்வழியே வந்து போவோரை, ஆரா யாத விஷயங்கள் இருக்கின்றன என்று நினைவூட் டிக் கொண்டே இருக்கும். "நான் பணத்தைப் பற்றி ஆராய்ந்துள்ளேன், அதிகாரம் தேடியிருக்கிறேன், ஆனால் இந்தக் கோயில் ஏன் இங்கே நிற்கிறது என்று எனக்கு தெரியவில்லை." கோயில் தொடர் நினைவூட்டல் சின்னமாகிறது. "நானும் இங்கே இருக்கிறேன், முன்னரோ பின்னரோ மரணம் உன் னைக் கொண்டு செல்லும். எனக்குள் நுழைந்து அப்பாலில் உள்ள விஷயங்களை அனுபவி, ஏனென்றால் என் மூலமாக மரணத்தை கடந்து போக வாய்ப்பு இருக்கிறது."

உங்கள் கழுத்தைச் சுற்றி இருக்கும் மாலை நான் இல்லை, ஆனால் அது என்னை உங்களுக்கு நினைவூட்டும். ஞாபகப்படுத்தினால் அழகாக இருக்கும். மாலையே நான்தான் என்று நினைக்கத் தொடங்கிவிட்டீர்கள் என்றால் பிரச்சினைக் குள் ளாகிறீர்கள்.

நான் கேள்விப்பட்டது:

* பிரெஞ்ச் பாலியல் ஓவியர் ரிணாயரிடம் ஒரு முறை, எவ்வாறு ஒரு நிர்வாண ஓவியம் முற்றுப் பெற்றது தெரியும் என்று கேட்டார்கள். "நான் ஓவி யம் தீட்டி முடித்த பிறகு, கிள்ளிப் பார்க்கவேண் டும் என்று தோன்றும்போது, ஓவியம் முற்றுப்பெற் றது என்று தெரிந்து கொள்வேன்" என்றார் அந்த மாபெரும் கலைஞன்.

ஆம் இது நடக்கக் கூடியதுதான். ஒரு படம் கூட உங்களை அந்தளவு கவர்ந்திழுக்கும். படம் வெறும்

படம்தான் என்பது உங்களுக்கு தெரியும். வெறும் திரை மீது வர்ணம், அது சதை உருவெடுத்து உங் களுக்கு கிள்ளிப் பார்க்க வேண்டும்போல் தோன் றுகிறது. அப்படியானால் நீங்கள் முட்டாளாகிக் கொண்டிருக்கிறீர்கள்.

இது தினமும் நடக்கிறது. சினிமாவிற்கு போகி றீர்கள், திரையில் வருவது வெறும் நிழல் உருவம் என்று உங்களுக்கு தெரியும், ஆனாலும் பலமுறை அந்த இடத்தில் உங்களை மறந்த நிலையில் திரை சின்னங்கள் எல்லாம் உண்மையாகி விடுகின்றன. நீங்கள் அழுகின்றீர்கள். பின்னர் இதை நினைத் துச் சிரிக்கிறீர்கள். "நான் எவ்வளவு பெரிய முட் டாள்" தியேட்டர்கள் இருட்டாக இருப்பதும் நல்ல துதான், மனிதர்கள் நெகிழ்வாய் இருக்க முடியும். இல்லையென்றால், கஷ்டம்தான். யாராவது நீங் கள் அழுவதைப் பார்த்தால், குழந்தைத்தனமாகத் தெரியும். வேறு சில சமயங்களில் கிளர்ச்சி அடை வீர்கள். முதுகை நிமிர்த்தி, இதயத் துடிப்பு அடங்கி, படத்தோடு ஒன்றிப் போய் விடுவீர்கள். படத்தின் ஒரு அங்கமாகி விடுவீர். நீங்கள் பார்வையாள ராக இல்லாமல், பார்க்கப்பட்ட பொருளாகி விடு கிறீர்கள். பார்க்கப்பட்ட பொருளில் பார்வையாளர் தொலைந்து போகிறார். நீங்கள் விழிப்புணர்வை இழந்து கொண்டிருக்கிறீர்கள். மாலையில் கோர்க் கப்பட்ட படத்தில் உள்ளது நான் அல்ல, தயவு செய் துஅதை கிள்ளிப் பார்க்காதீர்கள். வெறும் அடை யாளக் குறிப்பு மட்டுமே. அது உதவியாக இருக்கும், ஏனென்றால் நீங்கள் அந்தளவு விழிப்புணர்வற்று இருக்கிறீர்கள். அது உங்களுக்கு நினைவூட்டும்.

அதேபோல்தான் மஞ்சள் காவியும் மீண்டும் மீண்டும் உங்களுக்கு நினைவூட்டத்தான். நீங்கள் எங்கே சென்றாலும் மக்கள் உங்களை அதிர்ச்சி யுடன் பார்ப்பார்கள். அவர்களின் அதிர்ச்சி உங்க ளுக்கு நீங்கள் மஞ்சள் காவியில் இருப்பதை ஞாப கப்படுத்தும். அதாவது நீங்கள் ஒரு சன்னியாசி என்பதை. நீங்கள் ஏதோ சொல்ல முற்படுகிறீர்கள், அல்லது அடிக்கப் போகிறீர்கள், உங்கள் மஞ்சள் உடையைப் பார்த்தவுடன் ஏதோ ஒன்று உங்க ளைப் பாதியிலேயே தடுத்து நிறுத்துகிறது. உறைந் தாற்போல உணர்கின்றீர்கள். ஒரு பெரிய விழிப் புணர்வு அந்தக் கணத்தில் ஏற்படுகிறது. பழைய பழக்கமான வசைச்சொல் கூறுவது. திடீரென அந்த நினைவு, மாலை அல்லது மஞ்சள் காவி உடை குறுக்கே வருகிறது. இந்தச் சிறிய நினை வூட்டும் தருணங்கள் எல்லாம் பெரிய உருமாற்றம் செய்யலாம். இது உருவ வழிபாடல்ல.

உருவ வழிபாடு என்பது நீங்கள் என் படத்தை வைத்து அதை வழிபடுவதாகும். அத்தோடு சேர்ந்து நீங்களும் முடிந்தீர்கள். உருவ வழிபாடு உருமாற்றம் என்பதே இல்லாமல் வழிபடுவதாகும். ஒரு உருவச்சிலை உங்களைப் பற்றி உங்களுக்கு நினைவூட்டுவதாக இருந்தால் அது உருவ வழிபா டாகாது.

ஒரு பௌத்த கோயிலுக்கு போயிருக்கிறீர்களா? அங்கே புத்தர் சிலையை பார்த்து இருக்கிறீர் களா? வெள்ளைப் பளிங்குக் கல்லினால் செய் யப்பட்ட சிலை, அதன் அமைதி, அமைவுநிலை, பளிங்குகூட உயிரோட்டத்துடன் இருக்கும். சிலை

யைச் சூழ்ந்திருக்கும் அமைதி, சிலையின் வடிவ மைப்போ அதிர்வுகளைத் தரும்.

இப்போது வடிவு பற்றி அதிகமான அறிவி யல் ஆய்வுகள் செய்யப்படுகின்றன. பிரமிட்களின் குறிப்பிட்ட வடிவு உதவியாய் இருக்கிறது என்று சொல்கின்றனர். நீங்கள் ஒரு பிரமிடிற்குள் உட்கா ரும்போது வெளியே கிடைக்காத புது அனுபவம் உள்ளே கிடைக்கப் பெறுவீர்கள். பிரமிட்டின் வடி வமைப்பின் காரணத்தினால் வெட்டவெளி ஒரு குறிப்பிட்ட வடிவைப் பெறுகிறது. இதனால் குறிப் பிட்ட அதிர்வுகள் ஏற்படுகின்றன.

சிறிய அளவு பிரமிட்களைச் செய்து இருக்கிறார் கள். அதில் உங்கள் சவரம் செய்யும் ரேசர் பிளே டுகளை வைக்கலாம். அதில் வைக்கப்பட்ட ரேசர் பிளேடை பல வருடங்கள் கூர் மழுங்காமல் பயன் படுத்தலாம் என்று சொன்னால் ஆச்சரியப்படுவீர் கள். அந்த பிரமிடின் வெட்டவெளி எப்படியோ அந் தப் பிளேடை சாணை தீட்டி வைக்கிறது. இது அறி வியல் உண்மை. அது ரேசர் பிளேடை கூராக்க முடி யுமானால், பிரமிட்டால் உங்கள் உணர்வுநிலையை கூராக்க முடியுமா, உங்கள் மனதைக் கூராக்க முடி யுமா? அது சாத்தியம்தான். அவை மிகப் பெரிய குருக்களால் கண்டுபிடிக்கப்பட்டவை.

மேலும் ஒரு உண்மை தெரிய வந்தது. சில விஞ் ஞானிகள் ஒரு பிரமிட்டை வைத்து ஆய்வு செய்து கொண்டிருந்தனர். எதிர்பாராமல் ஒரு பூனை உள்ளே நுழைந்து, செத்துப்போய் விட்டது. செத்த உடலை இரண்டு மாதங்கள் கழித்துக் கண்டுபி டித்தனர். அது அழுகிப் போகவேயில்லை, நாற்ற

மும் வீசவில்லை. விஞ்ஞானிகள் ஆச்சரியப்பட்டு போனார்கள், "இது என்ன அற்புதம்!" தற்செயலாக அவர்கள் அறிந்த உண்மை, இதனால் தான் மம்மிகள் (பாடம் செய்யப்பட்ட உடல்கள்) பிரமிடுகளில் வைக்கப்படுகின்றன என்று அறிந்தார்கள். ஒரு குறிப்பிட்ட வடிவம் உடல் அழுகாமல் தடுக்கின்றது. இது ஒரு பெரிய ரகசியமாக இருக்க முடியும்.

நீங்கள் ஆழ்ந்த தியானத்தில் இறங்க வேண்டுமென்றால், ஒரு பிரமிடுக்கடியில் அதைச் செய்வது எளிதாக இருக்கும். உங்களுக்கு குறைந்தளவு உணவு, தண்ணீர்தான் தேவைப்படும். வெளியில் இருப்பதை விட ஒரு பிரமிடின் உள்ளே நீண்ட நாள் உண்ணாவிரதம் எளிதாக இருக்க முடியும். குறைந்தபட்ச சக்தி விரயத்திலே நீங்கள் உயிர் வாழ முடியும். உயிர் பிரிந்தாலும் கூட உடல் பிரமிடிற்குள் பாதுகாக்கப்படும். சில சமயங்களில் ஆழ்ந்த சமாதி நிலையில் நீங்கள் அகத்திற்குள் வெகு ஆழமாகச் சென்று விடுவதால், உடல் கிட்டத்தட்ட இறந்து போனதுபோல் தோன்றும்.

ராமகிருஷ்ணருக்கு இது வழக்கமாக நடக்கும். ஆறு நாட்கள் சமாதி நிலையில் இருப்பார். உடல் கிட்டத்தட்ட சவம்போல ஆகிவிடும். சீடர்கள் தொடர்ந்து தேய்த்து விட்டுக்கொண்டே இருப்பார்கள், இல்லாவிட்டால் திரும்ப மாட்டார். உடலுக்கு மசாஜ் செய்து, அதை சூடுபடுத்தி, ரத்த ஓட்டம் சீராக இருக்குமாறு பார்த்துக் கொள்வார்கள். ராமகிருஷ்ணரை ஒரு பிரமிடிற்குள் வைத்திருந்தால், இவையெல்லாம் தேவைப்பட்டு இருக்காது.

பிரமிட்கள் மகா குருக்களால் உருவாக்கப்பட்டவை. அவர்கள் அக உலக ஆராய்ச்சியாளர்கள், புத்தர் சிலையின் வடிவு தியானத்தின் வடிவாகும். அது புத்தரைக் குறிக்கவில்லை, புத்தருக்கும் அதற்கும் தொடர்பே இல்லை. ஒருகணம் கூட அது புத்தரின் உண்மையான உருவம் என்று நினைத்து விடாதீர்கள். புத்தர் அது போன்று இருக்கவேயில்லை. அது புத்தரின் உடலைச் சித்தரிக்கவேயில்லை. அது வெறும் உள் ஆற்றலை மட்டுமே குறிக்கின்றது. முற்றிலும் மௌனத்திற்குள் ஆழ்ந்து போகும்போது, உங்கள் உள் ஆற்றல் இந்த வடிவை எடுக்கும். உள்ளிருக்கும் மின் சக்திகள் இப்படித்தான் பாயும். கிர்லியன் புகைப்படத்தின் மூலம் இதைக் காணலாம்.

சாதாரண புகைப்படத்திற்கு மாறாக, கிர்லியன் புகைப்படத்தில் உங்கள் உருவம் பதிவதில்லை. உங்களைச் சுற்றிப் பாயும் மின்காந்த அலைகள், மின்காந்தக் களம் புகைப்படமாக்கப்படுகிறது. புத்தர் சிலை ஒரு கிர்லியன் சிலை. அது உள்ளிருக்கும் சக்தியைக் குறிப்பிடுகிறது - மற்றவை எல்லாம் அமைதியாகும்போது, மனம் மறைந்து போகும்போது, எஞ்சி இருக்கும் சக்தி, அது. மனமற்ற நிலையின் அடையாளம். சிலைதான் புத்தர் என்று சில மலர்களை போடுவதும், வணங்குவதும் பிறகு அதைப் பற்றி மறந்துபோய்விட்டீர்கள் என்றால், அது உருவ வழிபாடாகும். ஆனால் அங்கே சென்று அமைதியாக உட்கார்ந்து, அந்த சக்தியை உணர முடியுமென்றால், அந்த சக்தியை உங்களுக்குள்ளும் உருவாக்க முடியுமென்றால் அது உருவ வழிபாடு இல்லை, அது சுத்தமான அறிவியலா

கும். சிலை உங்களுக்கு எப்படி இருக்க வேண்டும் என்று காட்டுவதற்கு ஒரு வரைபடமாகச் செயல்படுகிறது.

சில சமயங்களில் நான் உருவ வழிபாட்டிற்கு எதிராகப் பல விஷயங்கள் சொல்லலாம். ஆனால் உருவங்களை வைத்திருப்போர் அனைவரும் உருவ வழிபாட்டாளர்கள் என்று நான் சொல்ல வரவில்லை. தொண்ணூற்றி ஒன்பது சதவீதம் அப்படித்தான், ஆனால் ஒரு சதவீதம் உண்மையை நிரூபிப்பதற்குப் போதும்.

ஒரே ஒரு வெள்ளைக் காக்கையைக் கண்டுபிடித்தால்கூட காக்கைகள் எல்லாம் கறுப்பு என்ற கூற்றைப் பொய்யாக்க முடியும் என்பார்கள். ஒரே ஒரு வெள்ளைக் காக்கை சான்றாக இருந்தால் போதும். எல்லாக் காக்கைகளும் கறுப்பு என்ற கருத்தை அழிக்க இரண்டு வெள்ளைக் காக்கைகள்கூடத் தேவையில்லை, ஒன்று போதும். உருவத்தை தாண்டி, உருவத்தில் ஏதோ உள்ளது என்று நிரூபிக்க அந்த ஒரு சதவீதம் போதும். அது அறிவு நிலையின் வரைபடமாக இருக்கலாம், அல்லது ஒரு அடையாளக் குறியீடாக இருக்கலாம். நீங்கள் வெறுமனே வழிபடுபவராக இருந்தால் அதைத் தவற விடுவீர்கள். ஆனால் ஒரு புத்தாய்வாளராக, ஒரு நாடுபவராக இருந்தால் புத்தர் சிலையில் எவ்வளவு குறிப்புகள் உள்ளன என்று ஆச்சரியப்படுவீர்கள். லட்சக்கணக்கான மறைதிறவுகள் உள்ளன. புத்தாய்வு பெரிய விஷயம், அது ஒரு மாபெரும் துணிகரச் செயல்.

ஒரு கோயிலின் வடிவு, சர்ச் அல்லது மசூதியின் வடிவு எல்லாமே அகச் செயலுக்கானவை. அப்படி யானால் இது அறிவியல் பூர்வமானது.

*"தெய்வீகத்தின் உருவை ஒருவரால் கருத் தாக்கம் செய்ய முடியாது."*

ஆம், யாராலும் தெய்வீகத்தை உருப்படுத்த முடி யாது. ஏனென்றால், தெய்வீகம் என்றாலே முழுமை என்று பொருள். முழுமையின் உருவை எப்ப டிக் கொண்டுவர முடியும்? நீங்கள் வரைபடங்கள் செய்யக்கூடாது, அடையாளக் குறிப்புகள் செய்யக் கூடாது என்று நான் சொல்லவில்லை. ஆனால் நினைவில் வைத்துக் கொள்ள வேண்டிய ஒரே விஷயம், அடையாளக் குறிப்பு என்பது அடை யாளக் குறிப்பே தவிர உண்மையல்ல. குறிப்பே உண்மை என்றாகிவிட்டால் முழுக் கருத்தையே தவறவிடுகிறீர்கள்.

*"நான் ஏன் உங்களை அடையாளப்படுத்தும் மாலையை உருவமாக அணிந்துக் கொண் டிருக்கிறேன், இது தவிர்த்தற்கல்லாமல் உங் களைப் பற்றிப் பேசக் கட்டாயப்படுத்துகி றது."*

அதற்காகத்தான், நீங்கள் என்னைப் பற்றி பேச வேண்டும், அதுதான் காரணம், மனிதர்களைத் தூண்ட வேண்டும், புண்படுத்த வேண்டும், உங்கள் இருத்தலே, முன்னிலையே, மனிதர்களைச் சங்க டப்படுத்த வேண்டும். அவர்கள் உங்களிடம் பேசு வார்கள், என்னைக் குறை கூறுவார்கள், எனக்கு எதிராக ஏதாவது சொல்வார்கள். என்னை காப் பாற்ற, என் சார்பாகப் பேச உங்களைத் தூண்

டுவார்கள். இது உங்களுக்கு உதவியாக இருக்கும், என்னைப் பற்றி மக்களிடம் நீங்கள் பேசும் போது, என்னை அதிகமாக அறிந்து கொள்வீர்கள். உண்மையில், இது பலமுறை நடக்கின்றது. கற்றுக் கொடுக்கும்போதுதான் கற்றுக் கொள்கிறீர்கள். ஒரு ஆசிரியராக இருப்பதென்பது ஒரு பெரிய மாணவராக இருப்பதாகும்.

யாராவது உங்களிடம், "எதற்கு இந்த மாலை, நீங்கள் என்ன பைத்தியமா?" என்றால், உடனே நீங்கள் ஏதாவது சொல்லியாக வேண்டும். என்னைக் காப்பாற்றும் பொருட்டு ஏதோ சொல்ல வேண்டும். உங்களுக்குள்ளே தேட வேண்டும், மறு ஆலோசனை செய்யவேண்டும். மறு சிந்தனை செய்ய வேண்டும். இது உங்களுக்கு உதவும். நீங்கள் என்னை நினைவில் வைத்துக் கொள்ள வேண்டும்.

சில சமயங்களில் நீங்கள் சொல்லும் விஷயங்கள் உங்களையே ஆச்சரியப்படுத்தும். நீங்களாகவே இதைப் பற்றியெல்லாம் யோசனை செய்திருக்க மாட்டீர்கள். இந்த மனிதர் உங்களைத் தூண்டிவிட்டார், நீங்கள் பதில் அளித்துவிட்டீர்கள். அந்தப் பதில் உங்களையும் மாற்றலாம். அந்த மனிதரையும் மாற்றலாம். உங்கள் கண்களில் தெரியும் மகிழ்ச்சி, உங்கள் ஒலியில் பிறக்கும் நாதம், உங்களுக்கு என்மேல் இருக்கும் நம்பிக்கை, என்மேல் இருக்கும் பாசம், எல்லாமே அந்த மனிதருக்கு ஒரு அனுபவத்தைத் தரலாம். இங்கே வந்து என்ன நடக்கின்றது என்று தானே நேரில் வந்து பார்க்க நினைக்கலாம்.

மக்கள் மஞ்சள், காவியணிந்த ஒருவரைச் சகித்துக் கொள்ளலாம். இரண்டு, மூன்று, ஐந்து என்று எத்தனை பேரைச் சகித்துக் கொள்ள முடியும்? நான் ஆயிரக்கணக்கானவர்களை உருவாக்கப் போகிறேன். ஒவ்வொரு மஞ்சள் காவியுடைக்காரரும் சங்கடப்படுத்தப் போகிறார், அவரது இருப்பே தொந்தரவாக, ஒரு அதிர்ச்சியாக இருக்கும். எப்படிப் பொறுத்துக் கொள்வார்கள்? எவ்வளவு காலம்?

அதற்கென ஒரு குறிப்பிட்ட வேலை இருக்கிறது. இங்கே செய்யப்படுவதெல்லாம் ஒரு கருவி.

*நீங்கள் சொல்கிறீர்கள்: 'ஒரு மரபை உருவாக்குவதில் பங்கெடுத்துக் கொள்கிறேன் என்ற அச்சம் எனக்கு இருக்கிறது.'*

அச்சம் கொள்ளத் தேவையில்லை. துல்லியமாக அதுதான் நடக்கிறது. எல்லா மரபுகளும் மோசமல்ல, ஒவ்வொன்றையும் பொறுத்தது. உதாரணமாக கிறிஸ்தவம் ஒரு மரபு, இஸ்லாம் ஒரு மரபு, பௌத்தம் ஒரு மரபு, ஜென்னும் ஒரு மரபுதான். சூஃபிசமும் ஒரு மரபுதான். எல்லாவற்றையும் ஒன்றாக்கி விடாதீர்கள். அவையெல்லாம் முற்றிலும் வேறானவை.

கிறிஸ்தவம் வழிபடுபவர்களின் மரபு. அதேபோல்தான் இஸ்லாம், பௌத்தம் போன்றவை. ஆனால் ஜென், சூஃபிசம், ஹாசிடிசம், இவையெல்லாம், வழிபடுபவர்களுக்கான மரபு அல்ல, இவை புத்தாய்வாளர்களின் மரபு. இவை உண்மைக்கான பசியோடு, தாகத்தோடு இருப்பவர்களின் மரபுகள் ஆகும். உங்களுக்கு முன்னர் பலர் இந்தப் பாதையில் நடந்து சென்றுள்ளனர், அவர்கள் அனுபவங்

களால் பலம் பெற உங்களுக்கு விருப்பமில்லையா? உண்மையான மரபு என்பது அதுதான்.

உங்களுக்கு முன் பலர் தேடியிருக்கின்றார்கள். உண்மையை நீங்கள் முதல் முறையாகத் தேட வில்லை. ஏன் நீங்கள் ஆனா, ஆவன்னாவிலிருந்து தொடங்க வேண்டும்? எல்லா அனுபவங்களிலி ருந்தும் நீங்கள் பயன் பெறலாமே. அதனால்தான் நான் தொடர்ந்து இந்த மரபுகள் பற்றிப் பேசு கிறேன். சூஃபிசம், ஹாசிடிசம், தந்திரம், யோகம், ஜென், தாவோ எதற்காக? இவையெல்லாமே மரபு கள்தான்.

வழிபாடாக மாறும் மரபு, வெறும் நம்பிக்கையாக மட்டுமே இருக்கும் மரபு, உங்களுக்கு வெறும் ஆறுதல் மட்டுமே தந்து, உங்களை உருமாற்றா மல் இருக்கும் மரபு தவறானது. ஆனால் உங் களை மாற்றியமைக்கும் மரபுகள் உள்ளன. அவை பெரும் சக்திப் பாய்வுகள். அவற்றோடு நீங்கள் கைகோர்த்துக் கொண்டால் உங்கள் பயணம் எளி தாகும். திடமான நிலத்தில் நீங்கள் நகர்ந்து முன் னேறலாம்.

ஆம், இது மரபு உருவாக்குதல்தான். நீங்கள் அதிர்ஷ்டசாலி, ஏனென்றால் இது வெகு அரி தாக நடப்பது, அது வெகு சிலருக்கே நடக்கும். ஒரு மரபின் தொடக்கத்திலிருந்தே, இதன் தோற் றுவாயிலிருந்தே இருப்பது வெகு அரிதான ஒன்று. நான் சென்ற பிறகு வரும் மனிதர்கள் அவ்வளவு அதிர்ஷ்டசாலிகள் அல்ல, அவர்கள் இரண்டாம்தர விஷயங்களைத்தான் நம்பி இருக்க வேண்டும்.

இது ஒரு மரபு உருவாக்கப்படுதல்தான். நான் அறிந்தே இதை உருவாக்குகிறேன். இரண்டு வகையான மனிதர்கள் உலகில் இருக்கின்றனர். ஒரு வகையானவர்கள் மரபு உருவாக்க விரும்புவதில்லை. உதாரணமாக ஜே. கிருஷ்ணமூர்த்தி மரபு உருவாக்க விரும்பவில்லை. மரபு உருவாகிவருகிறது, ஆனால் அவர் அதை விரும்பவில்லை, அதனால் அது உருவாவதற்கு ஒத்துழைக்க மாட்டார். மாறாகத் தடைகளை ஏற்படுத்துவார். எப்படியாயினும் மரபு உருவாகத்தான் போகிறது. மரபு தவிர்க்க முடியாதது. நீங்கள் பேசிய கணமே மரபு தொடங்கிவிட்டது. நீங்கள் யாருடைய கண்களையாவது பார்த்த கணத்தில் மரபு உருவாகிறது. மரபு என்பது என்ன, "நான் வந்து அடைந்து விட்டேன்" என்ற ஒரு அறிவிப்பு. அது வார்த்தைகளால் இருக்கலாம். நான் அமைதியாய் இருக்கலாம், ஆனால் அமைதி உணரப்படும், மரபு உருவாக்கப்படும். அவருடன் நான் தொடர்பு கொள்ளத் தொடங்கியவுடன், மரபு உருவாக்கப்படுகிறது. இரண்டுபேர் இருக்கும்போது, உருவாக்கம் ஏற்படும், மரபின் உருவாக்கம் ஏற்படும். தனியாக இருக்கும்போது மரபு இல்லை. நான் தனியாக இருக்கிறேன், நான் உறவு கொள்ளவில்லை, அப்படியானால் மரபு இருக்காது. ஆனால் இது சாத்தியமே இல்லை.

உண்மை எப்போது நிகழ்ந்தாலும் அது தெரிவிக்கப்பட வேண்டும். அது ஒரு உள்ளார்ந்த தேவை. பூ மலரும்போது நறுமணம் பரவுகிறது, நறுமணம் பரவுவதில் மரபு தொடங்குகிறது. கிருஷ்ணமூர்த்தி, மரபு உருவாக்க விரும்பவில்லை என்கிறார். அவர் சொல்வதில் எந்தப் பயனும் இல்லை. மரபு உரு

வாக்கப்படும். புத்தர் ஒரு மரபு உருவாக்கப்பட வேண்டும் என்று எப்போதும் விரும்பியதில்லை, ஆனால் அது உருவானது.

குரு மரபு உருவாக்கப்பட வேண்டாம் என்பதற் குக் காரணம், தொண்ணூற்று ஒன்பது தவறான விஷயங்களைப் பற்றிப் பயப்படுகிறார். 99% தவறான விஷயங்கள் சாத்தியம்தான், அதனால் மரபு உருவாக வேண்டாம் என்று நினைக்கிறார். ஆனால் மரபு உருவாகிறது, அந்த மரபில் குரு அச் சப்பட்ட அந்த 99 சதவீத விஷயங்கள்தான் இருக் கும். காரணம் மிச்சம் இருக்கும் ஒரு சதவீதத்தை குரு மட்டுமே அளித்திருக்க முடியும், அவர் அதை செய்யவே இல்லை.

கிருஷ்ணமூர்த்தி ஒரு மரபை உருவாக்கினால், அவரால் அந்த ஒரு சதவீதத்தை வழங்க முடியும். அவர் மட்டுமே வழங்க முடியும். மரபு சீடர்களால் உருவாக்கப்பட்டால் அந்த 99 சதவீதத்தை மட் டுமே வழங்க முடியும். இதுதான் நடந்து கொண்டி ருக்கிறது. இது ஒரு வழி.

மற்றொரு வழி: குரு தானாகவே மரபை உரு வாக்க முடிவு செய்கிறார். இந்த மரபு வழி முக்கிய மானதற்கு அருகில் இருக்கும் வாய்ப்புகள் அதிகம், காரணம் அந்த ஒரு சதவீதத்தைக் குரு வழங்கு வார்.

இப்போது விஷயத்தைப் பாருங்கள்: நான் உங் களுக்கு மாலை தரவில்லை என்றாலும், கூட சில மனிதர்கள் என் படத்தை வைத்திருப்பார் கள். ஆனால் அவர்கள் தங்களுக்கு ஏற்றாற்போல் வைத்துக் கொள்வார்கள். இது நானே கொடுப்பது,

மாலை நான் தரும் பரிசு. நான் அதற்கு ஒப்புதல் அளித்திருக்கிறேன். நான் அதைத் தொட்டு வழங்குகிறேன். அதை உருவாக்க உங்களிடம் விடவில்லை. நான் அதை உருவாக்கி உள்ளேன். என் முழு முயற்சியும் இப்படி இருக்கும். ஒரு தெளிவான மரபு வழியை உருவாக்குவது. இதனால் யாரும் உங்களை எளிதாகக் குழப்பிவிடக் கூடாது. அதனால் நீங்களும் எளிதாகக் குழம்பிப் போக மாட்டீர்கள்.

இது நான் உணர்வோடு செய்யும் வேலை. அறிந்தே உருவாக்கும் மரபு. இதனால் அதிகமான மனிதர்கள் பலன் அடைவதற்கு அதிகமான சாத்தியக் கூறுகள் உள்ளன. ஆனால் எதுவுமே தவறாகப் போகாது என்று சொல்லவில்லை, அந்த இடர் நேர்வை எதிர்பார்க்கத்தான் வேண்டும்.

வாழ்க்கையில் எப்போதும் இடர்நேர்வுகள்தான். நீங்கள் ஏதாவது சொல்ல, அதை யாராவது தவறாகப் புரிந்து கொள்ளலாம், வேறு ஒருவர் அதை மற்றொரு வகையில் பொருள்படுத்திக் கொள்ளலாம். வாழ்க்கை விளையாட்டில் இவையெல்லாம் ஒரு பகுதி, துணிய வேண்டியது அவசியம் - அதுதான் சவால்.

ஆக பிரேம் தாசனா, "நான் ஒரு மரபு உருவாக்குவதில் பங்கு எடுத்துக் கொள்கிறேன் என்ற அச்சம் உள்ளது" என்று சொல்கிறீர்கள். அதைப் பற்றி அச்சம் கொள்ள வேண்டாம். துல்லியமாக அதுதான் நடக்கிறது. ஒன்று அதை உணர்ந்து அதில் பங்கேற்றுக் கொள்ளுங்கள், அல்லது அதிலிருந்து வெளியேறி விடுங்கள். இது மரபாகத்

தான் இருக்கப்போகிறது. இருப்பதிலேயே நன்கு அறிந்து உருவாக்கப்பட்ட மரபுகளில் ஒன்றாக இருக்கப்போகிறது. ஆனால், உங்களுக்கு மிகவும் பயமாக இருந்தால், அந்த 99 விஷயங்கள் பற்றிய அச்சம் இருந்தால், அந்த ஒரு சதவீதத்தின்மீது ஆர்வம் இல்லையென்றால், தயவுசெய்து வெளி யேறி விடுங்கள். தேவையற்ற தொந்தரவில் இறங்க வேண்டிய அவசியம் இல்லை. அதிலிருந்து விடு பட்டு சுதந்திரமாக இருங்கள்.

மேலும் நான் என் மனிதர்களை வகைப்படுத்த விரும்புகிறேன். ஏனென்றால், என்னுடன் உண் மையிலேயே இருப்பவர்களுடன் மட்டுமே நான் வேலை செய்ய விரும்புகிறேன். ஏனோ தானோ வென்று இருப்பவர்கள், தற்செயலாக வந்தவர்க ளோடு என் நேரத்தையும் சக்தியையும் நான் வீணாக்க விரும்பவில்லை. இது நாள்வரை யார் வந்தாலும் நான் சன்னியாசம் வழங்கிக் கொண்டி ருந்தேன். விரைவில் அதுபோல் இருக்காது. நான் தேர்வு செய்யத் தொடங்கப் போகிறேன். என் சன்னியாசிகளுக்கு உதவி செய்யப் போகிறேன். ஆனால் உண்மையில் சன்னியாசி அல்லாதவர் கள் அதை விட்டுவிடவும் உதவி செய்யப்போகி றேன். தேவையற்ற சுமையைத் தாங்கிப் போவ தில் எனக்கு விருப்ப மில்லை. உண்மையிலேயே இங்கே இருக்க விருப்பமுள்ளவர்கள், இங்கே 'முழுமையாக' இருப்பவர்கள், அவர்கள் மட்டுமே எனக்குத் தேவை. அந்த மனிதர்கள் இங்கே இருக் கின்றனர்.

'முழுமையாக' இங்கே இல்லாத சிலரை விட் டுவிட வேண்டியுள்ளது. அவர்களாகவே விலகிப்

போய்விட்டால் நல்லது. இல்லையென்றால், அவர்கள் விட்டுவிலக நான் ஏற்பாடுகள் செய்ய வேண்டும். ஆயினும் என் ஏற்பாடுகள் எப்படி இருக்கும் என்றால், விலகிச் செல்பவர், தானாகவே போகிறோம் என்று நினைக்கும் வகையில் இருக்கும்.

**முற்றும்**